டாக்டர் நா. மகாலிங்கம்

ஸ்ரீமத்வர்



ஸ்ரீராமானுசர்



வள்ளலார்



# ஞானபரம்பரை

தொகுதி 5

வர்த்தமானன்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்

வழங்கும்

# ஞான பரம்பரை

அருளாளப் பெருமக்களின்

வாழ்வு - வாக்கு - பணி

பற்றிய நூல் தொகுப்பு

## தொகுதி ஐந்து

வர்த்தமானன் பதிப்பகம்
சென்னை - 17.

முதற் பதிப்பு : 2006
(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)

இரண்டாம் பதிப்பு : 2009
(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)

மூன்றாம் பதிப்பு : 2014
(வர்த்தமானன் பதிப்பகம்)

பத்து தொகுதிகளும் சேர்த்து
**விலை ரூ. 2500/-**

*வெளியீடு :*
வர்த்தமானன் பதிப்பகம்
21, இராமகிருஷ்ணா தெரு, சென்னை -17.

*அச்சிடல் :*
அருணா கிராபிக்ஸ், சென்னை -17. போன் : 24345058
ஈஸ்வரி ஆப்செட், சென்னை -5. போன் : 28480481, 42157817

# அருட்செல்வர் முன்னுரை

ஞானம் என்றால் என்ன?

மெய்யுணர்வினை – செம்பொருளைக் கட்டிக்காப்பது ஞானம். ஞாத்தல் என்றால் கட்டுதல். ஞாண் கட்டும் கயிறு என்று பொருள்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைக் கட்டி உள்ளத்தை ஓரிடத்தே நிறுத்துவது ஞானம்.

திருவள்ளுவர்,

*"சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு"*

என்கிறார்.

புலன்களை அவை மேயும் பக்கமெல்லாம் அலையவிடாமல் தடுத்து, ஒரு நல்ல குறிக்கோளோடு பிணைப்பது அறிவு என்பது இத்திருக்குறளின் பொருள்.

ஆன்மிகவாதிகளின் குறிக்கோள் "பிரமத்தில் - பரம்பொருளில் லயிப்பது - ஒன்றுவது"; அறிவியல்வாதிகளின் குறிக்கோள் "ஒரு பௌதீகப் பொருளின் அல்லது நிகழ்வின் காரண காரியங்களை ஆராய்ந்து அவற்றை உறுதிசெய்து உலக நன்மைக்குப் பயன்படுத்துவது."

ஆன்மிகம்கூட அறிவியலின் ஒரு பகுதியே என்பார்கள். களங்கள் வேறானாலும் நோக்கம், சமுதாய நன்மையாகவே முடியவேண்டும்.

பாரதியார் மிக அழகாகக் கூறினார்:

*"ஊருக்கு உழைத்திடல் யோகம் - நலம்*
*ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்*
*போருக்கு நின்றிடும்போதும் - உளம்*
*பொங்கல் இலாத அமைதி மெய்ஞ்ஞானம்."*

உள்ளுணர்வாகிய மெய்யுணர்வால் உலக ஈடேற்றத்தைப் பற்றிச் சிந்திப்பது ஞானம்.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

*புத்தம் புதிய கலைகள் - பஞ்ச*
*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*
*மெத்த வளருது மேற்கே*
*அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை*

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடு களுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர் கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

என்று திருமந்திரம் கூறுகிறது.

தெளிவு என்பது அறிவு - தெள்ளிய அறிவு - குற்றங்களைந்து இதுவென்று அறிந்து குணம் கொள்ளும் அறிவு - அதாவது ஞானம். ஆசிரியன் ஞானத்தைத் தருகிறான். எழுத்தறிவித்தவன் இறைவன் என்று கூறுவார்கள்.

*கல்வி கொடுத்தவன் வித்தியா குரு*
*தீக்கை அளிப்பவன் தீட்சா குரு*
*ஞானம் அளிப்பவன் ஞான குரு*

தீட்சா குரு தனிப்பட்டவனுக்கு ஞானம் அளிப்பவன். ஞான குருமார் சந்ததிகளுக்கே ஞானம் அளிப்பவர்கள். அவர்கள் உலக குரு என்றே சொல்லப்படுபவர்கள். புத்த பெருமான், திருஞானசம்பந்தர், ஏசு பெருமான், நபிகள் நாயகம், வள்ளற் பெருமான் முதலியயாவரும் உலக குருக்கள்.

மெய்கண்டார் முதலியவர்களைச் சந்தான குரவர் என்கிறோம். சந்தானம் என்பது தொடர்ச்சி. நமது மரபு தொடர்வது பிள்ளைகளால்தானே! ஆகையால், பிள்ளைகளுக்குச் சந்தானம் என்று பெயர்.

சந்தான ஆசாரியார்கள் சைவ சமய குரவர்களின் கருத்துக்களைத் தந்தை > மகன் என்னும் உறவுவழியே பரப்புவதை மேற்கொண்டார்கள். ஆழ்வார்கள் கூறிய கருத்துக்களை ஆச்சாரியர்கள் மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த ஞானத்தை இறையருளால் பெற்ற சான்றோர்கள் தங்கள் மாணவர்களுக்குச் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளைப் பரம்பரையில் காப்பாற்றிவந்தார்கள். இந்தப் பரம்பரையில் வந்தவர்களில் சிலர் மடங்களை உருவாக்கினார்கள். வைணவர்களும், சைவர்களும் இவர்களில் அடங்குவார்கள்; நூல்களை இயற்றினார்கள். போதனைகள் செய்தார்கள். சமுதாயத் தொண்டுகள் செய்தார்கள். சிலர் இயக்கங்களையே உருவாக்கினார்கள். குரு நானக் சீக்கிய இயக்கம் தோன்றக் காரணமானார். குரு கோவிந்த சிங் முதலாக இந்த இயக்கம் ஒரு சமயமாகவே உருவாகிவிட்டது. வள்ளற்பெருமான் அவ்வாறு ஓர் இயக்கத்தை உருவாக்கியவர்தான்.

பகவான் ரமணர் முதலியவர்களின் கொள்கை உலகெங்கும் பரவினாலும் மடங்களாக - இயக்கங்களாக மாறாமலேயே ஆன்மிக நாட்டமுடையவர்களுக்கு வழிகாட்டி வருகின்றது.

எப்படியிருந்த போதிலும் பாரதப் பெரும் பண்பாடு என்னும் ஜீவ நதியில் தோய்ந்து நீராடித் திளைத்து மகிழும் துறைகளாக இந்த ஞான பரம்பரை விளங்குகிறது.

வள்ளற் பெருமான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று தம்மை அந்த ஞான பரம்பரையில் வந்தவராகக் காட்டிக்கொள்வதைக் காண்கின்றோம்.

பரம்பரையில் பெறுவதைத்தான் நாம் சிறப்பாக ஞானம் என்று கொள்கிறோம்.

பாரதியார் சொல்கிறார் : 'ஒரு தேசத்தின் நாகரிகத்துக்கு அந்தத் தேசத்தின் இலக்கியமே மேலான அடையாளம்.'

இந்திய நாட்டின் மிகப் பெரிய அறிவுக் கருவூலமாகப் பெரியோர்கள் செய்த இலக்கியங்கள் கொட்டிக் கிடக்கின்றன. வடமொழியிலும் தமிழிலும்தான் ஆயிரக்கணக்கான நூல்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வற்றாத அறிவூற்றாக விளங்கிவருகின்றன.

வேதம், உபநிடதம், அவைகளிலிருந்து பிறந்த அறிவாராய்ச்சி நூல்கள், மனித வாழ்க்கையின் படப்பிடிப்புக்களாகிய இலக்கியங்கள், தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகிய அருள் நூல்கள், தத்துவ சாத்திர நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் என இந்நூல்கள் பல வகைப்படுகின்றன. பெரியவர்களின் வாக்குகள் அல்லாமல் அவர்கள் வாழ்க்கையும் இந்த இலக்கியங்களில் ஒரு பகுதியே. அவை பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய நூல்களாக அமைகின்றன.

இந்தியத் தத்துவ ஞானம் வேதங்களில் வேரூன்றி, உபநிடதமென்னும் மரமாய் வளர்ந்து, பல கிளைகளைப் பரப்பி, அரிய கனிகளை வழங்கிவந்துள்ளது. இந்த மரம் இன்னும் வேர்களையும் விழுதுகளையும் நெடுகப் பரப்பி இந்த நிலத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிவரும் என்பது உறுதி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் முழங்கினார்: ''ஒரு ஹிந்து நடந்து செல்கையில் அவன் தனியாக நடந்து செல்வதில்லை. அவனுக்குப் பின்னால் ஐந்தாயிரம் ஆண்டுக் கலாசாரம் அணிவகுத்துச் செல்கிறது'' என்றார்.

மாக்ஸ்முல்லர் கூறியதை இங்கு நாம் நினைவுகூர்வது நல்லது.

'மறுபிறப்பு என்று ஒன்று உண்டென்றால், நான் இந்தியாவில்தான் பிறக்க ஆசைப்படுகிறேன். அதுவும் ஒரு புழுவாகப் பிறந்தால் கூடப் போதும்.' தம் நண்பர்களிடம் இவ்வாறு எழுதிவைக்குமாறு அவர் கூறிச் சென்றார்.

இந்து மதம், மாணிக்கவாசகர் சொல்வதைப் போல், ''முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியது;'' என்றுமிருப்பது. அதனுடைய உலகளாவிய பொருள் தன்மையால் யாவரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. சத்தியம் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அதை வரவேற்கத் தன் கதவுகளை அகலத்திறந்து வைத்துள்ளது. ஆகவே, நம் ஞானிகள் இந்தியாவுக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே சொந்தமானவர்கள்.

''இந்து தேசத்திலுள்ள ஜீவனை யுகயுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடூரமான கலியில் உலகம் தலைகீழாகக் கவிழ்ந்துபோகும் சமயத்தில்கூட இந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவசக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை.''

— குள்ளச்சாமியார் என்னும் சித்தர் வாக்காக இவ்வாறு சொல்லிக் கொண்டேவரும் பாரதியார், ''மனவலிமையும் பொருள் வலிமையுமற்ற இந்திய அரசர்களாலோ, வேதமந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பத் சொல்லிக்கொண்டிருக்கும் பிராமணர்களாலோ, கொடைக்குணம் மறந்த வணிகர்களாலோ, மூடத்தன்மை மிக்க மற்றவர்களாலோ இந்தியாவுக்கு அமரத்தன்மை கிடைக்கவில்லை'' என்கிறார்.

இந்து தர்மத்தின் பெருமையைச் சொல்ல வந்த பாரதியார்,

''எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன் என்றுரைத்தான் கண்ணபெருமான். எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் ஆம் இந்தியா உலகிற்களிக்கும். வாழ்க'' என்று கூறினார்.

அமர கவியின் கண்களில் நமது ஞானபரம்பரை ஒன்றே சர்வ மத சமரசத்தைப் பேணிப் பாதுகாக்க வல்லது; அது ஒன்றே உலகிற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி உலகையே வாழ்விக்க வல்லது என்ற உண்மை தெரிகிறது.

அவரது வாக்குப் பொய்க்கவில்லை. பிற நாடுகளுக்கு நம் பெரியோர்கள் சென்றார்கள். சுவாமி விவேகானந்தர், சுவாமி இராமதீர்த்தர், பரஹம்ஸ யோகானந்த கிரி, இன்று மகேஷ் யோகி, முக்தானந்தர், பிரபுபாத பக்திவேதாந்த மகராஜ், சுவாமி சச்சிதானந்தர், பகவான் ரஜனீஷ், ரவிசங்கர், சின்மயாநந்தர், வேதாத்திரி மஹரிஷி ... என்று எத்தனை எத்தனை பேர்!

இவர்கள் சென்று ஆன்மிக ஒளியைப் பரப்பினார்கள். இங்கிருந்தவாறே தம் கதிரொளி பாய்ச்சியவர்களில் ரமண மகரிஷி, அரவிந்தர், சிவானந்தர், சத்திய சாயி இவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். எண்ணற்ற வெளிநாட்டவர்கள் தங்கள் ஒளியிழந்து, வாழ்க்கைக் களையிழந்து, மன இறுக்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமானால் இந்தியாவே கதி என்று இங்கு வருகிறார்கள்.

சுவாமி சச்சிதானந்தர் இரண்டு லட்சத்திற்கு மேலான அமெரிக்கர்களின் வாழ்க்கைமுறையைச் செம்மைப்படுத்தி யிருக்கிறார்கள். வெளிநாட்டு உபதேசியார்கள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் மதமாற்ற வேலையை இவர்கள் செய்வதில்லை. ஒழுக்கம், இறையுண்மை, சமுதாயத் தொண்டுணர்வு என்பனவற்றில் மட்டும் அவர்களுடைய மனம் செல்லும் வண்ணம் மடை மாற்றினார்கள்.

ஞான பரம்பரையைக் காத்துவந்த நல்லாசிரியர்கள் வாழ்ந்த காலத்தைப் பலவாறு ஆராய்ந்து நிர்ணயித்துள்ளார்கள். புத்தர் முதல் சேக்கிழார்வரை இந்த நிலையே நீடிக்கிறது. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு காலநெறிப்படி முறையாக எழுதப்படாத காரணமென்ன? இதற்கு முக்கியக் காரணம் ஒன்றைச் சொல்லலாம். மனிதர்கள் வாழ்வைக் காட்டிலும் மனிதர்களின் வாக்கு அல்லது அவர்கள் கடைப்பிடித்த நெறிகளே மேலானவையாக நம் முன்னோர்க்குத் தோன்றியிருக்க வேண்டும். புத்தருடைய வாழ்வைவிட அவர் போதனைகளே நாம் நினைவில் வைக்க வேண்டியவை. இராமானுஜர் செய்த அற்புதங்களைவிட அவர் தொண்டே நாம் போற்ற வேண்டியது. எனினும், பெரும்பாலும் உலகத்தின் ஏனைய பகுதிகளில் பெரியோர்களின் வாழ்க்கைகளைக் கால முறைப்படி நன்கு கணித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். நாம் அதுபோல நம் பெரியோர்களின் வரலாற்றைச் செம்மையாகப் பதிவு செய்து வைப்பது இன்றைய நிலையில் கட்டாயமானதுதான்.

இவர்களுடைய கால வரலாற்றின் பின்னணியில் நமது இதிகாச புராண வரலாறுகளின் காலங்கள் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த மறு ஆய்வு அடிப்படையில் சங்க காலச் சான்றோர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலங்களை வரையறுத்து நிறுவும் முயற்சியையும் நாம் இப்போது செய்துகொண்டுவருகிறோம் என்பதைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன்.

நம் பெரியோர்கள் வானத்தில் சப்தரிஷி நட்சத்திரங்களின் இயக்கத்தைக் கவனித்து, வைவஸ்தவ மனுகாலத்திலிருந்து கணக்கிட்டுவந்திருக்கிறார்கள்.

சப்தரிஷி மண்டலத்தின் இயக்கத்தை வைத்தே சப்தரிஷி சகாப்தம் என்பது வைவஸ்தவ மனுவின் காலத்தில் தொடங்கப்பட்டது. அது கி.மு. 15261 ஆகும்.

இதனடிப்படையில் வழக்கத்தில் உள்ள யுகக்கணக்கு முறையில் திருத்தம் காண முடிந்தது. இப்போது நடைபெறுவதாக நாம் சொல்லும் கலியுகம் என்றோ முடிந்துவிட்டது. கிருதயுகம் முடிந்து, உண்மையில் இப்போது திரேதாயுகம்தான் நடைபெறுகிறது.

சென்னையில் நாம் அமைத்துள்ள அனைத்துலகத் தொன்மை வரலாற்று ஆய்வுக் கழகத்தின்மூலம் இந்த ஆய்வுகள் செய்யப் பட்டுவருகின்றன. அதன்மூலம் பழைய ஆய்வு முடிவுகள் திருத்தம் பெற்றன.

ஆதிசங்கரருடைய காலம் கி.மு. 509 என்றும், ஒரு சதுர்யுகம் 12160 ஆண்டுகள் கொண்டது என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்களில் ஐந்து பேர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு முந்தியவர் என்று தெரிகிறது. சப்தரிஷி மண்டலம் (Great Bear) பற்றி இதுவரை வான நூலுள் விரிவான ஆய்வு செய்யப்படவில்லை. நாம் இப்போது அந்த ஆய்வுக்கு ஏற்பாடு செய்துள்ளோம். கூடிய விரைவில் சரியான கணக்குகள் நிர்ணயம் செய்யப்படும்.

பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி வாயிலாக நூல் வெளியீட்டுப் பணி மிகச் சிறப்பாக நடந்துவருகிறது.

மாணவர்களுக்கு நமது இந்தியப் பண்பாடு நாகரிகம் குறித்த பாடத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளுக்குமுன் நடைமுறைப்படுத்தி, அதற்கான சிறுசிறு நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு அக்கல்லூரி வெளியிட்டது. அப்புத்தகங்கள் வேறு சில கல்லூரிகளுக்கு முன் மாதிரியாக அமைந்தன.

பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தினர் நம்முடைய தேசியத் தலைவர்கள், விடுதலைப் போராட்ட வீரர்கள், பெரியோர்கள் வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக வெளியிட்டார்கள்.

ஈரோடு திரு. ஸ்டாலின் குணசேகரன் அவர்கள் சுதந்திரப் போராட்ட வரலாற்று வீரர்களின் சரித்திரத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்கள். அதுபோல் நமது இந்திய ஞான பரம்பரையைச் சேர்ந்த அருளாளர்கள் வரலாற்றைச் சிறு நூல்களாகக் கொண்டு வரவேண்டுமென்ற எனது விருப்பத்தைத் தமிழ்ச் சான்றோரும்

பேரறிஞருமாகிய டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களிடம் கூறி, நிறைவேற்றித் தருமாறு வேண்டினேன்.

என்னுடைய வேண்டுகோளை ஏற்று, மூதறிஞர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் நமது ஞான பரம்பரையைச் சேர்ந்த 30 அருளாளர்கள் - காரைக்காலம்மையார் முதல் சித்பவானந்தர் வரை - வாழ்க்கை பற்றியும் அவர்களின் வாக்குகள் பற்றியும் பல நல்லறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து, அரிய முறையில் மேற்பார்த்துத் தொகுத்து நூல்கள் வெளிவரச் சிறந்த முறையில் உதவியிருக்கிறார்கள்.

டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நூல்களை அரிய முறையில் எழுதியுதவிய அறிஞர் பெருமக்களைப் பாராட்டுகிறேன்.

இந்த வரலாறுகளை ஐந்து தொகுதிகளாக* அழகிய முறையில் முதல் பதிப்பாக வெளியிட்ட பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பதிப்புத்துறையில் உதவிசெய்த ஏனையோர்களுக்கும் எனது நன்றி.

முதல் பதிப்பு வந்து சில மாதங்களிலேயே பிரதிகள் தீர்ந்து விட்டன. இப்போது இரண்டாம் பதிப்பு எனது தலைமையில் இயங்கும் இராமானந்த அடிகளார் அறக்கட்டளை ஆதரவாலும் அந்த அறக்கட்டளையின் மூலம் நடைபெறும் குமரகுரு பொறியியல் கல்லூரியின் உதவியாலும் வெளிவருகிறது.

நூல்களை அற்புதமாக அச்சிட்டு முடித்த ருக்மணி அச்சக மேலாளர் திரு. பாலசண்முகம் அவர்களுக்கும், வேண்டிய படங்களைப் பயன்படுத்திக்கொள்ள உதவிய பெரியோர்களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ் உலகமும், இளைஞர் சமுதாயமும் இதனை வரவேற்றுப் பயனடைய வேண்டும் என்பது என் பேரவா.

நா. மகாலிங்கம்

*முதற் பதிப்பிற்கானது

அத்துவைதம், விசிட்டாத்துவைதம் இரண்டுக்கும் இடைப் பட்ட துவைதத் தத்துவத்தைத் தெளிவுறுத்திய ஞான நாயகர் **ஸ்ரீ மத்வாசாரியர்.** கருநாடகத்தில் தோன்றினாலும் பல மாநிலங்களிலும் தத்துவக் கொடியேற்றிய ஞானச் செல்வர்.

அவரைப் பற்றி அரிய விவரங்களை அரும்பாடுபட்டுத் தொகுத்துச் செய்திக் களஞ்சியமாக நூல் எழுதி வழங்கியவர் **டாக்டர் சுதா சேஷையன்.** பெற்ற கல்வியாலும் தொழில் திறத் தாலும் டாக்டர். நுண்மாண் நுழைபுலத்துக்காக இரண்டு மூன்று முனைவர் பட்டங்கள் தாராளமாக இவருக்கு வழங்கலாம். தமிழறிந்தோர் வாழும் இடமெல்லாம் இவர் சொற்பொழிவால் பொலிவும் புகழும் விளங்குகின்றன. தொழிலில் அறுவை நிபுணர்; தொண்டில் 'அறுவை' செய்யத் தெரியாத அருங்கலை நாயகி.

உடையவன் / உடையான் என்று பரமனையே குறிப்பது மரபு; அந்த மரபுக்கே புது வழி வகுத்து உடையவர் ஆனவர் **ஸ்ரீ இராமானுசர்.** திருவரங்கம் பெரிய கோயிலின் நடைமுறை யினைக் 'கோயிலொழுகு' மூலம் நிலைநிறுத்திய இவர், வைணவத்தையும் நிலைநிறுத்தியதால் ஸ்ரீ வைணவத்தை இராமானுஜ தரிசனம் என்றே வழங்கச் செய்தவர்! காலத்தை மீறிய புரட்சியாளர்.

ஆசாரிய இமயமாகிய உடையவரைப் பற்றி நமக்காக நூல் எழுதியவர் **முனைவர் ம.பெ. சீனிவாசன்.** தமிழ்ப் பணியால் சமயத் தெளிவும், சமயத் தெளிவால் தமிழ் நலமும் பேராசிரியர் சீனிவாசனின் தனியுடைமை. பல நூல்கள் எழுதியவர்; புலமையும் தெய்வீக நாட்டமும் உடைய பெரியோர்களிடம் நெருங்கிப் பழகும் பண்பாளர்.

''எல்லாவித நம்பிக்கைகள், பிடிவாதக் கோட்பாடுகள், பிரிவுகள், இனங்கள், சாதிகள், வகுப்புகள் - அனைத்துக்கும் எதிரானவர். உலகந் தழுவும் அன்பினால் எல்லா உயிர்களும் ஒருங்கே கொணரப்படுகின்றன... அவர் கவிதை அவர்

ஆளுமையின் வெளிப்பாடு. நம் இதயத்துக்கு விடுக்கும் நேரடி வேண்டுகோளைக் கொண்டது அது... அவரது செய்தியை ஆங்கிலத்தில் எடுத்துச் சென்று சேர்க்க ஒரு விவேகானந்தர் அவருக்குக் கிட்டவில்லை. எதிர்காலத்தில் உலகம் ஒரே குடும்பமாகும்போது, அவரது கவிதைகள் உலகின் இசைக் குரலாக - கவிக் குரலாக ஆகித்தான் தீரும்'' எனப் பல்கலைச் செல்வர் தெ.பொ.மீ.யால் சிறப்பிக்கப்பட்டவர் **வள்ளலார்.** ''இராமலிங்க அடிகளின் உரைநடை வேகத்தினாலும் உணர்ச்சிப் பெருக்கினாலும் தனித்தன்மை பெறுகிறது... மனிதனின் கருணை பற்றிய அவர் கட்டுரை உண்மையிலேயே ஒப்பிலா உயர்தரப் படைப்பாகும்'' - இதுவும் தெ.பொ.மீ.யின் கணிப்பே.

வள்ளலார் பற்றி நூல் எழுதியவர் முனைவர் **ம.ரா.போ. குருசாமி.** இந்த நூல் வரிசையின் ஒருங்கிணைப்பாளர்; தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர்; பல நூல்கள் படைத்தவர்; தமிழக அரசின் திரு.வி.க. விருதும் ஆதித்தனாரின் மூதறிஞர் விருதும் பெற்றவர்.



# தொகுதி ஐந்து

## ஸ்ரீமத்வர்

டாக்டர் சுதா சேஷையன்

## ஸ்ரீ இராமாநுசர்

முனைவர் ம.பெ. சீனிவாசன்

## வள்ளலார்

முனைவர் ம.ரா.போ. குருசாமி

# ஸ்ரீ மத்வர்

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| 1. | வாசுதேவனாய் வந்த வாயுதேவர் | - | 1 |
| 2. | அதிசயிக்கவைத்த அற்புதங்கள் | - | 13 |
| 3. | சந்திரன் வழிபட்ட சிறப்புத் திருத்தலம் | - | 16 |
| 4. | அழகுக் கண்ணனும் அஷ்ட மடங்களும் | - | 20 |
| 5. | மத்வரின் காலம் | - | 27 |
| 6. | மத்வர் இயற்றிய நூல்கள் | - | 29 |
| 7. | மத்வ சித்தாந்தம் | - | 45 |
| 8. | மத்வ சம்பிரதாய மடங்கள் | - | 58 |
| 9. | மத்வ சம்பிரதாயமும் சீடர்களும் | - | 67 |
| 10. | மத்வ சம்பிரதாயத்தில் ஜயதீர்த்தர் | - | 74 |
| 11. | மத்வ சம்பிரதாயத்தின் சில ஆசார்யர்கள் | - | 77 |
| 12. | தாசகூட்ட மரபு | - | 94 |
| 13. | வங்காள வைணவமும் மத்வ சம்பிரதாயமும் | - | 101 |

# ஸ்ரீ மத்வர்

## 1. வாசுதேவனாய் வந்த வாயுதேவர்

### நாளொருமேனியும் பொழுதொருவண்ணமும்

இன்று கண்ணன் திருத்தலங்களுள் பிரபலமாக விளங்குவது உடுப்பி; உடுப்பிக்கு எட்டு மைல்கள் தென்கிழக்காக இருக்கும் குக்கிராமம் 'பாஜகக்ஷேத்திரம்' என்கிற 'பாஜக'. இந்தக் கிராமத்தில், ஒரு துளுவ[1] அந்தண குடும்பத்தில், மத்யகேஹ பட்டருக்கும்[2] வேதவதிக்கும் மகனாகத் தோன்றினார் மத்வர்.

உடுப்பிக்கு அருகிலுள்ள இன்னொரு கிராமம் கடியாலி. இங்கேதான் மத்யகேஹ பட்டரும் அவர் மனைவியும் வாழ்ந்து வந்தார்கள். சின்னஞ்சிறு சிசுக்களாகவே, தங்களின் இரண்டு மகன்களை அவர்கள் இழக்க நேர்ந்தது. அந்தத் துன்பத்தால் மனமுடைந்து, தங்களுக்கு மீதமிருந்த மகளைமட்டும் அழைத்துக் கொண்டு பாஜகக்ஷேத்திரத்திற்குக் குடிபெயர்ந்தார்கள்.

மகன் இல்லையே என்னும் குறை, மனத்தை அரிக்க, உடுப்பி ஸ்ரீ அனந்தேஸ்வரர் திருக்கோயிலுக்குத் தினம் செல்வார் பட்டர். ஒன்றல்ல, இரண்டல்ல, பன்னிரண்டு ஆண்டுகள்! புத்திரச்செல்வம் குறித்துப் பன்னிரண்டு ஆண்டுகள் அனந்தேஸ்வரரை வணங்கினர்

---

1. தௌலவ அந்தண குடும்பம் என்னும் குறிப்பு பல இடங்களில் காணப்பெறுகிறது. 'தௌலவ' என்னும் சொல் 'துளுவ - துளுவிலிருந்து' என்பதைக் குறிக்கும். வடமொழி இலக்கணப்படி, துளுவ என்பது தௌலவ என்றாயிற்று.
2. நாராயணன் என்பதே மத்வரின் தந்தையின் இயற்பெயர் என்று சில குறிப்புகள் தெரிவிக்கின்றன.

பட்டரும் அவர்தம் துணைவியாரும். அந்தக் கோயில் பூசாரியின் கனவில் எழுந்தருளிய அனந்தேஸ்வரர், 'சாட்சாத் வாயுதேவனே, மத்யகேஹபட்டரின் மகனாகப் பிறப்பார்' எனத் திருவாக்கு மலர்ந்தார்.

அதன்படியே, 'விளம்பி' ஆண்டின் விஜயதசமி நன்னாளில் பட்டருக்கும் வேதவதிக்கும் பிறந்த மகனுக்கு 'வாசுதேவன்' என்று பெயரிட்டனர்[3].

பிள்ளைப் பருவத்து வாசுதேவன் விளையாட்டுக் குறும்புகளில் ஊறித் திளைத்தவன். காற்றுக் கடவுளின் மறுபிறப்பல்லவா! அவனின் ஆட்டங்களும் பாட்டங்களும் சொல்லி மாளா.

பசுவின் வாலைப் பற்றிக்கொண்டு ஓடிவிடும் ஒருவயதுப் பிள்ளை; பெற்றவள் பரிதவிப்பாள். மகனைக் காணாது மறுகுவாள்; ஓடுவாள்; தேடுவாள். மாலைக் கருக்கலில் மாட்டின் காலைப் பற்றிக் கொண்டு வந்து நிற்கும் பிள்ளை.

நெடுந்தொலைவில் இருக்கும் இன்னொரு ஊருக்குத் திருமணம் ஒன்றில் கலந்துகொள்வதற்காக அழைத்துச் சென்றனர் பெற்றோர். திடீரென்று குழந்தையைக் காணோம். தேடித்தேடியலைந்தார்கள். உற்றாரைப் பார்த்துப் பெற்றோர் கேட்க, பிள்ளையைப்பார்த்துக் கொள்ளத் தெரியாதவர்கள் என்று உற்றார் பரிகசிக்க, இரவு முழுவதும் அழுகையிலும் ஆதங்கத்திலும் கழிந்தது. மறுநாள் காலை. திருமணத்திற்கு வந்த வேறு சில உறவுக்காரர்கள் குழந்தையைக் கூட்டிவந்தார்கள். இரவு கும்மிருட்டில் எல்லோரும் தூங்கியபின் புது ஊரிலிருந்து உடுப்பிவரை பயமேதுமில்லாமல் நடந்துபோய்விட்டது குழந்தை. உடுப்பியில் தெரிந்த முகங்களைப் பார்த்துவிட்டு ஓடிவந்து உறவாடியிருக்கிறது அந்தப் பொல்லாத பிள்ளை.

பாலைக் காய்ச்சி வைத்துவிட்டு, மகனை அழைத்து, 'பூனை வராமல் பார்த்துக் கொள்' என்று சொல்லிவிட்டுப் போவாள் தாய். பூனைக்குக் காத்திருக்கப் பையனுக்கும் பொறுமை இருக்குமா

3. பாஜகக்ஷேத்திரம் என்கிற மத்வரின் பிறந்த கிராமம், துளு மொழியில் 'காக்ரா' என்றும் அழைக்கப்பெறுகிறது. இந்தக் கிராமத்தில், ஸ்ரீ மத்வர் அவதரித்த பழைய வீடு, தற்போது உடுப்பி ஸ்ரீ கணியூர் மடத்தின் நிர்வாகத்தில் உள்ளது. (ஸ்ரீ மத்வரைப் பற்றி ஆராய்ந்த சில அறிஞர்கள், அவரின் அவதார ஸ்தலத்தைக், 'கல்யாண்பூர்' என்று தவறுதலாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

என்ன? தோட்டத்திலிருந்து பாறாங்கல்லைக் கொண்டு வந்து பால் பாத்திரத்தை மூடிவிட்டுப் போய்விட்டான்.

கல்லைத் தூக்கிப் போடுவான்; முட்டை நிறையக் கொள்ளைத் தின்றுவிட்டுச் சிரிப்பான் - இப்படி எல்லையில்லாது அமர்க்களம் செய்தான் அந்த பீமன்! ஆமாம்! இரண்டு மூன்று வயதில், அந்தக் குழந்தை வாசுதேவனை, எல்லோரும் 'பீமன்' என்றே அழைத்தார்கள்.

### உறவும் துறவும்

மூன்று வயதிலிருந்து ஏழு வயதுவரை ஆரம்பக்கல்வியைத் தந்தையிடமிருந்து பெற்ற வாசுதேவனுக்கு ஏழு வயதில் உபநயனம் (பூணூல் கல்யாணம்) நடைபெற்றது. அதன்பின்னர், தோட்டம்தில்லையா என்னும் ஆசிரியரிடத்தில் பாடம் தொடர்ந்தது. அந்தக் கல்வி, வேதங்கள், வேதாங்கங்கள், இலக்கியம், கவிதை, நாட்டிய சாஸ்திரம் என்ற பல அம்சங்களை உள்ளடக்கியதாகவும் இருந்தது.

இளமைப் பருவத்தை அடைந்த வாசுதேவனுக்கு இல்லறத்திலோ அதைச் சார்ந்த லௌகீக வாழ்விலோ மனம் ஈடுபடவில்லை. தனக்கு, பூவுலக வாழ்வில் ஏதோவொரு நோக்கம் இருப்பதாகவும், அதனைப் பூர்த்தி செய்ய இல்லற வாழ்வு இடம் கொடுக்காது என்றும் தோன்றியது. தனக்குச் சன்யாசம் தரக்கூடிய ஒரு குருவைத் தேடத் தொடங்கினான் வாசுதேவன்.

உடுப்பியில் உள்ள பண்டார்கர மடத்தின் பீடாதிபதியான புருஷோத்தம தீர்த்தர் என்கிற அச்யுதப்ரக்ஞரிடத்தில் தனக்கான குருவை அடையாளம் கண்டான் வாசுதேவன்.

அச்யுதப்ரக்ஞதீர்ந்தர் (இவரேதாம் அச்யுதப்ரேக்ஷ தீர்த்தர் என்றும் அழைக்கப்படுகிறார்), வாசுதேவனைத் தம் சீடனாக ஏற்றுக் கொண்டார்.

வாசுதேவனின் தந்தைக்கு மனம் தாளவில்லை. ஒரே மகன். தவம் கிடந்து பெற்ற பிள்ளை. இப்படிச் சன்யாசியாவதா?

பண்டார்கர மடத்துக்கு வந்த மத்யகேஹர், எப்படியாவது மகனை மீண்டும் வீட்டுக்கு அழைத்துச் சென்றுவிட வேண்டும் என்று முயற்சி செய்தார். இசைய மறுத்த மகனை எப்படி மசிய வைப்பது? மகன் என்றும் பாராமல், வாசுதேவனின் கால்களில் விழுந்து கெஞ்சினார் தந்தை. தந்தையே மகன் காலில் விழுவதா? இது நடைமுறையா? இது நல்லதா? இது சரியா?

தந்தையே மகன் காலில் விழுவது எதைக் காட்டுகிறது? 'கற்றுக்குட்டியானாலும், அந்தக் கற்றுக்குட்டி மகன் காலில் தந்தை விழுவது அவன் சன்யாசி என்பதைச் சொல்லாமல் சொல்கிறதில்லையா?' - வாசுதேவனின் குறுக்குக் கேள்வி, மத்யகேஹரின் வாயை அடைத்தது. தான் சன்யாசிதான் என்பதை ஊர்ஜிதப்படுத்த வாசுதேவன் கையாண்ட வழிமுறையில் தடுமாறிப்போன மத்யகேஹர் ஊர் திரும்பினார். கணவனும் மனைவியும் மீளாப் பெருந்துயரில் பரிதவித்தார்கள்.

இன்னொரு முயற்சி செய்யும் வாய்ப்பும் அவர்களுக்கு விரைவிலேயே வந்தது. உடுப்பியிலிருந்து முப்பத்தெட்டு மைல்கள் தூரத்தில் உள்ள கயுரு என்னும் கிராமத்தில் அச்யுதப்ரக்ஞர் முகாமிட்டிருந்தார். அவருடன் இருந்த வாசுதேவனை, அங்குச் சென்று சந்தித்தார் மத்யகேஹர். இம்முறை வாசுதேவனிடமும் லேசான இரக்கம்.

'உங்களுக்கென்ன? உங்களுக்கென்று ஒரு மகன் வேண்டும். அவ்வளவுதானே! இன்னொரு மகன் உங்களுக்குப் பிறக்கும்வரை நான் சன்யாசம் பெறவில்லை, போதுமா?', என்று திருவாக்கு மலர்த்தினான் வாசுதேவன்.

சில ஆண்டுகளில் மத்யகேஹருக்கும் வேதவதிக்கும் மீண்டும் ஒரு ஆண் மகவு பிறக்க, தம்பியைக் காணச் சென்ற வாசுதேவன், தன் நோக்கத்தையும் சாதித்துக்கொண்டான். 'தான் சன்யாசியாகத் தன் தாய் அனுமதி தரவேண்டும்; இல்லையென்றால், தன்னை மீண்டும் அவள் காணவே முடியாது', என்று வாசுதேவன் நிபந்தனையிட, மனமின்றி ஒப்புதல் தந்தாள் அந்தப் புண்ணியவதி.

தாயின் சம்மதம் கிடைத்தவுடன் வாசுதேவனுக்குத் தலைகால் புரியவில்லை. மனமெல்லாம் நிரம்பி வழிந்த மகிழ்ச்சி. குருவிடம் ஓடிச் சென்று தனக்குச் சன்யாச தீக்ஷை தருமாறு வேண்டினான்.

குருவுக்கும் அதுவொரு பெருமிதத் தருணம்தான். குருவுக்கு மட்டுமா? ஸ்ரீ அனந்தேஸ்வரர் திருக்கோயிலில் குழுமியிருந்தவர்கள் எல்லாரும், அது உடுப்பியின் வரலாற்றில் ஒரு பொன்னேடு என்றே வியந்தார்கள்.

ஊரெல்லாம் குழுமி நிற்க, கோலாகலமான சூழலில், வாசுதேவனுக்குப் பூர்ணப்ரக்ஞர் என்கிற திருநாமத்துடன் சன்யாச தீக்ஷை அளித்து ஆசீர்வதித்தார் அச்யுதப்ரக்ஞர். சன்யாச ஆசிரமத்தின் கடமைகளைப் புதிய வேகத்துடனும் ஆற்றலுடனும்

மேற்கொண்டார் பூர்ணப்ரக்ஞர் (பூர்ணபோதர் என்றும் இத்திருநாமம் வழங்கப்பெறுகிறது). தம் குருவுடன் செலவிட்ட நேரமும், பூஜாக்கிரமங்களில் ஈடுபட்ட நேரமும் போக, மீதமிருந்த காலங்களில் ஸ்ரீமத் பாகவத பாராயணத்திலேயே செலவிடுவார் பூர்ணப்ரக்ஞர்.

வேதாந்த நூல்களில் பூர்ணப்ரக்ஞருக்குப் பாடம் நடக்கும். பல சமயங்களில் குருவுக்கும் சீடருக்குமே கருத்து வேற்றுமைகள் மிகும். தம்மிடமிருந்து கருத்தில் மாறுபட்டாலும், தம் சீடர், உலகிற்கு வேண்டிய கருத்துக்களை உணர்ந்து உரைப்பதைப் பார்த்துப் பரவசப்பட்ட அச்யுதப்ரக்ஞர், தமக்குப்பின் இவரே மடத்தின் பீடாதிபதி என்று அறிவித்தார். ஒரு குறிப்பிட்ட நன்னாளில், ஆனந்ததீர்த்தர் என்கிற புதிய திருநாமத்துடன் பண்டார்கர மடத்தின் ஸ்ரீ பீடமேறினார் பூர்ணப்ரக்ஞர்.

### வாதங்களும் விவாதங்களும்

புதிய பீடாதிபதி ஆனந்ததீர்த்தர், பல அறிஞர்களைச் சந்தித்தார்; அவர்களுடன் விவாதித்தார்; வேதாந்தக் கருத்துக்கள் பலவற்றைப் பேசினார். உடுப்பியில் அவரைக் கண்டு தரிசிக்கப் பலரும் கூடினர்.

வேதாந்தக் காற்றின் வாசனையும் சற்றே மாறியது. அதுவரை ஆதிசங்கரரின் அத்வைத வாதமே வேதாந்த விவாதங்களிலும் விளக்கங்களிலும் தலைதூக்கி நின்றது. குரு அச்யுதப்ரக்ஞர்கூட அத்வைத நெறியை ஆதரித்து உபதேசித்தவர்தாம். அவருக் கென்னவோ, சங்கர அத்வைதத்தின்மீதுதான் பிடித்தம் அதிகம்.

ஆனால், வேதாந்த விசார விளக்கங்களில் ஆனந்ததீர்த்தரின் கொள்கைகள் மாறுபட்டன. ஆதிசங்கர நெறியை ஆவேசமாகச் சாடினார் அவர். இராமாநுசரின் கொள்கைகளில் சிலவற்றை ஏற்றுக் கொண்டாலும், முறைகளிலும் நெறிகளிலும் பெருமளவில் மாறுபட்டார். இது, அதுவரை பரவியிருந்த ஆன்மீக நிலைப்பாட்டில், ஒரு புதிய காற்றை வீசியது.

குருவும் சீடருமே வேறுபட்டார்கள். தம் சீடரான ஆனந்ததீர்த்தரின் விமர்சனங்களையும் தாக்குதல்களையும் ஊக்கப்படுத்தினாலும் அவற்றை அச்யுதப்ரக்ஞர் முழுமையாக ஏற்றுக்கொள்ள வில்லை.

'விமர்சிப்பதும் குறை காண்பதும் எளிமையானவை', என்பது குருவின் வாதம். ஆதிசங்கரரின் நெறி தவறானது என்றால், தெளிவான உரையும் திட்டமும் கொடுத்துத் தம்முடைய நெறியை

கண்டார் மத்வர். புதியதொரு சித்தாந்தத்தைத் தொடங்கி வைக்க அவர் உள்ளத்தில் இருந்த உணர்வுக்கு இது உறுதி சேர்த்தது. உறுதியும் உந்துதலும் தூண்ட உடுப்பி வந்து சேர்ந்தவுடன், ஸ்ரீமத் பகவத் கீதைக்கு உரை விளக்கம் எழுதினார். புதுமை, எளிமை, கருத்துச் சீர்மை யாவும் கொண்ட இந்த உரையைத் தம் குருவின் காலடியில் சமர்ப்பித்துவிட்டு, பதரிகாசிரமம் செல்ல அனுமதி வேண்டி நின்றார்.

தொடக்கத்தில் தயங்கிய குரு, பின்னர் அநுமதி வழங்கினார்.

## ஆதி குருவும் அருள்பெற்ற சீடரும்

இரண்டாவது யாத்திரை பெரிய பரிவாரத்துடன் புறப்பட்டது. ஸ்ரீ அச்யுதப்ரக்ஞர் உடுப்பியிலேயே தங்கிக்கொள்ள, அவரின் இன்னொரு சீடரான சத்யதீர்த்தரும் உடன் சென்றார்.

வாரணாசியில் கங்கையில் நீராடியபின் விரைந்து பதரியை அடைந்தார்கள். ஆனந்த மடம் என்னும் இடத்தில் மத்வரின் முகாம் இறங்கியது. தத்துவ விசாரத்திலும் தியானத்திலும் சில நாட்கள் செலவாயின. அப்படிப்பட்ட நாட்களில், உடுப்பியில் எழுதி, ஆனால், இதுவரை வெளியிடாத பகவத்கீதை உரையின் பகுதிகளைத் தம் சீடர்களுக்கு வெளிப்படுத்தினார் மத்வர்.

பதரியில் தங்கிய நாட்களில் ஓரிரவு. பதரிகாசிரமத்துப் பகவானாம் வியாசருக்கு, மத்வரைச் சந்திக்கும் பேரவா ஏற்பட்டது. வேதங்களை வகுத்துக் கொடுத்த வியாச த்வைபாயனருக்கு, வேத வேதாந்தத்துக்கு நவீன விளக்கம் தர வந்திருக்கும் வித்தகரைக் காணும் விழைவு இருந்திருக்காதா என்ன?

இரவின் புறவிருட்டில் மத்வரின் அகவொளியில் அருள்காட்டினார் வியாசர். இமயத்தின் மலைமுகடுகளில்[5] அமைந்த தம்முடைய ஆசிரமத்துக்கு வரும்படி அழைத்தார்.

மறுநாள் காலை. ஆதிகுருவான வேதவியாசருக்குத் தம் வணக்கங்களைச் செலுத்த மஹா பதரிகாசிரமம் செல்வதாகச் சொல்லித் தனியாகப் புறப்பட்டார் மத்வர். சத்யதீர்த்தருக்கு, அவரைத் தனியாக அனுப்ப மனமில்லை. தாமும் உடன்வருவதாகக் கெஞ்சினார். அரைமனத்துடன் சம்மதம் கொடுத்தார் மத்வர். ஆயின், அன்று மாலையே ஆனந்தமட முகாமுக்குத் திருப்பி அனுப்பப்பட்டார் சத்யதீர்த்தர்.

5. இமயமலையின் உயரங்களில், வெண்பனிச் சிகரங்களில் அமைந்தது வியாசரின் ஆசிரமம்; மகா பதரிகாசிரமம் என்பது இதன் பெயர்.

மகா பதரிகாசிரமத்தில், கிருஷ்ணரின் அவதாரமான வியாச பகவானும் கிருஷ்ண பக்தரான மத்வரும் சந்தித்தார்கள். நரநாராயணத் திருத்தலமான பதரிகாசிரமத்தில்தான் இச்சந்திப்பு நிகழ்வது எவ்வளவு பொருத்தம்! சில மாதங்கள் அங்கேயே தங்கினார் மத்வர். பிரம்மவித்தையின் ஊற்றுக்கண்ணாம் வியாசர், பிரம்மஞானத்தை, யுகம் மாறித் தோன்றிய இந்தச் சீடருக்கும் உபதேசித்தார். யுகம் மாறினாலும் சத்ய சுகம் மாறிடுமா? காற்றின் மறு அவதாரம் ஆயிற்றே; வாயு வேகத்தில் வியாச அமுதத்தைப் பருகினார் மாத்வர்.

## சித்தாந்தமும் சீடர்களும்

சில மாதங்கள் சென்றபின், மகா பதரிகாசிரமத்திலிருந்து ஆனந்தமடத்துக்குத் திரும்பிய மத்வர், பிரம்மசூத்ர பாஷ்யம் உரைக்க, அதனைச் சுவடியில் பொறித்தார் சத்யதீர்த்தர்.

மலையிலிருந்து கீழிறங்கி அடிவாரத்தை அடைந்தவுடனேயே தொடங்கிய இந்த எழுத்துப்பணி, கங்கைச் சமவெளியை அடையும்போதே நிறைவடைந்துவிட்டது. பாஷ்யத்தைச் சில பிரதிகள் எடுத்த சத்யதீர்த்தர், ஒரு பிரதியை முன்கூட்டியே, உடுப்பியிலிருந்த குருவுக்கு அனுப்பிவைத்தார்.

கங்கைச் சமவெளியிலிருந்து புறப்பட்டு, கிழக்குக்கரை வழியாகப் பயணித்தது மத்வரின் பரிவாரம். பீகார், வங்காளம் ஆகிய பகுதிகளைத் தாண்டி, கோதாவரிக் கரையை அடைந்தார்கள்.

மத்வருக்கும், அந்தப் பகுதிகளில் பிரபலமாக விளங்கிய சோபன பட்டருக்கும் நீண்ட விவாதம் ஏற்பட்டது. சோபன பட்டர் மிகப்பெரும் அறிஞர். மத்வரை வன்மையாக எதிர்த்த அவர், விவாதத்தின் இறுதியில், மத்வரின் பிரதம சீடர்களில் ஒருவரானார். அன்றுமுதல் சோபன பட்டர், பத்மநாப தீர்த்தர் என்று பெயர் பெற்றார்.

வடநாட்டு யாத்திரை, மத்வரிடம்மட்டு மல்லாமல், மக்களிடமும் ஒரு பெரும் மாறுதலைச் சாதித்தது. அதுவரை மத்வரின் அத்வைத விமர்சனம், வெறும் விமர்சனமாகவும் குறை கூறுதலாகவும் இருந்தது. தாம் ஆவேசமாக விமர்சித்ததற்கு மாற்று எதுவும் அவர் தந்திருக்கவில்லை. இது மக்களிடம் செல்லுபடியாகவில்லை.

ஆயின், கீதைக்கும் பிரம்ம சூத்திரத்துக்கும் அவர் தந்த உரைகள், மாற்றுச் சித்தாந்தம் இருப்பதை வலியுறுத்தின.

எப்போதுமே மாற்றம் தேடும் மனித மனங்களுக்கு, இந்த வேதாந்த - சித்தாந்த மாற்றமும் தேவைப்பட்டது.

எந்தச் செயலுக்கும், குறிப்பாக, எந்தத் தத்துவ விளக்கத்துக்கும் தொடக்கத்தில் எதிர்ப்புகள் இருப்பதுபோலவே, மாத்வ சித்தாந்தத்துக்கும் எதிர்ப்புகள் ஏற்பட்டன. ஆனால், மாயாவாதமும், அத்வைதமும் அவ்வளவாகப் புரிபடாமல் இருந்த சராசரி மக்களுக்கு ஸ்ரீ மத்வரின் பக்திமுறை பாகவத சித்தாந்தம் நிரம்பவே பிடித்தது.

உடுப்பி திரும்பியவுடன் நிறைவேறிய மத்வரின் முதல் சாதனை, அவருடைய குரு அச்யுதப்ரக்ஞரின் முழுமையான மாற்றமேயாகும். சீடரின் புதிய சித்தாந்தத்தை ஏற்று நிலைமாறினார் குரு.

மத்வருடைய உபதேசங்கள் தொடர்ந்தன. அவருடைய தர்க்கவாதமும் விவாதத் திறமையும் வாக்குச் சாதுர்யமும் பற்பல சீடர்களையும் நம்பிக்கையாளர்களையும் கொண்டுவந்து சேர்த்தன.

## விக்கிரகமும் வழிபாடும்

உடுப்பியில், கண்களையும் உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும் ஸ்ரீ கிருஷ்ண விக்கிரகத்தை மத்வர் பிரதிஷ்டை செய்தார். இது, பக்திமார்க்கத்தில் மேலும் பற்றுதலை ஏற்படுத்தும் வகையில் அமைந்தது.

ஒரு பக்கம் மேலும் மேலும் மாத்வ சித்தாந்தத்தைத் தழுவியவர்கள்; இன்னொரு பக்கம், வேகமான எதிர்ப்பாளிகள் - இவற்றுக்கிடையில், பக்திவயப்பட்ட மக்கள். புதிய சித்தாந்தம் ஏற்படுத்தக்கூடிய புதுச் சிலிர்ப்பு, அதனை உபதேசிக்கும் மத்வரின் அதிகாரம் கலந்த உண்மையுணர்வு, அவரின் தடை சொல்லமுடியாத தர்க்க மேன்மை, வாதப் பிரதிவாதங்களை அவர் எடுத்துக் கொடுத்த முறை, இஷ்ட தெய்வத்தில் வைக்கக் கூடிய அன்புக்கான அங்கீகாரம், சராசரி உள்ளங்களுக்கு வசப்படும் சராசரி நிலை பக்தி - மத்வரின் சீடர்கள் பல்கிப் பெருகுவதற்கு இவை யாவும் காரணங்களாக அமைந்தன.

யாக யக்ஞ முறைகளில் பலிகளைத் தவிர்த்துச் சீரமைப்பு முறைகளையும் கொண்டுவந்தார் மத்வர்.

வாழ்க்கையின் முழுமுதல் நோக்கமே, இறைவனை உணர்ந்து கொள்வதுதான் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டு, அதனையே தம் கொள்கைகளிலும் பிரதிபலித்த மத்வர், இறை

வழிபாட்டில் சடங்குகளுக்கும் சம்பிரதாயங்களுக்கும் நிரம்ப முக்கியத்துவம் கொடுத்தார். ஏகாதசி நாட்களில் விரதமிருப்பது புனிதமும் அவசியமும் வாய்ந்ததாகியது.

மத்வரின் செல்வாக்கும் சீடர்களின் எண்ணிக்கையும் ஏறுமுகமாகவே அமைந்தன.

## விரிவும் விளக்கமும்

இரண்டாவது வடதிசை யாத்திரையையும் வெகு விரைவிலேயே மேற்கொண்டார் மத்வர். இந்த யாத்திரையின் பொழுது டெல்லி, குருக்ஷேத்திரம், வாரணாசி, கோவா ஆகிய பகுதிகளுக்கும் ஊர்களுக்கும் விஜயம் புரிந்தார். இதற்குப் பின்னர் நிகழ்ந்த யாத்திரைகள் யாவும், அநேகமாக, தென்கர்நாடக எல்லைகளுக்குள்ளேயே அமைந்தன. விஷ்ணுமங்கலம், கண்வதீர்த்தம், கததீலம் ஆகிய ஊர்கள் அவருக்கு மிகவும் பிடித்தவை; அவர் அடிக்கடி பயணம் போகக் கூடியவை.

இடைப்பட்ட காலங்களில், மத்வரின் ஆன்மிக இலக்கியப் படைப்புகள் பெருகி வளர்ந்தோங்கின. உபநிடத பாஷ்யங்களும், தசப் பிரகரணங்களும், கீதா பாஷ்யமும், புராண விளக்கங்களுமாக மாத்வ - த்வைத இலக்கியம் இணையற்ற வளர்ச்சி கண்டது.

## எதிர்ப்பும் ஏற்றமும்

மத்வரின் நிலையான வளர்ச்சி, கட்டாயம் வேறு பல மனங்களில் காழ்ப்புணர்ச்சியை ஏற்படுத்தியிருக்க வேண்டும். மத்வ விஜயம், ஸ்ரீ மத்வரின் நூல்களும் கிரந்தங்களும் திருடப்பட்டதாக ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது. கும்பள அரசர் ஜயஸிம்ஹரின் இடையீட்டால் கிரந்தங்கள் மீட்கப்பெற்றன.

மத்வருக்கும் ஆட்சிபீடத்தின் அரசருக்கும் இவ்வாறு ஏற்பட்ட அணுக்கத்தின் விளைவாக, கும்பளத் தலைநகருக்கும் விஜயம் செய்தார் மத்வர். இந்த விஜயமும் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகவே அமைந்தது. ஜயஸிம்ஹரின் அவைக்களப் புலவராக விளங்கிய திரிவிக்கிரம பண்டிதாசார்யருக்கும் மத்வருக்கும் ஏற்பட்ட வாதப்பிரதிவாதங்களின் விளைவாகத் திரிவிக்கிரமர் மத்வ சம்பிரதாயத்தைத் தழுவினார். தமது பிரம்மசூத்ர பாஷ்யத்திற்கே ஒரு விளக்கம் எழுதும்படி திரிவிக்கிரமரைப் பணித்தார் ஆசார்யர். 'தத்வப்ரதீபா' என்னும் பெயரில் அவ்விளக்கம் மலர்ந்தகாலையில், இன்னும் சில தத்துவ நூல்கள் இயற்றியிருந்தார் மத்வர்.

அரச ஆதரவும், அரசவை ஒத்துழைப்பும், பிரபலமானவர்களின் மத்வஸம்பிரதாயத் தழுவலும் மக்களிடம் நிறைந்த தாக்கத்தை ஏற்படுத்தின. சீடர்கள் பெருகினார்கள். மத்வரின் புகழ் மேன்மேலும் ஓங்கிப் பரவி நிறைந்தது. அவரின் பூர்வாஸ்ரமப் பெற்றோர் காலமான பிறகு, அவரின் தம்பியும் மத்வரிடமே தீக்ஷை பெற்றுத் துறவறம் பூண்டார். அவரோடு இன்னும் ஏழு துளுவச் சீடர்களும் துறவறம் ஏற்றார்கள். (இந்த எட்டுப் பேருமே பின்னாட்களில் தோன்றவிருந்த அஷ்ட மடங்களின் தோற்றுநர்களாகவும் அதிபதிகளாகவும் ஆனார்கள்).

## வாழ்வும் வாக்கும்

தமது பூலோக வாழ்வின் நிறைவு ஆண்டுகளை உபதேசத்திலும் வழிபாட்டிலுமே மத்வர் கழித்ததாகத் தெரிகிறது. தமது சொந்தப் பகுதியில் செல்வாக்கு, நிறையச் சீடர்கள், உபதேசித்த புதியமுறைச் சித்தாந்தத்திற்குப் பெருமளவில் வரவேற்பு, பக்தி இயக்க வளர்ச்சி என்று மத்வரின் விருப்பு வெறுப்பற்ற மனமும் இன்பமடையக் காரணங்களிருந்தன.

மத்வருக்கு மிகவும் பிடித்தமான உபநிடதம் ஐத்ரேய உபநிடதமாகும். வழக்கம்போல அன்றும் உடுப்பி ஸ்ரீ அனந்தேஸ்வரர் ஆலயத்திலுள்ள மண்டபத்தில் தம் சீடர்களுக்குப் பாடம் நடத்திக்கொண் டிருந்தார் குரு. ஐத்ரேய உபநிடதப் பாடம். கடைசி அத்தியாயத்தில் உபநிடதம் உரைக்கும் செய்தியையே உபதேசித்தார். 'தகுதி பெற்றவர்களிடத்தில் உண்மையைப் போதித்துப் பரப்ப வேண்டும்; வெறுமே வாளா உட்கார்ந்துவிடக் கூடாது', என்னும் உபநிடதச் செய்தியை உரைத்தவர், திடீரென்று பார்த்துக்கொண் டிருந்தவர்களின் கண்களிலிருந்து மறைந்து போனார்.

அது பிங்கல ஆண்டு மாக மாதத்துச் சுக்கிலபக்ஷ நவமித் திதியாகும்.



## 2. அதிசயிக்கவைத்த அற்புதங்கள்

வாசுதேவனாக வந்து பிறந்து, பின் பூர்ணப்ரக்ஞராகி, ஆனந்ததீர்த்தருமாகி, உலகத்தோரால் மத்வாசார்யார் என்று ஆராதிக்கப்பெறும் மத்வரின் வாழ்வில் நடந்ததாகக் கூறுப்படும் அற்புத நிகழ்வுகள் பலப் பல.

### நாகத்தின் தலையில் நடனம்

மத்வரின் பிறந்த ஊரான பாஜகவிற்கு அருகாமையில் உள்ளது குஞ்சாரு மலை. அதில், ஓரிடத்தில், பாறையொன்றின் நடுவில் பாம்புத்தலை போன்ற வடிவும், அதன் நடுவில் ஒரு பள்ளமும் காணப்படுகின்றன. மணிவந்தாசுரன் என்னும் அரக்கனை மத்வர் (மத்வராவதற்கு முன்னர், பாலகன் வாசுதேவனாக இருந்தபோதே) வதம் செய்த இடம் இது என்பதாக நம்பிக்கை.

குஞ்சாரு மலையில் (சரியாகச் சொன்னால், குஞ்சாரு குன்றில்) உள்ள துர்க்கை கோயிலில் தியானத்தில் ஆழ்ந்திருந்தான் சிறுவன் வாசுதேவன். அவன் எங்கிருக்கிறான் என்பது தெரியாமல் தாயார் அழைத்தார். எங்கிருந்தாலும் தாயின் குரல் கேட்டால் ஓடோடியும் வரும் வழக்கம் கொண்டிருந்த அச்சிறுவன், துள்ளிக் குதித்துத் தாவி ஓடி வந்தான். வருகிற வழியில், மணிவந்தாசுரன், பாம்பு வடிவம் கொண்டுவந்து காலைச் சுற்றிக்கொண்டான். காலை உதறினான் சிறுவன். பாம்பு விடுவதாக இல்லை. கையால் பாம்பின் வாலைப் பற்றிக் கொண்ட சிறுவன், காலால் பாம்பின் தலையை நசுக்கிவிட்டான். கைவண்ணமும் கால்வண்ணமும் ஒருசேர, பாம்பரக்கன் மடிந்தான். பின்னர் அங்கிருந்து ஒரே தாவாகத் தாவி, தனது வீட்டிலிருந்த தாயின் முன்னிலையில் குதித்தான்.

பாஜகக்ஷேத்திரத்தில் மத்வரின் பிறந்த வீட்டின் வெளிப்புறப் பகுதியில் இரண்டு பாதச் சுவடுகள் இன்றளவும் உள்ளன. மத்வரின்

திருவடிகளாகக் கருதப்படும் அவற்றுக்குக் கற்பூர ஆரத்தி காட்டி உள்ளூர் மக்கள் வழிபடுகின்றனர்.

அதே சிறுவன் ஒருநாள் துளசிவனத்தில் விளையாடிவிட்டுத் திரும்பினான். பசி. தந்தையின் கையைப் பற்றி உணவுண்ண அழைத்தான். தந்தைக்கோ வேறு கவலை. தந்தையுடன் பேசிக் கொண்டிருந்தவர் கோபமாக வேறு தெரிந்தார். அவர் வாசுதேவனைப் பார்த்துச் சற்றே குரலுயர்த்திச் சொன்னார் : ''ஏண்டா உங்கப்பாவை இழுக்கிறாய்? அவர் கொடுக்க வேண்டிய கடன் பாக்கியை நீ கொடுப்பாயா?''. உடனே தான் கையில் வைத்து விளையாடிக் கொண்டிருந்த புளியங்கொட்டைகள் சிலவற்றை அவரிடம் கொடுத்து ''இந்தாருங்கள். உங்களுக்கு நிறையப் பணம் கிடைக்கும்'', என்று வேறு ஆருடம் கூறினான் வாசுதேவன். அவர் கோபத்தைவிட வருத்தம் அதிகமாக, அங்கிருந்து போய்விட்டார்.

இரண்டுமூன்று நாட்களுக்குப்பின், கையில் பணம் கிடைத்தவுடன், கடனைத் தீர்க்கப் புறப்பட்டார் சிறுவனின் தந்தையான மத்தியகேஹபட்டர். இவர் வருவதைக் கண்டு ஓடோடியும் வந்த அந்த மனிதர், காலில் விழாத குறையாக வணங்கினார். 'ஸ்வாமி! தங்கள் மகன் கொடுத்த புளியங் கொட்டைகள் எனக்கு நிறையச் செல்வத்தைத் தந்துவிட்டன. தங்கள் கடன் தீர்ந்துவிட்டது. அன்று நான் வந்து கேட்டதற்கு மன்னித்துவிடுங்கள்' என்று கூறி, மரியாதைகள் பலவும் செய்தார்.

## அம்மாவுக்காக ஓர் அற்புதக் குணம்

தாயாரின்மீது நிறைந்த மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்த அந்த மகன், அவருக்குத் தம் இல்லத்தின் பின்பகுதியில் ஒரு திருக்குளம் கட்டுவித்தார். குஞ்சாரு மலையைச் சுற்றியமைந்துள்ள தனுசு, கட, பாண, பரசு தீர்த்தங்களின் புனிதநீரை முழுமையையும் அந்தத் திருக்குளத்திற்குள் வரவழைத்தார். தாய் நம்பினாலும், இதைப் பிறர் நம்பவில்லை. ஏன்? தந்தையான மத்யகேஹ பட்டரே நம்பவில்லை. என்ன செய்தால் நம்புவார்கள்?

பக்கத்திலிருந்த ஒரு ஆலமரத்தைப் பெயர்த்தார். அப்படியே மற்றோர் இடத்தில் அதைத் தலைகீழாக நட்டார். குளத்தின் நீரை தினமும் அதற்கு இட்டும் வந்தார். தலைகீழாக நடப்பெற்ற மரத்தில் வேர்கள் துளிர்த்து, கிளை படர்ந்து மரம் செழித்தும் வளர்ந்தது.

### ஆசானுக்காக ஒரு அதிசய தீர்த்தம்

உடுபபிக்கு அருகாமையில், தெற்குத்திசையில், 'ஸ்ரீ தண்டதீர்த்தம்' என்றதொரு இடம் உள்ளது. அச்யுதப்ரக்ஞரிடத்தில் குருகுலவாசம் செய்யும்போது, அப்பகுதியில் உள்ள வயல்களுக்குத் தண்ணீர் தேவைப்பட்டது. தம்முடைய தண்டத்தை எடுத்து ஒரு சிறு வாய்க்காலை வெட்டினாராம் மத்வர். தண்ணீர் பொங்கிப் பெருக்கெடுத்தது.

இவ்வாறு உருவான 'ஸ்ரீ தண்டதீர்த்தம்', இன்றளவும் உள்ளது. அஷ்டமடத்துச் சுவாமிகள், பர்யாயம் ஏற்பதற்கு முன்பாக இங்கு வந்து ஓர் இரவு தங்கி, மறுநாள் அதிகாலை தண்டதீர்த்தத்தில் நீராடிச் செல்வது வழக்கம்.

### நதியைக் கடக்க நல்லதொரு பாலம்

மைசூரில், சிக்மகளூர் மாவட்டத்தில் உள்ளது 'கலசா' என்னும் இடம். அங்குத் துங்கபத்ராவின் ஒரு கிளைநதி ஓடுகிறது. நதியைக் கடக்கவேண்டிவந்தது. சுற்றுமுற்றும் பார்த்தார் சீடர்களுடன் அப்பகுதிகளில் சஞ்சரித்துக்கொண் டிருந்த மத்வர். அருகாமையில் ஒரு பெரிய பாறை. ஒற்றைக்கையால் அப்பாறையைத் தூக்கினார் அந்த வாயுகுமாரன். நதியின் குறுக்காக வைத்தார். திரேதா யுகத்தில் அனுமனாக இருந்து இராமனுக்கே அணை கட்ட உதவியவர், கலியுகத்தில் தமக்குத் தாமே (பிறருக்காகவும்) அணை கட்டினார்.

ஸ்ரீ மத்வரின் வாழ்க்கையில் இப்படி ஏராளமான நிகழ்வுகள்; அதிசயங்கள்; அற்புதங்கள்.

கர்நாடகப் பகுதிகளில் உள்ள மரமும் செடியும் கொடியும் கல்லும் முள்ளும்கூட, ஸ்ரீ மத்வாசார்யாரின் மகத்துவம் சொல்லும்.



# 3. சந்திரன் வழிபட்ட சிறப்புத் திருத்தலம்

## உடுப்பி

'உடுப்பி' என்று இப்போது வழங்கப்பெறும் ஸ்ரீ கிருஷ்ண திருத்தலம், கர்நாடக மாநிலத்தில் உள்ளது. கர்நாடக மாநிலத்தின் தென்பகுதியில் உள்ள மங்களூரிலிருந்து ஏறத்தாழ 60 கிலோமீட்டர்கள் தொலைவில் உள்ளது உடுப்பி.

உடுப்பி என்று இக்காலத்தில் வழங்கப் பெற்றாலும், இவ்வூரை 'உடுபி' என்றழைப்பதே முறை.

உடுபா என்கிற பெயரே இவ்வாறு மருவிவிட்டது. 'உடு' என்றால் நட்சத்திரம்; 'பா' என்றால் தலைவன். 'உடுபா' என்றால் நட்சத்திரங்களின் தலைவனான சந்திரன். சந்திரன், இறைவன் அருள் பெற்று உய்ந்த தலம் என்பதால் உடுபா என்றழைக்கப்பட்ட இத்திருத்தலம், காலப்போக்கில் 'உடுப்பி' என்றாகிவிட்டது.

## ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயில்

உடுப்பியின் இரண்டு முக்கியத் திருக்கோயில்கள், ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயிலும், ஸ்ரீ அனந்தேஸ்வரர் திருக்கோயிலும் ஆகும்.

உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண மடத்துக்கு நேர் எதிரில் அமைந்திருப்பது ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயில்.

தக்ஷ பிரஜாபதியின் மகள்கள் இருபத்தேழு பேர்; இவர்களே இருபத்தேழு நட்சத்திரங்கள் ஆவார்கள். சந்திரன் இந்த இருபத்தேழு பேரையும் மணந்துகொண்டான். ஆனால், அவர்கள் எல்லோரிடத்திலும் சமமாக அன்பு வைக்காமல், கார்த்திகை மற்றும் ரோகிணி ஆகிய இரு பெண்களிடம்மட்டும் அதிக நேசம் காட்டினான். இதனால் வருத்தமுற்ற மற்றப் பெண்கள்,

தந்தையிடம் சென்று முறையிட, தக்ஷன், மாப்பிள்ளையான சந்திரனுக்குச் சாபம் கொடுத்தார். அதன்படியே, ஒவ்வொரு நாளும் சிறிதுசிறிதாகச் சந்திரன் தேய்ந்துபோகிறான். சந்திர கலைகள் தேயத் தேய, தேய்பிறையாகி இருண்டு போகிறது.

தக்ஷ பிரஜாபதியிடம் சாபம் பெற்ற சந்திரன், சாப விடுதலை பெறச் சிவபெருமானை நோக்கித் தவமிருந்து, தன் தவறை உணர்ந்து திருந்தி, கலைகள் வளரச் சிவன் அருள் பெற்றான்.

எந்தக் குளத்தில் நின்று சந்திரன், சிவபெருமானை நோக்கித் தவம் செய்தானோ, அந்தக் குளமிருந்த இடமே இப்போது ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் ஆலயமாக விளங்குகிறது.

கிழக்கு நோக்கிய திருமுகமண்டலமாக சந்திரமௌலீஸ்வரர் லிங்க மூர்த்தம் பெற்றுத் திகழ்கிறார். சுயம்புவான இந்தச் சிவலிங்கம், காலையில் கருமையாகவும், பகற்பொழுதில் நீலமாகவும், இரவு நேரங்களில் வெண்மையாகவும் காட்சி தருவதாகச் சொல்லப்படுகிறது.

## ஸ்ரீ அனந்தேஸ்வரர் திருக்கோயில்

ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் ஆலயத்திற்கு மேற்குப்புறமாக அமைந்திருக்கும் ஆலயம், ஸ்ரீ அனந்தேஸ்வரரின் ஆலயமாகும். லிங்க வடிவில் எழுந்தருளிச் சேவை சாதிக்கிறார் ஸ்ரீ அனந்தேஸ்வரர். இந்தத் திருக்கோயிலின் வரலாறுபற்றிச் சுவையான கதை இங்குண்டு.

வேதாரண்யம் என்னும் புண்ணிய தலத்தில், பரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்த ஓர் அந்தணத் தம்பதி வாழ்ந்துவந்தனர். மணமாகிப் பல ஆண்டுகள் ஆகியும் குழந்தைப் பேறு கிடைக்காமல் வருந்திய அவர்கள், ஸ்ரீமந் நாராயணனை நோக்கிப் பிரார்த்தனை புரிந்தார்கள். அந்தப் புனிதரின் கனவில் ஒருநாள், ஆதிசேஷன்மீது அமர்ந்திருந்த திருக்கோலத்தில் ஸ்ரீமந் நாராயணன் தோன்றினார். ''மேற்குக் கடற்கரையில் ரூப்ய பீடம் என்னும் திருத்தலம் உள்ளது. அங்குத் தாங்களும் தங்கள் மனைவியும் செல்லுங்கள். அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் நீராடுங்கள்; உங்கள் முன்னோர்களுக்கான தெய்வீகச் சடங்குகளைச் செய்யுங்கள். பின்னர் ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரரைப் பிரார்த்தனை செய்யுங்கள். சந்திரமௌலீஸ்வரர் கோயிலின் மேற்குப்புறம், அசுவமேத யாகம் நடைபெற்ற புனித பூமியுள்ளது. அங்குச் சென்று பாருங்கள். ஒரு வெள்ளிப் பீடம் காட்சி தரும். நான்கு மூலைகளிலும் சேஷ உருவம்

(பாம்பு உருவம்) கொண்ட வெள்ளிப் பீடம். அந்தப் பீடத்தில் சந்திரமௌலீஸ்வரரை ஆராதித்துக் கொணர்ந்த பாலை ஊற்றுங்கள். அப்போது லிங்க வடிவில் நான் தோன்றுவேன்'' என்று கணவனின் கனவில் தோன்றிய பரந்தாமன் கூறினார்.

பரசுராம அவதார காலத்தில், மகாருத்ரரான சிவனிடம் தம் சக்தியை அளித்துவிட்டு, அவரிடமிருந்து வில் வித்தையைக் கற்றுக் கொண்டாராம் நாராயணமூர்த்தி. சிவனும் இந்த நிகழ்ச்சியின் நினைவாக, நாராயணன் லிங்க வடிவில், பூவுலகில் எழுந்தருள வேண்டும் என்று கேட்டுக்கொண்டாராம். நாராயணனும் வாக்குக் கொடுக்க, அந்த வாக்குறுதியை நிறைவேற்றும்பொருட்டு, வெள்ளிப் பீடத்தில் சந்திரமௌலீஸ்வர ஆராதனைப் பாலைப் பொழிந்தவுடன் லிங்க வடிவில் ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளினாராம். அந்த லிங்கத்தை வழிபட்டால் குழந்தை பிறக்கும் என்று கனவில் தெரிவித்தபடியே, லிங்க வழிபாடு செய்த அந்தணத் தம்பதியர்க்கு மகன் பிறந்தான்.

லிங்க வடிவில் எழுந்தருளிய நாராயணமூர்த்தியே, ஸ்ரீ அனந்தேஸ்வரர் அல்லது ஸ்ரீ அனந்தாசனர் என்று அழைக்கப்படுகிறார். அனந்தன் என்பது ஆதிசேடன். அனந்தனின் தலைவர் அனந்தேஸ்வரர்; அனந்தனின்மீது அமர்ந்திருப்பவர் (அனந்தன் ஆசனம் அமைப்பதால்) அனந்தாசனர். அனந்தனின் மீது அமர்ந்த திருக்கோலத்தில்தானே கனவில் காட்சி கொடுத்தார் நாராயணன். ஸ்ரீ அனந்தபத்மநாபர் என்றும் இப்பெருமாள் குறிக்கப்பெறுகிறார்.

இந்த அனந்தேஸ்வரரின் அருளால்தான் பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஸ்ரீ மத்வரின் அவதாரம் நிகழ்ந்தது.

### உடுப்பியில் மத்வர்

இந்தப் பெருமைமிகு உடுப்பியில், குழந்தை கிருஷ்ணனைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டார் ஸ்ரீ மத்வர். பாலகிருஷ்ண விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்தது மட்டுமல்லாமல், வழிபாட்டு முறைகள், உற்சவங்கள் ஆகியவற்றை வகுத்துக் கொடுத்து, அவற்றைத் தடங்கலின்றி நிறைவேற்ற எட்டு மடங்களையும் உருவாக்கினார்.

ஸ்ரீ அனந்தேஸ்வரர் திருக்கோயிலில்தான், மத்வர் இளவயதில் வேதாந்த பாடம் கேட்டார். அவர் முதலில் பாடம் பயின்று, பின்னர்ச் சீடர்களுக்குப் பாடம் உபதேசித்த இடம், இப்போதும்

அனந்தேஸ்வரர் கருவறையின் முன்புள்ள மண்டபத்தின் வடக்குப் பகுதியில் உள்ளது. இதே இடத்தில்தான், தம் சீடர்களுக்குப் பாடம் சொல்லிக்கொண் டிருந்தபோது, திடீரென்று மனிதக் கண்களிலிருந்து மறைந்துபோனார் மத்வர்.

ஸ்ரீ மத்வர் புறக்கண்களின் பார்வைக்கு எட்டாமல் மறைந்து போனாலும், சூக்குமசரீரத்தில் இன்னும் அங்கேதான் வாசம் செய்கிறார் என்று நம்பப்படுகிறது.

ஸ்ரீ புவனேந்திர தீர்த்த ஸ்வாமி என்பவர் அந்தப் புனித இடத்தில், ஸ்ரீ மத்வரின் சிலையொன்றை நிறுவ முயற்சி செய்தார். சிலை நிறுவும் பணிகள் நடைபெறும்போது, ஸ்வாமியின் கனவில் தோன்றினார் ஸ்ரீ மத்வாசார்யார். 'தம் தலையில் ஏன் இவ்வளவு பெரிய பாறாங்கல்லைத் தூக்கி வைக்க வேண்டும்' என்று கடிந்து கொண்டாராம். நம் கண்ணுக்குத் தெரியாமல், இன்னமும் அந்தப் பீடத்தில் நித்யவாசம் புரிகிறார் ஸ்ரீ மத்வர் என்பதற்கு ஆதாரமாக அமைகிறது இந்நிகழ்ச்சி. இதன்பின், உருவச்சிலை நிறுவும் எண்ணம் கைவிடப்பட்டுவிட்டது. பீடத்திற்கு மேலே சற்றுத் தள்ளி (ஸ்ரீ மத்வரின் தலையில் தட்டாமல்) அந்தச் சிலை இப்போது வைக்கப்பட்டுள்ளது.

பழங்காலத்தில், மகாபாரதத்துப் பீமசேனன்தான் ஸ்ரீ அனந்தேஸ்வரர் திருக்கோயிலைக் கட்டினான் என்பது உடுப்பியில் நிலவும் ஐதீகம். வாயுபுத்திரனான பீமன் கட்டியது என்பதாலும் இந்தக் கோயிலின்மீது ஸ்ரீ மத்வருக்குப் (அவரும் வாயுவின் மறுஅவதாரம்) பிரியம் அதிகம். கஜ பிருஷ்டம் (யானையின் பின்புறத்தை நினைவூட்டும் விமானம்) என்ற அமைப்பில் கட்டப்பட்டுள்ள இக்கோயில் பண்டைய கால கட்டடக் கலையைக் கொண்டது; ஸ்ரீ மத்வரின் வரலாற்று ஓவியங்கள் பல இக்கோயில் வெளிப்பிராகாரச் சுவரில் காணப்படுகின்றன.

ஸ்ரீ அனந்தேஸ்வரருக்குச் சொந்தமான நிலத்தில்தான், பாலகிருஷ்ணனை நிறுவி வழிபட்டார் மத்வர்.



# 4. அழகுக் கண்ணனும் அஷ்ட மடங்களும்

உடுப்பியில் உள்ள கிருஷ்ணன் கோயில் என்பது உண்மையில் மத்வர் நிறுவிய ஸ்ரீ கிருஷ்ண மடமேயாகும்.

பாலகிருஷ்ணனை மத்வர் உடுப்பியில் நிறுவியது, இறையருளின் அற்புதத் திருவிளையாடலே ஆகும்.

## படகில் வந்த பாலகிருஷ்ணன்

சௌராட்டிரப் பகுதியிலிருந்து புறப்பட்டு மேற்குக் கடலில் பயணித்துக்கொண் டிருந்தது ஒரு படகு. வணிகத்தின் பொருட்டு வந்த படகு. உடுப்பிக்கு அருகிலுள்ள மால்பே கடற்கரையை நெருங்கிக்கொண்டிருந்த வேளையில், புயலில் சிக்கிக்கொண்டது அந்தப் படகு. மால்பே கடற்கரைப் பகுதியில் தியானத்தில் அமர்ந்திருந்தார் மத்வர். புயலில் தவித்த படகையும் அதன் தடுமாற்றத்தையும் கண்டார். புயலை நிறுத்திப் படகைக் காப்பாற்றிக் கரை சேர்த்தார்.

மால்பே கடற்கரையில் படகு தரையைத் தொட்டவுடன், மத்வருக்குத் தன் நன்றிக்கடனைச் செலுத்த நினைத்த படகின் தலைவன் நிறையச் செல்வம் தர முன்வந்தான். ஆனால், மத்வரோ இரண்டு சந்தன உருண்டைகளைமட்டும் எடுத்துக்கொண்டார்.

அந்தக் கோபி சந்தன உருண்டைகளை ஏற்றுக்கொண்டு வந்தார் மத்வர். அவரிடம் வந்தவுடன், சந்தனத்தை உடைத்துக் கொண்டு, தன் தளிர்ச் சிரிப்பைக் காட்டினானாம் குழந்தை கிருஷ்ணன்[1].

---

1. இரண்டு சந்தன உருண்டைகளில் ஒனறில் கிருஷ்ண விக்ரகமும் இன்னொன்றில் பலராமர் விக்ரகமும் இருந்ததாகவும் கூறப்படுகிறது. மால்பே கடற்கரைக்கு அருகாமையிலுள்ள வடபாண்டேஸ்வரம் என்னும் கிராமத்தில் பலராமர்கோயில் உள்ளது. அந்தப் பலராமர்தான், சந்தன உருண்டைப் பலராமர் என்கிறார்கள்.

தன் மனோநாயகன், வேணுகான லோலனின் விந்தைச் சிரிப்பில் ஆழ்ந்துபோன மத்வர், அந்த விக்ரகத்தையே உடுப்பியில் பிரதிஷ்டை செய்து ஸ்ரீ கிருஷ்ண மடத்தை நிறுவினார்.

## மனைவியை மகிழ்வித்த மணாளன்

பாலகிருஷ்ணன் பால்வண்ணச் சிரிப்புடன் பரவசம் காட்டும் இந்த விக்ரகத்துக்கு இன்னுமொரு சிறப்பும் உண்டு. ஸ்ரீ கிருஷ்ணனின் பிராட்டியான ருக்மிணிதேவியே வழிபட்ட, ஆராதித்த திருமேனி இது!

எப்படி இருக்கமுடியும்? குட்டிக் கிருஷ்ணனைத் தாயான யசோதையோ, தேவகியோ தொட்டிலாட்டிச் சீராட்டி யிருக்கக்கூடும். ஆனால், ருக்மிணிப் பிராட்டி, அதை எப்படிச் செய்திருக்க முடியும்?

தன் மணாளனின் எல்லையில்லாப் புகழையும் பெருமையையும் கேட்டுக் கேட்டுப் பூரித்த ருக்மிணிதேவி, அவனின் சிறு பிராயத்து விளையாட்டுக்களையும் கேட்டு அனுபவித்து ஆனந்திப்பாளாம். தீராத விளையாட்டுப் பிள்ளையான அந்த நீலமேக ச்யாமள வண்ணனின் சேட்டைகளையும் குறும்புகளையும் எவ்வளவு நாள்தான் வெறுமே கேட்டுக் கொண்டிருப்பது? அந்த மாயப் பிள்ளையை, ஆயன் கோபாலகிருஷ்ணனை மடியில் போட்டு வளர்க்கத் தாய் யசோதை எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்! அந்தச் சுகம் தனக்குக் கிடைக்கவில்லையே என்று ஏங்கிய ருக்மிணிப் பிராட்டி, கிருஷ்ணனிடம் தன் மனவருத்தத்தையும் வெளியிட்டாள். ருக்மிணியைத் தூக்கிவந்தவ னாயிற்றே கிருஷ்ணன். அவளின் ஆசையை நிறைவேற்றாமலிருக்க அவனால் முடியுமா? தன்னுடைய கோகுல பாலனான வடிவத்தை - நந்தன் பிள்ளையாய்ப் பிருந்தாவனச் சிறுவனாய்த் துள்ளியாடிய உருவத்தை விசுவகர்மா மூலமாக ஒரு சிலையாக்கி ருக்மிணியிடம் கொடுத்தானாம்; மடியில் கிடத்தி முடி கோதி உச்சி முகர்ந்து உன்மத்தம் அடைந்து உருகினாள் ருக்மிணி. தேவலோகச் சிற்பி விசுவகர்மாவே செய்த கண்ணன், வலது கையில் மத்தும், இடது கையில் கயிறும் வைத்துக் கொண்டு குறும்பு விழிகளோடும் குறுகுறுத்த சிரிப்போடும் மிளிர்கிறான். இவ்வாறு ருக்மிணி ஆராதித்து வழிபட்ட விக்ரகத்தை, கிருஷ்ணாவதார நிறைவில், துவாரகாபுரிக்குப் பக்கத்துக் காடுகளில் ஒளித்துவைத்தானாம் அர்ச்சுனன்.

எப்படியோ சந்தன உருண்டைகளில் தன்னை ஒளித்துக் கொண்ட ருக்மிணி கிருஷ்ணன், துவாரகைப் பகுதியின் சௌராட்டிரக் காடுகளிலேயே இருந்திருக்கிறான். பின்னர்த்தான் படகில் புறப்பட்டு, புயலில் சிக்கி, மத்வரின் கைகளில் தவழ வந்துவிட்டான்.

## மத்வரின் கிருஷ்ண வழிபாடு

இந்தச் சின்னக் கண்ணனே, ஸ்ரீ மத்வரின் ஆராதனப் பெருமானாக விளங்கினான். பக்தி மார்க்கத்தின் உயர்வுகளைப்பற்றி விளக்கிக்கொண் டிருந்த மத்வரின் சித்தாந்தத்திற்குக் கிருஷ்ணப் பிரதிஷ்டை, வரலாற்று முறையிலும், கொள்கை முறையிலும் வலுச் சேர்த்தது.

பரமாத்மா வேறு, ஜீவாத்மா வேறு என்னும் கொள்கைக்கும், பரமாத்மாவின் உயர்வு யுகங்களைக் கடந்தது என்னும் கோட்பாட்டுக்கும், பக்தி வழியே மனிதப் பிறவியின் உய்வுக்கான நெறி என்னும் தத்துவத்துக்கும் ஸ்ரீ கிருஷ்ணப் பிரதிஷ்டை புதிய மெருகையும், புனிதப் பொலிவையும் சேர்த்தது.

கிருஷ்ண விக்ரகத்தைப் பிரதிஷ்டை செய்து, ஸ்ரீ கிருஷ்ண மடத்தை நிறுவியதோடு மத்வர் நிறுத்தவில்லை. பக்தி மார்க்கத்தை மேலும் மேன்மையடைய வைக்கும் விதத்தில், வழிபாட்டு முறைகளை வகுத்தார். ஸ்ரீ கிருஷ்ண வழிபாட்டை முறைப்படி செய்வதற்கும், உற்சவங்களை நடத்துவதற்கும் எட்டு மடங்களையும் நிறுவினார்.

## அஷ்ட மடங்கள்

ஸ்ரீ மத்வர் நிறுவிய இந்த மடங்களே, "அஷ்ட மடங்கள்" என்றழைக்கப்படுகின்றன. உடுப்பியின் ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரத் திருக்கோயிலின் நான்கு மாட வீதிகளில் இந்த எட்டு மடங்களும் அமைந்துள்ளன.

கணியூர் மடம், சோதே மடம், புத்திகே மடம், அத்மார் மடம், பேஜாவர் மடம், பாலிமார் மடம், கிருஷ்ணாபுர மடம் மற்றும் சிரூர் மடம் ஆகியவையே இந்த எட்டு மடாலயங்கள் ஆகும்.

அஷ்டமடங்களை நிறுவிய மத்வர், ஒவ்வொரு மடத்துக்கும் தாம் பூஜை செய்துவந்த சிலா விக்ரகங்களில் ஒன்றையே, ஆராதனப் பெருமாளாகக் கொடுத்தார்; மடாதிபதிகளையும் நியமித்தார்.

கணியூர் மடம், ஸ்ரீ நரசிம்மரைப் பிரதான தெய்வமாகக் கொண்டது. மத்வரின் நேரடிச் சீடர்களில் ஒருவரான இராமதீர்த்தரே,

இம்மடத்தின் முதல் குரு. இந்த மடத்தின் இருபத்து நான்காவது (அல்லது இருபத்து மூன்றாவது) குருவான வித்யாசாகர தீர்த்தர் தான், ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலின் நவக்கிரக கண்டி என்னும் சாளரத்துக்கு வெள்ளிக் கவசம் செய்து அணிவித்து, அதில் பல்வேறு தெய்வ வடிவங்களை வடித்துவைத்தவர்.

ஸ்ரீ பூவராகமூர்த்தியைத் தெய்வமாகக் கொண்ட சோதே மடத்தின் முதல் குரு விஷ்ணுதீர்த்த ராவார். இவர் மத்வரின் சகோதரரும் சீடருமாவார். இந்த மடத்தின் இருபதாவது குருவான வாதிராஜ தீர்த்தர், மத்வ சித்தாந்தத்தைப் பரப்புவதிலும் நிலைநாட்டுவதிலும் பெரும் பங்காற்றியவர்.

புத்திகே மடம், ஸ்ரீ விட்டலரைத் தெய்வமாகவும் உபேந்திர தீர்த்தரை முதல் குருவாகவும் கொண்டது. இந்த மடத்தின் இருபத்து மூன்றாவது (அல்லது இருபத்து நான்காவது) குருவான புவனேந்திர தீர்த்த ஸ்வாமி தான் ஸ்ரீ அனந்தேஸ்வரர் ஆலயத்தைப் புதுப்பித்துத் திருப்பணி செய்தார். இவர்தான், மத்வருக்குச் சிலை நிறுவ முயற்சி செய்தவருமாவார்.

அத்மார் மடம், நான்கு கரங்களுடன் கூடிய காளியமர்த்தன கிருஷ்ணரைத் தெய்வமாகக் கொண்டது. இம்மடத்தின் முதல் குருவானவர் ஸ்ரீ நரசிம்ம தீர்த்தராவார். இந்த மடத்தின் இருபத்தேழாவது குருவான விபுதப்ரிய தீர்த்தர், ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் ஆலயத்தைப் புதுப்பித்தவர்.

ஸ்ரீ விட்டலரைத் தெய்வமாகக் கொண்ட பேஜாவர் மடம், மத்வரின் நேர்சீடர்களில் ஒருவரான அதோக்ஷஜ தீர்த்தரைத் தலைவராகக் கொண்டு தோன்றியது.

ஸ்ரீ ராமரை தெய்வமாகக் கொண்ட பாலிமார் மடம், ரிஷிகேச தீர்த்தரை முதல் குருவாகக் கொண்டு தொடங்கப்பெற்றது.

கிருஷ்ணாபுர மடத்தின் தெய்வம் ஸ்ரீ காளியமர்த்தன கிருஷ்ணன். இதன் முதல் குரு ஜனார்த்தன தீர்த்தர்.

சிரூர் மடத்தின் தெய்வம் ஸ்ரீ விட்டலர்; முதல் குரு மத்வரின் நேரடிச் சீடரான வாமனதீர்த்தர்.

### பர்யாய முறை

மத்வரால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற பாலகிருஷ்ணரை இந்த அஷ்டமடங்களைச் சேர்ந்த மடாதிபதிகளும் முறை மாறாமல் ஆராதித்து வழிபட்டு வருகின்றனர்.

அஷ்டமடங்களின் மடாதிபதிகள் 'பர்யாய ஸ்வாமிகள்' என்றழைக்கப்படுகின்றனர். இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை ஒவ்வொரு மடத்தின் ஸ்வாமியும், ஸ்ரீகிருஷ்ண மடத்தை நிர்வகிக்கும் பொறுப்பையும் கிருஷ்ண ஆராதனை செய்யும் பொறுப்பையும் ஏற்கிறார். துறவிகளான பர்யாய ஸ்வாமிகளைத் தவிர வேறு யாரும் பாலகிருஷ்ணனுக்கு அலங்காரம் செய்வதோ, விக்ரகத் திருமேனியைத் தொட்டு அர்ச்சனை செய்வதோ ஆராதனை செய்வதோ முடியாது.

பாலகிருஷ்ணனை எவ்வாறு பூஜிக்க வேண்டும், என்னென்ன அலங்காரம் செய்ய வேண்டும், என்ன நைவேத்தியம் செய்ய வேண்டும் என்பதையெல்லாம் மத்வரே நிர்ணயித்துக் கொடுத்திருக்கிறார்.

ஒவ்வொரு பர்யாய ஸ்வாமியும், ஸ்ரீகிருஷ்ண மடத்தின் பொறுப்பை ஏற்கும் விழா, 'பர்யாயத் திருவிழா' என்றே கொண்டாடப்படுகிறது. உடுப்பியின் மிகப்பெரும் திருவிழா, இந்தப் பர்யாயத் திருவிழாவே ஆகும். உண்மையில், பர்யாயம் ஏற்பது என்பது, ஸ்ரீகிருஷ்ண மடத்துப் பொறுப்பை இரண்டாண்டுகளுக்கு ஏற்பதேயாகும்.

### பர்யாய வைபவம்

பர்யாய வைபவம், இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை, மகர சங்கராந்தியை (பொங்கல் திருநாள்) ஒட்டிய நாட்களில் நடைபெறும்.

பர்யாயம் ஏற்கப் போகும் ஸ்வாமிகள், இரண்டு மாதங்களுக்கு முன்னரே புறப்பட்டு, புண்ணிய தலங்களுக்கு யாத்திரை செல்வார். புனித நீராடித் தரிசனம் முடித்து, பரீயாய வைபவத்திற்குச் சில நாட்கள் முன்னதாக, உடுப்பி திரும்புவார். அவர் ஊருக்குள் வரும்போதே, எல்லையில் நின்று மக்கள் அவரை வரவேற்பார்கள். மற்ற ஏழு மடத்து ஸ்வாமிகளும் அவரைத் தங்கள் மடத்துக்கு அழைத்து மரியாதை செய்வார்கள்.

பர்யாய வைபவத்திற்கு முதல்நாள், பர்யாயம் ஏற்கவிருக்கும் ஸ்வாமிகள், மற்ற ஏழு ஸ்வாமிகளையும் விழாவிற்கு வரும்படி அழைப்பு விடுப்பார்.

அருகாமையிலுள்ள, ஜோருகட்டே என்னும் இடத்திலிருந்து பர்யாய விழா நாளில் பர்யாய ஊர்வலம் புறப்படும். பர்யாயம்

ஏற்கும் ஸ்வாமிகள், தம் மடத்துத் தெய்வத் திருமேனியுடன், மேளதாளம் முழங்க, ஊர்வலமாய் வர, அவருடன் பர்யாயம் விலகும் ஸ்வாமிகளைத் தவிரப் பிற மடத்து ஆறு ஸ்வாமிகளும் வருவார்கள்.

பழைய ஸ்வாமிகள் (பர்யாயம் விலகுபவர்) ஸ்ரீகிருஷ்ண மடத்தின் வாயிலில் காத்திருப்பார். புதிய ஸ்வாமிகள் வந்தவுடன், அவர் கையைப் பற்றித் திருக்குளத்திற்கு அழைத்துச் செல்வார். கை, கால் தூய்மை செய்துகொண்டு, கிருஷ்ண மடத்துக்குள் நுழைவார்கள்.

புதிய பர்யாய ஸ்வாமிகள், மண்டப பூஜை, ஆஞ்சநேயர் பூஜை[2] ஆகியவற்றைச் செய்து, பின்னர் ஸ்ரீ மத்வ சிம்மாசனத்தில் அமருவார். தொடர்ந்து தர்பார் நடைபெறும். புதிய பர்யாய ஸ்வாமிகள், மற்ற எழுவருக்கும் மரியாதை செய்ய, அவர்கள் அவருக்குப் பாத காணிக்கை செலுத்தி வணங்குவர்.

தர்பாருக்குப்பின், அனைத்து ஸ்வாமிகளும் பாலகிருஷ்ணனின் கருவறைக்குள் செல்வர். அங்குள்ள மத்வாசார்யாரின் சிலை முன்பு பழைய ஸ்வாமிகள், புதிய ஸ்வாமிகளிடம், கருவறைச் சாவியையும், 'அட்சய பாத்திரம்' என்றழைக்கப்படும் வெள்ளிக்கரண்டியையும் ஒப்படைப்பார்.

பர்யாய ஸ்வாமிகள், ஸ்ரீகிருஷ்ண மடத்து நிர்வாகம், ஸ்ரீகிருஷ்ண ஆராதனை, மடத்து உற்சவங்கள், பக்தர்களுக்கு அன்னமிடுதல் ஆகிய யாவற்றுக்கும் முழுப் பொறுப்பாளியாவார்.

அஷ்ட மடங்களின் அதிபதி பொறுப்புக்குப் பிரம்மசாரிகளே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இந்தப் பிரம்மசர்யத் துறவிகளே, ஸ்ரீகிருஷ்ணனைத் தொட்டு வணங்கி வழிபட முடியும்.

### துவந்த மடங்கள்

அஷ்ட மடங்களில், 'துவந்த மடங்கள்' என்னும் அமைப்புண்டு. பாலிமார் - அத்மார் மடங்கள், கிருஷ்ணாபுர - புத்திகே மடங்கள், சிரூர் - சோதே மடங்கள், கணியூர் - பேஜாவர் மடங்கள் ஆகிய இணையிணை மடங்கள் துவந்த மடங்களாகும். அதாவது இவை (துவந்த - இரட்டை) இணை மடங்களாகும். தமக்குச் சீடரை நியமிக்காமல் ஏதாவது ஒரு மடத்தின் தலைவர்

2. ஸ்ரீகிருஷ்ண மடத்து அமைப்பு முறை விவரங்கள் தனியாகக் கொடுக்கப்படுகின்றன.

மறைந்துவிட்டால், அதற்கான துவந்த மடத்தின் ஸ்வாமிகள், அந்த மடத்தின் அதிபதியை நியமிக்கும் உரிமையைப் பெறுவார்.

பர்யாயப் பொறுப்பில் இல்லாத காலகட்டத்தில் (பதினாறு ஆண்டுகளுக்கு ஒருமுறை, தானே இப்பொறுப்பு வரும்). அந்தந்த மடத்தின் தலைமை ஸ்வாமிகள் தத்தம் மடத்தின் விவரங்களைக் கவனிப்பதுடன், நாடு முழுவதுமுள்ள பல்வேறு பிரதேசங்களுக்குப் பயணம் போவார்கள். சமயப் பணியிலும் பிரசாரத்திலும் ஈடுபடுவார்கள்.

இப்போது புழக்கத்தில் இருக்கும் இத்தகைய பர்யாய முறையையும், நிர்வாக அமைப்புகளையும், பதினாறாம் நூற்றாண்டில், உடுப்பியின் சமயத் தலைவர்களுள் மிகப் பிரபலமாக விளங்கிய ஸ்ரீ வாதிராஜ ஸ்வாமிகளே[3] அறிமுகப்படுத்தினார் என்று நம்பப்படுகிறது. அதற்கு முன்னால், இப்படிப்பட்ட இரண்டாண்டுகளுக்கு ஒருமுறையான பர்யாயம் இருந்ததாகத் தெரியவில்லை.

கிருஷ்ணாபுர மற்றும் அத்மார் மடங்களுக்கான பதினைந்தாம் நூற்றாண்டு நிவந்த ஆவணங்கள், அந்தக் காலகட்டத்திலேயே அஷ்ட மடத்து ஸ்வாமிகள் நிறைந்த சமூக மதிப்பையும் செல்வாக்கையும் பெற்றிருந்தார்கள் என்பதைத் தெரிவிக்கின்றன.



3. இந்த வாதிராஜ ஸ்வாமிகளே, அஷ்ட மடங்களுள் ஒன்றான சோதே மடத்தின் இருபதாவது தலைவரான வாதிராஜ தீர்த்தராவார். கிருஷ்ண மடத்தினை விஸ்தரித்துக் கட்டுவதிலும், அதன் நிர்வாகத்தைச் சீரமைப்பதிலும், அஷ்ட மடங்களையும் கிருஷ்ண மடத்தைச் சுற்றியுள்ள வீதிகளிலேயே அமைப்பதிலும் வாதிராஜர் பெரும்பணியாற்றியுள்ளார். இவர் காலத்துக்கு முன்புவரை, ஸ்ரீ மத்வரே அமைத்தபடி, பர்யாயம் என்பது இரண்டு மாதங்களுக்கு இருந்ததாகத் தெரிகிறது.

## 5. மத்வரின் காலம்

மத்வரின் காலம்பற்றி நிறையக் கருத்து மோதல்கள் உள்ளன. பல ஆண்டுகளாக, கி.பி. 1199ம் ஆண்டு அவர் தோன்றினார் என்றே கருதப்பட்டு வந்தது. உத்தராதி மடங்களில் உள்ள காலக்கணக்குப் பதிவுகளின்படி சக ஆண்டு 1040 முதல் 1120 வரை என்றும் அவரின் காலம் கருதப்பட்டது. ஆயின், இப்போது இதில் இன்னும் சில தகவல்கள் கிடைத்துள்ளன.

மத்வரின் நேரடி மாணாக்கரும், அவருக்குப்பின் இரண்டாவதாக மத்வ பீடமேறியவருமான நரஹரிதீர்த்தரின் ஆவணப் பதிவுகள்[1] கிடைக்கப்பெற்றுள்ளன.

அ) மடங்கள் தரும் பட்டியலின்படி, மத்வருக்குப் பின் பீடமேறியவர் பத்மநாப தீர்த்தர் ஆவார். இவர் ஏழாண்டுகள் பீடத்தில் ஆட்சி நடத்தியபின், அடுத்துப் பீடமேறினார் நரஹரி தீர்த்தர். இவர் ஒன்பது ஆண்டுகள் ஆட்சி நடத்தினார்.

ஆ) மத்வர், எழுபத்தொன்பது வயதுவரை பூவுலக வாழ்க்கை வாழ்ந்தார்.

இ) மத்வர் கி.பி. 1199ம் ஆண்டு தோன்றினார் என்றும் எழுபத்தொன்பதாவது வயதில், அதாவது கி.பி. 1278ம் ஆண்டு மறைந்தார் என்றும் கணக்கெடுத்தால், நரஹரிதீர்த்தர் கி.பி. 1285ம் ஆண்டு பீடமேறியிருக்க வேண்டும்.

ஈ) நரஹரி (சந்நியாசியாகிப் பீடமேறுவதற்குமுன்) 1264 முதல் 1293 வரை கலிங்க நாட்டில் இருந்திருக்கிறார் (ஸ்ரீகூர்ம

1. ஸ்ரீ கூர்மம் ஆவணங்கள்

ஆவணங்களின்படி), கடைசிப் பன்னிரண்டு ஆண்டுகள் (அதாவது *1281 - 1293*) அந்த நாட்டின் பிரதம மந்திரியாகவும் இருந்துள்ளார். ஒருவரே பிரதம மந்திரியாகவும் பீடாதிபதியாகவும் இருப்பது சாத்தியமில்லை.

உ) நரஹரி தீர்த்தர் ஸ்ரீமுக ஆண்டில் மறைந்தார் என மடங்களின் பதிவுகள் தெரிவிக்கின்றன. இது கி.பி. *1333*ம் ஆண்டாக அமைகிறது.

ஊ) பின்னோக்கிக் கணக்கிட்டால், மத்வரின் முக்தி கி.பி. *1317*ல் (பிங்கல ஆண்டு) ஏற்பட்டிருக்க வேண்டும். இதன்படி, மத்வர் தோன்றியது கி.பி. *1238*ம் ஆண்டாக இருக்கும்.

புழக்கத்தில் வழங்கப்படும் செய்திகளின்படி, மத்வர் 'விளம்பி' ஆண்டு தோன்றினார் என்பதோடு இது ஒத்துப்போகிறது.

மத்வாசார்யாரின் காலம்பற்றிய சர்ச்சைகள் இன்னும் ஓயவில்லை. அவர் கி.பி. *1199*ம் ஆண்டுதான் தோன்றினார். ஆனால், 95 ஆண்டுகள் பூவுலகில் ஊன் உடலோடு வாழ்ந்தார் என்றும் சில ஆராய்ச்சியாளர்கள் கருத்துத் தெரிவிக்கிறார்கள்.

'விளம்பி' ஆண்டில் தோன்றி 'பிங்கல' ஆண்டில் மறைந்தார் என்னும் தகவலும், அவரின் சீடர்கள், அவர்களின் வாழ்க்கை, அக்ஷோபயருக்கும் வித்யாரண்யருக்கும் இடையில் ஏற்பட்ட வாதப்பிரதிவாதம் ஆகிய பல செய்திகளையும் ஒப்பிட்டு நோக்குங்கால் கி.பி. *1238*ம் ஆண்டு முதல் கி.பி. *1317*ம் ஆண்டுவரை மத்வரின் காலம் என்பது ஒப்புக்கொள்ளும்படியாக உள்ளது.



# 6. மத்வர் இயற்றிய நூல்கள்

ஸ்ரீ மத்வர் எழுதிய நூல்கள் மொத்தம் முப்பத்தேழு. இவை எல்லாமாகச் சேர்ந்து 'ஸர்வமூலம்' என்றழைக்கப்படுகின்றன.

பகவத்கீதைக்கான விளக்கவுரைகள் இரண்டு,
பிரம்மசூத்ர பாஷ்யங்கள் நான்கு,
உபநிடதங்களுக்கான உரைகள் பத்து,
தச பிரகரணங்கள் பத்து,
ஸ்ரீமத் பாகவத புராண விளக்கம் ஒன்று,
மஹாபாரத விளக்கம் ஒன்று,
ருக்வேத அத்தியாயங்களுக்கான விளக்கம் ஒன்று

ஆகிய நூல்கள்[1] இவற்றுள் பிரதானமானவை.

---

| | | | |
|---|---|---|---|
| 1. | பகவத் கீதை விளக்கங்கள் | - | கீதா பாஷ்யம், கீதா தாத்பர்யம் |
| | பிரம்மசூத்ர பாஷ்யங்கள் | - | பிரம்மசூத்ர பாஷ்யம், அநுபாஷ்யம், அநுவியாக்யானம், நியாய விவரணம் |
| | உபநிடத உரைகள் | - | ஈசாவாஸ்யம், கேன, கதா, முண்டக, ஸத்பிரஸ்ன, மாண்டுக்ய, ஐத்ரேய, தைத்திரிய, பிருஹதரண்யக, சாந்தோக்ய. |
| | தச பிரகரணங்கள் | - | ப்ரமான லக்ஷணம், கதா லக்ஷணம், உபாதி கண்டனம், மாயாவாத கண்டனம், பிரபஞ்ச மித்யாத்வாநுமான கண்டனம், தத்துவ ஸங்கியானம், தத்துவ விவேகம், தத்துவோத்யோதா, விஷ்ணுதத்வ நிர்ணயம், கர்ம நிர்ணயம் |
| | பாகவத புராண விளக்கம் | - | பாகவத தாத்பர்யம். |
| | மஹாபாரத விளக்கம் | - | மஹாபாரத தாத்பர்ய நிர்ணயம் |
| | ருக்வேத விளக்கம் | - | ருக்வேத பாஷ்யம் |

இவைதவிரச் சிறிய நூல்கள் என்கிற அளவையில், ஆனால், முக்கியத்துவம் குன்றாத நூல்களாக இருக்கக் கூடியவையும் உள்ளன. கவிதைகள், காவியம், ஸ்தோத்திரம் என்கிற வகையில் உள்ள இவை, யமக காவியம், நரஸிம்ஹ நக ஸ்துதி, த்வாதச ஸ்தோத்திரம், கிருஷ்ண அம்ருத மஹார்நவம், தந்த்ரஸார ஸங்கிரஹம், சடாக்ஷர ஸ்மிருதி, யதி ப்ரணவ கல்பம் மற்றும் கிருஷ்ண ஜயந்தி நிர்ணயம் ஆகியவையாகும்.

மத்வரின் நூல்களில் சில பொது இயல்புகள் காணப்படுகின்றன. கவிதை வளங்களும் கற்பனை நயங்களும் இல்லாத நேரடிச் சொற்கள்; கடினமான அணுகுமுறை; தச பிரகரணங்கள் போன்ற குறிப்பிட்ட சில நூல்களின் சிக்கலான சுற்றி வளைக்கும் மொழிநடை - இவை மத்வரின் நூல்களைப் புரிந்துகொள்வதற்கும், பிற மொழிகள் ஆக்கம் செய்வதற்கும் ஓரளவுக்குத் தடையாகவே இருக்கின்றன என்று சொல்லலாம். பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஜெயதீர்த்தருடைய விளக்கங்கள் இல்லையென்றால், மத்வரின் கொள்கைகளையும் சித்தாந்தத்தையும் புரிந்துகொள்வதில் மிகுந்த சிரமம் ஏற்பட்டிருக்கும்.

அநுவியாக்யானம் மற்றும் மகாபாரத தாத்பர்ய நிர்ணயம் ஆகிய இரண்டு நூல்களைத் தவிர மற்றவற்றின் பொது இயல்புகளாக மொழியின் சுருக்கம், கருத்தினை நேர்பட மொழியும் தன்மை, இலக்கிய ரீதியான செறிவின்மை ஆகியவற்றைச் சொல்லிவிடலாம். அநுவியாக்யானத்திலும் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்திலும் கருத்துக்களின் உயர்வோடு மொழிநடையின் உயர்வையும் அணுகுமுறையின் உயர்வையும் தெளிவாகக் காணமுடிகிறது என்று அறிஞர்கள் கருதுகிறார்கள்.

தச பிரகரணங்களில் தத்துவ எண்ணம், தத்துவ விமர்சனம், தத்துவ ஆய்வு மற்றும் தத்துவ விளக்கம் ஆகியவற்றைக் காணமுடிகிறது. உபநிடத பாஷ்யங்களில், மொழிநடை, நேர் உரையாகவே அமைகிறது; தொடர்ச்சி வெட்டுப்பட்டுக் காணப்படுகிறது; இருப்பினும் ஆன்மீகச் செழுமை பல இடங்களில் பளிச்சிடுகிறது.

ஸ்ரீ மத்வரின் நூல்களில் காணப்பெறும் இரண்டு முக்கியத் தன்மைகள் தெளிவாகப் புரிந்துகொள்ளப்பட வேண்டும். ஒன்று, பல்வேறு இடங்களிலிருந்தும், வேறு பல நூல்களிலிருந்தும் கையாளப்படும் மேற்கோள்கள்; மற்றொன்று, தேவைப்படும் இடங்களில்மட்டுமே தரப்படும் விளக்கங்கள்.

ஸ்ரீ மத்வரின் அறிவின் அகலநீள பரிமாணங்கள் அளவற்றவை. அதனால், அவ்வப்போது வேதங்களிலிருந்தும், புராண இதிகாசங்களிலிருந்தும் பற்பல மேற்கோள்களை அவர் கையாள்வார். இந்த மேற்கோள்கள் மிக நுண்ணியவையாக அமைந்துவிடும் என்பதுமட்டு மல்லாமல் பலமுறை துல்லியமாகவும் நுணுக்கமாகவும் பொருந்தியும் இருக்கும். ஆனால், மிக நீண்ட மேற்கோள்கள் அடிக்கடி இடைச்செருகும்போது, அந்த நூலின் முக்கிய நேரடித் தகவல்களின் இழை விலகிவிடும்; அல்லது புரிந்துகொள்ளுதலின் தடங்கல்களும் தடுமாற்றங்களும் ஏற்படும்.

ஒரு பாஷ்யக்காரர் (வியாக்யானகர்த்தா, விளக்கவுரையாசிரியர்) என்ற முறையில், ஸ்ரீ மத்வரின் அணுகுமுறை பிறரிடமிருந்து மாறுபட்டது. எங்கு விளக்கம் தேவை, எங்குத் தவறாகப் புரிந்து கொள்ளப்படலாம் என்று கருதுகிறாரோ அங்குமட்டுமே வியாக்யானம் தருகிறார். மிக விளக்கமாகவும் பற்பல இடங்களிலிருந்தும் நூல்களிலிருந்தும் இந்த வியாக்யானங்கள் அமைகின்றன. தெளிவாக இருப்பதாக அவர் நினைக்கும் பகுதிகளுக்கு, அவர் விளக்கங்கள் தருவதில்லை. எடுத்த கருத்தை நேரடியாய்க் கூறும் பகுதிகளுக்கும் விளக்கங்கள் தருவதில்லை.

இதனால், வியாக்யானங்களைப் படிப்பவர்கள், நூலைச் சரியாகப் புரிந்துகொண் டிருக்கவில்லையானால், தெளிவு பெறுவது தாமதப்படலாம். ஆனால், ஒரு பாஷ்யக்காரர் தேவைக்குமட்டுமே விளக்கம் தரவேண்டும், தம் எண்ணங்களைக் கொணர்ந்து திணிக்கக்கூடாது என்கிற விளக்கவுரை விதிக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாக மத்வர் விளங்குகிறார்.

எப்படியாயினும், ஸ்ரீ மத்வர் சிறந்த சிந்தனையாளர், மிக நல்ல எழுத்தாளர், வலுமிக்க உரையாசிரியர், வாதப்பிரதிவாத வித்தகர் என்பவனவற்றில் எவ்வித ஐயமுமில்லை.

### கீதா பாஷ்யம்

ஸ்ரீ மத்வர் எழுதிய முதல் நூல் என்று கீதாபாஷ்யத்தைச் சுட்டிக்காட்டலாம். தத்துவ உலகிற்குள் இந்த கீதா பாஷ்யம் மூலமாகவே உள்நுழைந்தார் மத்வர். விஷ்ணுவுக்கும் வியாசருக்குமான வணக்கங்களுடன் தொடங்கும் கீதா பாஷ்யம், வேதாந்தத்தைப் புதிய கோணத்திலிருந்து பார்க்கத் தலைப்படுகிறது. சுருக்கம், தெளிவு - கூடவே கடின நடை; வெட்டுப்பட்ட உரை -

ஸ்ரீ மத்வரின் அனுகுமுறை அவரின் தனிப் பாணி. அவரின் வியாக்யானங்கள் சுருக்கமானவை; ஆனால், அவற்றுக்கு அவர் சேர்க்கும் பிற ஆதாரங்கள் ஏராளம்.

மகாபாரதம் என்கிற காப்பியத்தின் அமுதசாரமே பகவத்கீதை எனத் தெளிவுபட விளக்குகிறார். மகாபாரதம் என்னும் பாரிஜாத மலரின் மகரந்தத் தேன்தான் பகவத்கீதை என்றே மொழிகிறார் (''மஹாபாரத பாரிஜாத மதுபூத'').

முதலில் கர்மயோகத்தை விளக்கி, பின்னர் இறைவனின் அவதாரங்கள், வெளிப்பாடுகள், லீலாவிபூதிகள், விஸ்வரூபம் போன்றவற்றை விவரித்து, நிறைவாக மோட்சத்தை அடையப் பக்தியின் அவசியத்தை வலியுறுத்துகிறது கீதா பாஷ்யம்.

### கீதா தாத்பர்யம் (கீதா தாத்பர்ய நிர்ணயம்)

காலத்தால் பிற்பட்டது கீதா தாத்பர்யம். கீதா பாஷ்யத்தைக் காட்டிலும் கீதா தாத்பர்யத்தில் நயம் அதிகம்; விளக்கங்களும் உணர்வுபூர்வமானவை. இதில் தம்முடைய வியாக்யானங்களுக்கும் கொள்கைகளுக்கும் மத்வர், புதிய விளக்கங்களைத் தருகிறார். அதுவரை மற்ற வியாக்யானகர்த்தாக்களால் பயன்படுத்தப்படாத பிரம்ம தர்க்கம் போன்ற நூல்களிலிருந்து மேற்கோள்கள் இதில் காணப்பெறுகின்றன.

### பிரம்மசூத்திர பாஷ்யம்

பிரம்மசூத்திரத்தை மிக உயர்வான நிலையில் வைக்கிறார் மத்வர்; உபநிடதங்கள் குறிப்பிடும் ''பரவித்யை'' என்னும் நிலைக்கு நிகராக அதனை நோக்குகிறார்.

பிரம்மசூத்திர பாஷ்யம் என்னும் நூலைத்தவிர, பிரம்மசூத்திரம்பற்றி மேலும் மூன்று நூல்கள் எழுதியுள்ளார். அது பாஷ்யம், நியாய விவரணம், அநுவியாக்யானம் என்னும் இவற்றோடு சூத்திரபாஷ்யமும் சேர்த்துச் 'சூத்ரபிரஸ்தானம்' என்று வழங்கப்பெறுகின்றன.

பிரம்மசூத்திர பாஷ்யத்தில், வழக்கம்போல் நிறைய மேற்கோள்கள் காணப்படுவதோடு கருத்துக்களில் ஆங்காங்கே நிறைய வெட்டுக்களும் காணப்படுகின்றன. சூத்திர வாக்கியங்களுக்கு முறையான வரிக்குவரி விளக்கமாக அல்லாமல், ஒட்டுமொத்தமான பொழிப்புரை முறையும் பலவிடங்களில்

கையாளப்படுகிறது. தமக்கு முன்னதாகவே வந்துவிட்ட சங்கர பாஷ்யத்தையும் ராமானுஜ பாஷ்யத்தையும் கண்டிப்பதிலும் மாற்றுரைப்பதிலும் நிறையவே ஆற்றலைச் செலவழித்திருக்கிறார் மத்வர்.

### சூத்ரபிரஸ்தானம்

பிரம்மசூத்திரங்களின் அதிகரணங்களுக்கான விளக்கமாக அமைகிறது அநுபாஷ்யம். கவிதை முறையில், அநுஷ்டுப் சந்தத்தில் முப்பத்துநான்கு கவிவாக்கியங்களால் ஆன அநுபாஷ்யம், அச்யுதப்ரக்ஞரின் (மத்வரின் குரு) தனியாசையைப் பூர்த்தி செய்யவே மத்வரால் எழுதப்பட்டதாகவும் கருதப்படுகிறது. கடவுளின் பல்வேறு திருநாமங்கள், உலகத்தோற்றம் மற்றும் மறைவு, கடவுளின் கம்பீரம், வழிபாட்டு முறைகள், இறைமையை உணரும் தன்மை ஆகிய பொருட்களைப் பற்றி அநுபாஷ்யம் விவரிக்கிறது.

பிரம்மசூத்திரங்களின் மீதானதொரு ஆய்வுத் தொகுப்பு அநுவியாக்யானமாகும். பிரம்மசூத்திர பாஷ்யத்துக்கு ஒரு சிறந்த துணை நூலாகவும் இது விளங்குகிறது. பாஷ்யத்தில் 2000 கிரந்தங்கள்[2] என்றால் அநுவியாக்யானத்தில் 1985 கிரந்தங்களாகும்.

ஸ்ரீ மத்வரின் செல்லச் சீடரான த்ரிவிக்கிரம பண்டிதரின் வேண்டுகோளுக்கு ஏற்ப எழுதப்பட்டது அநுவியாக்யானம். உரை விளக்கங்களிலும், விமர்சன ஆய்விலும் தம்முடைய சிறந்த ஆற்றலையும் திறமையையும் இந்த நூலிலேயே ஸ்ரீ மத்வர் வெளிப்படுத்தியிருக்கிறார் என்று சொல்லலாம். தர்க்கம், வாதக் கூர்மை, சொற்களின் கவித்துவம் ஆகிய தன்மைகள் வெளிப்படுகின்றன. இங்கும் சங்கரரின் விளக்கங்களே அதிகக் கண்டனத்துக்கும் தாக்குதலுக்கும் ஆளாகின்றன.

நியாய விவரணம் என்னும் சிறிய உரைநடை நூல், சூத்திர அதிகரணங்களின் பொழிப்புரையாகவே விளங்குகிறது.

### பாகவத தாத்பர்யம்

ஸ்ரீமத் பாகவத புராணத்தின் மீதான உரையே பாகவத தாத்பர்யம் என்று சொல்லிவிடலாம். ஆனால், பாகவதத்தில் உள்ள பதினெட்டாயிரம் ஸ்லோகங்களில், சுமார் 1600 ஸ்லோகங்களுக்கு

2. மெய்யெழுத்தைக் கணக்கிடாமல் உயிரும் உயிர்மெய்யுமாக 32 எழுத்துகள் கொண்டது ஒரு கிரந்தம்.

மட்டுமே உரையும் விளக்கமும் தருகிறார் மத்வர். பாகவத புராணத்தில் எந்தெந்தப் பகுதிகளிலெல்லாம் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்பதுபோன்ற அத்வைத தொனி வருகிறதோ, அந்தப் பகுதிகளையே தம்முடைய விளக்கத்திற்கு எடுத்துக்கொள்கிற மத்வர், இந்தப் பகுதிகளின் சுலோகங்களுக்கு விளக்கவுரை தருவதைக் காட்டிலும், அவற்றின் ஒட்டுமொத்தக் கருத்துக்கு முக்கியத்துவம் தருகிறார்.

பாகவதத்தின் முதல் மூன்று ஸ்கந்தங்களை ஒரளவு விளக்குகிற மத்வரின் கவனம் முழுமையும் பத்தாவது மற்றும் பதினொன்றாவது ஸ்கந்தங்களைக் குறித்து எழுதுவதிலேயே செல்கிறது. இந்த ஸ்கந்தங்களில்தாம் அத்வைதத் தன்மையை வெளிப்படுத்துவதாகத் தொனிக்கும் வாக்கியங்களும் சொற்பிரயோகங்களும் அதிகமாக இருக்கின்றன என்று கருதும் மத்வர், அதனாலேயே அவ்வற்றுக்குத் த்வைத விளக்கம் தர முனைகிறார். கிருஷ்ணருக்கும் உத்தவருக்கும் நடைபெறும் உரையாடலை உரைக்கும் கிருஷ்ண - உத்தவ ஸம்வாதம் என்னும் பகுதியிலுள்ள இத்தகு பிரயோகங்களுக்குப் பாஞ்சராத்ர ஆகம நூல்களின்படி விளக்கமும் தருகிறார். விவாதப் பொருள் இல்லை என்று தாம் நினைக்கக்கூடிய ஸ்கந்தங்களை ஒருசில பக்கங்களில் லேசாகத் தொட்டு, பின் விட்டும் விடுகிறார்.

## மகாபாரத தாத்பாய நிர்ணயம்

ஸ்ரீ மத்வரின் காலத்துக்கு முன்பே, வாழ்க்கைக் களஞ்சியமாக வடிவம் பெற்றுவிட்டது வியாசரின் மகாபாரதம். வேதங்களில் கூடக் காணப்படாத சில உயர் ஆன்மீக உண்மைகளை 'ஐந்தாவது வேதம்' என்று பரவலாக அழைக்கப்பெறும் மகாபாரதம் தருகிறது என்பது மத்வரின் கொள்கை. த்வைதக் கோட்பாட்டின் சமய தத்துவ ஆன்மிகக் கருத்துக்களின் புதையலாகவே அவர் மகாபாரதத்தைக் கண்ணுறுகிறார்.

ஒருபுறம் கடவுள்தன்மை மற்றும் கடவுள் மீதான நம்பிக்கைக்கும், இன்னொருபுறம் கடவுளை நம்பாத தன்மைக்கும் இடையிலான போராட்டமும், அந்தப் போராட்டத்தின் இறுதியில் கடவுள் நம்பிக்கை வெற்றி பெறுவதும்தான் மகாபாரதத்தின் தத்துவம் என்று நிலைநிறுத்துகிறார். நன்மையும் தீமையும் எதிரும் புதிருமாக நிற்பதுமட்டு மல்லாமல், மகாபாரதப் போரில் நேரடியாக ஈடுபட்டு மனித வாழ்க்கைக்கு எது சரி எது தவறு என்பதைக் காட்ட முன்மாதிரிகளாக இருக்கின்றன.

பாரதத்தின் பல பகுதிகளுக்கும் தாமே பயணித்த மத்வர், ஆங்காங்கே இருக்கக்கூடிய பல்வேறு மகாபாரத கிரந்தங்களை ஒப்பிட்டுப் பார்த்து, அதன்பின்னரே தம்முடைய வியாக்யானத்தைக் கொடுக்கிறார். ஆங்காங்கே பரவலாக இருக்கக்கூடிய பல கிரந்தங்களையும் பரிசீலித்து, அவற்றுள் முதன்மையானதைத் தேர்ந்தெடுத்துக்கொள்கிறார். ''தேசே தேசே ததா க்ரந்தான் த்ருஷ்டவா சைவ பதக்விதான்'' என்று குறிப்பிடுகிறார். எது சரியானது, மூதன்மையானது என்று தேர்ந்தெடுத்துக்கொண்டாரோ, அதற்குத் தம்முடைய விளக்கங்களைத் தருகிறார். இன்னும் சொல்லப்போனால், காலப்போக்கில், விரும்பியபடியெல்லாம் இடைச்செருகல்கள் உள்புகுந்துவிட்டனவென்று வருத்தமும் படுகிறார்.

மகாபாரதத்தில் வரும் ஒரு சுலோகத்தின் அடிப்படையிலேயே மத்வரின் வியாக்யானம் அமைகிறது.

''மன்வாதி பாரதம் கேசிதாஸ்திகாதி ததாபரே
ததோபரிசராத்யன்யே பாரதம் ப்ரவதந்தி ஹி''

என்பதின்பால் உள்ள மூன்று கோணங்களையே தமக்கும் ஆதரவாகக் கொள்கிறார். ஆஸ்திகபூர்வ விளக்கம் என்பது, காப்பிய நிகழ்ச்சிகள் நடைபெற்ற சூழலை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது. மன்வாதி விளக்கம் என்பது நன்மைக்கும் தீமைக்கும், தருமத்துக்கும் அதருமத்துக்கும், நியாயத்திற்கும் அநியாயத்திற்கும் எப்போதும் நடைபெற்றுக்கொண் டிருக்கக்கூடிய போராட்டத்தையே, பாண்டவ - கௌரவப் போரின் அடிப்படையில் அமைத்துப் பார்க்கிறது. உபரிசர விளக்கம் என்பது கடவுளின் ஸர்வபூர்ணத்துவத்தை முதன்மைப்படுத்தி பக்தி அடிப்படையில் அமைகிறது.

மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின், தொடக்க அத்தியாயங்களில் இறைவனை அடையும் வழிமுறைகள் விரிவாகப் பேசப்பெறுகின்றன. கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் ஆகியவை நிறையவே அலசப்பெறுகின்றன. தானம், தீர்த்தம், தவம், யக்ஞும் ஆகியவற்றைச் சற்றே குறைந்த வழிமுறைகள் என்று வகைப்படுத்துகிறார். பக்திமட்டுமே மிக உயரிய வழிமுறை. இராமாயணம் பற்றியும், இராமபிரான் (தான் தெய்வம் என்பதைக் காட்டிக் கொள்ளாமல்) பட்ட அவதிகளைப் பற்றியும் கூட விரிவான விவாதங்கள் வருகின்றன. மகாபாரதக் கதை மிக மிக விரிவாகவே ஆராயப்படுகிறது.

கவிதை நடையில் எழுதப்பெற்றது மகாபாரத தாத்பர்ய நிர்ணயம். 6000 செய்யுள்களைக் கொண்ட இந்நூல், அதுவேயொரு காவியம் போல அமைந்துள்ளது.

### உபநிடத பாஷ்யங்கள்

மத்வரைப் பொறுத்தவரையில், உபநிடத வாக்கியங்களுக்கு விளக்கம் கூற வேண்டியது மிக மிக அவசியமாகிறது. ஆதிசங்கரரும், அவரையொட்டி வந்த பிற சமயாசாரியர்களும், உடநிடதங்களை, அத்வைத முறையில் விளக்கியிருப்பதில், மத்வருக்கு உடன்பாடில்லை. எனவே, த்வைத முறையில் உபநிடத வாக்கியங்களை விளக்க முனைகிறார். த்வைத முறையன்றி, வேறெந்த வழியிலும் உபநிடதத்தை விளக்குவது தகாது என்பதை நிருபிக்க, வேறு பல ஆதாரங்களையும் தேடிப்பிடித்து, ஆணித்தரமான குரலில் கூறுகிறார் மத்வர். மொழியியல், இலக்கணம், சொல் தோற்றம், ஒப்பீட்டு இலக்கியம் என்று பல கோணங்களைப் பயன்படுத்தித் தம் நோக்கத்திற்கு ஆதரவு தேடுகிறார்.

ஈஸாவாஸ்ய உபநிடதத்தில் வரக்கூடிய 'ஸோ அஹம் அஸ்மி' என்கிற மகாவாக்கியத்தை மிக லாகவமாகக் கையாள்கிறார் மத்வர். 'அஹம்' என்பதையும் 'அஸ்மி' என்பதையும் இறைவனைக் குறிக்கும் மறைவிளக்கப் பெயர்கள் என்று விளக்கி, 'அசு' என்னும் பிராணனில் உறையும் முதன்மையாளரே 'அஸௌ'வான பிரம்மம் என்று புதிய கோணத்தையும் வழங்குகிறார். கேனோபநிடத பாஷ்யத்தில், புலன்களுக்கும் உணர்வுகளுக்கும் அப்பாற்பட்ட சர்வோத்தமனான இறைவனை, புலன்களையும் உணர்வுகளையும் கொண்டே, யார்யாருக்கு எவ்வெவ்வகையில் முடியுமோ, அவ்வவ்வகையில், ஓரளவுக்கு உணர்ந்துகொள்ளலாம் என்கிறார்.

கதா உபநிடதத்தில் நசிகேதஸ் என்னும் சிறுவனின் கதை வருகிறது. நசிகேதஸ், யமதர்மனிடம் மூன்று வரங்கள் பெறுவான். மூன்றாம் வரத்தின்படி, இறைமையைப் பற்றிய பிரம்மவித்தையைத் தனக்குத் தரும்படி வேண்டுவான். இந்நிகழ்ச்சி குறித்த உபநிடத வாக்கியங்களில், 'ஸாம்பராய மஹதி' என்னும் சொற்றொடர் காணப்படுகிறது. இது ஆன்ம விடுதலையையும், அந்த விடுதலைக்குப் பின்னான நிலைமையையும் குறிக்கும். உடலுக்குள் உயிர் கட்டுண்டு கிடக்கும் நிலையில்மட்டு மன்றி, ஆன்ம விடுதலைக்குப் பின்னும், மனித உயிரை பிரம்மமே கட்டுப்படுத்துகிறது என்று இந்தச் சொற்றொடரை விரிவுபடுத்தி விளக்குகிறார் மத்வர். கதா உபநிடதம் கடவுளின் கருணையைப்

பற்றி நிறையவே கூறுகிறது. பக்தன் பகவானை அடைய எண்ணுவதற்கு முன்பாகவே, பகவான் பக்தனைத் தெரிவு செய்து அத்தகு எண்ணத்தை அவனுக்குள் விதைக்கிறார். இந்தச் சிந்தனை, மத்வருக்கு வலுச் சேர்க்கிறது.

முண்டக உபநிடதத்தைப் பாஞ்சராத்ர பரம சம்ஹிதையின் அடிப்படையில் விளக்குகிற மத்வர், ஐத்ரேய உபநிடதத்தை வைணவ தத்துவமாகவே விளக்குகிறார் என்றால் மிகையில்லை. ஐத்ரேயம் கூறும் 'யுக்தன்' என்பதையே பிரம்மத்தோடு அடையாளப்படுத்துகிறார். 'பஞ்சவிதம் யுக்தம்' என்னும் வாக்கியத்திற்கு (ஐந்து விதமாக யுக்தன் இருப்பான்) விஷ்ணு, நாராயணன், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்று வகைப்படுத்துகிறார். ஐந்ரேயத்தில் வரக்கூடிய சில உரையாடல்கள் (எடுத்துக்காட்டாக, விசுவாமித்திரருக்கும் இந்திரனுக்குமான உரையாடல்), அத்வைதத்தை எதிர்த்துக் குரலெழுப்புவதற்கு மத்வருக்கு வசதியாக அமைகின்றன.

தைத்திரிய உபநிடத பாஷ்யத்தின்படி, அன்னம், பிராணன், மனம், விஞ்ஞானம், ஆனந்தம் ஆகிய ஐந்தும் வெறும் உரைகளல்ல; அவை பிரம்மத்தின் ஐந்து வெளிப்பாடுகள் என்று நிலைப்படுத்துகிறார். சாந்தோக்கிய உபநிடத பாஷ்யம் நீளமானது. சாந்தோக்கிய உபநிடதம் முக்கியப் பிராணனைப்பற்றிப் பேசுகிறது. மத்வரின் கொள்கைளில் முக்கிய இடம் பிடிப்பது முக்கியப் பிராண வழிபாடு. முக்கியப் பிராணன் என்பவர் இறைவனின் மகன். உத்கீதனான பிரம்மத்தை (இங்குப் பிரம்மமும் விஷ்ணுவும் ஒன்றே) வழிபட, முக்கியப் பிராணரே சரியான வழிகாட்டியாகவும். ஊடகமும் ஆவார். " உத்கீதாக்யஸ்ய விஷ்ணோர்விசிஷ்ட பிரதிமா வாயுரேவ" என்பதற்கொப்ப, விஷ்ணுவான பிரம்மத்தை அடைய, மாருதியான ஆஞ்சநேயர் முக்கியப் பிராணராகிறார். முக்கியப் பிராணர் குற்றமில்லாதவர்; பாவங்களின் தொடர்பில்லாதவர்; எல்லா ஆன்மாக்களையும் மோட்சத்திற்கு அழைத்துச்செல்ல வல்லவர். சாந்தோக்கியத்தில் வரக்கூடிய "தஜ்ஜலான்" என்னும் சொல்லைத் தத் + ஜல + ஆன் என்று பதம் பிரித்துத் "தண்ணீரில் சுவாசித்திருக்கும் விஷ்ணு" என்று பொருள் கொள்கிறார்.

உபநிடதங்களுக்கு விளக்கம் கொடுக்குங்கால், தத்துவ நிலைப்பாட்டின் மிக உயரிய எல்லைகளை மத்வர் தொடுகிறார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. "ஸமுத்ரமேக விருக்ஷபதன பேரிதாட நாதிஸர்வே", என்றுரைக்கும்போது அலைகளின் ஓசையில், மேகத்தின் முழக்கத்தில், மரங்களின் சலசலப்பில்

இறைவனின் குரலையும் நாதத்தையும் கேட்கிறோம் என்று மிக ஆணித்தரமாகவே மொழிகிறார். விஷ்ணுதான் மூல முதற்கடவுள் என்னும்போது ஒரு பாரபட்சம் தெரிகிறதேயன்றி, விஷ்ணு என்றாலே பரம்பொருள் என்று வைத்து நோக்கினால், மத்வரின் விளக்கங்கள் உயர்நிலைகளை அடைகின்றன.

உபநிடதங்களில் வலியுறுத்தப்பட்டிருக்கும் இறை ஞானம் மத்வராலும் வலியுறுத்தப்பெறுகிறது. மற்ற எல்லா வகை அறிவும் சிந்தனையும் இறைஞானத்தை அடியொட்டியும் அங்கீகரித்துமே அமைய வேண்டும். இறை ஞானம் இல்லாமல் வேறு எந்த அறிவு இருக்குமென்றாலும், அது வீணானதே யாகும்.

நதிகளில் சென்று கடலில் கடப்பது போல என்னும் உவமையைப் பயன்படுத்தும் முறையில் த்வைதக் கொள்கையை விளக்குகிறார் மத்வர். ஜீவாத்மாக்கள் நதிகள் போல; கடல் பரமாத்மா. நதிகள் வரலாம்; போகலாம்; இருக்கலாம்; ஓடலாம்; வற்றலாம். ஆனால், கடல் அப்படியேதான் நிலைத்திருக்கும். ஜீவாத்மாக்களின் வரவு போக்கலினால் பரமாத்மாவில் எவ்வித மாறுதலும் ஏற்படாது. நதிகள், கடலுடன் இணைகின்றன; உண்மையில், கடலுக்கும் தங்களுக்கும் இருக்கும் வேறுபாடுகளைப்பற்றியும் அவற்றுக்குத் தெரியாது; ஒற்றுமைகளைப்பற்றியும் தெரியாது. அவை வெறுமே வந்து கடலுடன் சேருகின்றன; அது கடலுடன் கலப்பதாகாது. ஜீவாத்மாவும் உலகில் சுற்றித் திரிந்தபின் பரமாத்மாவின் காலடியில் சென்று சேருகிறது.

### ருக்வேத பாஷ்யம்

பிரஸ்தானத்ரயிக்குப் பாஷ்யம் எழுதும்போதே ருக்வேதத்திலிருந்து பல மேற்கோள்களைத் தரும் மத்வர், ருக்வேதத்திற்குத் தனியான பாஷ்யமும் எழுதுகிறார்.

வேதங்கள் பல தெய்வங்களைப் பாடுகின்றன என்றும், பல்வேறு வேள்விகளைச் செய்யும்போது ஓத வேண்டிய மந்திரங்களை அவை கொண்டிருக்கின்றன என்றும் சொல்லப்படுவதைக் கண்டிக்கிறார். பல தெய்வத் திருமேனிகளைப்பற்றி வேதங்கள், பேசுவதென்னவோ உண்மைதான். ஆனால், அவற்றின் நோக்கம், 'ஒன்று பரம்பொருள்' என உணர்த்துவதேயாகும். வேதங்களில் கர்ம காண்டமென்றும், ஞான காண்டமென்றும் பிரித்திருப்பது நடைமுறை வசதிக்காகவும், பலருக்கும் பயன்படுவதற்குமேயாகும்.

எல்லா மனிதர்களுக்கும் ஆன்ம பலம் ஒரே மாதிரியானதல்ல. எனவே, பலதரப்பட்ட நிலைகளில் இருப்பவர்களுக்காக, நடைமுறை வசதிக்காக, ஒரு முறையைக் கைக்கொள்ள வேண்டும் என்பதற்காக இத்தகைய பிரிவுகள் உள்ளன; அன்றியும் 'ஒன்றேயான பரம்பொருளை' அடைவதற்கான வழியையே இவை உணர்த்துகின்றன.

ருக்வேத பாஷ்யம் கொடுக்கும்போதே, மூன்று நிலைகளில் (காலக்கிரமப்படி) வேதங்கள் பரிணாம வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும் என்று விளக்குகிறார் மத்வர். முதல்நிலை மூலவேத நிலையாகும். மந்திரங்கள் மிதந்துகொண் டிருந்த நிலை. அடுத்தது உபவேதங்கள் அல்லது தொடக்க நிலையாகும். இதிலும் மந்திரங்கள் மிதந்தன. மிதப்பவற்றை மூன்றாக வகைப்படுத்த முடிந்தது. ருக் உபம், யஜுர் உபம், சாம உபம் என்பவை இவை. மூன்றாம் நிலையில்தான், வேத மந்திரங்களை நான்காக, ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்று வகைப்படுத்துகிறார் வேதவியாசர்.

இதேபோன்று, வேதங்களோடு தொடர்புடைய, வேத மந்திர மகாவாக்கியங்களுக்குத் தொடர்பு கொண்டே ரிஷிகள், தேவதைகள் ஆகியோரைப் பற்றியும் ஓர் அட்டவணை போடுகிறார் மத்வர். எல்லா ரிஷிகளிலும் உயர்வானவரும், தலைமையானவரும் விஷ்ணுவே ஆவார் (யஸ்ய வாக்யம் ஸ ருஷி:). அவரே, சிருஷ்டியின் தொடக்கத்தில் பிரம்மாவுக்கு வேதங்களைக் காட்டியவர். விஷ்ணுவைத் தவிர, ரிஷிகளை நான்கு தரங்களில் வகைப்படுத்தலாம். வேதங்கள் யாவற்றிற்கும் பிரதானத் தலைவர் பிரம்மா ஆவார். அடுத்த தரத்தில் (அதாவது இரண்டாவது நிலையில்) இரண்டு ரிஷிகள். அவர்களில், கருடன் வேதங்களுக்கான அறிஞர்; சேஷன் பாஞ்சராத்திரத்தின் அறிஞர். மூன்றாவது தரத்தில், ருக்கிற்கு இந்திரனும், யஜுருக்குச் சூரியனும், சாமத்திற்குச் சோமனும், அதர்வணத்திற்கு அக்கினியும் அறிஞர்களாவர். நான்காவது தரத்தில், தனிப்பட்ட சூக்தங்களுக்கும் சுலோகங்களுக்கும் பொறுப்பான ரிஷிகள் உள்ளார்கள்.

தேவதைகள் மற்றும் கடவுள்களின் தர வகைப்பாட்டிற்கு வேதங்களில் ஆதாரம் இருப்பதாக விளக்கும் மத்வர், வேதகாலக் கடவுளர்களில் விஷ்ணுவே தெய்வங்களுக்குத் தெய்வம் என்பதற்கும் ஆதாரம் இருப்பதாகக் கூறுகிறார். மொழி முறை விளக்கம், மறை முறை விளக்கம், ஆன்ம முறை விளக்கம் என்று மூன்று வகையான விளக்கங்களைக் கையாண்டு, தாம் சொல்ல நினைப்பதை நிறுவுகிறார்.

எடுத்துக்காட்டாக, ருக் வேதத்தின் முதலாவது மண்டலத்தின் முதலாவது சூக்தத்தின் முதல் சுலோகமான ருக்கிற்கு அவர் என்ன விளக்கம் தருகிறார் எனப் பார்த்தால், அவரின் அணுகுமுறையை நன்கு விளங்கிக்கொள்ள முடியும். நெருப்புத் தேவனை வழிபட்டுத் தொழுகிற ருக் இது. மொழி முறை விளக்கப்படி, 'யாகம் செய்ய உதவி புரியும் அக்கினித்தேவனைத் தொழ வேண்டும்', என்பது பொருள். மறை முறை விளக்கத்தின்படி, 'எல்லாவற்றுள்ளும் தன் அருளை நிலைநிறுத்தும் பரமாத்மாவிற்கு, இந்த இடத்தில் 'அக்னி' என்று பெயர்; அந்த அக்னியை வழிபட வேண்டும்', என்பது பொருள். ஆன்ம முறை விளக்கம் அபாரமானது. 'ஞான வேள்வியில், ஞானத்தின் நாயகனான இறைவனை முதன்மையாகக் கொண்டு, ஞானப் பிழம்புகளின் மூலம் பிறவித் துயர்களை வெல்ல வேண்டும். இது ஏதோ வெளியில், மண்ணில், யாக சாலையில் நடக்கும் வேள்வியன்று. இது மனத்தில், சித்தத்தில் நடைபெறும் ஆன்ம வேள்வி; ஞான வேள்வி!

### தசப் பிரகரணங்கள்

மத்வர் இயற்றிய தத்துவார்த்த நூல்கள் பத்தும் சேர்த்து 'தசப் பிரகரணங்கள்' என்றழைக்கப்படுகின்றன. இவற்றுள் உபாதி கண்டனம், மாயாவாத கண்டனம், பிரபஞ்ச மித்யாத்வானுமான கண்டனம் ஆகியவை பெயருக்கேற்றபடி ஆதிசங்கரரின் அத்வைதக் கொள்கைகளுக்கு எதிரான எண்ணங்களாகவும் பிரதிபலிக்கின்றன.

'பிரமாண லக்ஷணம்' என்னும் நூல் பிரமாணங்களைப் பற்றிப் பேசுகிறது. பிரமாணம் என்பது சாதாரணமாக ஞானத்திற்கான அல்லது அறிவிற்கான நிருபணம் அல்லது வழிமுறையாகும். ஒரு செய்தியை நிருபணம் காட்டப் பிரமாணங்கள் பயன்படும். ஆனால், மத்வரைப் பொறுத்தவரை பிரமாணம் என்பதை வெறும் வழிமுறையாக நினைக்காமல், மெய்ம்மையின் விளக்கமே அது என்று கருதுகிறார். 'யதார்த்தப் பிரமாணம்', என்று மெய்ம்மையின் விளக்கத்திற்குப் பெயர் சூட்டுகிறார். உண்மை அறிவு என்பது கேவலப்[3] பிரமாணம். இந்த உண்மை அறிவுக்கு வழிகோலக்கூடியவை பிரத்யட்சப் பிரமாணம், அநுமானப் பிரமாணம், ஆகமப் பிரமாணம் ஆகியவையாகும். புலன்களால் புரிந்துகொள்ளப்படக் கூடியது பிரத்யட்சப் பிரமாணம்; ஊகித்து

3. கேவலம் என்ற வடமொழிச் சொல் மிகவும் உயர்ந்தது என்னும் பொருள் உடையது.

உணர்ந்து கொள்ளப்படக்கூடியது அநுமானப் பிரமாணம்; சாஸ்திரங்களிலிருந்தோ நூல்களிலிருந்தோ மேற்கோள் காட்டப்படக் கூடியது ஆகமப் பிரமாணம்.

'கதா லட்சணம்' என்பது வாத - பிரதிவாத முறைகளைப் பற்றி விளக்கும் நூலாகும். வாதம் என்பது மெய்ம்மையை நிர்ணயிக்க நிகழ்த்தப்படும் விவாதங்களைக் குறிக்கும். ஜல்பம் என்பது சற்றே தரம் குறைந்த விவாதம்; உண்மையை உணர்வது அல்லது உணர்த்துவதைக் காட்டிலும் வாதத் திறமையை வெளிக்காட்டுவதும், வெற்றி பெறுவதுமே இதன் நோக்கமாகும். விதண்டாவாதம் என்பதைக் கௌரவம் மிக்கதாக்குகிறார் மத்வர். நியாயமாகவும் தம் கருத்துக்களில் சரியாகவும் இருக்கும் ஒருவர், ஏறுமாறானதொரு எதிராளியை எதிர்கொள்ளும்போது விதண்டாவாதம் செய்ய வேண்டும். எதிராளியின் கருத்துக்களை எதிர்த்து அழித்தால்மட்டும் போதாது; தம் கருத்தை இயம்பவோ நிலைநிறுத்தவோ வேண்டிய அவசியமில்லை. வேடம் போடும் பொய்ம்மைக்கு எதிரான போர்க் குரலே விதண்டாவாதம் என்றழைக்கப்படுகிறது.

## ஸ்ரீ மத்வரின் கொள்கை

வேதங்களின், வேத சாஸ்திரத்தின் முக்கியப் பொருள் (மஹா தாத்பர்யம்) ஸ்ரீமந் நாராயணன் என்னும் பிரம்மம் என்பதே மத்வர் பல்வேறு நூல்களிலும் நிலைநிறுத்தும் கொள்கையாகும். இவ்வாறான கொள்கையை முதன்மைப்படுத்துகையில், கீழ்க்காண்பவற்றையும் தெளிவுற உரைக்கிறார் அவர்.

அ) வேதங்கள் குற்றமில்லாதவை; அபௌருஷேயமானவை (மனிதர்களால் தோற்றுவிக்கப்படாதவை).

ஆ) இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையில் தீர்க்க முடியாத, தவிர்க்க முடியாத வேறுபாடு நிச்சயமாய் உள்ளது. பிரம்மம் என்னும் இறைமையின் அளப்பரிய உயர்வினால் ஏற்படும் வேறுபாடு இது. இறைவனைத் தவிர வேறு யாரும் அல்லது எதுவும், அந்த உயர்வை அடைய முடியாது.

இ) 'பேதம்' என்னும் வேறுபாட்டுத்தன்மை முக்கியமானது. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வெவ்வேறானவை.

ஈ) ஸர்வதந்த்ர ஸிந்தாந்தம் என்று மத்வரே அழைக்கும் விசேஷத்தன்மையைக் கொண்டு இறைவனுக்கும்,

இறைவனின் கல்யாண குணங்களுக்குமான தொடர்பு விளக்கப்படுகிறது. ஒன்றேயான இறைவன், விசேஷத்தின் காரணமாக, பல்வேறு தன்மைகளும், குணங்களும், உருவங்களும், வடிவங்களும் கொண்டவர்போல வெளிப்படுகிறார். இறைவனுக்கும் இறைவனின் குணங்களுக்கும் எந்தவித வேறுபாடும் கிடையாது.

## தோத்திரங்கள் மற்றும் கவிதைகள்

பிரம்ம சூத்திரம், உபநிடதங்கள், புராணங்கள், பகவத்கீதை ஆகியவற்றுக்கான விளக்கங்களும், தத்துவ வியாக்கியானங்களும் கொடுத்த மத்வர், பக்திபூர்வமாக விளங்கும் கவிதைகளையும், தோத்திரங்களையும் இயற்றிக் கொடுத்துள்ளார். ஸ்ரீகிருஷ்ணனின் லீலைகளையும் பாண்டவர்க்கு அவர் செய்த உதவிகளையும் பாடும் யமக - பாரதம், கிருஷ்ணனின் பிறப்பைக் கொண்டாடும் கிருஷ்ண ஜயந்தி நிர்ணயம், நரசிங்காவதாரத்தின் பெருமையைக் கூறும் நரசிம்மநகஸ்துதி, வைணவ வழிபாட்டு முறைகள் திட்டமாகப் பட்டியலிட்டு உரைக்கும் தந்திர - சார சங்கிரஹம், ஒரு மனிதனின் தினப்படி செயல்களையும் நடவடிக்கைகளையும் நிரலிட்டுக் காட்டும் ஆசார ஸ்ம்ருதி, சந்நியாச ஆசிரமத்தை அநுசரிக்கச் சரியான வழிமுறைகளைத் தொகுத்துத் தரும் யதி பிரணவ கல்பம் ஆகியவை இவற்றுள் சில.

இந்தத் தொகுப்பில், கிருஷ்ணாம்ருத மஹார்நவம் என்னும் நூல் முக்கிய இடம் பெறுகிறது. சாளக்ராம வழிபாட்டு முறைகள், நெற்றியில் ஊர்த்துவ புண்டரம் அணியும் முறை ஆகியவற்றோடு ஏகாதசி விரதம் பற்றிய செய்திகளையும் இதில் உரைக்கிறார் மத்வர். ஏகாதசி விரதம் இருப்பது சாலச் சிறந்தது. (இன்றும் மத்வரைப் பின்பற்றுபவர்கள் ஏகாதசி விரதம் காப்பதை மிகவும் அவசியமானதாகக் கருதிக் காக்கின்றனர்). இதே தோத்திரத்தில் தான், சற்றே வித்தியாசமாக, விஷ்ணுவை வில்வதளங்கள்[4] கொண்டு அர்ச்சனை செய்வதுபற்றியும் கூறுகிறார்.

எப்போதும் பக்தி இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிற மத்வர், ஒரு வினோதமான கணக்கையும் போட்டுக் காட்டுகிறார். பதினான்கு வயதிலிருந்து (ஆணாயினும் பெண்ணாயினும்) ஒருவர்

---

4. வில்வதளம் பொதுவாகச் சிவனுக்கு உரியது என்பது ஐதீகம். சிவார்ச்சனைக்கு வில்வம் உகந்தது. வில்வத்தில் மஹாலட்சமி வாசம் செய்கிறாள் என்றும் சொல்வதுண்டு. ஆயினும், வழக்கமாக, விஷ்ணுவுக்கு வில்வார்ச்சனை செய்வதில்லை.

தவறு செய்யத் தொடங்கிவிடுகிறார். எவ்வளவு அளவுக்குத் தவறுகள் என்றால், மிக மிகக் குறைத்து மதிப்பிட்டாலும், பத்து வருங்காலப் பிறவிகளையாவது கொடுக்குமளவுக்குத் தவறுகள்! இவற்றிலிருந்து தப்பிக்க ஒரேயொரு வழிதான் உண்டு. அது - *பக்தி!!*[5]

### த்வாதச ஸ்தோத்திரம்

உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண விக்ரகத்தை நிர்மாணிக்கும்போது மத்வரால் இயற்றிப் பாடப்பெற்றதாகக் கருதப்பெறும் 'த்வாதச ஸ்தோத்திரம்' மிகப் பிரபலமானது. பன்னிரண்டு சிறிய அத்தியாயங்களில் அமைந்துள்ள இதனில், பல்வேறு சமய உண்மைகள் பரவசமூட்டும் வகையில் பாடப்பெற்றுள்ளன. த்வைத இலக்கியத்தின் முதன்மை நூலாக விளங்கும் இந்நூலே, பிற்கால ஹரிதாச இலக்கியத்திற்கு உந்துசக்தியாகவும் தூண்டுகோலாகவும் அமைந்தது.

''புஷ்ப முத பலமஹோ விததே ஜனஸூப்தி தானுபம கான ஸம்பதா'', என்று ஸ்ரீ மத்வ விஜயம் இந்த ஸ்தோத்திரத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது. தன்னுடைய கான(இசை)த் திறமையைச் சேர்த்து, விதை நட்டு, அது முளைவிட்டுச் செடியாகி, மலர் மலர்ந்து, காயாகிக் கனியாகிப் பலன் தரும்படி இந்தத் தோத்திரத்தை ஸ்ரீ மத்வர் செய்தாராம்.

சங்கு சக்கரதாரியான நாராயணனின் பாதாதிகேச வர்ணனையுடன் தொடங்கும் இந்நூலில் இசையும் சந்தமும் கைகோத்துக் களிநடம் புரிகின்றன. எடுத்துக்காட்டாக,

''வாமன வாமன பாமன வந்தே
ஸாமன ஸீமன சாமன ஸானோ
ஸ்ரீதர ஸ்ரீதர ஸந்த்ர வந்தே
பூதர வார்த்தர கந்தர தாரின்''

என்னும் சுலோகத்தில் 'வாமன' என்னும் சொல் பல பொருட்களில் கையாளப்படுகிறது. வாமனரூபம் எடுத்தவனே, மங்களத்தைத் தருபவனே, அரக்கர்களுக்குத் துன்பம் தருபவனே, (வாமா:) பெண்களுக்கு மகிழ்வூட்டுபவனே, ஞானம் தருபவனே, ஒளிமிக்க

5. சிவன், பிரம்மா, ஏகப்பட்ட ரிஷிகள் ஆகியவர்களின் சுலோகங்கள் பலவற்றோடு நிறைய ஒத்துப்போகிறது கிருஷ்ணாம்ருத மஹார்நவம். குலசேகராழ்வாரின் முகுந்தமாலையின் சில ஸ்லோகங்களுக்கும்கூட நிறையத் தொடர்பு காணப்படுகிறது.

குழந்தையானவனே, (வாமம்) சினம் கொண்ட ருக்மியைக் கட்டிப் போட்டவனே என்று பல்வேறு வகையில் அச்சொல்லுக்கான விளக்கங்கள் விரியும்.

ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள், முழுமுதல் கடவுள் என்பதை நிலைநிறுத்தும் வகையில் இந்நூல் அமைகிறது. நாராயணமூர்த்தியின் பல்வேறு அவதார வடிவங்களையும் இந்தத் தோத்திரத்தில் புகழ்கிறார் மத்வர். ''ரகுவர மானதயதுவர பார்த்தப, மீனஹே, கூர்மஹே, ஸூபதம கதாஸய'', என்று கூறி இராமனாகவும், கிருஷ்ணனாகவும், மீனாகவும், கூர்மமாகவும், வேறு பல வடிவங்களிலும் அவதரித்தது ஒரே பரம்பொருள், இந்த வடிவங்களுக்குள் வேறுபாடு காணக்கூடாது என்றும் வலியுறுத்துகிறார். பத்தாவது மற்றும் பதினொன்றாவது அத்தியாயங்களில் கிருஷ்ணனின் வடிவத் திருவழகையும், திருவடித் தாமரைகளையும் போற்றிப் பரவுகிற மத்வர், பன்னிரண்டாவது அத்தியாயத்தில் (கடைசி அத்தியாயம்) கிருஷ்ணன் தமக்களித்த பரமானந்தத்தை வெளிப்படுத்துகிறார். ஆனந்ததீர்த்தர் என்னும் தம்முடைய சந்நியாசத் திருநாமத்தையே இங்கே பயன்படுத்துகிறார். பன்னிரண்டாவது அத்தியாயத்தின் ஒவ்வொரு சுலோகத்தின் நிறைவு வரியும் ''ஆனந்ததீர்த்த பரானந்த வரத!'' என்றே அமைகிறது.



# 7. மத்வ சித்தாந்தம்

கடவுள் தன்மையைச் சரியாக அறிந்துகொள்ளும் ஞானத்தை வலியுறுத்துகிறார் ஸ்ரீ மத்வர். இந்த ஞானத்தைப் பெறுவதற்கும், இதுதான் சரியான ஞானம் என்று அறுதியிட்டுச் சொல்வதற்கும் பலவித ஆராய்ச்சிகளில் ஈடுபடுகிறார். ஆராய்ச்சிகளின் நிறைவில், ஸ்ரீ மத்வர் அடையும் தீர்மானங்கள் இரண்டு. அவையாவன :

1) சரியான முறையான அறிவும் ஞானமும் சுருதிகள் மூலம் கிடைக்கும்.

2) சுருதிகளால் எது 'பிரம்மம்' என்று அடையாளம் காட்டப்படுகிறதோ அதுவே நிரந்தர உண்மையாகும்[1].

தம்மையே 'தீயக்தவேதாந்தி' என்றழைத்துக்கொள்கிறார் மத்வர். அதாவது, வேதங்கள் சொல்கின்றன என்பதற்காக எதையும் அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. அவை உண்மையைச் சொல்கின்றன என்பதால் அவற்றை மதிக்கிறார்; உண்மையை ஏற்றுக்கொள்கிறார்.

சர்வோத்தமன், பரன், பரமன் ஆகிய பெயர்களால் சுருதிகளின் பிரம்மத்தைச் சுட்டுகிறார் மத்வர்.

---

1. மத்வரின் நிலைப்பாட்டைச் சரியாகப் புரிந்துகொள்வது இவ்விடத்தில் அவசியமாகிறது.

ஸ்ருதி என்று மத்வர் சொல்வதை, பழக்கமான மொழியில் வேதங்கள் என்றும் சொல்லிவிடலாம்.

ஆனால், வேதங்கள்தாம் இறுதி அதிகாரத்துக்குரியவை என்பதாக மத்வர் ஏற்றுக் கொள்ளவில்லை. வேதங்களின் மரியாதை, உண்மையைப்பற்றிச் சொல்லும் ஒரே அறிவுப் பெட்டகம் என்பதில் அமைவதாக அவர் கருதுகிறார். வேதவாக்கியங்களுக்கு உண்மையைப் பொருத்த அவர் முயலவில்லை. மாறாக, உண்மைக்கு வேதவாக்கியங்களைப் பொருத்துகிறார்.

பிரம்மம், சர்வோத்தமமானது. பல உண்மைகளுக்கு நடுவில் அதுவும் ஓர் உண்மையன்று. எல்லாவற்றையும் உள்ளடக்கிக் கொண்டு, எல்லாவற்றையும் கடந்து நிற்கும் ஒரே உண்மை அது!

உலகிலுள்ள எல்லாவற்றுக்கும் உண்மைத் தன்மையைத் தருவது பிரம்மம் ஆகும். உலகம், பிரம்மத்திடமிருந்து உண்மைத் தன்மையைப் பெறுவதனால், சுருதிகள், இரண்டிற்கும் பேதமில்லை (அபேதம்) என்று சொல்கின்றன.

ஆனால், பிரம்மம் எல்லாவற்றையும் கடந்தது. சிருஷ்டிக்குள் அது தன்னைத் தொலைத்துவிடுவதில்லை. சிருஷ்டியினால் களைப்படைந்து தீர்ந்துபோய்விடுவதும் இல்லை. உலகப் பொருட்களுக்கு உண்மைத் தன்மையைக் கொடுத்தாலும், அவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டும் பிரம்மம் தனித்திருக்கிறது; தனித்து இயங்குகிறது. எனவே, உலகத்திற்கும் பிரம்மத்திற்கும் பேதம் இருக்கிறது என்று ஸ்ருதிகள் குறிப்பிடுகின்றன.

பேதம் - அபேதம் : இந்த இரண்டிலும் ஏதேனும் ஒன்றின்மீது மட்டும் கவனம் செலுத்துவது தவறானது; அதனால் துன்பம் வரும்; பந்தம் ஏற்படும் என்பது மத்வரின் கருத்து. அதுமட்டு மன்று; அப்படி ஏதாவது ஒன்றின்மீது கவனம் செலுத்துவது என்பது எல்லாம் வல்லவரான, எல்லாவற்றிலும் சுதந்திரமான பிரம்மத்தை ஒப்புக்கொள்ளாததாகவும் ஆகும்.

பிரம்மமும் உலகமும் வெவ்வேறானவை என்று சொல்லி, 'பேதம்' கொண்டவை என்றுமட்டும் பார்ப்பதும் சரியாகாது. ஒரு மரமும் ஒரு பானையும் வெவ்வேறானவைதாம்; பேதம் கொண்டவைதாம். அப்படியா உலகமும் பிரம்மமும்? இந்த வகையில், பேதத்தை மட்டும் வைத்து, உலகமும் பிரம்மமும் பேதம் கொண்டவை என்றுமட்டும் கூறுவது தகுமா?

சரி. உலகமும் பிரம்மமும் அபேதமானவை என்று சொல்லலாமா? எப்போது பிரம்மத்திடமிருந்து சில துளிகளை உலகம் பெற்றதோ, அப்போதே அது பிரம்மம் அல்ல என்று தெரிந்துவிட்டதே! அப்படியானால் அவை வெவ்வேறானவை தாமே! அபேதமானவை என்று எப்படி இரண்டையும் ஒன்றுபடுத்த முடியும்?

உலகின் உண்மைத்தன்மை பிரம்மத்திடமிருந்து வருகிறது. உலகின் உயிர்ப்புக்கும் காரணம் பிரம்மம். ஆனால், பிரம்மம் சுதந்திரமானது; உலகமோ பரதந்திரமானது. எனவே, உலகமும் பிரம்மமும் அபேதமும் கொண்டவை; பேதமும் கொண்டவை!

சுருதிகள், பேதம் - அபேதம் இவற்றைப்பற்றிக் கவலைப்படவில்லை; பிரம்மம் தான் சுருதிகளின் முக்கிய நோக்கம்.

ஒரு தனி ஆன்மா அல்லது பொருள் எதையும் தனியாகச் செய்ய முடியாது. ஒவ்வொரு தனிச்செயலும், ஒரு பெரிய கூட்டுச் செயலின் ஒரு துளி அல்லது பாகம்தான். உலகிலுள்ள எல்லாவற்றையும் பாதிப்பதால், அது கூட்டுச் செயலாகிறது. ஒவ்வொரு தனிச்செயல் செயல்படுத்தப்படும்போதும், ஏதோவொரு வகை மாற்றம் ஏற்படுகிறது. அந்தப் பொருளில் ஏற்படும் மாற்றம் தவிர, இதன் விளைவாக, மற்ற எல்லாவற்றிலும் மாற்றமோ, பாதிப்போ, விளைவோ ஒரு சிறிதேனும் ஏற்படுகிறது. எனவே, தனிச்செயல் என்பதும், சரியாகச் சொல்லப்போனால், கூட்டுச் செயலின் பகுதிதான்.

தனிச்செயலைச் செய்யக்கூடியதாக இருப்பது கர்த்தா. ஆனால், இந்தக் கர்த்தா, சர்வகர்த்தாவின் படைப்பு ஆகும். எல்லாவற்றையும் செய்யவைப்பதால் சர்வகர்த்தாவே, அனைத்துச் செயல்களுக்கும் அதிபதி ஆகும். எதன்மீதும் இந்தச் சர்வகர்த்தா சார்ந்திருப்பதில்லையாதலால், அது சுதந்திரமானது. சுருதிகள், சர்வகர்த்தாவை 'ஏகம்' என்று குறிப்பிடுகின்றன. ஏகம் (ஒன்றேயானது) என்கிறபோது, அதற்கு நிகராக இரண்டாவது ஏதுமில்லை என்பது பொருள். அதனால் அது 'அத்விதீயம்' ஆகும். சர்வகர்த்தாவைத் தீர்மானிப்பது வேறு எதுவுமில்லை; அதற்கு முன்னோடியும் இல்லை; வேறு எதையோ நம்பி அது இல்லை. எனவே, அது பூர்ணமானது (முழுமையானது).

பூரணத் தன்மை கொண்ட சர்வகர்த்தாவை, சுருதிகள் 'பிரம்மம்' என்று அழைக்கின்றன.

தனிச்செயலையும் சர்வகர்த்தாவான பிரம்மத்தின் கூட்டுச்செயலையும் உபநிடத வாக்கியங்களைக் கொண்டு விளக்குகிறார் மத்வர்.

தனி ஆன்மா செயல்பட முடியும்; அப்படிப்பட்ட செயல்பாடும் ஒருவிதத்தில் மாயையானதே; ஏனெனில், பிரம்மம்தான் எல்லாச் செயல்களையும் ஆட்டுவிக்கும் அதிபதி. பிரம்மத்தின் படைப்பான உலகிற்கு எந்தத் திருத்தமோ, மேம்பாடோ, கூடுதலோ தேவையில்லை. அதுவொரு முழுமையான அமைப்பு. பிரம்மத்தின் படைப்பு குறையற்றது என்பதைப் புரிந்துகொள்வதே பிரம்மத்தை உணர்ந்துகொள்ளும் மெய்யறிவு.

எல்லாச் செயல்களுக்கும் சர்வகர்த்தாவே அதிபதி என்பதைப் புரிந்துகொள்ளும்போது, உடலையும் ஆன்மாவையும் சர்வகர்த்தாவின் செயல்களுக்கான நிலைக்களன்களாக ஏற்றுக் கொண்டு வாழ்வில் ஈடுபட வேண்டும். ஈசா உபநிடத்தை மேற்கோள் காட்டுகிறார் மத்வர். பிரம்மத்தின் சர்வகர்த்தாத் தன்மையை உணர்ந்துகொள்வது, ஒரு தனி ஆன்மாவைச் செயலற்றதாக்காது; மாறாக, அதனைச் சரியாகச் செயல்பட வைக்கும்.

தான் சுதந்திரமானவன் என்று ஒருவன் நினைத்து விடுவானேயானால், அவன் எதுவும் செய்யாமல் இருந்துவிடக் கூடிய வாய்ப்பு உண்டு. 'தான் எது வேண்டுமானாலும் செய்ய முடியும்; ஆகவே செய்யாமலும் இருந்துவிட முடியும்', என்கிற எண்ணம் தவறானது.

எனவே, தனி ஆன்மா (அல்லது மனிதன்)[2] 'செயல்படுகிறது' என்று எண்ணுவதும், தனி ஆன்மாவே கர்த்தா என்று எண்ணுவதும் செயல்களை நிறுத்தக் காரணமாகிவிடும். இதனால், பந்தம் (துன்பம்) விளையும். தனிக்கர்த்தாவை முதன்மைப்படுத்துகிற எந்த வகையான சமயக் கொள்கையும், நன்னெறிக் கல்வியும் தவறாகவே முடியும். தனிக் கர்த்தாவைப்பற்றி விவரித்து விவரித்து அதனை உறுதிப்படுத்தினால், பந்தங்களுக்கும் கட்டுக்களுக்கும் அது வழிவகுக்கும். அதனால் துன்பம் அதிகப்படும். எனவே, அத்தகைய சமய விளக்கங்களும் தத்துவ நிலைகளும் தவறானவை என்று வலியுறுத்துகிறார் மத்வர்.

இவற்றைச் செம்மைப்படுத்தக் கர்ம வழியையும் (செயல் வழி) ஞான வழியையும் (அறிவு வழி) இணைக்கிறார். கர்மம்[3] (அல்லது செயல்) என்பது ஞானத்தின் விளைவு (அல்லது ஞானத்தின் விளைவாக அமைவது நலம்). இன்னும் தெளிவாகச் சொன்னால், ஞானத்தின் இயல்பான வெளிப்பாடே கர்மம்!

இதில் எது ஞானம்?

பிரம்மமே சர்வகர்த்தா என்னும் உண்மையை உணர்வதே ஞானம்.

---

2. மனிதக் கூட்டுக்குள் இருக்கும் ஆன்மா என்பதனால் 'புனிதன்' என்றே வைத்துக் கொள்ளலாம்.

3. நன்னெறிச் செயல் என்பது இன்னும் பொருத்தம்.

இந்த உணர்தல் இல்லாமல், எந்தச் செயலும், எந்த நன்னெறி ஆக்கமும் இல்லை. இந்த உணர்தல் இல்லாமல், எந்தக் கர்மத்தையும் 'சரியானது' என்று அடையாளம் காணமுடியாது. ஏனென்றால், ஞானமில்லாத கர்மம் என்பது, தனிச் செயல்பாட்டைக் குறித்ததொரு மாயை. அப்படிப்பட்ட கர்மம், அகங்கார மமகாரத்தின்பாற்பட்டது; சர்வகர்த்தாவான பிரம்மத்திற்கு எதிரானது.

கர்மத்தைச் சரியாகச் செயல்படுத்த ஞானம் தேவை; ஞானம் பெற, முன்னதாக ஸத்வ-சுத்தி (அல்லது அந்தக்கரண சுத்தி) தேவை. ஞானமற்ற கர்மா, ஒருவரைப் பார்வையிழக்கச் செய்துவிடும்; ஞானத்திற்கே எதிரியாக்கிவிடும். ஞானமே, ஒருவரை நன்னெறியாள ராக்குகிறது.

தனிச்செயல்பாடு கிடையாது என்று உணர்ந்துகொள்வதே, ஆன்மீகக் கட்டுப்பாட்டின் முதல்படி. இந்த உணர்தலின் இன்னொரு பரிமாணம், பிரம்மத்தின் ஸர்வகர்த்தாத் தன்மையைப் புரிந்துகொள்ளுத லாகும். அப்படியானால், தன்னுடைய சுயமதிப்பில் மட்டுமே இருக்கிற அல்லது நிலைக்கிற எதுவுமே உலகில் கிடையாது. இந்த வகையில், பிரம்மம்; மீதமுள்ள உலகமோ பரதந்திரமானது (சார்ந்திருப்பது).

தானே சுயமாக நிலைபெற்றது, சுதந்திரமானதும்கூட! சுயமாக நிலைபெற்றது என்பதால், அது குணபூர்ணமானதும் ஆகும். அது குறைவதுமில்லை; மாறுவதுமில்லை.

பிரம்மத்தைப் பற்றிய பிற சமயாசார்யார்களின் நிலைப்பாடுகளி லிருந்து மாறுபடுகிறார் மத்வர். இராமானுஜர், பிரம்மம் முழுமையானதல்ல என்றார். சங்கரரோ, பிரம்மம் குணமற்றது என்றார். மத்வர், பிரம்மம் முழுமையானதல்ல என்று குறிப்பிடுவதற்கே, அது முதலில் முழுமையானதாக இருந்திருக்க வேண்டும் என்று நிறுவினார். குணமற்றது, தன்மையற்றது என்று பிரம்மத்தைச் சொல்ல முடியாது. குணமற்றது என்பதே அதனின் ஒரு தன்மையாகிவிடும்.

சுருதிகள், பிரம்மத்தை 'விஷ்ணு' என்னும் பெயரால் சுட்டுகின்றன. வேதகால நெறிப்படி, விஷ்ணு என்பது சிருஷ்டியின் வித்தைக் குறிக்கும். இதை வைத்துப் ''பிரம்ம ஸப்தஸ்ச விஷ்ணாவேவ'' என்கிறார் மத்வர். (விஷ்ணு என்னும் பொருளிலேயே, பிரம்மம் என்பது சுருதிகளில் விளக்கப்பெறுகிறது).

சுருதிகள் என்பவை யாவை? 'பிரம்மத்தின் மொழி' என்று இதற்கு விடை தருகிறார் மத்வர்.

பிரம்மம் நித்தியமானது; எனவே பிரம்மத்தை வெளிப்படுத்தவல்ல சுருதிகளும் நித்தியமானவை.

பிரம்மத்தின் பூர்ணத்துவத்தைச் சுருதிகள் மொழிகின்றன. இவ்வகையில், பிரம்மத்தின் முழுமையைச் சுட்டி, பிரம்மத்திற்கு எவ்வித மாறுபாடும் தேவையற்றது என்பதையும் சுருதிகள் கூறுகின்றன. இதனால், சுருதிகள் நிர்தோஷமானவை (தோஷமற்றவை - குற்றமற்றவை).

சுருதிகள், எல்லாம் கொண்டவை; எல்லாம் அறிந்தவை. அவற்றுக்குள் அடங்காத வேறெந்த அறிவும் கிடையாது. எனவே, சுருதிகள் ஸ்வத பிரமாணமானவை (சுயநிர்ணயம் கொண்டவை).

நித்தியமானவை, நிர்தோஷமானவை, ஸ்வத பிரமாண மானவை என்றால் தனிமனிதத் தன்மைகளிலிருந்து அப்பாற்பட்டவை சுருதிகள் என்பது புரியும். எனவே, அவை அபௌருஷேயமானவை (மனிதத் தொடர்பால் தோன்றியவை அல்ல).

எப்படிச் சுருதிகளை உணர்வது? ஜிஞாஸத்தின் (விசாரணை) மூலமாக! ஸ்ரவணம் (புரிந்து கொள்ளுதல்), மனனம் (பிரதிபலித்தல்) மற்றும் நிதித்யாஸனம் (பயன்படுத்துதல்) ஆகியவற்றின் மூலமே இந்த விசாரணை சாத்தியம்!

இப்போது நமக்கு இரண்டு தகவல்கள் கிடைத்துவிட்டன. ஞானத்தின் ஊற்றுக்கண் சுருதிகள்; அதாவது அறிவைத் தருகிற 'பிரமாணம்'. ஞானத்தின் நோக்கம் பிரம்மம்; அதாவது அறிவின் விழுப்பொருளான 'பிரமேயம்'.

மிகவுயர்ந்த சத்தியமானது பிரம்மம். அதுகுறித்த பிரமேயம் - பிரமாணம் இரண்டையும் முறையாக உணர வேண்டும். இவற்றைச் சரியாக அறிந்து புரிந்துகொள்கிற வழிமுறையே 'ஜிஞாஸம்'!

பிரம்மசூத்திரத்தை வைத்துக்கொண்டுதான் சுருதிகளையும் அவற்றின் பொருளையும் உணர்ந்துகொள்ள வேண்டும். எனவேதான், மத்வரின் தத்துவ வழிமுறை பிரம்ம மீமாம்சம் என்னும் பிரம்ம ஜிஞாஸமாகவே அமைந்தது.

பிரம்மத்தின் பூர்ணத்துவத்தையும், சர்வகர்த்தாத் தன்மையையும் உணர்ந்துகொள்வதே மத்வரின் தலையாய

குறிக்கோள். சர்வகர்த்தாவான பிரம்மம், எல்லாப் பொருட்களுக்கும் தோற்றத்தையும், இருப்பையும், நிலைத்தன்மையையும் தருகிறது. எனவே, அது சர்வஸத்தா பிரதமமும் ஆகிறது.

மத்வர், சங்கரரின் மாயாவாதக் கொள்கையை நிரம்பவே எதிர்த்தார். ஆனால், உலகம் மெய்ம்மையானது என்று சொல்வது மட்டுமே மத்வரின் கொள்கை என்று நினைத்துவிடக் கூடாது.

உலகத்தை, உலகத்திற்காக உண்மையானது என்று கருதும் மனப்பான்மை சாருவாகக் கொள்கையாகும். மத்வர் அந்தக் கொள்கையை ஆதரிக்கவில்லை.

சுருதிகளில் விளக்கப்பெற்றிருக்கும் பிரம்மத்தை உணர முயற்சி செய்கிறார் மத்வர். அதன்படி, ''தமேனவகம் ஜானதா ஆத்மானம்: அந்யா வாசோ விமுஞ்ச்சதா'', என்பதையே உணர வேண்டும். ஆத்மா என்பதை அறிந்தால் போதும்; பிறவற்றினைப் பற்றிய பேச்சை நீக்கிவிட வேண்டும் என்கிற இந்த மகா வாக்கியத்தையே தம்முடைய குறிக்கோ ளாக்கிக்கொள்கிறார். உலகத்தின் உண்மைத்தன்மையை உணர்ந்து, அதற்கும் உண்மைத் தன்மையைத் தந்திருக்கும் பிரம்மத்தின் சர்வகர்த்தாத் தன்மையையும் உணர்ந்தால், அது பிரம்மஞானத்திற்கான வழி. எனவே 'உலகம் பொய்' என்கிற மாயாவாதத்தை மறுக்கிறார்.

பிரம்மத்தை அறியும் வழிமுறை ஜிஞாஸம். அதுவொரு தொடர்வழிமுறை. மேலும் மேலும் பிரம்மஞானத்தைத் தரக்கூடிய வழிமுறை. எப்படி ஞானத்தை ஜிஞாஸத்தோடு அடையாளம் காண்கிறோமோ, அப்படியே கர்மத்தையும் பக்தியையும்கூட ஜிஞாஸமாகவும், ஜிஞாஸத்தின் கூறுகளாகவுமே காணவேண்டும்.

ஞானமென்பது பிரம்மத்தை அறிகிற ஜிஞாஸம் மட்டுமே. கர்மம் என்பது ஜிஞாஸ வழியில் ஒரு பகுதி. பக்தியென்பது ஜிஞாஸ விழுப்பொருளான பிரம்மத்தை வழிபடுகின்ற செயல். எனவே, இவை மூன்றுமே ஜிஞாஸக் கூறுகள்தாம்.

ஸ்ரீ மத்வரின் கொள்கையின்படி, ஜிஞாஸம் மட்டுமேம 'தவம்' என்பதுமாகும்.

எந்தத் தத்துவமும் அனுபவத்திலிருந்து தொடங்க வேண்டும். தத்துவஞானி எதையும் சார்பற்ற கண்ணோடு காணவேண்டும்.

அனுபவத்தைப் பொய்யென்பதும், உலகின் உண்மையை மறுப்பதும், அதனை மித்யை (பொய்) எனச் சுட்டுவதும், மெய்ஞ்ஞானத்தினைச் 'சித்' என்றோ 'விஞ்ஞானா' என்றோ

கற்பனைத்தனமாகக் காட்டுவதும் தேவையற்றது. இவை யாவும் இறைவனின் உயர்வை ஒத்துக்கொள்ளாத தன்மையைக் காட்டுகின்றன. அதேபோன்று, உலகப் பொருட்கள் (லௌகீகம்) மட்டுமே உண்மை, அவையே வாழ்வின் எல்லை என்று காணும் தன்மையும் தவறானது. இதுவும் இறைமெய்ம்மையை நிராகரிக்கும் செயலே ஆகும்.

மேற்கூறிய தவறுகளுக்கும், இறை நிராகரிப்புகளுக்கும் 'பிராந்தி' என்பதே காரணம் என்கிறார் மத்வர். தத்துவத்தின்பால் வரும் யாரையும், பாரபட்சமற்ற அணுகுமுறையைக் கையாள வேண்டுகிறார்.

உலகப்பொருட்கள் யாவும் விபக்தமானவை (தனித்தனியானவை); அவை 'விகாரின்' ஆனவை (அதாவது மாறக்கூடியவை). ஒவ்வொன்றும் தனித்தனியானது. ஆனால், உலகில் நடைபெறும் எந்தவொரு மாற்றத்தாலும், எந்தப் பொருளினும் ஏதேனும் ஒரு மாற்றம் ஏற்படுகிறது. இது எல்லாவற்றுக்கும் பொதுவான குணாதிசயம்.

பிரமாணங்கள் நமக்குக் காட்டக்கூடியது இத்தகைய விபக்த - விகாரின் தன்மையையே யாகும்.

இதை வைத்து, உலகிலுள்ள அனைத்தையும் இருபெரும் பிரிவுகளாக்குகிறார்.

இந்திரியங்கள் (புலன்கள்), அர்த்தங்கள் (புலன்களின் அனுபவங்கள்), மனம், புத்தி, சுயம், அவ்யக்தம் - இவை ஒரு பிரிவு; இவை யாவும் அசேதனமானவை; இவற்றில் பின் சொல்லப்பட்டவை, முன் சொல்லப்பட்டவற்றைவிட உயர்ந்தவை.

முதல் பிரிவை இயங்க வைக்கும் அதிகார தேவதைகள் - இவை இரண்டாம் பிரிவுக்குரியவை; இவற்றுக்கு 'அபிமானி தேவதைகள்' என்று பெயர்.

சேதனம் - அசேதனம் - அபிமானினிகள் : இவற்றுக்கு இடையேயான உறவு என்ன?

சேதனம் என்பது ஞானம் கொண்டது. ஞானத்தை வைத்து மூன்று வகையாகச் சேதனங்களைப் பிரிக்கலாம்.

அ) முதல்வகைச் சேதனம் - எதற்கு ஞானம் ஏற்படுகிறதோ அது. ஒரு குறிப்பிட்ட சேதனத்திற்கு ஞானம் ஏற்பட்டுவிட்டது என்று எப்படி அறிவது? அதன் ஸ்வரூபத்தைக் கொண்டு அறியலாம். ஸ்வரூபம் என்ன

செய்யும்? ஞானத்தைப் பெறத் துடிக்கும்; அதையே பெரிதாக நினைக்கும்; ஞானத்தைத் தடுக்கும் வழிகளைத் தவிர்க்கும். இத்தகைய சேதனமானது, முக்தி பெறத் தகுதிபடைத்த முக்தி யோகியாகும்.

ஆ) இரண்டாவது வகைச் சேதனம் - முக்தி யோகிக்கு நேர்மாறான தன்மை கொண்டது; இதுவே தமோ யோகியாகும். இது அழிவுத்தன்மையானது.

இ) மூன்றாவது வகைச் சேதனம் - சந்தேகத்திலேயே உழலும் நித்ய ஸம்ஸாரி. இதற்கு மீண்டும் மீண்டும் பிறப்பும் இறப்பும் உண்டு.

திரும்பித் திரும்பிப் பிறந்து இறந்து பிறக்கும் சேதனம், காலப்போக்கில் தமோ யோகியாகி அழிந்துபடும.

மத்வரின் கணிப்புப்படி, முக்தியோக நிலைக்குப் போகக் கூடியதை மட்டுமே சேதனம் எனச் சொல்லமுடியும். இத்தகைய முக்தியோக சேதனத்தின் தத்துவமாகப் பிரம்மம் விளங்கும். பிரம்மம், தனது ஞானத்தையும் ஆனந்தத்தையும் சேர்க்கச் சேர்க்க, அந்தத் தனிச்சேதனம் மேலும் மேலும் ஜிஞாஸத்தையும் வைராக்கியத்தையும் அடைகிறது. இதன் விளைவாக, விஷ்ணு பக்தி, மேலும் மேலும் தூய்மையடைகிறது.

சேதனம், ஞானத்தைப் பெறவேண்டும் என்பதற்காகவே விஷ்ணு, அதனை ஒரு ஜீவனாகப் படைத்துள்ளார். அந்த ஜீவனுக்கு மனம், புத்தி, அகங்காரம், ஐந்த தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள் (கண், காது, செவி, நா, மேனி), ஐந்து கர்மேந்திரியங்கள் (பேச்சு, கைகள், கால்கள், கழிவு உறுப்பு, தோற்ற உறுப்பு) மற்றும் சித்தம் (என்னும் சேதனம்) ஆகிய பத்தொன்பதையும் தந்திருக்கிறார். இந்த ஜீவன் எப்படிச் செயல்படும்? அதற்கொரு கூடு வேண்டாமா? எனவே, பஞ்சபூதங்களாலான ஓர் உடலையும் தந்திருக்கிறார். இத்தகைய முழு உருவத்தையே ஒரு தனிச் சேதனம் (அல்லது சேதனன்) என்று குறிப்பிடுகிறோம்.

பஞ்சபூதங்களாலான வெளியுடல் (உடல் என்று சராசரியாக அடையாளம் காணப்படுவது), மேற்கூறியவற்றில் முதல் பதினெட்டையும் மட்டும் கொண்ட லிங்கவுடல், சித்தம் மட்டுமிருக்கும் ஸ்வரூபவுடல் என்று மூன்று வடிவங்களை வரையறுக்கிறார் மத்வர்.

வெளியுடல் பிறக்கிறது; இறக்கிறது. லிங்கவுடல் அடுத்த பிறவிக்கு வழிகோலுகிறது. ஸ்வரூபம், ஞானத்தை உணர்கிறது.

ஞானத்தை, முழுமையான பிரம்மஞானத்தை உணர்ந்து கொண்ட ஸ்வரூபத்தையுடைய சேதனன் முக்தியோகி யாகிறான். ஐந்து வகைகளில் முக்தியோகிகள் அமைகிறார்கள். தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள், பாக்கள் (ஆட்சியாளர்கள்) மற்றும் நரர்கள் ஆகியோர் இவ்வைவர். பிரம்ம ஜிஞாஸம் இல்லாதவர்கள், முக்தியோகிகளாக இருக்க முடியாது.

அசேதனம் என்பது ஞானமில்லாதது; ஞானத்தை உணராதது. அசேதனத்தை இரண்டாகப் பகுக்கலாம் - ஒன்று பாவம்; இன்னொன்று அபாவம். வேதங்கள், அண்டவெளி, காலம், பிரக்ருதி மற்றும் அதன் விளைவுகள் ஆகியவை ''பாவம்'' என்பவை ஆகும். ஒரு பொருள் தோன்றுவதற்கு முன்னிருக்கும் அது இல்லாத நிலை, அந்தப் பொருள் அழிந்தபின்னிருக்கும் அதன் இல்லாத நிலை, முயல்கொம்பு போல எப்போதுமே இருக்கும் அதன் இல்லாத நிலை ஆகியவற்றை ''அபாவம்'' எனலாம். சேதனம் எவ்வாறு விஷ்ணுவின் படைப்போ, அவ்வாறே அசேதனமும் விஷ்ணுவின் படைப்பாகும்.

சேதனம் மற்றும் அசேதனம் இரண்டுமே உண்மையானவை; ஏனெனில், அவற்றின் தத்துவம், விஷ்ணு என்னும் பிரம்மமே யாகும்.

ஒன்று பொய்ம்மையானதாக அமைந்துவிடுவதற்கும் ஹரியின் இச்சையே (ஹரிஸ்சா) காரணம். பொய்ம்மையானதன் பொய்ம்மைத் தன்மை, உண்மையானதுதானே!

உண்மையின் அளவுகளையும் தாரதம்மியத்தையும் நிர்ணயிப்பதும் விஷ்ணுவே!

அசேதனம் என்பது, சேதனம் அளவுக்கு உண்மையானதல்ல. காரணம், சேதனத்தில் இருக்கும் சித்தம், அசேதனத்தில் கிடையாது.

சேதனமோ, அசேதனமோ, அதன்மீது அதிகாரம் செலுத்தும் தேவதை உண்டு. அந்தத் தேவதையே, அபிமானி தேவதையாகும். எதனை அல்லது யாரை இந்த அபிமானி தேவதைகள் கண்காணிக்கிறார்களோ, அவற்றை அல்லது அவர்களைவிட, அபிமானி தேவதைகள் அதிக அளவுக்கு உண்மையானவர்கள்.

எல்லா முக்கியத் தன்மைகளின் அபிமானினியும் வாயுதேவன் ஆவார். சேதன-அசேதனங்களின் அபிமானினி லட்சுமிதேவி

யாவார். இடையில் பல அபிமானினிகள் உண்டு. வாயுவுக்கும் லட்சுமியே அபிமானினியாவார். அபிமானினிகளின் தாரதம்மியத்தை நிர்ணயிப்பவரும் விஷ்ணுவேயாவார்.

சரி. பிரம்மம் என்பது என்ன? தொடர்ந்து நடைபெறும் தேடலின் பயன், பிரம்மம்! இந்தத் தேடல் அல்லது விசாரணையின் பெயர் பிரம்ம ஜிஞாஸம் என்பதாகும். பிரம்ம ஜிஞாஸம், சுருதிகளின் பொருள் பிரம்மமே எனக் கண்டறிகிறது. இத்தகைய விசாரணைவழியாக, பிரம்மம் என்பதே படைப்பு, நிலைத்தன்மை, அழிவு, ஒழுங்கு, விதி, ஞானம், அஞ்ஞானம், கட்டு, பந்தம், விடுதலை ஆகிய யாவற்றின் முழுமுதல் தத்துவம் என்பதை உணரலாம். பிரம்மம் சுதந்திரமானது. பிறவெல்லாம் அதனிலிருந்து வரக்கூடியவையே யாகும். பிரம்மமே பிம்பமாகும் (பிம்பம் என்பது தோற்றுவாய்). பிரம்மத்தில் உருவாகக் கூடியவை யாவும் பிரதிபிம்ப மாகும். பிம்பமும் பிரதிபிம்பமும் வேறுவேறானவை. பிரதிபிம்பம் பொய்ம்மையன்று; ஏனெனில் அது பிம்பத்தின் செயல்பாடு. பிரம்மத்தின் மீதான பக்தி, மோட்சத்திற்கு அழைத்துச் செல்லும். பிரம்மம் அல்லது பிம்பத்தையே, சுருதிகள் ஆன்மா என்கின்றன. பிரம்மம், குணபூர்ணமானது; களங்கமில்லாதது (நிர்தோஷமானது); ஞேயமானது (ஞானத்தால் உணரப்படக் கூடியது); மற்றும் கம்யமானது (பெறப்படக் கூடியது).

உலகம் பிரதிபிம்பமே என உணர்வதும், அதன் பிம்பமான பிரம்மத்தை உணர்வதேயாகும். பிரம்மத்தின் பூர்ணத்தன்மையின் வெளிப்பாடே உலகம். பிரம்மம் ஆனந்தமயமானது. எனவே, உலகிலும் துன்பமோ வஞ்சமோ இல்லை. பிரம்மத்தின் படைப்பான எல்லாமே பிரம்மத்திற்கு அணுக்கமானவையேயாகும். எனவே, பிரம்மத்தையும், அதனைக் குறித்த உண்மைகளையும் உணர்வதே, ஆனந்தமானதாகும்.

சரி. எவ்வாறு மோட்சத்தை அடைவது? பக்தியின் மூலம் என்பதுகூடச் சரியில்லை. கர்மத்தின் மூலம் என்பதும் சரியில்லை. மத்வர் விளக்குகிறார். வெறும் பக்தி, ஞானமில்லாதது. கர்மம், சுயமாகச் செய்யாதவன் (பரதந்திரன்) மீது, ஏதோ அவனாகவே செயல்படுவது போன்ற தோற்றத்தை ஏற்றுகிறது. எனவே, கர்மமும் ஞானமில்லாதது. பிரம்மத்தை உணரும் வழி ஞானம் ஒன்றேயாகும். அந்த ஞானவழியே ஜிஞாஸம் என்றும் அழைக்கப்படலாம்.

ஞானம் (ஜிஞாஸம்) இல்லாத பக்தியோ தியானமோ வீணானது. எந்தவிதமான தீய எண்ணங்களும் இல்லாத மனத்திலேயே ஜிஞாஸம் ஏற்படும். இத்தகைய சலனமற்ற,

தீமையற்ற நிலையே 'வைராக்கியம்' என்கிறார் மத்வர். வைராக்கிய நிலை, அறிவு நிலையாகும். லட்சுமி உட்பட உலகின் எல்லாமே அநித்யமானவை, அசாரமானவை (சாரமற்றது) என உணர்வதே வைராக்கிய நிலையுமாகும். இந்த வைராக்கியம் என்ன செய்யும்? விஷ்ணுவிடம் பக்தியை ஏற்படுத்தும். இந்தப் பக்தி, அறிவின் வழிப்பட்ட பக்தி. இந்தப் பக்குவத்தை அடைந்தவர்களுக்கே, ஜிஞாஸம் கிட்டும். தானேயாக இத்தகைய பக்குவத்தை அடைந்தவிட முடியாது. அதுவும் விஷ்ணுவின் பிரசாதமேயாம்.

ஜிஞாஸத்தின் முறைகளாக ஸ்ரவணம் (புரிந்து கொள்ளுதல், உணருதல் அல்லது நினைத்தல்), மனனம் (மீண்டும் மீண்டும் எண்ணுதல்) மற்றும் நிதித்யாஸனம் (பயன்படுத்துதல்) ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

ஜிஞாஸத்தைத் தான் உணர்வதுமட்டுமே யென்றால், அதற்கு 'ஸ்வாத்யாயம்' என்று பெயர். அது சுய உணர்தலாகும். ஜிஞாஸத்தைப் பிறருக்கும் உணர்த்துவது பிரவசனம் அல்லது கற்றுக் கொடுத்தல் எனப்படும். ஸ்வாத்யாயத்தைக் காட்டிலும் பிரவசனம் உயர்வானது, விஷ்ணுவுக்குப் பிரியமானது.

ஜிஞாஸத்தின்வழி புரிந்துகொள்ளப்படும் உண்மை, முழுமையாக உணரப்படுகின்றது. அத்தகைய நிலை அபரோக்ஷம். இந்த நிலையே பிரம்ம - மீமாம்ஸத்தைக் கற்றுக் கொடுக்கும் சரியான நிலையும், ஜீவன் முக்தி நிலையுமாகும். இந்த நிலையில், எத்த்கைய புறக்கவர்ச்சியும் இல்லை. உலகின் புறக்கவர்ச்சிகளும் லௌகீகமும் பந்தங்களைத் தரும். பந்தம், தானே செயலாற்றுவதாக (கர்த்ருத்வம்) எண்ணிக்கொள்ளும். ஆனால், ஜீவன்முக்தி நிலையில், விஷ்ணுவே சர்வகர்த்தா என்பதும், தான் வெறும் பரதந்திரன் என்பதையும் ஜீவன் உணர்ந்துகொள்கிறது. இந்த நிலையில், விஷ்ணு சர்வோத்தமம் என்பது புரிந்துவிடுகிறது; மோகத்திலிருந்தும் சோகத்திலிருந்தும் விடுதலையும் கிட்டுகிறது.

ஜீவன்முக்த நிலையில், ஸ்வாத்யாயம் நிறைந்து, பிரவசனம் செய்யச் செய்ய, ஜீவன் மேலும் தூய்மையடைகிறது. தான் பரதந்திரன் என்பது மேலும் மேலும் நிச்சயப்படுகிறது. இதுவும் விஷ்ணுவின் அருள். இந்த அருள் மேன்மேலும் பெருகப்பெருக, ஜீவன் இறுதியில் முக்தனாகிறது.

முக்தி நிலையில், சித்தத்தினால், ஜீவன் விஷ்ணுவினுள் உறைகிறது. விஷ்ணுவுக்கு அழிவில்லை. எனவே, விஷ்ணுவுக்குள் ஐக்கியப்படும் ஜீவனுக்கும் அழிவில்லை. ஜீவன் விஷ்ணு

ஆனந்தமயமான குணத்தைச் சுவைக்கிறது. ஜீவன் ஆனந்தத்தோடு இணைகிறது. இந்தச் செயல்கள் யாவும் விஷ்ணுவின் அருளால் மட்டுமே நடைபெறக் கூடியவை.

மத்வருடைய தத்துவார்த்தக் கொள்கையைப் பிரம்ம மீமாம்ஸம் எனலாம். இதுவே பிரம்மவாதமு மாகும். பாரத கலாசாரத்திற்கு மத்வரின் பங்களிப்புகள் எனப் பட்டியல் போட்டால், கீழ்க்காண்பவற்றை வரிசைப்படுத்தலாம்.

1. தத்துவம் என்பது ஒருவகை ஆன்மிகக் கட்டுப்பாடு.
2. சுருதிகள், தத்துவார்த்தத்தின் வெளிப்பாடுகளே யாகும்.
3. பிரம்ம மீமாம்ஸமே, தத்துவச் சிந்தனையின் மிகவுயர்ந்த நிலையாகும்.
4. கர்த்ருத்வத்தை மேலேற்றிக்கொண்டு, தானே பெரிதாகச் செயலாற்றுவதாக எண்ணும் எண்ணமே, பந்தத்தினை அதிகமாக வளரச் செய்கிறது.
5. தான் பரதந்திரன் என்பதை உணர்தலே, ஜீவனின் சரியான நிலையாகும்.
6. உலகின் உண்மைத் தன்மையைச் சரியான விதத்தில் புரிந்துகொள்ளுதலே, மிக உயர் உண்மையான பிரம்மத்தைப் புரிந்துகொள்ளும் வழியாகும்.
7. மிகவுயர் உண்மையான பிரம்மம் குணபூர்ணமானது; நிர்தோஷமானது; நேயமானது; கம்யமானது; எல்லா ஞானத்தின் மூலமான குருவுமானது.
8. இந்த மிகவுயர் உண்லமையான பிரம்மத்தை நாராயணன் என அழைக்க வேண்டும்.
9. நாராயணனை உணர்வதே முக்கியம். பிரம்ம மீமாம்ஸம் என்னும் தத்துவ முறையின் மூலமே நாராயணனை உணர முடியும்.
10. நாராயணனை உணராமல், உலகத்தோடு போட்டுக் குழப்பிக்கொள்வது சோகத்திற்கும் மோகததிற்கும் வழிவகுக்கும்.

நாராயண பிரம்மத்தை உணர எடுக்கும் முயற்சியின் ஒவ்வொரு செயலும், உணர உணர ஆனந்தத்தையே தரும். பிரம்மத்தை உணர்ந்தவுடன், எல்லையற்ற ஆனந்தம் பெருகும். ஆனந்தத்தைக் கொடுக்கும் சிந்தாந்தத்தை நிலைநாட்டுவதாலேயே, மத்வர் 'ஆனந்ததீர்த்தர்' என்றழைக்கப்படுகிறார்.



# 8. மத்வ சம்பிரதாய மடங்கள்

அஷ்ட மடங்களைத் தவிர, ஸ்ரீமத்வ மதம் எனப்படும் த்வைத சிந்தாந்தத்தோடும், ஸ்ரீ மத்வாசார்யாரின் கொள்கைகளோடும் தொடர்புடைய மடங்கள் பலவுள்ளன. மூல மடங்கள், மூல மஹா ஸம்ஸ்தான மடங்கள் அல்லது ஆசார்ய பீட மடங்கள் என்று பலவிதமாக இவை அழைக்கப்படுகின்றன.

ஸ்ரீ மத்வ பரம்பரையின் தேசாஸ்த மடங்கள் என்று ஒரு மரபு உள்ளது. ஸ்ரீ மத்வரின் நேரடிச் சீடர்கள் நால்வர் இருந்தனர். பத்மநாபர், நரஹரி, மாதவர் மற்றும் அக்ஷோபயர்[1] ஆகியோர் இந்நால்வர். இவர்களிடத்தில் மத்வ மத சிந்தாந்தங்களை மக்களிடம் எடுத்துரைக்கும் பொறுப்பைக் கொடுத்து ஸ்ரீ மத்வர் அனுப்பினார். அவ்வாறு வெவ்வேறு திக்குகளுக்கும் சென்ற அவர்கள், காலப்போக்கில், சில புண்ணியத் தலங்களில் முகாமிட்டு, அங்கேயே தங்கி, மேலும் பல சீடர்களை உருவாக்கி வளர்த்து, நாளடைவில் மடங்களையும் ஸ்தாபித்தார்கள்.

இவ்வாறு உருவான மடங்களைப் பற்றிய தொடக்க கால வரலாற்றிலும் தகவல்களிலும் குழப்பங்கள் நிலவுகின்றன. பத்மநாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர், மாதவ தீர்த்தர் மற்றும் அக்ஷோபய

---

1. இந்த நால்வாதாம் பிரதான சீடர்களா என்பதில் பல முரண்பட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. 'உடுப்பி மரபை' முக்கியமாக ஏற்றுக் கொள்பவர்கள், இந்த நேரடிச் சீடர்கள் மரபை ஆதரிப்பதில்லை. மத்வ விஜயம், ஸ்ரீ மத்வர் நேரடியாகச் சீடர்களுக்குத் தீட்சை வழங்கினார் எனக் கூறுகிறது. ஆனால், உடுப்பியின் எட்டுச் சந்நியாசிகளின் பெயர்கள் மற்றும் பத்மநாப தீர்த்தரின் பெயர் மட்டுமே மத்வ விஜயத்தில் குறிப்பிடப்பெறுகின்றன. பிற்காலத்தில் வந்த ஜயதீர்த்தர் பத்மநாபரையும் அக்ஷோபயரையும் குறிப்பிட்டு வந்தனம் செய்கிறார். மத்வரைப் பற்றி ஆங்காங்கே பல குறிப்புகள் கிடைக்கின்றன. ஸ்ரீ கூர்ம ஆவணங்களைப் பின்பற்றினால் மத்வரின் நேரடிச் சீடர்களில் ஒருவர் நரஹரி தீர்த்தர் என்பதைப் பெற முடியும். பத்மநாபதீர்த்தரின் சீடர்களே மற்ற மூவரும் என்று சொல்லக்கூடியவர்களும், மத்வரின் சீடர் அக்ஷோபயர் என்று சொல்கிறவர்களும் உண்டு.

தீர்த்தர் ஆகியோர் ஸ்ரீ மத்வரின் ஆரம்பகால நேர் சீடர்கள் என்று பிற்கால ஆய்வாளர்களால் குறிப்பிடப்படுகின்றனர்.

## ஸ்ரீமத்வ பீடம் - மடத்ரயம்

கர்ண பரம்பரைச் செய்திகளாகவே வழங்கிவந்த தொடக்க காலத் தகவல்கள் பலவும் பதினைந்தாம் நூற்றாண்டுவாக்கில்தான் பதிவு செய்யப்பெற்றன. உத்தராதி மடத்தின் அதிபதிகளைப் பற்றிய நூல் 'குருசார்யம்' என்பது. பதினேழாம் நூற்றாண்டில் வெளிவந்த இந்த நூல், நான்கு நேரடிச் சீடர்களைப் பற்றிய தகவல்கள், ஸ்ரீ பாதராஜர் (கி.பி. 1460 - 86) காலத்திலும் ஸ்ரீ ரகுநாதர் தீர்த்தர் (கி.பி. 1444 - 1502) காலத்திலும்தான் சரியான முறைப்படி பதிவு செய்யப்பட்டதாகக் கூறுகிறது.

மத்வ விஜயத்தின்படி, ஸ்ரீ மத்வர் தம்முடைய வாழ்நாளின் பெரும்பகுதியை உடுப்பியிலேயே கழித்ததாகத் தெரிகிறது. தனியான பீடம் என்று வேறு எங்கும் அவர் நிறுவியதாகக் குறிப்பில்லை. உடுப்பியில்கூட, மத்வ பீடத்தில், மத்வருக்குப்பின் இவர், இவருக்குப்பின் இன்னொருவர் என்று பீடமேறியதைப் பற்றிய குறிப்புகள் இல்லை.

ஆனால், 'குருசார்யம்' பீடமேறியதைப் பற்றிய குறிப்புகளைத் தருகிறது. மத்வருக்குப் பின், இந்த நான்கு நேரடிச் சீடர்களும், ஒருவரைத் தொடர்ந்து மற்றவர் பீடமேறியதாகச் சொல்லப்படுகிறது. ஸ்ரீ மத்வர் தொடங்கி, வந்த ஆசார்ய பரம்பரையில் எந்தப் பீடாதிபதி எந்த ஆண்டில் பீடமேறினார் என்றும் எந்த ஆண்டில் சமாதியடைந்தார் என்பதும் குறிப்பிடப்படுகின்றன. மத்வரும், அவருக்குப் பின் நான்கு நேரடிச் சீடர்களும் பீடமேறிய மூலமடமானது, வித்யாதிராஜர் காலத்தில் ஒருமுறையும், இராமசந்திர தீர்த்தர் காலத்தில் ஒருமுறையும் கிளை பிரிந்த வரலாறும்கூடக் குருசார்யத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

இச்செய்திகள் யாவற்றையும் கொண்டு பார்க்கும்போது சில தகவல்களைத் தெரிந்துகொள்ளலாம்.

1) மத்வ பீடம் என்று அழைக்கப்படுகிற மூல மகா சமஸ்தான மடத்தின் பீடம் மத்வராலும், பத்மநாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர், மாதவ தீர்த்தர், அக்ஷோபய தீர்த்தர் ஆகியோராலும் வரிசைமுறையில் அலங்கரிக்கப் பெற்றுள்ளது.

2) அக்ஷோபய தீர்த்தருக்குப் பிறகு, ஜயதீர்த்தர் இதன் பீடம் ஏறியுள்ளார். மத்வக் கொள்கைகளைப் பல்வகையானும் வெளிக்கொணர்ந்த பெருமை ஜயதீர்த்தரையே சாரும்.

3) ஜயதீர்த்தரைத் தொடர்ந்து பீடமேறியவர் வித்யாதிராஜர். இவர் மிகக் குறைந்த காலமே ஆட்சிப் பொறுப்பில் இருந்ததாகத் தெரிகிறது.

4) வித்யாதிராஜர் (கி.பி. 1402 வாக்கில்) தமக்குப்பின் பீடமேறும் வாரீசாக இராஜேந்திர தீர்த்தருக்குத் தீட்சை கொடுத்துள்ளார். இராஜேந்திர தீர்த்தர் க்ஷேத்திர தரிசனம் சென்றிருந்த காலத்தில், உடல் நலம் குன்றிய வித்யாதிராஜர், இராஜேந்திரருக்குச் செய்தி அனுப்பியுள்ளார். இராஜேந்திரர் வருவதில் தாமதம் ஏற்பட்டுள்ளது. எனவே, பீடம் ஆட்சியாதிபதி இல்லாமல் இருக்கக்கூடாது என்பதனால், கவீந்திரருக்கும் தீட்சை வழங்கி, பீட வாரீசாக்கியுள்ளார்.

5) இதனால் இராஜேந்திர தீர்த்தரும் அவரின் சீடப் பரம்பரை என்று ஒருபுறமும், கவீந்திர தீர்த்தரும் அவரின் சீடப் பரம்பரை என்று இன்னொருபுறமும் கிளை பிரிந்துள்ளது.

6) கவீந்திரருக்குப் பின் வாகீச தீர்த்தரும், அவருக்குப் பின் இராமசந்திர தீர்த்தரும் பீடமேறினர். இராமசந்திர தீர்த்தர் காலத்திலும் (கி.பி. 1430 வாக்கில்) வித்யாதிராஜருக்கு ஏற்பட்டது போன்றதொரு நிலைமை ஏற்பட, மீண்டும் இரு கிளைகள், ஒரு கிளையை விபுதேந்திர தீர்த்தர் தொடர்ந்தார்; மற்றொரு கிளையை வித்யாநிதி தீர்த்தர் தொடர்ந்தார்.

7) இராஜேந்திர தீர்த்தர் பரம்பரையில் வந்த மடம், இன்று ஸோஸலே என்னும் இடத்தில் தலைமையகம் கொண்ட வியாசராஜர் மடமாகும்.

8) கவீந்திரர் வழியில் வந்து, விபுதேந்திரரால் தொடரப் பெற்ற மடம், இன்று இராகவேந்திர சுவாமி மடம் என்று வழங்கப்படுகிறது.

9) கவீந்திரர் வழியில் வந்து, வித்யாநிதியால் தொடரப்பெற்ற மடம், இன்று பிரபலமான உத்தராதி மடமாக விளங்குகிறது.

இன்று ஜயதீர்த்த பரம்பரை மாத்வ மடங்கள் வரிசையில், இந்த (7, 8, 9) மூன்று மடங்களுமே 'மட - த்ரயம்' என்று அழைக்கப்படும்

அளவுக்கு, உயர்நிலை வகிக்கின்றன. கர்நாடகம், மராட்டியம், ஆந்திரம் ஆகிய பிரதேசங்களில் மிகுந்த செல்வாக்குக் கொண்டு மக்களின் சமூக - பொருளாதார - சமய வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்பு கொண்டவையாக இவை மூன்றும் விளங்குகின்றன. கர்நாடகம் மற்றும் ஆந்திராவின் தெற்குப் பகுதிகளோடு அணுக்கம் கொண்டவை ஸோஸலே வியாசராஜர் மடமும், இராகவேந்திர சுவாமி மடமுமாகும். கர்நாடகத்தின் வடக்குப் பகுதிகளோடும், மராட்டிய மாநிலத்தோடும் அணுக்கம் கொண்டது உத்தராதி மடம்.

வியாசராஜ மடமும், இராகவேந்திர சுவாமி மடமும், அந்தந்த மடங்களின் மிகப் பிரபலமான பீடாதிபதிகளின் பெயர்களால் வழங்கப் பெறுகின்றன. உத்தராதி மடம் என்னும் பெயர் 'வடக்கு' என்னும் தொடர்பைச் சுட்டுகிறது. இராமசந்திர தீர்த்தர் காலத்தில் ஏற்பட்ட பிரிவைத் தொடர்ந்து, அப்போது தொடங்கி வித்யாநிதி தீர்த்தரால் தொடரப்பட்ட கிளையின் பீடாதிபதிகளாக, உத்தராதி கர்நாடகப் பிரிவு, தேசாஸ்தி அந்தணக் குடும்பங்களைச் சார்ந்தவர்களே இருந்துள்ளனர். இன்றுவரையிலும் இம்முறை தொடர்கிறது. அப்போதிலிருந்து இம்மடமும் உத்தராதி மடம் என்றழைக்கப்பெறுகிறது. இந்தப் பீடாதிபதிகளைப் பற்றிக் குறிப்பிடும் குருசார்யம், 'கர்நாடோத்தரம்', 'கர்நாடகோத்தரம்' என்று இந்த முறையைப்பற்றி வருணிக்கிறது[2].

இந்த மூன்று மடங்களுக்குள்ளும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, பதினைந்தாம் நூற்றாண்டுக் காலகட்டத்திலிருந்தே, உத்தராதி மடம் சற்றே அதிகமான செல்வாக்குப் பெற்றிருப்பதாகத் தோன்றுகிறது. மற்ற இரண்டு மடங்களும் தக்காணத்தின் தெற்குப் பகுதிகளோடு தொடர்பும் அணுக்கமும் கொண்டவை. அங்குப் புழக்கத்தில் இருந்த (இப்போதும் இருக்கும்) அத்வைத மற்றும் விசிஷ்டாத்வைத செல்வாக்கும் அவற்றின் ஆசார்யர்களும், த்வைத சிந்தாந்தம் பரவுவதற்குத் தடையாகவே இருந்துள்ளனர். பலத்த எதிர்ப்புகள்; நிறைய வாதப் பிரதிவாதங்கள். வடக்குக் கர்நாடகாவிலும் மராட்டியத்திலும் அத்தகையதொரு எதிர்ப்பு ஏதுமில்லாத காரணத்தால் உத்தராதி மடத்தின் பணி சிறப்பாகவே அமைந்துவிட்டது.

---

2. விஷ்ணுவின் பல திருநாமங்களில் ஒன்றான 'உத்தரோ கோபதிர்கோப்தா' என்பதோடு தொடர்புபடுத்தி, அதுதான் 'உத்தராதி' (விஷ்ணுவுடைய) என்னும் பெயர்க்காரணம் என்போர்களும் உண்டு.

இந்த வரலாற்றினால் ஏற்பட்டுவிட்ட இன்னொரு விளைவும் நினைவுகூரத் தக்கது. மத்வ சம்பிரதாயத்தின் மாத்வர்களில், கன்னடம், தெலுங்கு, மராட்டி, (ஏன், ஹிந்திகூட) மொழிகளைப் பேசுகிறவர்கள் உண்டு. ஆனால், தமிழ் பேசக்கூடிய (தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட) மாத்வர்கள் இல்லை.

### சீடர்கள் நிறுவிய மடங்கள்

சரி. ஸ்ரீ மத்வரின் நேரடிச் சீடர்கள் தனித்தனியான மடங்களையும் ஸ்தாபித்தார்கள் என்று பார்த்தோமே, அவை யாவை? என்னாயின? எப்படி?

தெற்குக் கர்நாடகப் பிரதேசத்தைத் தாண்டி, மத்வ மத சிந்தாந்தத்தைப் பரப்புவதற்காக இவர்கள் அனுப்பப்பட்டார்கள். அப்போது அவ்வப்பகுதிகளில், இவர்களும் சில மடங்களை நிறுவினார்கள்.

பத்மநாப தீர்த்தர், மாதவ தீர்த்தர், அக்ஷோபய தீர்த்தர் ஆகிய மூவரும் இவ்வாறு மடங்களை நிறுவியுள்ளார்கள். நரஹரி தீர்த்தர் மடமொன்றையும் நிறுவவில்லை. இந்த மூன்று மடங்களும் இன்றளவும் உள்ளன.

பத்மநாப தீர்த்தர் தொடங்கியது முலுபாகல் மடம்; மாதவ தீர்த்தர் தொடங்கியது மஜ்ஜிகேஹனள்ளி மடம்[3]; அக்ஷோபய தீர்த்தர் தொடங்கியது கூடலி மடம்.

வரலாற்று ரீதியாக ஸ்ரீ மத்வரோடு தொடர்புள்ளவையாகவும், அவரின் பிரதம சீடர்களால் தொடங்கப்பட்டவையாகவும், புண்ணிய திருத்தலங்களில் அமைந்தவையாக இவை இருப்பினும், பரவலான புகழையும் பிராபல்யத்தையும் இவை அடைந்ததாகத் தெரியவில்லை. அந்தந்தக் குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் இவற்றின் ஆதிக்கமும் செல்வாக்கும் அதிகம்.

வியாசராஜ மடத்தின் அதிபதியாக விளங்கிய வியாச தீர்த்தர் (பதினாறாம் நூற்றாண்டு), விஜயநகர மன்னர்களுக்கு அணுக்கமாகவும், அவர்களின் நிறைந்த மரியாதைக்குரியவராகவும் விளங்கினார். இராகவேந்திர ஸ்வாமி மடத்தின் விஜயீந்திரரும் அவருக்குப்பின் இராகவேந்திரரும், உத்தராதி மடத்தின் ரகோத்தமரும் நிறைந்த புகழுடையவர்களாகவும், இன்றளவும் பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றுபவர்களாகவும் விளங்குகிறார்கள். இதனால், மட-த்ரயத்தின் மூன்று மடங்கள் பிரபலமடைந்ததற்கொப்ப, மற்ற மூன்று மடங்களும் பிரபலமடையவில்லை.

---

3. இம்மடத்தின் தலைமையகம் கோலார் மாவட்டத்தின் தம்பேஹள்ளியில் உள்ளது.

### ஆதி மடம் - பண்டார்கர மடம்

ஸ்ரீ மத்வரின் குரு அச்யுதப்ரக்ஞர். அவர் பீடாதிபதியாக இருந்த மடத்தின் பீடாதிபதியாக ஸ்ரீ மத்வரும் பொறுப்பேற்றார் அல்லவா! அப்போது பெற்ற தீட்சாநாமம்தானே பூர்ணப்ரக்ஞர் என்பது! ஸ்ரீ கிருஷ்ண விக்ரகத்தை நிறுவி முழுக்க முழுக்கக் கிருஷ்ண மடத்தின் நீரோட்டத்திற்குள் மத்வர் வந்தபிறகு, அந்தப் பண்டார்கர மடத்தின் பீடாதிபதியாக ஸ்ரீ சத்யதீர்த்தர் (இவர்தான் மத்வரோடு வடதேச யாத்திரை போனவர்) பொறுப்பேற்றார். மத்வ மத மடமாகவே அப்போதிருந்து அது தொடர்ந்தது. இப்போது, மாத்வர்களின் ஆதி மடமாக இதுவே கருதப்படுகிறது. சத்ய தீர்த்தரிலிருந்து ஐந்து தலைமுறைப் பீடாதிபதிகளுக்குப் பின்னர்ப் பண்டார்கர மடம், இரண்டாகக் கிளை பிரிந்தது. பண்டார்கர மடம் என்று ஒரு கிளையும் பீமண்ணகட்டே மடம் என்று இன்னொரு கிளையும் தொடர்கின்றன.

### வேறு சில மத்வ மடங்கள்

இன்னும் சில மத்வ சம்பிரதாய மடங்களும் உள்ளன. கர்நாடகா மாநிலத்தின் ஸ்ரீ சுப்பிரமணியா என்ற ஊரில் ஸ்ரீ சுப்பிரமணிய மடம் உள்ளது.

புராதனப் பெருமைகள் கொண்ட ஸ்ரீ சுப்ரமண்யா திருத்தலத்திற்குத் தினமும் வந்துபோவார் மத்வர். பதரிகாஸ்ரமத்தில் வியாச பகவான் மத்வருக்குச் சாளக்ராமங்கள் கொடுத்தார். அந்தச் சாளக்ராமங்கள் நிறைந்த சம்புடத்தை ஸ்ரீ சுப்பிரமணியாவின் குமார தீர்த்தத்தில் வைத்துப் பூசித்தார் மத்வர். அதனால், அந்த நதியும் தீர்த்தமும் (தர்ப்பண நதியும், குமார தீர்த்தமும்) சம்புட தீர்த்தம் என்று பெயர் பெற்றன. அங்கு மத்வருக்கு நரசிம்ம சுவாமி விக்ரகமும் கிடைத்தது. நரசிம்ம விக்ரகத்தை அங்கேயே தர்ப்பண நதிக்கரையில் நிறுவி, வியாச சம்புடத்தைப் பூசையில் வைத்து, ஒரு மடத்தையும் ஏற்படுத்தினார் மத்வர். அந்த மடத்திற்கு அதிபதியாகத் தம் தம்பி ஸ்ரீ விஷ்ணு தீர்த்தரையே[4] நியமித்தார். அவருக்குப் பின்

4. ஸ்ரீ மத்வரின் தம்பியான விஷ்ணு தீர்த்தர், அர்ச்சுன ஸ்வரூபம் என்று நம்பப்படுகிறது. தம் பெற்றோரின் மறைவுக்குப் பிறகு, ஸ்ரீ மத்வரிடமிருந்தே சந்நியாசம் பெற்று விஷ்ணு தீர்த்தர், சுப்பிரமணிய மடத்தின் பொறுப்புகளை அநிருத்தரிடம் ஒப்படைத்துவிட்டு அருகாமையிலுள்ள குமார பர்வதத்திற்குத் தவம் செய்யப் போய்விட்டார். அவர் இன்னமும் அங்குத் தவம் செய்வதாகவும் கலியுகத்தின் இறுதியில் மீண்டும் த்வைதக் கொள்கைகளை நிலைநாட்டத் தோன்றுவார் என்றும் நம்பப்படுகிறது.

அநிருத்த தீர்த்தர் மடாதிபதி ஆனார். இந்த மடம் ஸ்ரீ சுப்பிரமணிய மடம் என்றும், சுவாமி வியாச சம்புட நரசிம்மர் என்றும் பெயர்கள் வழங்கப்பெறுகின்றன. இந்த மடத்தில்தான் மத்வரின் வியாச முஷ்டிகளில்[5] ஐந்து உள்ளன.

குந்தாப்பூர் வியாசராஜர் மடம் என்றும் ஒரு மத்வ மடம் உள்ளது. பெங்களூருக்கு அருகிலுள்ள சன்னப்பட்டணா என்னும் ஊரில் உள்ளது இம்மடம். இராஜேந்திர தீர்த்தர் வழியாக வந்து கொண்டிருந்த மடம் ஸோஸலேயில் உள்ளது. இம்மடத்தின் பீடாதிபதியாக (இராஜேந்திரரிலிருந்து நான்காவதாக) இருந்தவர் ஸ்ரீ பிரும்மண்ய தீர்த்தர். அவர் பெயராலேயே ஸோஸலே மடம், இன்றளவும் வியாசராஜ மடம் என்று வழங்கப்பெறுகிறது. ஸ்ரீ பிரும்மண்ய தீர்த்தர் அர்பூரில் நீண்ட நாட்கள் தங்கியிருந்து அங்கேயே மறைந்துவிட்டார். அர்பூரில் அவரின் சீடராயிருந்த ஸ்ரீதர தீர்த்தர், அருகிலுள்ள சன்னப்பட்டணாவில் ஒரு மடத்தை நிறுவினார். இந்த மடத்திற்குத் தென்கர்நாடகாவின் குந்தாப்பூர்ப் பகுதியில் நிறைய மானியங்கள் உள்ளன. சன்னப்பட்டணா மடத்தின் மூலவர் விக்ரகம், நர்த்தன கோபாலகிருஷ்ணன். முலுபாகலில் வியாசராஜரின் பக்தியைக் கண்டு நடனமாடினார் விக்ரக வடிவிலிருந்த கோபாலகிருஷ்ணன். அந்த நர்த்தன கோபாலகிருஷ்ணனை, வியாசராஜர், தம் குருவான பிரம்மண்ய தீர்த்தரிடம் கொடுக்க, அவர் ஸ்ரீதர தீர்த்தரிடம் கொடுக்க, இப்போது சன்னப்பட்டணாவில் அவரே மூல தெய்வம். வியாசராஜரின் கோபாலகிருஷ்ணன் என்பதால், இம்மடம் குந்தாப்பூர் வியாசராஜ மடம் என்று வழங்கப்பெறுகிறது.

ஸ்ரீ அக்ஷோபய தீர்த்தரின் வழியில் வந்த கூடலி[6] மடம், கூடலி ஸ்ரீ அக்ஷோபய தீர்த்தர் மடம் என்றழைக்கப்படுகிறது. கூடலியிலிருந்து ஏறத்தாழ முப்பது மைல் தொலைவில், துங்கா நதிக்கரையில் உள்ள பாலகாரு என்னுமிடத்திலும் ஒரு ஸ்ரீ அக்ஷோபய தீர்த்தர் மடம் உள்ளது. தீர்த்தஹள்ளி தாலுகா பாலகாருவில் உள்ள இம்மடம், கூடலியிலிருந்து கிளை பிரிந்தது.

5. பதரிகாஸ்ரமத்தில் வியாசரை மத்வர் சந்தித்து ஆசி பெற்றபோது ஈர மணலை எடுத்துக் கையில் பிடித்துத் தந்தாராம் வியாசர். அவரின் முஷ்டியமைப்பில் உள்ளவை அவை. வியாசரின் விரல்கள் பதிந்த சுவடுகள் அவற்றில் உள்ளன. மொத்தம் இப்படி எட்டு முஷ்டிகளை மத்வர் பெற்றார். ஐந்து சுப்பிரமணிய மடத்திலும், ஒன்று சோதே மடத்திலும், ஒன்று சோசலை வியாசராஜ மடத்திலும், மற்றொன்று மத்யதாள மடத்திலும் உள்ளன.

6. துங்கா நதியும் பத்ரா நதியும் கூடும் இடத்தில் உள்ள நரசிம்ம க்ஷேத்திரம்.

ரகுபுங்கவ தீர்த்தர் கூடலியின் பீடாதிபதியாக இருந்த காலத்தில் கிளை பிரிந்த பாலகாரு மடம், புண்யகீர்த்தி தீர்த்தரால் தொடரப் பெற்றுள்ளது.

### மத்வ சம்பிரதாய மடங்களின் பட்டியல்

**பகுதி 1 : ஆதிமடம் - பண்டாரகர (பந்தாரக்கரை மடம்)**

ஸ்ரீ மத்வரின் ஆசார்யரான ஸ்ரீ அச்யுதப்ரக்ஞ தீர்த்தர் பீடாதிபதியாக இருந்து, மத்வரும் ஆனந்த தீர்த்தர் என்ற பெயரில் பீடமேறிய மடம். தலைமையகம் - உடுப்பி. இதிலிருந்து கிளை பிரிந்தது பீமண்ணகட்ட மடம். தலைமையகம் - பீமண்ணகட்டம். (தீர்த்தஹள்ளிக்கு அருகில் உள்ளது)

**பகுதி 2 : ஸ்ரீ மத்வ பீட மூல மடம்**

'மடத்ரயம்' என்னும் மூன்று மடங்கள். இவை மூன்றும், மத்வராலும், அவரின் சீடர்கள் நால்வராலும் அலங்கரிக்கப்பட்டு, பின் ஜயதீர்த்தர் வழிவந்து கிளை பிரிந்தவை. மத்வ மத இலக்கியங்களின் வளர்ச்சியில் இம்மடங்களின் பங்கு அளவிடற்கரியது.

1. ஸ்ரீ வியாசராஜ மடம். தலைமையகம் - ஸோஸலே.
2. ஸ்ரீ ராகவேந்திர சுவாமி மடம். தலைமையகம் - நஞ்சன்கூடு.
3. ஸ்ரீ உத்தராதி மடம். தலைமையகம் - ஹாஸ்பெட்

**பகுதி 3 : ஸ்ரீ மத்வரின் மூன்று சீடர்களால் தொடங்கப்பெற்ற மடங்கள்**

1. ஸ்ரீ பத்மநாப தீர்த்தர் தொடங்கியது - இப்போது ஸ்ரீ பாதராஜர் மடம் என்றழைக்கப்படுகிற முலுபாகல் மடம். தலைமையகம் - கோலார் மாவட்ட முலுபாகல்.
2. ஸ்ரீ மாதவ தீர்த்தர் தொடங்கியது - மஜ்ஜிகேஹனள்ளி மடம். தலைமையகம் - கோலார் மாவட்டத்தில் உள்ள முட்டூர் அஞ்சல் தம்பேஹள்ளி.
3. ஸ்ரீ அக்ஷோபய தீர்த்தர் தொடங்கியது - கூடலி மடம். தலைமையகம் - கூடலி. (இதிலிருந்து கிளை பிரிந்தது பாலகாரு மடம். ஷிமோகா அருகிலுள்ள தீர்த்தஹள்ளியிலிருந்து சுமார் ஐந்து மைல்களில் உள்ளது பாலகாரு).

## பகுதி 4 : உடுப்பியின் அஷ்ட மடங்கள்

1. பாலிமார் மடம்
2. அத்மார் மடம்
3. கிருஷ்ணாபுர மடம்
4. புத்திகே மடம்
5. சிரூர் மடம்
6. சோதே மடம் - இதுவே ஸ்ரீ வாதிராஜ மடம் என்றழைக்கப்படுகிறது.
7. கணியூர் மடம்
8. பேஜாவர் மடம்

## பகுதி 5 : பிற மத்வ மடங்கள்

1. குந்தாப்பூர் ஸ்ரீ வியாசராஜர் மடம். தலைமையகம் - சன்னப்பட்டணா.
2. ஸ்ரீ சுப்பிரமணியா மடம். தலைமையகம் - ஸ்ரீ சுப்பிரமணியா.



# 9. மத்வ சம்பிரதாயமும் சீடர்களும்

ஸ்ரீ மத்வரின் சீடர்களும், மத்வ சம்பிரதாயத்தைப் பின்பற்றுபவர்களும் 'மாத்வர்கள்' என்றழைக்கப் பெறுகிறார்கள்.

மத்வ சம்பிரதாயத்திற்குப் பணியாற்றியவர்கள் ஏராளம். பக்தியை முதன்மைப்படுத்திய மத்வ சம்பிரதாயத்தால், கர்நாடக - மராட்டிய பிரதேசங்களில் ஏற்பட்ட சமய - ஆன்மிக மறுமலர்ச்சி மகத்தானது. மத்வ சம்பிரதாய ஆசார்யர்கள் பலர், ஆன்மிக இலக்கிய வளர்ச்சிக்கும் பெரும்பணி ஆற்றியுள்ளார்கள்.

### ஸ்ரீ மத்வரின் நேரடிச் சீடர்கள்

### 1. பத்மநாப தீர்த்தர் (காலம் 1318 - 24)

கோதாவரி தீரத்திலிருந்து வந்தவர் இவர். (உத்தர - கர்நாடக வகுப்பைச் சார்ந்தவராக இருந்திருக்கலாம்). தமது முதல் வடபாரத யாத்திரையை முடித்துக்கொண்டுத் திரும்பி வருகிற வழியில், கோதாவரிப் பகுதிகளில் மிகப் பெரும் அறிஞராக விளங்கிய வேத விற்பன்னர் சோபன பட்டரைச் சந்தித்தார் மத்வர். மிகச் சிறந்த தர்க்கவாதியாகத் திகழ்ந்த சோபனர் (தார்க்கிக சிகாமணி என்னும் பட்டம் பெற்றவர்), மத்வரோடு வாதிட்டார்[1]. நிறைவில் மத்வக் கொள்கைக்கு மாறிய சோபன பட்டர், பத்மநாப தீர்த்தர் என்னும் தீட்சாநாமத்தோடு சந்நியாசியானார். மத்வ விஜயம் இவரின் அறிவுமுதிர்ச்சியையும், மத்வரிடம் கொண்ட ஆணித்தரமான அன்பையும் பெருமளவும் பாராட்டுகிறது. துளு நாட்டை

---

1. இந்நிகழ்வு கி.பி. 265ம் ஆண்டுவாக்கில் நடைபெற்றிருக்க வேண்டும். பதினான்கு துறைகளில் புகழ் கொண்டு விளங்கிய சோபனரைப் பதினான்கே நொடிகளில் மத்வர் வாயடைக்கச் செய்தார் என்று இது விவரிக்கப்படுகிறது. ஆனந்தபட்டாரகர் என்றும் இவருக்கு ஒரு பெயர் இருந்ததாகத் தெரிகிறது.

அல்லாமல், வேறு பகுதியிலிருந்து வந்த முதல் பிரதம சீடர் என்பதாலேயே மத்வருக்குப் பின் மத்வ பீடத்தை அலங்கரிக்கும் பெருமை இவருக்குக் கிடைத்தது. ஏழாண்டுகளுக்குப் பீடாதிபதியாக இருந்த இவர், ஹம்பிக்கு அருகிலுள்ள (துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்த) நவபிருந்தாவனத்தில் சமாதியடைந்தார்.

த்வைத மத இலக்கியத்திற்கு இவரின் பங்கு அளப்பரியது. சொல்லப்போனால், த்வைத மத இலக்கியத்தின் முதன்மை வியாக்யானகர்த்தா இவரே எனலாம். ஜயதீர்த்தர், இவரின் பணிகளை வாயாரப் புகழ்கிறார். மத்வரின் தசப் பிரகரணங்களுக்கும், பிரம்மசூத்ர பாஷ்யத்திற்கும், கீதா பாஷ்யத்திற்கும் விரிவான விளக்கங்கள் தந்துள்ளார் பத்மநாப தீர்த்தர். நியாய ரத்னாவளி, ஸந்யாய ரத்னாவளி, ஸத்தர்கதிபாவளி, கீதாபாஷ்ய பாவதீபிகா என்பவையே இவரின் நூல்கள்.

## 2. நரஹரி தீர்த்தர் (1324 - 33)

மத்வரின் இரண்டாவது பிரதம சீடராகக் கருதப்படுகிற நரஹரி தீர்த்தர் ஆந்திரம் அல்லது ஒரிசாப் பகுதியைச் சேர்ந்தவராக இருந்திருக்க வேண்டும். ஸ்ரீகூர்ம ஆவணங்கள், அவர் மத்வரின் நேரடிச் சீடர் எனத் தெரிவிக்கின்றன. கலிங்க நாட்டில் (இப்போதைய ஒரிசா) இவர் அமைச்சராக இருந்ததாகத் தெரிகிறது. இவரின் பூர்வாசிரமப் பெயர் சுவாமி சாஸ்திரி என்பதாகும். 'ஸ்ரீபாதா' என்னும் தீட்சா நாமத்தோடு இவர் மத்வரின் அருள் பெற்றதாகத் தெரிகிறது. மத்வர் கேட்டதற்கிணங்க, கலிங்க நாட்டு அரசு பொக்கிஷத்தில் இருந்த மூலராம மற்றும் சீதாபிராட்டி விக்ரகங்களை, நரஹரி தீர்த்தரே அங்கிருந்து பெற்றுவந்தார். இவருடைய தந்தையும் கலிங்க நாட்டு அரசில் பெரும் பொறுப்பு வகித்துள்ளார். கலிங்கம் மற்றும் ஆந்திர தேசத்தில் பல குடும்பங்களை (குறிப்பாக அரச குடும்பங்களை) மத்வக் கொள்கைக்குள் கொண்டுவந்த பெருமை இவரையே சாரும்.

பத்மநாப தீர்த்தருக்குப் பின் மத்வ பீடம் ஏறிய இவரின் பிருந்தாவனம் ஹம்பி நகருக்கு அருகிலுள்ள சக்கரதீர்த்தில் உள்ளது.

'நரஹரியதி ஸ்தோத்திரம்' என்னும் சிறுநூல் இவரைப் பற்றிய சுவையான கதையொன்றைச் சொல்கிறது. மத்வர் என்னும் ஆனந்ததீர்த்தரின் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு மூலராம-சீதா விக்கிரகங்களைப் பெறக் கலிங்கம் சென்றார் நரஹரி. இவர் சென்ற சமயம், கலிங்க அரசர் மரணமடைந்திருந்தார். இளவரசன் குழந்தை என்பதால், ராஜ யானையின் தும்பிக்கையில் மலர் மாலையைக்

கொடுத்து அனுப்பினர் அமைச்சர்கள். மாலையோடு வந்த பட்டத்து யானை, நரஹரியின் கழுத்தில் அதனைச் சூட்டி அரசனாக்கியது. இளவரசனுக்குப் பன்னிரண்டு வயதாகும்வரை ராஜ்யப் பிரதிநிதியாக நாட்டையாண்ட நரஹரி, இளவரசனை அரசனாக்கி மீளும்போது, மூலராம-சீதா விக்கிரகங்களையும் அரசனின் நன்றிக் கடனாகப் பெற்றுவந்தார். நரஹரி தீர்த்தர், தனியாக மடமொன்றையும் நிறுவிக் குரு பரம்பரையைத் தோற்றுவிக்கவில்லை யெனினும், மத்வ மதத்தில் முதன்முதலில் பக்திப் பாடல்களை இயற்றியவர் இவர்தான். இவரிலிருந்துதான் தாஸகூட்ட முறைமை தொடங்கியது என்றே சொல்லலாம்.

பதினைந்து நூல்களை நரஹரி தீர்த்தர் செய்ததாகச் சொல்லப்பட்டாலும், 'பாவபிரகாசிகா' மற்றும் 'யமக பாரதம்' ஆகியவைமட்டுமே இப்போது கிடைத்துள்ளன. சங்கர மற்றும் பாஸ்கர பாஷ்யங்களை எதிர்க்கும் நரஹரி, இராமாநுஜரைப் பெயர் குறிப்பிட்டுச் சாடுகிறார்.

### 3. மாதவ தீர்த்தர் (1333 - 50)

விஷ்ணு சாஸ்திரி என்னும் பூர்வாசிரமப் பெயரைக் கொண்ட இவர், தென் கர்நாடகப் பகுதியைச் சேர்ந்தவர். இவரைப் பற்றிய செய்திகள் அவ்வளவாகக் கிடைக்கவில்லை. மத்வ பீடத்தைப் பதினேழு ஆண்டுகள் அலங்கரித்த இவர், மஜ்ஜிகேஹனள்ளி மடத்தைத் (முலுபாகலுக்கு அருகே) தோற்றுவித்தார். ஹம்பியில் இவர் சமாதியடைந்திருந்தாலும், இவரின் ஜீவஸமாதி இப்போது பீஜப்பூர் மாவட்ட மணூரிலிருப்பதாகக் கருதப்படுகிறது.

### 4. அட்சோபய தீர்த்தர் (1350 - 1365)

உத்தராதி கர்நாடகப் பிரிவைச் சார்ந்தவரான இவரின் பூர்வாசிரமப் பெயர், கோவிந்த சாஸ்திரி என்பதாகும். மத்வரின் நேர் சீடர்களில் நான்காவது இடத்தை அலங்கரித்த இவர், பதினைந்து ஆண்டுகள் மத்வ பீடத்தில் அருளாட்சி நடத்தியவர். இவர் நூல்கள் எழுதியதாகத் தெரியவில்லை. ஆனால், த்வைத மதக் கொள்கைகளை நிலைநிறுத்துவதில் மிகப் பெரிய விற்பன்னராகத் திகழ்ந்தார்.

விஜயநகர சாம்ராஜ்யத்தை நிறுவுவதில் பெரும்பங்காற்றிய அத்வைதப் பேரறிஞர் வித்யாரண்யரும்[2], விசிஷ்டாத்வைத

2 வித்யாரண்யர் காலம் கி.பி 1302 - 87

பண்டிதரும் ஆசார்யருமான வேதாந்த தேசிகரும்[3] இவரின் சமகாலத்தவர்கள்.

அத்வைத அறிஞர் வித்யாரண்யருக்கும், த்வைத அறிஞர் அட்சோபய தீர்த்தருக்கும் நடைபெற்ற விவாதம், வரலாற்றில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது. முலுபாகலில் (கோலாரிலிருந்து பத்து மைலில் உள்ளது) இவ்விவாதம் நடைபெற்றது. 'தத்துவமஸி' என்னும் மகாவாக்கியம் குறித்து இவ்விவாதம் நடைபெற்றது. நாற்பது நாட்கள் நடைபெற்ற இவ்விவாதத்திற்கு நடுவராக இருந்து தீர்ப்புக் கூறியவர் வேதாந்த தேசிகர்.

வேதாந்த தேசிகர் எழுதிய தீர்ப்பென்று ஒரு ஸ்லோகம் பரவலாக வழங்கப்படுகிறது.

''அஸினா தத்வமஸினா பரஜீவ ப்ரபேதினா
வித்யாரண்ய மகாரண்யம் அக்ஷோபயமுனிர்அச்சினத்''

என்கிறது இந்தச் சுலோகம். தத்துவமஸி என்னும் வாளைக் கொண்டு, பரமாத்மா ஜீவாத்மா என்ற இரண்டையும் தனியாகப் பிரித்து, வித்யாரண்யர் என்னும் பெரிய காட்டை அட்சோபய முனிவர் வெட்டி வீழ்த்திவிட்டார் என்பது இதன் பொருள். முலுபாகலுக்கு அருகிலுள்ள அஞ்சுக்கல் மலையில் ஒரு வெற்றித்தூணை அட்சோபயர் நிறுவினார். அதன் அடியில் இந்தச் சுலோகம் உள்ளது. (இப்போது தூணும் எழுத்துக்களும் மிகவும் சிதைவுற்றுள்ளன)[4].

முலுபாகல் ஸ்ரீ மத்வாசார்யர் சஞ்சாரம் செய்து, ஒருமுறை சாதுர் மாஸ்ய விரதமும் மேற்கொண்ட இடம். தமது ஆதிகுருவின் கால்கள் பட்ட திருத்தலத்தில் வந்து தங்கிய அட்சோபயர், தமது வாதத்திறமையால் த்வைத மதக் கொள்கைகளைப் பரவிடச் செய்ய வேண்டுமென இறைவனைத் தியானித்தார்.

முலுபாகலில் நரசிம்ம தீர்த்தம் உள்ளது. அந்த நரசிம்ம தீர்த்தக்கரையில் தங்கியிருந்த அட்சோபயர், அருகிலிருந்த கல்

3. வேதாந்த தேசிகர் காலம் கி.பி. 1268 - 1388

4. வித்யாரண்யரைப் பற்றிய ஆய்வாளர்கள் சிலர், இந்நிகழ்வு குறித்துக் கேள்விக் கணைகள் தொடுக்கிறார்கள். அட்சோபயருக்கும் வித்யாரண்யருக்கும் இடையில் நடந்த விவாதம் உண்மை, ஆனால், வேதாந்த தேசிகர் நேரடியாக முலுபாகலுக்கு வரவில்லை, இரு மகான்களும் தங்கள் தரப்பு வாதங்களை அவருக்கு எழுதியனுப்பினார்கள் என்றும், அவர் தமது தீர்ப்பை எழுதியனுப்பினாரென்றும் சிலர் கருதுகிறார்கள்.

பாறையொன்றில், கரிக்கட்டி ஒன்று கொண்டு நரசிம்மர் திருவுருவம் ஒன்றைத் தீட்டி, தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். எட்டு நாட்கள் தியானம் தொடர்ந்தது. எட்டு நாட்கள் கழித்துத் தியானத்திலிருந்து அட்சோபயர் எழுந்து பார்த்தபோது, வெறும் கோடுகளால் தீட்டப்பெற்றிருந்த நரசிம்மர் ஓவியம், கைதேர்ந்த சிற்பியின் கலைவண்ணத்தினும் உயர்ந்ததாக முழுமையான சிற்பமாக மாறியிருந்தது. பாறையில் காட்சி கொடுத்த யோக நரசிம்மரைக் கண்டு ஆனந்தக் கூத்தாடினார் அட்சோபயர். அதன் பின்னரே, வித்யாரண்யருடனான விவாதம் நடைபெற்றது.

விவாதத்தில் வெற்றிகண்ட பின்னர் அட்சோபயர், வடக்குக் கர்நாடகாவில் உள்ள பண்டரிபுரம் போன்ற ஊர்களுக்கு யாத்திரை சென்றார். அந்தப் பகுதிகளில்தான், பீமரதி நதிக்கரையில் அவர், தம்முடைய வருங்காலச் சீடர் ஜயதீர்த்தரைச் சந்தித்ததாகத் தெரிகிறது. ஜயதீர்த்தருக்குத் தீட்சை வழங்கியபின், அவரையும் அழைத்துக் கொண்டு, காகினி நதிக்கரையில் உள்ள மான்யகோட்டா பகுதிகளுக்குச் சென்றுள்ளார். அங்குத் த்வைத சம்பிரதாயத்தின் நுட்பங்களையெல்லாம் ஜயதீர்த்தருக்கு உபதேசித்தபின் சமாதியடைந்தார் அட்சோபயர். மால்கேட்[5] என்றிப்போது அழைக்கப்படுகிற மான்யகேட்டாவில் உள்ளது அட்சோபயரின் சமாதி.

## தொடக்க காலப் பணிகள்

ஸ்ரீ மத்வரின் நேர் சீடர்களாக விளங்கினாலும், இந்த தொடக்கக் காலச் சீடர்களின் பணி, மிகுந்த சிரமங்களுக்குட்பட்டதேயாகும்.

மத்வரின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் புதிய படைப்புகள் என்றே சொல்லிவிடலாம். அவரின் சுய சிந்தனையின் விளைவாகவே பல கோட்பாடுகளை அவர் உரைத்தார். த்வைதக் கொள்கைகளை அவருக்கு முன்னால் உபதேசித்தவர்கள் யாருமில்லை. இந்நிலையில், பிற கொள்கைகளின் சீடர்களையும் எதிர்கொள்ள வேண்டி வந்தது. பல்வேறு கிரந்தங்களிலிருந்து மத்வர் தமக்கான ஆதாரங்களை எடுத்தாலும், அவை ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல், துண்டுதுண்டாக, வெட்டுப்பட்டுக் கிடந்தவையேயாகும். எனவே, அவற்றைத் தொடர்புபடுத்தும் பணியும் நடைபெற வேண்டியிருந்தது.

---

5. மான்யகேட்டா, ராஷ்டிரகூட அரசர்களின் பிரபல தலைநகரமாகத் திகழ்ந்தது.

சம்பிரதாயத்தின் ஒவ்வொரு தத்துவக் கொள்கையின் அடிப்படையும், அமைப்பும் அவரே உருவாக்கியது என்றிடலாம். மத்வ சம்பிரதாயக் கட்டிடத்தின் வடிவமைப்புக் கலைஞரும் அவரே; வடிவமைப்புக்கேற்ப அதனைச் செங்கல்லெடுத்துச் சுவரெடுத்து, மண் பிரித்துக் கட்ட வேண்டியவரும் அவரே! இதனால், கட்டிடத்தின் நுணுக்க அலங்காரங்களை அவரால் செய்ய முடியாமல் போனது.

ஸ்ரீ மத்வரின் முப்பத்தேழு நூல்களையும், குறிப்பாக, பிரம்மசூத்திர பாஷ்யம், உபநிடத விளக்கங்கள் ஆகியவற்றையும் காண்கையில் இது தெளிவாகத் தெரியும். மத்வரின் எழுத்துக்களிலும் வாதங்களிலும், அதிகாரத் தொனி இருக்கும்; வாத வீச்சு இருக்கும்; வேகம் இருக்கும். ஒரு புதிய செய்தியைப் பலரும் ஒத்துக்கொள்ளும்படி சொல்லுங்கால் இவை தேவை. ஆனால், விவாத நயமோ நுட்பங்களோ முழுமையான அழகான வெளிப்பாடோ இருக்கா. பல விளக்கங்கள், இங்கேயும் அங்கேயுமாகத் தொடர்பில்லாமல், துண்டுதுண்டாக வேறு காணப்பெறும். பல செய்திகளைச் சொல்ல வேண்டிய ஆதங்கத்தில், சில இடங்களில் மிகமிகச் சுருக்கமாகவே அமைந்துவிடுகின்றன அவரின் விளக்கங்கள்.

எங்கெல்லாம் த்வைதக் கொள்கையின் சாயல் தெரிகிறதோ, அங்கெல்லாம் விளக்கம் கூறும் வேகத்தில், இடையில் சில இடங்கள் விட்டுப்போகின்றன. எனவே, ஏதோ கோடுகள் போட்டது போல் தோன்றுகின்றனவேயன்றி, முழுமையான ஓவியம் தீட்டியதுபோல் தோன்றவேயில்லை.

மத்வரின் வாதங்கள் துணிவாக எழுகின்றன. ஆனால், அவற்றில் நுட்பமும் நுணுக்கமும் காணப்படுவதில்லை. அதேபோல், கொள்கைகளையும் கோட்பாடுகளையும் முன்மொழியும்போது முறையான மொழிவும் இல்லை.

முதன்முறையாகவும் புதியதாகவும் ஒரு சிந்தாந்தத்தை உரைக்கும்போது ஏற்படக்கூடிய சிக்கல்களே இவை.

மத்வ சித்தாந்தத்தைப் பரவச் செய்கையிலும் மேற்கூறிய சிக்கல்கள் தொடர்ந்தன. எனவே, மத்வரின் நேர் சீடர்கள் பல எதிர்ப்புகளைச் சந்திக்கவேண்டி யிருந்தது.

துளு நாட்டிலும் சுற்றுவட்டாரப் பகுதிகளிலும் மடங்களை நிறுவுவதிலும், சமய ஆன்மிகச் செய்திகளைப் பரப்பும்

மையங்களை நிர்மாணிப்பதிலும், மக்களைச் சந்தித்துத் தகவல்களைத் தருவதிலும் மத்வ சீடர்கள் ஈடுபட்டார்கள். இவர்கள் தமிழகம், கர்நாடகம், ஆந்திரம், மராட்டியம் ஆகிய பகுதிகளில் பல சுற்றுப்பயணங்கள் மேற்கொண்டார்கள். இந்தப் பயணங்களின் விளைவாக ஆயிரக்கணக்கானோரை மத்வ சிந்தாந்தத்திற்குள் கொண்டுவர முடிந்தது.

நேர் சீடர்களைத் தொடர்ந்து உடனடியாக வந்த மற்றச் சீடர்களில் சிலர், அவ்வப்பகுதிகளில் அரசியல் மற்றும் அரசாங்க செல்வாக்குப் படைத்தவர்களாகவும் அமைந்தது பெருமளவில் மத்வ சிந்தாந்தம் பரவ உதவியது.

வித்யாரண்யருக்கும் அட்சோபயருக்கும் நடைபெற்ற வாதப்போட்டியும், அதில் அட்சோபயர் பெற்ற வெற்றியும், மத்வ சிந்தாந்த வரலாற்றில் ஒரு பெரிய திருப்புமுனையாகவும் அமைந்தது. 'பூர்ணப்ரக்ஞ தர்சனம்'' என்ன என்பதைத் தத்துவ அறிஞர்களும் சமய ஞானிகளும் உன்னிப்பாகக் கவனிக்க இந்நிகழ்வு உதவியது.

நேர் சீடர்களின் பணிகளின் பயனாக, நாடு முழுவதிலும் (முக்கியமாகத் தக்காணம்) ஆங்காங்கே, மத்வ சிந்தாந்த வழிமுறையாளர்கள், சிறுசிறு குழுக்களில் தோன்றினார்கள். இந்தக் குழுக்களிலிருந்து மக்கள், தொடர்ந்து இந்தச் சித்தாந்தத்தில் ஈடுபடுவதற்கும், தங்களுக்குள் ஒருவகை இன ஒற்றுமையை ஏற்படுத்திக் கொள்வதற்கும், மத்வ மடங்கள் உதவின.

மிகப் பெரிய அளவில் த்வைதத் தழுவலையும், த்வைதத்திற்கான சாஸ்திரிய வேதாந்த அங்கீகாரத்தையும் நேர் சீடர்களால் பெற முடியவில்லை யாயினும், அவர்களின் காலகட்டமே த்வைத சிந்தாந்தத்தின் விதையூன்று காலம் என்றால், மிகையாகாது. அவர்களிட்ட வித்தில்தான் பிற்காலச் செழுமை அடங்கியிருந்தது.



6. மத்வ சித்தாந்தத்திற்கு மாதவ தீர்த்தர் வைக்கும் பெயர் இது.

# 10. மத்வ சம்பிரதாயத்தில் ஜயதீர்த்தர்

மத்வ சம்பிரதாய ஆசார்யர்களில் தன்னிகரில்லாத் தாரகையாக விளங்கக்கூடியவர் ஜயதீர்த்தர். மத்வருக்குப் பின், மத்வ சம்பிரதாயம் பரவுவதற்குப் பெரிதும் வழி செய்தவர் என்றே இவரைக் குறிப்பிடலாம். நூற்றாண்டுகளாக அத்வைதமும், விசிஷ்டாத்வைதமும் பெற்றிருந்த சாஸ்திரீய அங்கீகாரத்தை, இருபத்தைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே த்வைத சிந்தாந்தத்திற்குப் பெற்றுக்கொடுத்த பெருமை இவரையே சாரும்.

பண்டரிபுரத்திற்கு அருகிலுள்ள மங்களவேதே[1] என்னும் ஊரில், தேஷ்பாண்டே என்னும் அரசியல் செல்வாக்கு மிக்க தனவந்தர் ஒருவர் இருந்தார். அவரின் செல்ல மகன் தோண்டோ பந்த் ரகுநாத் ஆவான். செல்வப் பிள்ளையாய், வீர இளைஞனாய், விளையாட்டு வீரனாய், குதிரையேற்றப் பிரியனாய், திறமைசாலியாய் வளர்ந்துவந்தான் ரகுநாத்.

இருபது வயது ரகுநாத் ஒருநாள் குதிரைச் சவாரி செய்து கொண்டு போனான். கோடைக் காலம். தண்ணீர்த் தாகம். தாகத்தைத் தணித்துக்கொள்வதற்காகச் சந்திரபாகா[2] நதிக்கரைக்குச் சென்றான். குதிரையிலிருந்து இறங்கி, அந்த வீர இளைஞன் நீர் அருந்துவதைக் கவனித்தார், எதிர்க்கரையிலிருந்த ஒரு துறவி.

எதிர்க்கரையிலிருந்த துறவி வேறு யாருமல்ல; அட்சோபய தீர்த்தர்தான்.

---

1. ஜயதீர்த்தரின் ஊர் இதுவன்று; குல்பர்காவுக்கு அருகிலுள்ள மால்கேட் என்னும் மான்யகேடா என்பாரும் உண்டு.
2. மங்களவேதே பண்டரிபுரம் என்றால் சந்திரபாகா நதி. மால்கேட் என்றால் காகினி நதி. குருசார்யம் என்னும் நூல், காகினி நதி என்றே வலியுறுத்துகிறது.

குதிரை வீரனைத் தம் அருகாமையில் அழைத்த அட்சோபயர், அவனிடம் சில கேள்விக்கணைகளைத் தொடுத்தார். அந்த இளைஞனிடம் ஏதோவொரு மாறுதல் ஏற்பட்டது. அதற்குப்பின் அவன் பழைய ரகுநாத் இல்லை.

மகனின் மனமாற்றத்தைப்பற்றிக் கேட்ட தந்தையின் கோபத்திற்கு அளவேயில்லை. ஆத்திரத்தோடு வந்த தந்தை, மகனை அழைத்துக்கொண்டு போய்விட்டார். ஆனால், சில நாட்கள்கூடத் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அட்சோபயரிடம் திரும்பி வந்த ரகுநாத், தன்னைச் சீடனாக்கிக் கொள்ளும்படி வேண்டினான்.

விரைவிலேயே ஜயதீர்த்தர் என்னும் தீட்சா நாமத்துடன் துறவியானார் ரகுநாதர்.

அட்சோபய தீர்த்தருக்குப்பின் மத்வ பீடம் ஏறினார் ஜயதீர்த்தர்.

மத்வரும், அவருடைய உடனடிச் சீடர்களும், மத்வ சிந்தாந்தத்தைத் துளுவ நாட்டிலும் தென் கர்நாடக - ஆந்திரப் பகுதிகளிலும் பரவச் செய்ய முடிந்தது. மக்களின் ஆதரவு கிட்டினாலும், தத்துவ ஆராய்ச்சியாளர்களும் பண்டிதர்களும் முழுமையாக ஒத்துக்கொண்டார்க ளில்லை. ஜயதீர்த்தரே, மத்வ சித்தாந்தத்திற்கான முழுமையான அங்கீகாரத்தைப் பெற்றுக் கொடுத்தவர்.

சமஸ்கிருத தத்துவ இலக்கியத்தில், மொழி நடை, நயம், சொற்செட்டு, கற்பனை வளம், ஆய்வு அணுகுமுறை என்று பல கோணங்களிலும், ஜயதீர்த்தருக்கு நிகராக நிற்கக் கூடியவர் ஜயதீர்த்தர் மட்டுமே! ஜயதீர்த்தரின் பல நூல்கள், வியாக்கியானங்கள் என்றே வர்ணிக்கப்படுகின்றன. வியாக்கியானம் என்று கூறப்பட்டாலும், அவை தரமிக்கத் தத்துவக் காவியங்களாக விளங்குகின்றன. ''டீகாசார்யா'' என்றே மரியாதையுடன் ஜயதீர்த்தர் விளிக்கப்படுகிறார்.

பிற்காலத்தில் வந்த பல மத்வ சம்பிரதாய ஆசார்யர்கள், ஜயதீர்த்தரின் நூல்களுக்கு விளக்கங்களும் வியாக்கியானங்களும் எழுதும் அளவுக்கு, அவரின் உழைப்பும் பணியும், த்வைத இலக்கியவுலகிற்கு இணையற்ற பங்களிப்பாகத் திகழ்கின்றன. ஜயதீர்த்தருக்குப் பின்னால் வந்தவர்கள், ஜயதீர்த்தரையே முதன்மைப்படுத்தினார்கள் என்பது ஒருபக்கம்; அவருக்கு

முன்னால் வாழ்ந்த பத்மநாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர் மற்றும் திரிவிக்கிரம பண்டிதர் போன்றோருடைய நூல்களெல்லாம், ஜயதீர்த்தருக்கு முன்னால் மங்கிப்போயின.

இருபத்திரண்டு நூல்களை யாத்துக் கொடுத்துள்ளார் ஜயதீர்த்தர். தத்துவ சாங்கியான டீகா, விஷ்ணு தத்துவ நிர்ணய டீகா, பிரமாணலக்ஷண டீகா, கதாலக்ஷண டீகா, நியாய விவரண டீகா, உபநிஷதபாஷ்ய டீகா என்பவை அவரின் வியாக்கியான நூல்களுள் சில. இவை தவிர, ஜயதீர்த்தரின் தனிநூல்களும் பெருமைக்குரியவை. வாதாவளி மற்றும் பிரமாண பத்ததி ஆகிய நூல்கள் த்வைத சிந்தாந்தத்தை விவரமாகக் கையாள்கின்றன.

ஒவ்வொரு மனிதனும் தினமும் வழிபட வேண்டிய முறை பற்றிய பத்யமாலா, அறியாமல் செய்துவிடக் கூடிய பாவங்களுக்கு மன்னிப்புக் கோரும் விதத்தில் அமைந்த ஸதாபராத ஸ்தோத்திரம், பக்தி முறைகள்பற்றியதான அத்யாத்ம தரங்கிணி ஆகியவை எளிமையானவை; ஆயின் ஆழமானவை.

மத்வரின் அநுவாக்கியானத்தின் மீதான ஜயதீர்த்தரின் விளக்க நூல் 'நியாயசுதா' என்பதாகும். அதேசமயம் அதனையொரு முதல்தரமான சமயக் காவியம் என்றும் சொல்லலாம். ''பதவாக்யார்த்த விவ்ருதி'' என்று முதலில் இந்நூலுக்குப் பெயர் இருந்திருப்பினும், ஒரு பாடலில் காணப்படும் 'நிய்யாயசுதா' என்னும் சொல்தொடரே, அதன் பரவலான பெயராக அமைந்துவிட்டது.

பிற்காலத்தில் (மற்றும் தற்காலத்திய) த்வைத அறிஞர்களால் 'சுதா' என்றே வழங்கப்பெறும் இந்நூல் மிகப் பிரபலமானது; மரியாதையோடு நோக்கப்பெறும் நூலாகும் இது! விளக்கமெழுதுவது எப்படி இருக்க வேண்டும், அமைய வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாகவும் வடமொழி உலகில் இந்நூல் காட்டப்பெறுகிறது.

ஜயதீர்த்தரின் தாக்கம் மத்வ மடங்களின் பணிகளிலும் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். அஷ்ட மடங்களின் வழி வகையிலோ, நேர் சீடர்கள் மூவர் நிறுவிய மடங்களின் வழி வகையிலோ இல்லாத ஒரு பெருமை 'மட - த்ரய' மடங்களுக்கு உண்டு.



# 11. மத்வ சம்பிரதாயத்தின் சில ஆசார்யர்கள்

## வித்யாதிராஜ தீர்த்தர் (1388 - 1402)

ஜயதீர்த்தருக்கு அடுத்து உடனடியாகப் பீடம் ஏறியவர் வித்யாதிராஜர். கிருஷ்ணபட்டர் அல்லது நரசிம்ம சாஸ்திரி என்னும் பூர்வாசிரமப் பெயர் கொண்ட இவர் பீடத்தில் நான்காண்டுகளே வீற்றிருந்தார் என்று கூறப்படுகிறது. ஆனால், சில கிரந்தங்களில், வெகு காலத்துக்குப் பின்னரே இவர் தம் முதல் சீடரான இராஜேந்திரருக்குத் தீட்சை அளித்தார் என்னும் குறிப்பு வருவதிலிருந்து, இவருடைய பீடாதிபதி ஆட்சிக்காலம் அதிகமாக இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

மூல சமஸ்தான மடத்தின் குருபரம்பரை வித்யாதிராஜர் காலத்திலேயே கிளை பிரிந்தது.

மால்கேட்டுக்கு அருகிலுள்ள எர்கோலாவில் வித்யாதிராஜரின் சமாதியுள்ளது.

## பிரும்மண்ய தீர்த்தர் (1460 - 1475)

இராஜேந்திர தீர்த்தரிலிருந்து வந்த குருபரம்பரையில் மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்த பிரும்மண்ய தீர்த்தர், அற்புதங்கள் பல செய்த மகான்.

சூரியனின் அம்சமாகக் கருதப்பெறும் இவரே ஸ்ரீ வியாசராஜ தீர்த்தரின் ஆசிரம குருவாவார்.

கர்நாடக மாநிலத்திலுள்ள சன்னப்பட்டணா என்னும் ஊரில் (அல்லது அதன் மிக அருகாமையிலுள்ள அப்பூர் என்னும் ஊரில்) இவர் வாழ்ந்துவந்தார். பிரும்மண்ய தீர்த்தரின் ஆசிரம குரு புருஷோத்தம தீர்த்தர். அப்பூருக்கு அருகிலுள்ள புருஷோத்தம மலையிலுள்ள (இது பின்னர் ஏற்பட்ட பெயர்) குகையொன்றில்

தவம் செய்யச் சென்ற புருஷோத்தம தீர்த்தர் அங்கேயே எங்கோ மறைந்துவிட்டார். அதன்பின்னர், மத்வ பீடம் ஏறிய பிரும்மண்ய தீர்த்தர், இதே குகையில் தாமும் தவமிருந்தார்.

அப்பூருக்கு அருகில் 'கண்வா' நதி ஓடுகிறது. அதன்மீது அணைகட்டி, கண்வா அணைக்கட்டு உருவாகியுள்ளது. கண்வா அணைக்கட்டைக் கட்டுவதற்காக, முதலில் சர். விஸ்வேஸ்வரய்யா திட்டம் போட்டபடி கட்டியிருந்தால், அப்பூரிலுள்ள பிரும்மண்ய தீர்த்தரின் சமாதியும் பிருந்தாவனமும் மூழ்கிப் போயிருந்திருக்கும். விஸ்வேஸ்வரய்யாவின் கனவில் பிரும்மண்ய தீர்த்தர் தோன்றி மாற்றுத் திட்டம் போட்டுக்கொடுத்ததாகவும், அதன்படியே, இப்போதுள்ள அணைக்கட்டு கட்டப் பெற்றுள்ளதாகவும் செய்திகள் வழங்குகின்றன. அதேபோல், அணைக்கட்டுக் கட்டுமானப் பணியில் ஈடுபட்டிருந்த ஒருவருக்கு ஒளிவடிவில் காட்சி கொடுத்த பிரும்மண்யர், அவரின் மரணம் பற்றி முன்னெச்சரிக்கை செய்து, அதேபடி நடந்ததாகவும் நம்பப்படுகிறது.

பிரும்மண்ய தீர்த்தரின் கருணையால்தான் வியாசராஜரின் பெற்றோருக்குக் குழந்தைச் செல்வம் கிட்டியது.

மத்வ சம்பிரதாயத்தில் நெகிழ்ச்சியூட்டும் ஒரு வரலாறு இது. பன்னூர் என்று ஒரு சிற்றூர். அவ்வூரில் இராமாசார்யர் என்னும் பெரியார் ஒருவர். மிக்க இறை பக்தியும் ஆன்மிக உணர்வும் கொண்ட அவருக்குப் பிள்ளைகள் இல்லை. உடல் நலமிழந்து, உபாதையுற்று, நரை கூடிக் கிழப்பருவமும் எய்தி, மரணத் தருவாயில் இருந்தார் அவர். அவருடைய மனைவி சரஸ்வதிபாயும் மனமுடைந்து போனாள். கணவன் மரித்தவுடன் தானும் உடன்கட்டை ஏறுவதாகத் தீர்மானித்துக்கொண்டாள்.

அது சமயம் பன்னூரில் முகாமிட்டிருந்தார் பிரும்மண்ய தீர்த்தர். அவரைத் தரிசிக்கச் சென்ற சரஸ்வதி தன் தீர்மானத்தை அவரிடம் தெரிவித்தாள்[1].

புன்னகைத்துக் கொண்ட பிரும்மண்யர் சரஸ்வதியைப் பார்த்து ''தீர்க்க சுமங்கலி பவ'', என்று ஆசீர்வதித்தார். ''உனக்குச் சந்தான பாக்கியமும் உண்டாகக் கடவது'', என்று மேலும் அவர்

1. இராமாசார்யார் இறந்து போனார் என்றும் வறுமையில் வாடிய சரஸ்வதியிடம் ஈமக்கடன்கள் நிறைவேற்றவும் பணமில்லையாதலால் அவள் சென்று பிரும்மண்யரிடம் முறையிட்டாள் என்றும் இந்நிகழ்ச்சி மாற்று வடிவில் வழங்கப்படுகிறது.

அருள்மொழிந்ததைக் கேட்டுத் தயங்கி நின்ற அவளிடம் மீண்டும் புன்னகைத்துக் கொண்டே நிபந்தனை விதித்தார். "உனக்குப் பிறக்கும் குழந்தை பகலில் வீட்டுக்கு வெளியே பிறந்தால் என்னிடம் கொடுத்துவிட வேண்டும்", என்றார்.

ஆசார்யர் சொன்ன பிறகு ஆட்சேபம் ஏது? மகிழ்ச்சிக் கீற்றுகளுடன் வீடு திரும்பிய சரஸ்வதி, கணவரின் உடல்நலம் தேறுவதைக் கண்டு புளகாங்கிதம் அடைந்தாள்.

பன்னூரிலிருந்து புறப்பட்டுச் சஞ்சாரம் சென்ற பிரும்மண்ய தீர்த்தர் மீண்டும் பன்னூருக்கே வந்து சேர்ந்தார். அதற்குள் ஓராண்டு ஓடியிருந்தது. சரஸ்வதிபாயும் நிறைமாத கர்ப்பிணியாக இருந்தாள்.

அன்று மதிய வேளை. இராமாசாரியருக்கு இலை போட்டு உணவு பரிமாறத் தொடங்கினாள் சரஸ்வதி.

திடீரென்று எருமை மாடு ஒன்று இராமாசார்யார் வீட்டுத் தோட்டத்துக்குள் புகுந்து வாழை மரங்களை ருசி பார்க்கத் தொடங்கியது.

பிரம்மண்யர் செய்த லீலா விநோதமது! அதேசமயம், பணியாள் ஒருவனிடம் தங்கத் தாம்பாளம் ஒன்றைத் தந்து இராமாசாரியாரின் வீட்டுக்கு அனுப்பினார் ஆசார்யர்.

பணியாள் வீட்டுக்குள் நுழைந்த சமயம், எருமை மாட்டைப் பார்த்துவிட்டு, "அம்மா! மாடு" என்று கத்தினான். மாட்டை விரட்டத் தோட்டத்துக்குச் சென்ற சரஸ்வதிக்குத் திடீரென்று கணநேரத்தில் பேற்றுவலி கண்டது. வீட்டுக்குள் திரும்ப ஒரு அடிகூட அவளால் எடுக்க முடியவில்லை. பணியாளும் தங்கத் தாம்பாளத்தை அவளிடம் தந்துவிட்டு மறைவாய்ப் போய்விட்டான்.

தங்கத் தாம்பாளத்தில தன் மகவை ஈன்றாள் சரஸ்வதிபாய்!

பட்டப்பகல். வீட்டுக்கு வெளியே. தோட்டம். புளியமரத்தடி. தங்கத் தாம்பாளத்தில் பிறந்த அந்தப் பிள்ளையை நிபந்தனைப்படி பிரும்மண்யரிடம் கொடுத்தனர் பெற்றோர்.

அந்தக் குழந்தைக்கு 'யதிராஜர்' என்று பெயரிட்டு, தம்மோடு கொண்டுபோய் அப்பூரிலுள்ள புருஷோத்தமக் குகையில் வளர்த்தாராம் பிரும்மண்யர். தாய்ப்பாலுக்குப் பதில் தேனும், அபிஷேக நீரும் அருந்தி வளர்ந்த அக்குழந்தையே த்வைத ஸம்பிரதாயத்தின் பிரபல ஆசார்யரான வியாசராஜர் ஆவார்.

பிரும்மண்யருக்குப் பின் மத்வ பீடத்தை அலங்கரித்தவர் வியாசராஜர். அப்பூரிலேயே, பிரும்மண்யரின் இன்னொரு சீடரான ஸ்ரீதர தீர்த்தர் தொடர்ந்த மடமே குந்தாப்பூர் மடம் (அல்லது அப்பூர் அல்லது சன்னப்பட்டணா மடம்).

## வியாசராஜர் (1476 - 1539)

வியாசராஜர், வியாச தீர்த்தர், வியாச ராயர், வியாச சுவாமி என்றெல்லாம் பலவாறாக அழைக்கப்படும் இவரே, ஜயதீர்த்தருக்கு அடுத்தபடியாக மிகுந்த புகழிடத்தைப் பெற்றவர். விஜயநகரப் பேரரசில் இவருக்கு இருந்த செல்வாக்கு ஈடு இணையற்றது.

வியாசராஜரின் வாழ்க்கையைப்பற்றிய செய்திகள் சோமநாத கவியின் வியாச யோகி சரிதத்திலும், புரந்தரதாசரின் சில பாடல்களிலும் காணக் கிடைக்கின்றன. (பிரும்மண்ய தீர்த்தரின் அருளால் வியாசராஜர் அவதரித்தார் என்பதில் எவ்வித மாற்றமுமில்லை. ஆனால், வேறு சில தகவல்கள் சற்றே மாறுகின்றன)

கி.பி. *1460*ம் ஆண்டுவாக்கில், கஸாஸலேக்கு ஆறு மைல்கள் வடக்காக உள்ள பன்னூரில் வியாசராஜர் தோன்றினார். இவரின் பூர்வாசிரமப் பெயர் யதிராஜர் என்பதாகும்.

பிரும்மண்ணியர், வியாசராஜரின் தந்தைக்கு ஆளனுப்பித் தமக்குக் கொடுத்த வாக்கின்படி அவர்கள் மகனை அனுப்பச் சொல்லிக் கேட்டார். உடனே, தம் மகனை அழைத்துக் கொண்டு ஆசார்யரிடம் சென்றார் அந்தத் தந்தை[2].

ஐந்து வயதில் எழுத்துக்களைப் பயிலத் தொடங்கி, ஏழு வயதில் உபநயனம் கண்ட யதிராஜர், நான்கு ஆண்டுகள் குருகுலவாசம் செய்தார். (அதற்குப் பின்னரே பிரும்மண்ணியர்

---

2. ஸோஸலே வியாசராஜர் மடத்தில் வழங்கப்பெறும் குறிப்புகளிலிருந்து, சோமநாத கவியின் குறிப்புகள் சற்றே மாறுபடுகின்றன. மாற்றங்கள் கீழ்வருமாறு :
   1) வியாசராஜரின் தந்தையார் பெயர் பல்லண்ண சுமதி.
   2) அவரின் தந்தையார் (அதாவது வியாசராஜரின் தாத்தா) இராமாசார்.
   3) பல்லண்ண சுமதியின் இரண்டாவது மனைவி அக்கம்மா. அவரே வியாசராஜரின் தாய்.
   4) பல்லண்ண சுமதிக்கு மூன்று குழந்தைகள் பிறந்தார்கள் - ஒரு மகளும், இரு மகன்களும்.
   5) இரண்டாவது மகனே யதிராஜர்
   6) இரண்டாவது மகனையே தமக்குத் தரும்படி பிரும்மண்யர் கேட்டிருந்தார்.

இரண்டாவது மகனை அனுப்பித் தரும்படி தந்தையிடம் கேட்டார் என்கிறது இவ்வரலாறு).

பிரும்மண்ணியரிடம் வளர்கையில், அவரின் மனத்திலிருந்த எண்ணங்களைப் புரிந்துகொண்டு, அதன்படி நடக்கச் சம்மதமில்லாமல், சுதந்திரத்தை நோக்கிச் சென்றார் யதிராஜர். நெடுந்தூரம் நடந்தார். களைப்புற்று ஒரு மரத்தடியில் கண்ணயர்ந்தார்.

உறங்கும் யதிராஜரின் உள்மனத்தில் வந்து வேணுகானம் இசைத்தான் வேணுகோபாலன். ஆசார்யர் வழியில் கடமையாற்றும்படி கட்டளையிட்டான். தப்பிப் போக நினைத்தவர், மெல்ல நடந்து ஆசிரமம் அடைந்தார்.

இது நடந்து வெகு விரைவிலேயே, பிரும்மண்ணிய தீர்த்தர், யதிராஜருக்கு வியாசராஜர் என்னும் தீட்சாநாமம் தந்து துறவற அநுமதி வழங்கினார். இதன் பின்னரும் சில நாட்களை குருவுடன் கழித்தார் வியாசராஜர்.

அதற்குள்ளாக, பிரும்மண்ணியர் சமாதியடைந்தார்.

பிரம்மண்ணியருக்குப் பின் பீடமேறிய வியாசராஜர் சாஸ்திரியக் கல்வியின் விளைநிலமாக விளங்கிய காஞ்சீபுரத்திற்குச் சென்று, தர்க்க தர்சனங்களின் அனைத்துப் பிரிவுகளிலும் புலமை பெற்றார். காஞ்சீபுரத்திலிருந்து முலுபாகல் அடைந்தார் வியாசராஜர்.

அந்நாளில் முலுபாகல், மிகப்பெரும் கல்வி மையமாக விளங்கியது. முலுபாகல் பல்கலைக் கழகம் என்றே வழங்கப்பெற்றது. அப்பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக விளங்கிய ஸ்ரீபாதராஜரிடமும் கல்வி பயின்றார் வியாசராஜர்[3].

ஸ்ரீ பாதராஜர், வியாசராஜரைச் சந்திரகிரியை ஆண்ட சாளுவ நரசிம்ம மன்னனிடம் அனுப்பிவைத்தார். (சாளுவ நரசிம்ம மன்னனின் கிரகதோஷத்தை நீக்கி அருள் வழங்கியவர் ஸ்ரீ பாதராஜர்) வியாசராஜரை வெகு விமரிசையாக வரவேற்றான் மன்னன்.

---

3. வியாசராஜரை, பிரும்மண்ய தீர்த்தர்தாம் காஞ்சீபுரத்திற்கு அனுப்பி வைத்தார் என்றும், பின்னர் அவரே ஸ்ரீ பாதராஜரிடமும் அனுப்பிவைத்தார் என்றும் சில குறிப்புகள் உள்ளன. காஞ்சிபுரம் சென்று திரும்பியதும் பிரும்மண்யரைச் சந்தித்தார் என்றும் குறிப்புகள் உள்ளன. ஆனால், சோமநாத கவியின் வியாசயோகி சரிதம் இவ்வாறு கூறவில்லை. பிரும்மண்யரின் மறைவுக்குப் பின்னரே இவை யாவும் நடைபெற்றிருக்க வேண்டும் என்பதே நவீன ஆராய்ச்சியாளர்கள் கருத்தாகும்.

சாளுவ மன்னனின் அவையில், பற்பல பண்டிதர்களைச் சந்தித்து, விவாதித்து, தமது த்வைத சிந்தாந்தத்தை நிலைநாட்டினார் வியாசராஜர். இதே காலகட்டத்தில்தான் திருப்பதி திருமலையில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்குச் சேவையும் செய்தார். அவ்வப்போது, தென்னிந்தியாவின் பல பகுதிகளில் சுற்றுப்பயணமும் செய்துள்ளார்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கும் மேலாகச் சந்திரகிரியிலேயே தங்கினார் வியாசராஜர். சாளுவ நரசிம்மனின் மகனான சாளுவ இம்மதி நரசிம்மனுக்கு விஜயநகர அரசர் தம்மராயருடன் ஒப்பந்தம் ஏற்பட்ட போது, விஜய நகரப் பேரரசின் ஆன்மிக ஆலோசகராகவும் தெய்வீகக் காப்பாளராகவும் பெருமை செய்யப்பட்டார். இம்மதி நரசனின் இடையறாத வேண்டுகோளுக்கிணங்க விஜயநகரத் தலைநகராம் ஹம்பிக்கு வருகை புரிந்தவர், பின்னர் அங்கேயே தமது நிரந்தர வசிப்பிடத்தை அமைத்துக்கொண்டார்.

ஹம்பியிலும் வாதப்பிரதிவாதங்கள் தொடர்ந்தன. கலிங்க நாட்டின் பசவபட்டர் தலைமையில் பல பண்டிதர்கள், தாங்கள் அதுவரை பெற்றிருந்த விருதுகளையும் பட்டயங்களையும் விஜயநகர அரண்மனைத் தூண்களில் தொங்கவிட்டுப் பணயமாக்கி வாதுக்கு வந்தனர். ஏறத்தாழ முப்பது நாட்கள் தொடர்ந்த வாதங்களில் வியாசராஜர் வெற்றிவாகை சூடினார் என்று சொல்லவும் வேண்டுமோ?

வாதத்தின்போது பசவபட்டர் தமது சிவலிங்கத்தையும் வியாசராஜர் தமது மூல கோபாலகிருஷ்ணனையும் பந்தயம் வைத்தார்களாம். தத்துவ விவாதத்தில் தோற்றுப்போன பட்டர் தமது சிவலிங்கத்தை வியாசராஜருக்குப் பரிசளித்துவிட்டாராம்.

ஸ்ரீ வியாசராஜ மடத்தில் (ஸோஸலே) இன்றும் அந்த ஸ்படிக சிவலிங்கம் பூசையில் உள்ளது. சிவராத்திரி தினத்தில் ஸ்ரீமடத்துப் பீடாதிபதியே ஸ்ரீருத்ரம் சமகம் சொல்லி, பாலபிஷேகம் செய்து, பூசையும் செய்கிறார்.

இம்மதி நரசிம்மனின் காலத்திலேயே, விஜயநகரப் பேரரசின் பல்வேறு பகுதிகளிலும், மொத்தம் 732 ஆஞ்சநேய விக்கிரகங்களை நிறுவும் பெரும் பணியைச் செய்தார் வியாசராஜர். தலைநகராம் ஹம்பியில் யந்த்ரோதாரக[4] அநுமனில் தொடங்கி நாடெங்கும் இப்பணியைத் தொடர்ந்ததாகத் தெரிகிறது.

4. ஹம்பியில் அநும விக்ரகத்தை நிறுவ முயற்சி செய்கையில், முக்கியப் பிராணர் ஓரிடத்தில் நில்லாமல் ஓடிக்கொண்டே யிருந்தாராம். வியாசராஜர் ஒரு யந்திரத்துக்குள் அவரைக் கட்டுப்படுத்தி வைத்தாராம். அதுதான் யந்த்ரோ தாரக ஆஞ்சநேயர்.

இம்மதி நரசிம்மனுக்குப்பின் வீரநரசிமமனின் காலத்திலும், பின்னர் 1509ம் ஆண்டு விஜயநகரப் பேரரசின் மாமன்னராகக் கிருஷ்ணதேவராயர் முடிசூடிய போதும், வியாசராஜரின் ராஜ அந்தஸ்து அப்படியே நிலைபெற்றது.

இதற்குள்ளாகவே, 'வியாச த்ரயம்' எனறழைக்கப் பெறும் தம்முடைய மூன்று முக்கிய நூல்களான நியாயாம்ருதம், சந்திரிகை மற்றும் தர்க்கதாண்டவம் ஆகியவற்றை இயற்றியிருந்தார் வியாசராஜர்.

கிருஷ்ண தேவராயரின் ஆட்சி, விஜயநகரப் பேரரசின் பொற்காலம்மட்டு மன்று, வியாசராஜரின் உயர்காலமும்கூட! தம்முடைய 'குலதேவதை' என்றே வியாசராஜரைக் கண்டார் மாமன்னர் ராயர்.

விஜயநகரப் பேரரசின் ராஜகுருவாகவே விளங்கிய வியாசராஜர், தம்முடைய சீடராக அங்கீகரிக்கப்பட்டுவிட்ட ராய மன்னருக்கு அபிஷேக நீராட்டு நடத்தியதாகவும் வரலாற்றுப் பதிவுகள் உள்ளன. தம்முடைய 'தந்த்ர ஸாரம்' என்னும் நூலில் மத்வர்மட்டுமே, இத்தகைய 'சிஷ்ய அபிஷேகத்தை'க் குறிப்பிடுகிறார்.

''மூலமந்த்ரஸ்ய சாங்கானாம் ந்யாஸ: ஸ்நானாதனந்திரம் ।
ப்ரதிமாயாம் ஸந்நிக்ருத் சிஷ்யே மாஹாத்ம்யக்ருப்தவேத் ॥''

என்கிறது தந்த்ர ஸாரம். நல்ல சிஷ்யனுக்குக் குரு செய்யும் அபிஷேகம், குருவின் மகத்துவத்தைக் காட்டும்.

1524ம் ஆண்டு வாக்கில், விஜயநகர அரியணையிலும் அமர்ந்தார் வியாசராஜர். அரியாசனத்தில் அமர்ந்து தமது மேல்துண்டை எடுத்து வீச, அது தீப்பற்றி எரிந்தது. சபைக்குள் எப்படியோ வந்து சிம்மாசனத்தின் அருகில் சுருண்டிருந்த நாகப்பாம்பும் நெருப்பில் அழிந்து போயிற்று. தம்முடைய கிரகதோஷத்தை நீக்கி உயிரைக் காப்பாற்றிய தம் ராஜகுருவுக்கு ரத்னாபிஷேகமும் கனகாபிஷேகமும் செய்து மகிழ்ந்தார் கிருஷ்ண தேவராயர்.

வியாசராயர் அல்லது வியாசதீர்த்தர் என்னும் திருநாமம் வியாசராஜர் என்று அமைந்ததே, இவ்வாறு சிம்மாசனம் ஏறியதால்தான் என்று கருதுவதற்கும் இடமுண்டு[5].

---

5. ஸோஸலே ஸ்ரீ வியாசராஜ மடத்தில், வியாசராஜர் அரியாசனம் அமர்ந்து, நாகப்பாம்பு நெருப்பில் கருகியதைச் சித்தரிக்கும் படம் உள்ளது. ஒவ்வொரு நாள் மாலையிலும் மத்வமட ஸ்வாமிகளின் தினப்படி தர்பாரில் தீவட்டி சலாமும் (தீவட்டிகே சலாம்), 'விஜயநகர - கர்நாடகா - வித்யாஸிம்ஹாஸன' என்னும் ராஜமரியாதை விளியும் நடைபெறுகின்றன. புரந்தரதாசர், தமது பாடல் ஒன்றில் வியாசராஜர் சிம்மாசனம் ஏறியதைக் குறிப்பிடுகிறார்.

கிருஷ்ண தேவராயர் பற்பல மானியங்களையும் வியாசராஜருக்கு அளித்தார். ''ராஜாதிராஜ ஸம்பூஜ்ய ஸர்வ வைஷ்ணவசேகர - கஜகஹ்வர கர்நாடக சிம்மாசன கத ப்ரபோ'', என்று குருநாதரைப் போற்றிப் புகழ்ந்தார். பெத்தகொண்ட, கந்துகூர், பிரம்மண்ணியதீர்த்தபுரம் என்று பல ஊர்கள், இம்மானியங்களில் அடங்கும்.

மதனப்பள்ளி அருகேயுள்ள பெத்தகொண்டாவும் கந்துகூரும் அருகருகே உள்ளன. இயற்கை எழில்மிக்க இப்பகுதிகளில், வியாசராஜர் அடிக்கடி சஞ்சரிப்பது வழக்கம். அங்கே சிஷ்யர்களுடன் தங்குவதும் வழக்கம்.

இயற்கை வனப்பிருப்பினும், தண்ணீர்ப் பஞ்சம் அடிக்கடி ஏற்பட்ட பகுதி அது! மக்கள் ஒருமுறை வியாசராஜரிடம் வந்து முறையிட்டார்கள்.

அவ்வூரில் ஒரு பெரிய ஏரி இருந்தது. அதன் மதகை ஒரு பெரிய பாறை அடைத்துக்கொண் டிருந்தது. எவ்வளவோ முயன்றும் அப்பாறையை நகர்த்தவோ, துளைக்கவோ முடியவில்லை. எனவே, ஊர்ப் பயன்பாட்டுக்கு நீர் கொணர முடியவும் இல்லை.

மக்கள் இது குறித்து முறையிட்டுக்கொண் டிருந்த அதே சமயத்தில், கனகதாசர், வியாசராஜரை அணுகி உபதேசம் வேண்டினார்.

கனகதாசர், எமதர்மனின் அவதாரம் என்பதை ஞானதிருஷ்டியில் கண்டுவிட்ட வியாசராஜர், அவரை அருகில் அழைத்து, ''நின்னக்கேன கோண மந்த்ர?'', என்றார். 'எருமை அவதாரமான உனக்கேன் மந்திரம்?', என்பது குருவின் கேள்வி. சீடரோ, 'கோண' என்பதே தனக்கான மந்திரம் எனக் கருதி, 'கோண' என்னும் பதத்தை ஓயாமல் ஜபித்தார். அதன் பலனாக, எருமை மாடு அவர்முன் தோன்றியது.

கனகதாசர், குருநாதரிடம் ஓடிவந்தார். 'தங்களின் மந்திரோபதேசத்தால் எருமை வந்துள்ளது. என்ன செய்யட்டும்?' எனக் கேட்டார். 'எருமையைக் கொண்டு ஏரியின் பாதையை அடைத்துக்கொண் டிருக்கும் பாறையைத் துளைத்து நீரை வெளியே கொண்டு வா!', என ஆணை போட்டார் ஆசார்யர்.

அசுர வேகத்தில் பாய்ந்த எருமை, தன் கொம்பினால் பாறையை முட்டிமோதித் துளைபோட்டது. அதன்வழி, நீர்

பெருக்கெடுத்தது. பொறியியல் அதிசயமாக விளங்கும் அவ்விடம் 'கோணன தூடு' என்றழைக்கப்படுகிறது. அவ்வூருக்கே 'வியாச சமுத்திரம்' என்னும் பெயர் வழங்கப்படலும் ஆயிற்று.

கிருஷ்ண தேவராயருக்குப் பின் ஆட்சிக்கு வந்த அச்சுதராயராலும் போற்றி வணங்கப்பட்ட வியாசராஜர், ஆனேகுந்திக்கு[6] அருகாமையிலுள்ள துங்கபத்ரா தீவான நவபிருந்தாவனத் தீவில் பிருந்தாவன வாசம் புரிகிறார்.

பிரகலாதனின் அவதாரமாகக் கருதப்படுகிற வியாசராஜர், மத்வ சம்பிரதாயத்தின் 'இரண்டாவது நிறுவனர்' என்றே போற்றப்படுகிறார். (முதல் நிறுவனர் ஸ்ரீ மத்வரேயாவார்). தென்னிந்தியாவில் மத்வ சம்பிரதாய வளர்ச்சிக்குப் பெரிதும் வித்திட்டவர் இவர். வியாசராஜரில், மத்வ சம்பிரதாயம் தத்துவார்த்தச் சிகரங்களைத் தொட்டது. வியாசராஜரின் மூன்று நூல்களைப்பற்றிக் குறிப்பிடும்போது, அப்பைய தீட்சிதர், 'விரிஞ்ச வெள்ளரிப்பழத்துக்கு (வெள்ளரிப்பழம் இங்கு மத்வ மதம்) மூன்று கட்டுப் போட்டார்', என்று பாராட்டினார்.

வியாசராஜரின் இடையறாத உழைப்பாலும், அரச ஆதரவுகளாலும் மத்வ சம்பிரதாயம் ஆந்திர - ஒரிய எல்லைகளில் மட்டுமல்லாமல் பிற இடங்களிலும் பரவியது. விஜயநகரம் முழுவதும் நிர்மாணிக்கப்பெற்ற ஆஞ்சநேயர் சிலா விக்கிரகங்கள் மக்கள் மனத்தில் பக்தியோடு, வீரத்தையும் தேசிய உணர்வையும் வளர்த்தன.

தம்முடைய தாய்மொழியான கன்னடத்தில் பக்திரசம் பொங்கும் பாடல்களையும் இயற்றினார் வியாசராஜர். ''வியாசராயரு கீர்த்தனேகளு'', என்று இவை பெயர் பெறுகின்றன. பின்னர் மிகப் பரவலான தாசகூட்ட முறைமைக்கும், ஹரிதாஸ இலக்கிய வளர்ச்சிக்கும், வியாசராஜரின் பாடல்களே ஆதாரங்களாயின. தாம் பாடிய பாடல்கள் என்றுமட்டு மில்லாமல், புரந்தரதாசர், கனகதாசர் போன்ற சிஷ்யர்களை உருவாக்கிக் கொடுத்ததனால், மக்களைச் சார்ந்த பக்திமுறை தாச சம்பிரதாயமும், இசை மரபும் வளர்வதற்கு வகை செய்துவிட்டார். கனகதாசர் போன்றவர்களை அரவணைத்துச் சமுதாயச் சீரமைப்புக்கும் வழிகோலிவிட்டார்.

---

6. ஹம்பிக்கு முன்னதாக, ஆனேகுந்தி, விஜயநகரப் பேரரசின் தலைநகரமாக இருந்தது.

திருமலையில் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கிய வேங்கடேசப் பெருமாளை வியாசராஜர்[7], விமான வேங்கடேசரை நிறுவினார்[8].

தமது ஆஸ்ரமகுரு பிரும்மண்ணியருக்குப் பிற்பாடு, ஸோஸலேயிலேயே மடத்தின் தலைமையகத்தை நிறுவி நிலைக்கச் செய்த வியாசராஜருக்கு, மத்வ சம்பிரதாயத்தைச் சேர்ந்த பிற மடங்களோடும் தொடர்பிருந்தது.

அவரே முலுபாகல் மடத்தின் ஸ்ரீ பாதராஜரிடம் கல்வி பயின்றவர்தான்! தம் சீடரின் உயர்வைப் பாதராஜர் புரிந்துகொள்ளும்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது.

ஸ்ரீ பாதராஜரிடத்தில், வியாசராஜர் குருகுலவாசம் செய்து கொண்டிருந்த காலகட்டம். திடீரென்று ஒருநாள் மற்ற சிஷ்யர்கள், ஸ்ரீ பாதராஜரிடம் ஓடிவந்து, ''வியாசராயருக்குப் பித்துப் பிடித்துவிட்டது'', என்று கூறினார்கள். 'சாளக்ராமங்களைக் கையில் வைத்துக்கொண்டு நடனமாடுகிறார்; பித்தில்லாமல் வேறு என்ன?'. என்ன நடக்கிறது என்று எட்டிப் பார்த்தார் பாதராஜர். பார்த்த அதிசயம் அவரைப் பரவசப்படுத்தியது. ''கிருஷ்ணா, வேணுகோபாலா'', என்று பாதராஜர் கூவியதைக் கண்டவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அவர்களுக்கு எப்படிப் புரியும்? கண்டவர் ஸ்ரீ பாதராஜர் மட்டும்தானே!



பூஜையில் இருந்த வேணுகோபாலன், விக்ரக வடிவிலிருந்து எழுந்து உயிர்பெற்று நர்த்தனமாடிக் கொண்டிருந்தார். அவர்

---

7. இன்னும் திருப்பதியில் ஸோஸலே வியாசராஜ குருபரம்பரையைச் சேர்ந்தவர்களுக்குச் சில சிறப்பு மரியாதைகள் தரப்படுகின்றன. அவர்கள் ஸ்ரீநிவாச மூலவரைச் சிறப்பு வழிபாடு செய்து பூசிக்கலாம். மலையிலும் ஒரு வியாசராய மடம் உள்ளது.

8. திருப்பதியில் அவர் ஆராதன விக்கிரகமாக வைத்துப் பூசித்த ஸ்ரீநிவாசப் பெருமாள், இப்போது ஸோஸலே ஸ்ரீமடத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

ஆடுவதைக் கண்ட வியாசராயரும் சாளக்ராமங்களை வைத்துக் கொண்டு ஆடிக்கொண் டிருந்தார்.

வியாசராஜரிடம் விஜயீந்திரர் என்று ஒரு சந்நியாச சீடர் இருந்தார். வியாச சமுத்திரப் பகுதியில் ஒருமுறை வியாசராஜரும் விபுதேந்திர பீடத்தை அலங்கரித்த சுரேந்திரரும் சந்தித்தார்கள். விஜயீந்திரரின் முகப்பொலிவைக் கண்ட சுரேந்திரர், அவரைத் தம்முடன் அனுப்பும்படி கேட்டார்; வியாசராஜரும் மனமுவந்து அனுப்பிவைத்தார். விஜயீந்திரர், அந்தப் பீடத்தின் அடுத்த குரு ஆனார். அவருக்குப் பின் பீடமேறியவர் சுதீந்திரர். சுதீந்திரருக்குப்பின் வேங்கட பட்டர் என்னும் இராகவேந்திர சுவாமிகள்.

### ஸ்ரீ பாதராஜர் (1420 - 1487)

அப்பூரில் மலைக் குகையில் வாழ்ந்துவந்தார் மத்வ மத ராஜேந்திர பீடாதிபதியான புருஷோத்தம தீர்த்தர். அப்போது அவருடன், அவருடைய சீடர் பிரும்மண்ணிய தீர்த்தரும் இருந்தார்.

இன்னொரு மத்வ மடமான பத்மநாப பீடத்தின் அதிபதி ஸ்ரீ சுவர்ணவர்ண தீர்த்தர், புருஷோத்தமரைக் காண அப்பூருக்கு வந்தார்.

வருகிற வழியில், மாடுகளை மேய்த்துக்கொண் டிருந்த ஒரு சிறுவனைக் கண்டார். அவன் முகத்தில் கொள்ளைப் பிரகாசம். பல்லக்கை நிறுத்தி, அவனிடம் ஊர் எவ்வளவு தூரம் என்று விசாரித்தார் சுவர்ணவர்ணர். தலையைத் திருப்பாமலே அலட்சியமாய் பதில் சொன்னான் அவன். ''என்னைப் பாருங்கள்; மாடுகளைப் பாருங்கள்; சூரியனைப் பாருங்கள்'', என்றான்.

திகைத்துப் போனார் சுவர்ணவர்ணர். 'சூரியன் மறையும் நேரம்; இந்த நேரத்திலும் ஒருவன் மாடு மேய்க்கிறான் என்றால் ஊர் எவ்வளவு தூரம் என்று கணக்குப் போட்டுக் கொள்ளமுடியாதா?' என்பது அவனின் மறைமுகக் கேள்வி (பதில்).

புருஷோத்தமரைச் சந்தித்தபோது பிரும்மண்ணியரையும் பார்த்தார் சுவர்ணவர்ணர். பிரும்மண்ணியரைப் போலத் தமக்கும் ஒரு சீடன் வேண்டும் என்றார். மாலையில் தாம் சந்தித்த மாடு மேய்க்கும் சிறுவனைப் பற்றி அவர் சொன்னதை எண்ணிச் சிரித்துக் கொண்ட புருஷோத்தமர், 'கவலைப்படாதீர்கள். உங்களுக்கொரு நல்ல சீடன் கிடைப்பான்', என்று சொல்லியனுப்பினார்.

பிரும்மண்ணியரின் தாயாரின் சகோதரி கிரியம்மாள். அவரின் கணவர் சேஷாச்சார். ஏழைகளான அவர்களின் மகனே மாடு மேய்த்துக்கொண் டிருந்த லட்சுமிநாராயணன். அந்த ஊரின் மாடு மேய்க்கும் சிறுவர்களுக்கெல்லாம் அவனே தலைவன்.

லட்சுமிநாராயணனைக் குகைக்கு வரவழைத்த புருஷோத்தமர், அவனுடைய கல்விக்கு ஏற்பாடு செய்தார். பின்னர்ப் பிரும்மோபதேசம் நடைபெற்றது. வேதாந்த பாடங்கள் போதிக்கப்பட்டன. பின்னர் அவன் சுவர்ணவர்ணரிடம் அனுப்பப்பட்டான்.

லட்சுமிநாராயணனுக்குத் தீட்சை வழங்கப்பெற்று, சந்நியாச ஆஸ்ரமம் அளிக்கப்பெற்று, லட்சுமிநாராயண யோகி ஆனார்.

ரெய்ச்சூரில் சாதுர்மாஸ்ய விரதத்திற்காகத் தங்கியிருந்தார் லட்சுமிநாராயண யோகி. அதேசமயம் உத்தராதிமடப் பீடாதிபதியான ரகுநாத தீர்த்தரும் அங்கே சாதுர்மாஸ்யம் இருந்தார். ஜயதீர்த்தரின் 'நியாயசுதா' நூலிலிருந்து சில ஐயங்களை எழுப்பினார் ரகுநாத தீர்த்தர். இளம் துறவியான லட்சுமிநாராயணர் விளக்கம் கொடுக்கக் கொடுக்க நெகிழ்ந்து போனார் மூத்த துறவி. வாயார மனமார இளையவரைப் பாராட்டினார்.

''தாங்கள் என்னைப் பாராட்டுவதா? தாங்கள் ஸ்ரீ பாதங்கள்வாரு'. நான் எம்மாத்திரம்?'', என்றார் லட்சுமிநாராயணர்.

''நாங்கள் வெறும் ஸ்ரீ பாதங்கள். நீரோ எங்களுக்கு ராஜா. எனவே ஸ்ரீ பாதராஜர்'', என்று மேலும் பாராட்டினார் ரகுநாத தீர்த்தர்.

அன்றுமுதல் ஸ்ரீ பாதராஜர் ஆனவர், சுவர்ணவர்ண தீர்த்தருக்குப்பின், பத்மநாப பீடமேறினார். சுவர்ணவர்ண தீர்த்தர் காலம்வரை, பத்மநாப பீடம் ஸ்ரீரங்கத்தில் இருந்தது. அதனை ஸ்ரீ பாதராஜர் முலுபாகலுக்கு மாற்றினார். இன்றளவும், முலுபாகல் மத்வ மடம், ஸ்ரீ பாதராஜர் மடம் என்றே அழைக்கப்படுகிறது.

சந்திரகிரியைச் சேர்ந்த சாளுவ நரசிம்மனிடம் நிறைந்த செல்வாக்குப் பெற்றிருந்தார் ஸ்ரீ பாதராஜர்.

---

9. குரு பரம்பரையின் பீடாதிபதிகளையும் ஆசார்யர்களையும் 'ஸ்ரீ பாதர்கள்' அல்லது 'ஸ்ரீ சரணர்கள்' என்று குறிப்பிடுவதுண்டு.

துருவனின் அம்சமாகக் கருதப்படும் ஸ்ரீ பாதராஜர், ஒருமுறை, சாளுவ நரசிம்மனின் சிம்மாசனத்தில் அமர்ந்து அவனுக்கு வரவிருந்த துன்பத்தைப் போக்கித் தீமையை அகற்றினார். கலிங்கத்தில் வெற்றி ஈட்டிய சாளுவ நரசிம்மன் தன் ஆசார்யருக்கு நிறைந்த மரியாதைகளைச் செய்தான்.

பீடமேறியபின் பல ஊர்களில் சஞ்சரித்துக்கொண் டிருந்த ஸ்ரீ பாதராஜர், ஸ்ரீ மத்வரே சஞ்சாரம் செய்த முலுபாகலைத் தரிசிக்க வேண்டித்தான் அவ்வூரை அடைந்தார். கூடவே அங்கிருக்கும் அட்சோபயரின் யோகநரசிம்மரையும், ஜயஸ்தம்பத்தையும் பார்க்க வேண்டியும் ஆசைப்பட்டார்.

பின்னர், தமது மடத்தின் தலைமையகம் முலுபாகலில் இருப்பதே சரியென்றெண்ணி அங்கேயே தங்கிவிட்டார். அவர் காலத்தில் முலுபாகல், கல்வி மையமாக உருவாயிற்று. முலுபாகல் பல்கலைக் கழகமாகிப் பெயர் பெற்றது.

ஸ்ரீ பாதராஜர் வயது முதிர்ந்த நிலையில் காசிக்குப் போக வேண்டும் என்று ஆசைப்பட்டார். மனம் கொள்ளா ஆசையுடன் அன்றிரவு உறங்கிப் போனார். கனவில் கங்காதேவி காட்சி கொடுத்தாள். தானே நரசிம்மதீர்த்தத்திற்கு வருவதாகச் சொன்னாள்.

மறுநாள், நரசிம்மதீர்த்தத்தின் வடகிழக்கு மூலையிலிருந்து கங்கை நீரூற்றாகப் பொங்கிப் பிரவகித்தாள். வடநாடு போகும் எண்ணத்தைக் கைவிட்டு அங்கேயே தங்கிவிட்டார்.

ஸ்ரீ பாதராஜரின் பிருந்தாவனம் முலுபாகலில் உள்ளது.

### விஜயீந்திர தீர்த்தர் (1514 - 1595)

வியாசராஜ தீர்த்தரின் மாணாக்கராயிருந்த விட்டலாசார்யன், அவரால் 'விஷ்ணுதீர்த்தர்' என்னும் தீட்சா நாமம் தரப்பெற்றுத் துறவியாக்கப் பெற்றார்.

வியாசராஜரை அதுசமயம் சந்தித்த சுரேந்திர தீர்த்தரின் வேண்டுகோளுக்கேற்ப விஷ்ணு தீர்த்தர் அவருடன் அனுப்பி வைக்கப்பட்டார். சுரேந்திரருக்குப் பின் பீடமேறிய விஷ்ணுதீர்த்தர், அவ்வாறு பீடமேறிய காலத்தில் விஜயீந்திர தீர்த்தர் ஆனார்.

விஜயீந்திரர் பீடமேறிய காலத்தில், விபுதேந்திர பீடம் கும்பகோணத்தில் இருந்ததாகத் தெரிகிறது. விஜயீந்திரரும் பல ஆண்டுகள் கும்பகோணத்திலேயே வாழ்ந்துள்ளார். தஞ்சையை

ஆண்ட சேவப்ப நாயக்கர், இவருக்குத் தக்க மரியாதைகளோடு அரிவிலிமங்கலம் என்னும் கிராமத்தையும் மானியமாக வழங்கியுள்ளார்.

சேவப்பநாயக்கரின் மானியங்கள் பற்றிய ஆவணமொன்று 'மூன்று புனித அக்னிகள்', நாயக்கரின் சபையில் சந்தித்துச் சங்கமித்ததாகக் குறிப்பிடுகிறது.

துறவிகளின் தலைவரான விஜயீந்திரரும், சகல சாஸ்திரங்களையும் அறிந்த வைணவத் தலைவர் தாதாசார்யரும், சைவ மற்றும் அத்வைத சாம்ராஜ்யத்தின் மன்னர் அப்பைய தீக்ஷிதரும் அடிக்கடிச் சந்தித்துத் தத்தம் மத சிந்தாந்தங்களை எடுத்துரைத்தார்கள்.

ஆய கலைகள் அறுபத்து நான்கிலும் வல்லமை பெற்று விளங்கிய விஜயீந்திரர், 'ஸர்வதந்திர சுதந்திரர்' என்றழைக்கப்பட்டார். இவருக்கு வீரசைவத் துறவியொருவரோடு ஏற்பட்ட விவாத வெற்றியின் விளைவாக, கும்பகோணத்திலுள்ள அந்த வீரசைவ மடம், இவரின் ஆளுகைக்குள் அளிக்கப்பட்டுவிட்டதாகத் தெரிகிறது. வீரசைவ மடம் இருக்கக்கூடிய தெருவும், விஜயீந்திர ஸ்வாமி மடத் தெரு என்று பெயர் சூட்டப்பட்டதாகவும் நகராட்சி ஆவணங்களில் காணப்படுகிறது.

விஜயீந்திரரின் செல்வாக்கின் விளைவாக, இன்றளவிலும் கும்பகோணம் விஜயீந்திரர் மடத்தைச் சேர்ந்தவர்களுக்கு, சாரங்கபாணி கோயில் உற்சவத்திலும், மார்கழி மாத இயற்பா சாற்றுமறையிலும், கும்பேஸ்வரர் கோயில் மாசிமகத் திருவிழாவில் சிறப்பு இடமும் மரியாதைகளும் உண்டு.

விஜயீந்திரர் கும்பகோணத்திலேயே சமாதி அடைந்தார். இவர் இயற்றியதாகச் சொல்லப்படும் நூல்களின் எண்ணிக்கை 104. இருப்பினும் பல இன்றளவும் கிட்டவில்லை.

### வாதிராஜ தீர்த்தர் (1480 - 1600)

த்வைத மத ஆசார்யர்களில் மங்காத புகழோடு விளங்கும் மற்றொருவர் வாதிராஜர். குந்தாப்பூர் தாலுகா ஹூவினேகரே கிராமத்தைச் சேர்ந்த ராமாசார்யர் - கௌரி சரஸ்வதியின் இரண்டாவது மகன் இவர். இவரின் தமையன் வராஹாசார்யர், சோதே மடத்தின் அதிபதி வாகீச தீர்த்தரிடம் ஒப்படைக்கப்பட்டார். இளம் வயதிலேயே வராஹர் இறந்துபோனதால், வாதிராஜர்

அவ்விடத்தை நிரப்பி, வாகீசரிடம் கல்வி பயின்று, துறவியும் ஆனார். வாகீச தீர்த்தருக்குப் பின் சோதே பீடமேறிய வாதிராஜ தீர்த்தர், நூற்றிருபது ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

எல்லையில்லாக் கவித்துவம், பொங்கும் நகைச்சுவை, மங்காத மனிதநேயம், கலங்காத கற்பனை ஊற்று, நீரோட்டமான நடை ஆகியவற்றோடு நிகரற்ற ஒப்பீடுகள் ஆகியவை வாதிராஜரை மிகச்சிறந்த த்வைத இலக்கியவாதி ஆக்குகின்றன. நூறுக்கும் மேற்பட்ட நூல்களை இவர் ஆக்கியதாகத் தெரிகிறது.

மத்வ சிந்தாந்தங்களை மக்கள் மத்தியில் பரவச் செய்யும் எளிமைக்குச் சொந்தக்காரர் வாதிராஜர் எனலாம். ஜயதீர்த்தர் மற்றும் வியாச தீர்த்தர் ஆகியோரின் மொழிநடை உயர்ந்தது. ஆனால், தம்முடைய 'யுக்திமல்லிகா' என்னும் பெருநூலில், எளிமையைப் பயன்படுத்தி, மத்வ சிந்தாந்தத்தைச் சொல் புதிதாய், சுவை புதிதாய் விளக்குவதில் அபார வெற்றி காண்கிறார் வாதிராஜர். யுக்திமல்லிகாவே அவரின் அற்புதப் படைப்பாகும்.

உடுப்பி அஷ்ட மடங்களில் தற்போது கையாளப்பெறும் பரீயாய முறையை வழிவகுத்து நிர்வாகச் சீரமைப்புக்கு அடிகோலியவரும் வாதிராஜரே ஆவார். உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண மடத்தை விஸ்தரித்துக் கட்டியதுடன், சந்திரமௌலீஸ்வர மற்றும் அனந்தேஸ்வரத் திருக்கோயில்களை நிர்வாக ரீதியாகக் கிருஷ்ண மடத்துடன் இணைத்தவரும் இவரே! உடுப்பிக்கு ஒரு சிறப்பு அந்தஸ்தைப் பெற்றுக்கொடுத்தவர் என்று வாதிராஜரை வர்ணிக்கலாம்.

தேவார மற்றும் திவ்விய பிரபந்தப் பாசுரங்களைப் போல, தாம் யாத்திரை சென்ற பல திசைத் திருக்கோயில்களையும் பற்றிக் குறிப்பிட்டுத் 'தீர்த்தப் பிரபந்தம்' என்னும் கவிதை நூலை வடமொழியில் இயற்றியுள்ளார் வாதிராஜர்.

அஷ்ட மடங்களுள் ஒன்றான சோதே மடம், வாதிராஜர் மடம் என்றே வழங்கப்படுகிறது. உடுப்பியிலும் சோதேவிலுமாகச் செயல்பட்டுவந்த வாதிராஜர், சோதேவில் சமாதியடைந்தார்.

### ரகூத்தம தீர்த்தர் (1557 - 96)

உத்தர கர்நாடகப் பிரிவைச் சேர்ந்த இவரின் இளமைக்காலம் பற்றி அதிகம் தெரியவில்லை. ரகுவீர்ய தீர்த்தரின் மருமகனான இவர், அவருக்குப்பின் உத்தராதி மடத்தின் பீடாதிபதி ஆனார். விஜயீந்திரரின் சமகாலத்தவர் எனத் தெரிகிறது.

அற்புதங்கள் பல நிகழ்த்திய மகானாகப் பக்தர்களால் பார்க்கப்பட்ட இவர், இன்றளவும், உத்தராதி மடத்தைச் சேர்ந்தவர்களுக்கு வழிபடு தெய்வமாகவே விளங்குகிறார்.

தம்முடைய வாழ்வின் நிறைவுநாட்களைப் பெண்ணை யாற்றங் கரையிலுள்ள திருக்கோவலூரில் கழித்த இவர், அங்கேயே சமாதி அடைந்தார். இவர், தமக்கு முன்னிருந்த த்வைத ஆசார்யார்கள் பலரின் நூல்களுக்கு விளக்கங்கள் எழுதியுள்ளார்.

### சுதீந்திர தீர்த்தர் (1596 - 1623)

காவியம், நாடகம், கவிரசம் போன்றவற்றில் சிறந்து விளங்கிய ஆசார்யர் இவர். விஜயீந்திரரின் சீடரான இவர், அவருக்குப்பின் விபுதேந்திர மடத்தின் பீடாதிபதியானார். அக்காலகட்டத்தில் கும்பகோணத்தில் மடம் இருந்தது. தஞ்சாவூர் ரகுநாத நாயக்கரின் அன்புக்குப் பாத்திரமான சுதீந்திரரே, ராகவேந்திர ஸ்வாமிகளின் ஆசிரமகுரு ஆவார்.

அலங்கார மஞ்சரி, அலங்கார நிகஸம் ஆகிய இலக்கண நூல்களும், சுபத்ரா - தனஞ்சயன் என்னும் நாடகமும் இவர் உருவாக்கிய படைப்புகளாகும். சுதீந்திரர் துங்கபத்ரா கரையில் உள்ள ஆனேகுத்தியில் சமாதியடைந்தார்; அருகிலுள்ள நவபிருந்தாவனத்தில் அவர் பிருந்தாவன வாசம் செய்கிறார்.

### வித்யாதீச தீர்த்தர் (1619 - 1631)

நரசிம்மாசார்யா என்னும் பூர்வாசிரமப் பெயரோடு மிகப் பெரிய பண்டிதராக விளங்கிய இவரை, உத்தராதி மடத்தின் தலைவரான வேதவியாச தீர்த்தர் மண்ணூருக்கு வரவழைத்துத் தீட்சை வழங்கினார். வேதவியாசருக்குப் பின் உத்தராதி மடத்தின் தலைவரானார் நரசிம்மாசார்யா. அப்போது ஏற்றுக்கொண்ட திருநாமமே வித்யாதீச தீர்த்தர் என்பது ஆகும்.

தேசமெங்கும் யாத்திரை செய்த வித்யாதீசர் பற்பல பண்டிதர்களுடன் வாதிட்டு வென்றார். வாரணாசி மற்றும் வங்காளப் பிரதேசங்களில் பலரும் மத்வ சம்பிரதாயத்தைத் தழுவியதற்கான காரணர் இவரே.

பதரிகாசிரமம் சென்று திரும்பி வருகையில் கங்கை - யமுனைப் பகுதிகளில் ஏகசக்ரநகரம் என்னும் ஊரில் சமாதியடைந்தார்.

## இராகவேந்திர தீர்த்தர் (1623 - 1671)

மத்வ சம்பிரதாய மரபில் மன்னாதி மன்னராக விளங்கக்கூடியவர் இராகவேந்திர தீர்த்தர்.

விஜயநகரப் பேரரசில் மிகப்பெரும் இசைக் கலைஞராக விளங்கிய திம்மண்ணாசார்யரின் இளைய மகன் வேங்கடநாதர். விஜயநகர வீழ்ச்சிக்குப்பின், தொண்டை மண்டலம் அடைந்தது அந்தக் குடும்பம். தந்தையும் விரைவில் இறந்துபோனார். கல்வி கற்பித்து வேங்கடநாதருக்கு விரைவிலேயே திருமணமும் செய்து வைத்தார் தமையனாரான குருராஜர்.

திருமணத்திற்குப்பின், கும்பகோணம் சுதீந்திரர் மடத்தோடு தொடர்பு கொண்டிருந்த வேங்கடநாதரின் இலக்கியப் புலமை ஊரெல்லாம் பரவியது. சுதீந்திரர், வேங்கடநாதரை அடுத்த பீடாதிபதியாக்க வேண்டும் என்று விரும்பினார். ஆனால், சிறு குழந்தையையும் இளம் மனைவியையும் காரணம் காட்டி ஒதுங்கினார் வேங்கடநாதர். ஆயினும், மனச் சஞ்சலம் ஒருபுறமும், தவிப்புகள் இன்னொரு புறமும் துளைக்க, இறுதியில் தம் பயணம் துறவறம் நோக்கியே என்பதை உணர்ந்தார் வேங்கடநாதர். 1621ம் ஆண்டுவாக்கில் இராகவேந்திர தீர்த்தர் என்னும் திருநாமத்துடன், தஞ்சாவூரில் துறவறம் ஏற்றார்.

அடுத்த இரண்டாண்டுகளுக்குள்ளாகச் சுதீந்திரர் ஆனே குந்தியில் சமாதியடைய, பீடமேறினார் இராகவேந்திர தீர்த்தர்.

பலமுறை யாத்திரை மேற்கொண்டார் இராகவேந்திரர். வடமாநில ஊர்களில் அதிகமாக அமைந்த இந்த யாத்திரைகள் இராகவேந்திர சுவாமியின் சொல்லொணாப் பெரும்புகழைப் பாரெங்கும் பரவச் செய்தன.

நஞ்சன்கூட்டில் தம் மடத்தின் தலைமையகத்தை அமைத்தார் இராகவேந்திரர்.

துங்கபத்ரா நதிக்கரையில் உள்ள மந்த்ராலயம் என்னும் ஊரில் நெடுநாட்கள் தங்கி அற்புதங்கள் நிகழ்த்திய இம்மகான், அங்கேயே பிருந்தாவனம் புகுந்தார்.

மத்வ சம்பிரதாயம் என்றாலும், ஒரு தனி இயக்கமாகவே வளர்ந்துவிட்டது இராகவேந்திரர் குரு - சிஷ்ய பரம்பரை!

நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களை இயற்றினார். இவை யாவும் சேர்த்து 'பாவதீபா' என்று வழங்கப்படுகின்றன.



# 12. தாசகூட்ட மரபு

**தாச சம்பிரதாயம்**

ஸ்ரீ மத்வாசார்யரின் 'மெய்ம்மை வேதாந்தம்' என்னும் 'உண்மைவழி வேதாந்தம்' பதின்மூன்றாம் நூற்றாண்டில் தொடங்கியதென்றாலும், கர்நாடகத்தில் பல்வேறு பகுதிகளுக்கு, அது அடுத்த இரண்டு நூற்றாண்டுகளில் பரவியது. இதனால் ஏற்பட்ட பக்தி உணர்வு, கர்நாடகத்தின் எல்லைகளைத் தாண்டியும் மக்களைச் சென்றடைந்தது.

இத்தகைய பக்தியுணர்வின் வெளிப்பாடாகத் தோன்றியதே 'தாசகூட்ட' முறைமை அல்லது 'அடிமைவழி அன்பு' என்னும் நெறியாகும். தாச சம்பிரதாயம் என்னும் வழிமுறையின் தொடக்கமாக இந்தப் பக்தியுணர்வு அமைந்தது.

''தாசர்கள்'' - 'இறைவனின் அடிமைகள்' என்று தங்களை அழைத்துக்கொண்ட தவசீலர்கள் தொடங்கிவைத்ததே தாசகூட்ட முறைமை. ஹரியின் பெயரை உச்சரிப்பதும், ஹரிநாமத்தைப் பாடுவதும், ஹரியின் பெயரால் தொண்டு செய்வதும்தான் இந்தத் தாசர்களின் முக்கிய நோக்கமும் கடமையுமாகும். 'ஹரி' என்று பொதுவாக விஷ்ணுவைக் குறிப்பிட்டாலும், தாசர்களின் பக்தியும் அன்பும், பண்டரீபுர நாதன் ஸ்ரீ விட்டலனைச் சுற்றியே அமைந்தது. இதயத்தையும் ஆன்மாவையும் சுண்டி இழுக்கும் இசையைக் கலந்து, தங்களின் பேச்சு மொழியில் பஜனைப் பாடல்களை ஹரி விட்டலனின்மீது பாடத் தொடங்கினார்கள் இந்தத் தாசர்கள். வாழும் நம்பிக்கையாகமட்டு மல்லாது புனித வாழ்க்கையை மேன்மைப்படுத்தும் கருவியாகவும் பஜனை முறை அமைந்தது. பஜனைப் பாடல்கள், மக்களை ஒன்றிணைப்பதையும், நல்வழியில் நடக்கத் தூண்டுவதையும் கண்ட பலரும், கர்நாடக மண்ணின் தாசர்கள் கையாண்ட முறைகளைத் தாங்களும் கையாளத்

தொடங்கினார்கள். ஹரி விட்டலனிடம் அளவுகடந்த அன்பு, சமூக சாதி மத பேதங்களுக்கான கண்டனம் ஆகியவை தாசகூட்ட நெறிகளில் இடம் பெற்றன.

### மத்வர் காட்டிய வழி

தக்கண பீடபூமியின் சமய பக்தி எழுச்சியின் அடிநாதம் என்றுகூடத் தாசகூட்ட முறையை விவரித்துவிடலாம்.

மத்வாசார்யாரின் அற்புதப் படைப்புகளான த்வாதச ஸ்தோத்திரமும், கிருஷ்ணாம்ருத மஹார்நவமும் தாச இலக்கியங்கள் வளர வழிவகுத்தன. வடமொழியில் அமைந்த இந்தப் படைப்புகள், பக்தி, நாதம், லயம், நெகிழ்ச்சி என்று இசை ஆராதனையின் அனைத்து அம்சங்களையும் பெற்றுத் திகழ்கின்றன. இவை ஏற்படுத்தும் பக்தியுணர்வையும் உள்ள நெகிழ்ச்சியையும் கண்டு, இவ்வழியிலேயே பிற தாச இலக்கியங்கள் தோன்றின. கன்னடத்திலோ, துளு மொழியிலோ மத்வர் பாடியதாகத் தெரியவில்லை. ஒரு சில பாடல்களை இம்மொழிகளில் அவர் பாடினார் என்று சிலர் கருதினாலும், அவை இன்று கிடைக்கப் பெறவில்லை.

மத்வரின் நேரடிச் சீடர்களில் ஒருவரான நரஹரி தீர்த்தர் காலத்திலிருந்தே தாச இலக்கியங்கள் தொடங்கிவிட்டன என்று சொல்லலாம். நரஹரி தீர்த்தர் காலத்தில், பல தவசீலர்கள் தாசநெனப் பாடல்களைப் பாடியுள்ளனர். பல பாடல்கள் இப்போது நமக்குக் கிடைத்தாலும், இவற்றைச் சரியாக வகைப்படுத்தவும் முறைப்படுத்தவும் இயலவில்லை. சிலரின் பாடல்களை, அவர்களின் தனிப்பட்ட பாணியிலிருந்தும், அவர்கள் பயன்படுத்தும் முத்திரை[1]களிலிருந்தும் அடையாளம் காணமுடிகிறது.

ஸ்ரீ மத்வரின் சிந்தாந்தம் கர்நாடக மக்களிடையே புதுவகையான விழிப்புணர்வை ஏற்படுத்தியிருந்தது.

---

1. பாடல்களை இயற்றுபவர்கள், அப்பாடலில் ஏதேனும் ஒரு இடத்தில் தங்களுக்கான ஒரு தனி முத்திரையைப் பதிப்பார்கள். ஒரு குறிப்பிட்ட சொல்லாகவோ, சொற்பிரயோகமாகவோ இந்த முத்திரை அமையும். புரந்தரதாசரின் முத்திரை 'புரந்தரவிட்டல'; தியாகராஜரின் முத்திரை 'தியாகராஜ'; முத்துசாமி தீட்சிதரின் முத்திரை 'குருகுக'. முத்திரையை 'முத்ரிகா' என்றும் சொல்வதுண்டு.

சராசரி மனித மனங்களுக்கு, ஏதாவதொரு பற்றுக்கோடும் நம்பிக்கையும் தேவை. அத்தகைய நம்பிக்கையே, நடைமுறை வாழ்க்கையில் அவர்களை வழிநடத்த முடியும். உயர்ந்ததொரு தெய்வம் உண்டு என்னும் கருத்து, மனிதனின் நம்பிக்கைக்கு மூலாதாரமாகிறது.

அந்தத் தெய்வமும், அவரவர்களுக்குப் பிடித்த, அவரவர் கண்களையும் மனத்தையும் கொள்ளை கொள்கிற வடிவிலும் உருவிலும் வரும் என்கிற அடுத்த கருத்து, நம்பிக்கையை வலுவாக ஊன்றிக்கொள்ளவும், அதற்கொரு முப்பரிமாணம் தரவும் வழிகோலுகிறது.

கண்ணெதிரே இருக்கிற அந்த இஷ்ட தெய்வத்தினிடத்தில் அன்பு செலுத்தினால், கேட்டவை கிடைக்கும் என்பதும், அந்தக் தெய்வம் ஆழ்ந்த பக்திக்கும் தொண்டுக்கும் அதே வடிவத்தில் இறங்கி வரும் என்பதும் பக்தியை வளரச் செய்யும் வழிமுறைக ளாகின்றன.

கடவுளோடு அணுக்க உறவு கொள்கிற இத்தகைய நிலைப்பாட்டையே மத்வ சித்தாந்தம் மேம்படுத்தியது.

இதே காலகட்டத்தில், சராசரி மக்களிடையே வடமொழி அறிந்திருக்கப்படவில்லை. பல்வேறு சமூகக் கட்டுப்பாடுகளாலும் மக்கள் பிளவுபட்டிருந்தார்கள். சமூகத்தின் தாழ்நிலைகளில் உள்ளவர்கள் என்று கருதப்பட்டவர்களும், பெண்களும் வேத வேதாந்த அறிவை நேரடியாகப் பெறமுடியாத நிலையில் இருந்தார்கள். இப்படிப்பட்ட சூழலில், புழக்கத்திலிருந்த புரிந்து கொள்ளக்கூடிய கன்னட மொழியில், உயர் வேதாந்தக் கருத்துக்களை, மிக எளிமையான விதத்தில் தாச கூட்டத்தினர் வழங்கினர். இதனால், பெண்களும் பிறரும் கடவுளுக்கு அணுக்கமாக முடியும் என்னும் நம்பிக்கை, மக்களிடையே தோன்றியது. இறைவனோடு உறவு கொண்டுவிட்டால், மனிதர்களிடையே வேறு பேதங்கள் இருக்க முடியாது என்னும் சமூக சீர்திருத்தம் ஏற்படவும் இதுவே வழி செய்தது.

உணர்ச்சிக் கொந்தளிப்புகளாலும் சொல்ல முடியாத தவிப்புகளாலும் தத்தளிக்கும் மனங்களுக்கு இசையே மருந்தாகும்.

இறைவனையே நாதமயமாக வழிபடுந்தன்மை, வேதகாலம் தொட்டு வழங்கிவருவதாகும். 'கடவுளின் மூச்சுக் காற்றிலிருந்து வேத ஒலிகள் பிறந்தன; அந்த ஒலிகளெல்லாம் இறைவனே நாதானந்த ரூபமாக இருக்கிறான்', என்பது வேதநெறி.

வேத நெறியையும், மனித வழியையும் இணைக்கும் விதமாக, தாஸ கூட்டத்தார், தங்களின் பக்தி வழியில் இசையையே வழிபாட்டுக் கருவியாக்கினார்கள். நேரடிப் பாடமாகச் சொல்லும்போது ஏற்காத கருத்துக்கள்கூட, இசை வாயிலாகச் சொல்லப்படும்போது விரைவில் ஏற்றுக்கொள்ளப்படும்.

உலக பந்தங்களிலிருந்து விலக்கி, மனித ஆன்மாக்களைப் பக்தி நோக்கி ஈர்ப்பதுதான், தாச கூட்ட நோக்கம். அப்படி ஈர்க்கும்போது, தேவையற்ற சலனங்களிலிருந்து விலக்குவதற்கும், பக்தியில் ஈடுபடுத்துவதற்கும் இசையும் நாட்டியமுமே நல்ல கருவிகளாயின.

இவ்வாறாக, தாச கூட்ட முறைமை, கர்நாடக (கன்னடம், துளு பேசப்படுகிற) எல்லைகளில் விரைந்து பரவியது. பலருக்கும் பக்திமார்க்கம் காட்டும் வரப்பிரசாதமும் ஆகியது.

இதன் விளைவாகவே தாச கூட்டம், தாச சம்பிரதாயம், ஹரி தாசர்கள், ஹரிதாச வழிமுறை, ஹரிதாச இலக்கியம் என்னும் பல பெயர்களும் சொற்றொடர்களும் ஏற்பட்டன.

## தாஸ சம்பிரதாய இலக்கியம்

தாச இலக்கியங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். முதன்மைப் பொது வகை, சிறப்பு வகை, மற்றும் விருப்புத் தெய்வ வகை என்பவை இம்மூன்று பிரிவுகள்.

ஆரம்ப கால 'தாசர்'களான ஸ்ரீ பாதராஜர், புரந்தரதாசர், கனகதாசர் போன்றவர்களின் பாடல்களை, முதன்மைப் பொதுவகையெனலாம். சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினரும் பயன்படுத்தும் வகையிலும், எல்லா உள்ளங்களிலும் பக்தியை ஏற்படுத்தும் வகையிலும், ஆழ்ந்த அடக்க உணர்ச்சியின் வெளிப்பாடாகவும் அமைந்தவை இப்பாடல்கள்.

வியாசராயர், கோபாலதாசர் போன்றவர்களின் பாடல்களைச் சிறப்பு வகை என்று சொல்லலாம். சடங்குகளுக்கும் சம்பிரதாயங்களுக்கும் வலுச் சேர்ப்பவையாக இவை அமைகின்றன.

மூன்றாவது வகையில், விஜயதாசர், ஜகன்னாததாஸா போன்றோரின் பாடல்களை வைக்கலாம். முழுக்க முழுக்க மத்வ சிந்தாந்த வழியில், நெக்குருகச் செய்யும் விதத்தில் கிருஷ்ண பக்தியைப் பொழியும் பாடல்களாக இவை அமைகின்றன.

### தாசகூட்ட வித்தகர்கள்

நரஹரி தீர்த்தர் காலத்திலிருந்து தாச இலக்கியங்கள் இருப்பதாகச் சொன்னாலும், தாச கூட்ட சம்பிரதாயத்தின் தந்தை என்று ஸ்ரீ பாதராஜரையே சொல்லவேண்டும். கர்நாடகாவின் முலுபாகல் மடத்தின் தலைவராக இருந்த லட்சுமிநாராயண தீர்த்தரே, ஸ்ரீ பாதராஜர் என்றும் அழைக்கப்பெற்றார். மிகப் பெரிய சமஸ்கிருத வித்தகராகவும், தூய பக்திமானாகவும் விளங்கிய இவர், 'ரங்க-விட்டல' என்கிற முத்திரையுடன் தம் பாடல்களை இயற்றினார். கண்ணியமும் கனிவும் கலந்து, துள்ளும் சந்தத்தில் அமைந்த இவரின் பாடல்களில் ப்ரமரகீதை, வேணுகீதை மற்றும் கோபிகீதை ஆகியவை பிரபலமானவை.

த்வைத வேதாந்தக் கொள்கையின் முதன்மை ஞானியாகக் கருதப்படும் வியாசராயர், ஸ்ரீ பாதராஜரின் சீடருமாவார். த்வைதக் கொள்கையின் வாதப்பிரதிவாதியாகவும் இவர் திகழ்ந்தார். 'நியாயாம்ருதம்' என்னும் வேதாந்த நூலை எழுதினார். இந்த நூல், வேதாந்திகளிடத்தில் மிகப்பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இந்தப் பரபரப்பைத் தொடர்ந்து, நவீன - அத்வைதம் என்னும் புதுச் சிந்தாந்தமும் மலர்ந்தது. மிகப் பெரிய ஞானியாகவும், பக்திசீலராகவும் திகழ்ந்த வியாசராயர்[2], ஸ்ரீ பாதராஜருக்குப் பின்னர், தாசர்களின் தலைவரானார். கன்னடத்தில், பக்திரசம் சொட்டும் பல பாடல்களைத் தந்துள்ள இவருக்குக் கிருஷ்ணன், தன் நடனத்தையே காட்சி தரிசனமாகக் கொடுத்துள்ளான். தாசகூட்ட சம்பிரதாயத் தலைவர் என்பதாகவும், தத்துவஞானி என்பதாகவும் மட்டுமல்லாமல், இன்னும் இரண்டு பெரிய இசை மகான்களை உலகுக்குக் காட்டியவர் என்பதாகவும் வியாசராயருக்கு ஒரு சிறப்புண்டு.

'தென்னிந்தியக் கர்நாடக இசையின் தந்தை' என்று போற்றப்பெறுகிற புரந்தரதாசரும், உடுப்பி கிருஷ்ணனின் முழுமையான அருளைப் பெற்ற கனகதாசருமே வியாசராயரால் அடையாளம் காட்டப்பெற்ற, அவர்தம் சீடர்களாவர்.

புரந்தரதாசர் மற்றும் கனகதாசர் ஆகியோரின் காலகட்டத்திலேயே வாழ்ந்த மற்றுமொரு தாசகூட்டத் தவசீலர், வாதிராஜராவார்[3]. வடமொழியில் நுண்மாண் நுழைபுலம் கொண்ட

2. ஸோஸலே வியாசராஜ மடத்தின் பீடாதிபதியே இவர்.
3. ஸோதே மடத்தின் பீடாதிபதியாக விளங்கியவர்.

இவர், த்வைத வேதாந்த நூல்கள் பலவற்றின் ஆசிரியர். துளுவ அந்தணக் குடும்பத்தைச் சேர்ந்தவர். கர்நாடகப் பகுதிகளில் மட்டுமல்லாது, குஜராத் வரையில் இவருக்குச் சீடர்கள் இருந்தனர். யுக்திமல்லிகா என்னும் இவரின் கவிதை நூல் த்வைத தத்துவத்தின் மிகப்பெரும் ஆவணமாகும்.

பெல்லாரி மாவட்டத்தின் சிப்கிரி என்னும் ஊரைச் சேர்ந்த தாசகூட்ட ஞானி, விஜயதாசராவார். புரந்தரதாசரைப் பெரிதும் ஆராதித்த விஜயதாசர், தம் ஆத்மார்த்த குருவின் வாழ்க்கை நிகழ்வுகளையெல்லாம் பாடிவைத்துள்ளார். புரந்தரதாசரின் வரலாற்றை அறிந்துகொள்ள இவையே உதவுகின்றன.

விஜயநகர சாம்ராஜ்ய மன்னராகக் கிருஷ்ணதேவராயர் விளங்கிய கி.பி. பதினாறாம் நூற்றாண்டில், அப்பகுதிகளில் புரந்தரதாசருக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் வழங்கப்பெற்றன. இதன் விளைவாக, தாசகூட்ட நெறியின் பாதிப்பு, அந்தப் பகுதிகளிலும் பரவியது; பல தாசர்கள் தோன்றினர். பதினெட்டாம் நூற்றாண்டில் இப்பகுதியில் தோன்றிய, ஜகன்னாததாசர் இயற்றிய 'ஹரி கதாம்ருத சாரம்' என்னும் நூல், எளிமையான கன்னடத்தில், எல்லோருக்கும் வழிகாட்டும் தத்துவ விளக்கமாகத் திகழ்கிறது.

### தாச சம்பிரதாய வழிமுறை

சமய தத்துவ வட்டாரங்களில், மக்கள் தன்மை கொண்ட சிறப்பு வழிமுறை என்று தாசகூட்ட முறைமையைச் சொல்லலாம். சமுதாயத்தின் எல்லாத் தரப்பு மக்களையும் ஈர்க்கக் கூடியது; சமயத்தின் உண்மை நோக்கம், தர்மநெறி, நியாய வழி ஆகியவற்றை மக்களிடம் பரவ வைக்கவும் நிலைப்படுத்தவும் தாசகூட்ட முறைமை ஏற்படுத்தியிருக்கும் முனைப்பு ஏராளம் ஏராளம்.

மக்களுக்குப் புரியக்கூடிய எளிய மொழியில், ஈர்க்கும் விதத்தில் த்வைதத்தின் கருத்துக்களைச் சொல்கின்றன தாச இலக்கியங்கள்.

கடவுள்மீது அபரிமிதமான நம்பிக்கையும் ஈடுபாடும் பக்தியும் கொண்டவர்கள், அப்படிப்பட்ட நிலைமையை எல்லோரும் அடைய வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துபவையாகவே இவை இருக்கின்றன. ஆழமான சமய உணர்வுகள் பிரதிபலிக்கப்படுகின்றன. தன்னேரில்லாத, தனியான, எல்லாம் உணர்ந்து, எல்லாம் கடந்து, எல்லாவற்றுக்கும் மேம்பட்டவனான கடவுளே இப்பாடல்களின் மையப் பொருள். பிரகிருதியின்

தொடர்பால் பிறப்பு - இறப்பு என்னும் சுழலுக்குள் உழலுகின்ற ஆன்மாக்களைக் காப்பாற்றவேண்டியவர் கடவுளே! தசைப்பிண்டமாக இருக்கின்ற இத்தகைய பிறவிச் சுழல்களிலிருந்தும், பிறவிப் பெருங்கடலிலிருந்தும் எப்படிக் காப்பாற்றப்படுவது? கடவுளின் கருணை மட்டுமே அதைச் சாதிக்க முடியும். கடவுளின் கருணையை எப்படிப் பெறுவது? வேறு எதிலும் நினைப்பின்றி, பக்தியில்மட்டுமே உள்ளம் திளைக்குமானால் இறைவனின் கருணையைப் பெறலாம்.

பக்தியின் மேன்மையைக் காட்டப் புராணங்களிலிருந்தும் இதிகாசங்களிலிருந்தும் மேற்கோள்களையும் நிகழ்ச்சிகளையும் இப்பாடல்கள் காட்டுகின்றன.

மஹனீயர்களின் ஆன்மீக அநுபவங்களும் இப்பாடல்களில் கூறப்படுகின்றன. இனம், மொழி, மதம், சாதி, குலம் என்கிற எல்லாவிதப் பாகுபாடுகளையும் கடந்து பக்திமட்டுமே மனித ஆன்மாவைக் கரைசேர்க்க முடியும் என்னும் கருத்தை ஆணித்தரமாகக் கூறும் இப்பாடல்களில், கவிநயமும் சொல் வளமும் இசை சுகமும் அதிகம்.

லௌகீக பந்தங்களிலிருந்து மனிதரை விலக்கி, கடவுளின் பக்கம் திருப்பும்விதமாகவே தாசகூட்ட இலக்கியம் முழுமையும் அமைகிறது.

தாசகூட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கென்று தனியான சடங்குகளோ சம்பிரதாயங்களோ இல்லை. பண்டரிபுரத்தில் நடைபெறும் சம்மேளனங்கள்ல் கண்டிப்பாகக் கலந்து கொள்வது, தாசகூட்டத்தில் இணைகிற சமயத்தில் செய்யப்படும் பூஜை முறைகள், தாசகூட்டத்திற்கும் ஹரி நாமத்திற்கும் தங்களின் விசுவாசத்தைச் சூளுரைத்துக் கொள்வது, பக்திநெறிக்கு இசையையும் நடனத்தையும் அத்தியாவசியக் கருவிகளாகக் கடைப்பிடிப்பது ஆகிய இவையே தாஸகூட்டத்தினரில் பலரும் கைக்கொள்ளும் வழிமுறைகளாகும்.



# 13. வங்காள வைணவமும் மத்வ சம்பிரதாயமும்

வங்காளத்தில் தொடங்கி, வடபாரதம் முழுமைக்கும் கிருஷ்ண பக்தி மரபு பரவுவதற்குக் காரணமாக இருந்தவர் சைதன்ய மகாப்பிரபு. வங்காளத்தில் பரவலாக உள்ள வைணவ செவிவழிச் செய்திகள், சைதன்ய சம்பிரதாயமும் மத்வ சம்பிரதாயத்திலிருந்து தோன்றியதாகவே தெரிவிக்கின்றன.

பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், வங்காளத்தில் உள்ள நவத்வீபம் என்னும் ஊரில் தோன்றியவர் சைதன்யர். தெய்வ பக்தி என்பதோ இசைச் சிந்தனை என்பதோ உண்மையாக இல்லாமல், வெறும் ஆஷாடபூதித்தனம் நிறைந்திருந்த வங்காளம் அப்போது.

தம்முடைய இருபத்திரண்டாவது வயது வரையில் இத்தகு சூழலில் வாழ்ந்த சைதன்யர், அறிஞர் என்றும் நல்ல ஆசிரியர் என்றும் பெயர் வாங்கியவர். தம் தகப்பனாரின் ஈமக்கடன்கள் சிலவற்றை நிறைவேற்றுவதற்காக, கயைக்குச் சென்ற இடத்தில், வைணவ பண்டிதராக விளங்கிய ஈஸ்வர பூரியைச் சந்தித்தார். ஈஸ்வர பூரி, சைதன்யரைப் பக்தி இயக்கத்திற்குள் இட்டுச் சென்றார்.

கிருஷ்ண பக்தியில் ஊறித் திளைத்த சைதன்யர் தம் ஊருக்குத் திரும்பியபோது முற்றிலும் மாறியவராகத் திரும்பினார்.

நாம சங்கீர்த்தன முறையைத் தம் வாழ்விடத்தில் தொடங்கினார். 'ஹரி' என்னும் நாமம் ஓங்கி ஒலிக்கத் தொடங்கியது.

இருபத்துநான்கு வயதில் துறவறம் பூண்ட சைதன்யர், பூரி சென்று அங்கு வாழத் தொடங்கினார். பல்வேறு யாத்திரைகளையும் மேற்கொண்டார். ரூபா, சனாதனா என்னும் இரு சகோதரர்களும்

அவர்களுடைய மருமகனான ஜீவனும், பக்தி பற்றிய பாடம் கேட்டு அவரின் சீடர்களானார்கள்.

பக்தியை, குறிப்பாக ராதா-கிருஷ்ண பிரேம பக்தியை மையப்படுத்திச் சைதன்ய இயக்கம் பரவியது. இதுவே வங்காள வைணவம் என்றும் உருப்பெற்றது.

வியாசராஜ தீர்த்தரின் சீடர்களில் ஒருவரான லட்சுமிபதி[1], அவரின் சீடரான மாதவேந்திரபுரி, அவரின் சீடரான ஈஸ்வரபுரி, அவரால் பக்தியில் ஈடுபடுத்தப்பட்ட சைதன்யர் என்பதாக வங்காள வைணவ மரபுத் தகவல்கள் தெரிவிக்கின்றன.

இதுதவிர, சைதன்யர் தெற்கு மாநிலங்களில் பயணம் மேற்கொண்டபோதுகூட, மத்வ சித்தாந்தத்தால் அதிகம் ஈர்க்கப்பட்டதாகத் தெரியவில்லை.

ஆனால், வங்காள வைணவத்தைப் பெரிதும் வளர்த்த ரூப கோஸ்வாமியும், ஸநாதன கோஸ்வாமியும், ஜீவ கோஸ்வாமியும் மத்வ சித்தாந்தத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார்கள். இருப்பினும் முழுக்க முழுக்க அதனையே பின்பற்றினார்கள் என்று கொள்ள இடமில்லை.

காலப்போக்கில், ஹரி நாமத்தை வாயாரப் புகழ்ந்துரைப்பது, ஆண்டவனிடம் வைக்கும் பலவித பக்தி வகைகள், நாராயணனையே புருஷோத்தமனாகக் காண்பது, கிருஷ்ணனின் பரதத்துவ நிலையை ஏற்றுப் பக்தி செலுத்துவது என்று இரு சம்பிரதாயங்களுக்கும் ஒற்றுமை காணப் பல சூழல்கள் ஏற்பட்டன.

இன்றளவும் இவ்வொற்றுமைகள் நின்று செழிக்கின்றன.



1. வியாசராஜரின் வடதிசை யாத்திரைகளின் போது சீடரானவராக இருக்க வேண்டும்.

# ஸ்ரீ இராமாநுசர்

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| 1. | அறிமுகம் | - | 1 |
| 2. | வரலாறு போற்றும் வாழ்க்கை | - | 7 |
| 3. | பாரினை உயர்த்திய பணிகள் | - | 40 |
| 4. | வாழ்நெறி காட்டிய வாக்கு | - | 100 |
| 5. | காலக்குறிப்புகள் | | 110 |
| 6. | துணைநூற் பட்டியல் | | 112 |

# ஸ்ரீ இராமாநுசர்

## 1. அறிமுகம்

சமய வாழ்வில் பேரொளிப் பிழம்பாய்த் திகழ்ந்தவர் இராமாநுசர் சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கனையிருள் அகற்றும் ஒளிமிக்க ஞாயிறாக அவர் உதித்தார். வியப்பூட்டும் வண்ணம் தத்துவ வெளிச்சத்தைப் பாய்ச்சி, பார்த்தவர் கண்களை மருளச் செய்யவில்லை அவர். மாறாக, அடித்தட்டு மக்களையும் அன்பெனும் பிடிக்குள் அகப்படுத்தும் ஞான சூரியனாகவே அவர் உயர்ந்தார். அன்பின் பொழிவும் அறிவுச்சுடரும் இணைய, நிலவும் கதிரும்போல் ஒளிர்ந்தார். அந்த ஒளி இன்றளவும் நிலைபெற்று உலகுக்கு வழிகாட்டிக்கொண் டிருக்கிறது.

பெண்ணை வெறுப்பதும் உலகை விட்டு ஒதுங்கியிருப்பதும் துறவாகாது. 'வையத்து மக்களை வாழ்வாங்கு வாழச் செய்ய, ஒரு துறவியின் வாழ்க்கை எவ்வாறு உதவக்கூடும்?' என்பதற்கு இராமாநுசரின் வாழ்க்கை நல்ல முன்னுதாரணம். வாழ்நாளில் அவர் செய்த சாதனைகள் பல. மனிதநேயமிக்க சமயவாதியாக, சமூகப் புரட்சியாளராக, உயரிய மனிதப்பண்புகளுக்கெல்லாம் ஒரு கொள்கலமாக, அறிவின் எல்லை கண்ட ஒரு தத்துவ மேதையாக, உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று செய்யாத, ஒழுக்கசீலராக, சொல்லிய வண்ணமே செய்து முடிக்கும் ஆற்றல் மிக்கவராக அவர் வாழ்ந்தார். அதனால் செயற்கரிய செய்து, உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உறையும் உயரிய நிலையினைப் பெற்றார்.

'இராமானுசர்' என்பது இன்று நாடறிந்த திருப்பெயர். 'இளையாழ்வார்' என்னும் இயற்பெயர் கொண்டவரை யதிராசர், உடையவர், எம்பெருமானார், சடகோபன் பொன்னடி, கோயிலண்ணர் எனப் பல பெயர்களையிட்டு வைணவ உலகம் கொண்டாடுகின்றது. எனினும் சமயதத்துவ உலகில் அவரைக் குறித்து வழங்கும் ஒரு பெயர் - ஒப்பற்ற பெயர் இராமாநுசர் என்பதே. அவரைப் புகழ்ந்து அந்தாதியமைப்பில் நூல்செய்த திருவரங்கத்தமுதனாரும் பாடல்தோறும் 'இராமாநுசர்' என்னும் இந்த ஒரு பெயரையே எடுத்தாண்டார். 'இராமாநுச நூற்றந்தாதி' என்பது நூற்பெயர்.

இந்தியத் தத்துவ ஞானவரலாற்றில் சங்கரர் (கி.பி. 788-820). இராமாநுசர் (கி.பி. 1017-1137), மத்வர் (கி.பி. 1119-1278) என்னும் மூன்று பெயர்களும் முக்கியமானவை. இம்மூவரும் ஞானப்பேரரசர்களாக விளங்கியவர்கள். முறையே அத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதம் என்னும் கோட்பாட்டை வழங்கியவர்கள். இம்மூவருள்ளும் சமய தத்துவ எல்லையைத் தாண்டிப் பொதுநிலையில் உள்ள பலராலும் அதிகம் பேசப்பெறுபவர் இராமாநுசர் ஒருவரே. கடவுள் மறுப்புக் கொள்கையுடையவர்களும் இராமாநுசரை வியந்து நோக்கியதையும் நயந்து போற்றியதையும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும்.

" முத்தியோ சிலரின் சொத்தென இருக்கையில்
இத்தமிழ் நாடுதன் இருந்தவப் பயனாய்
இராமா நுசனை ஈன்ற தன்றோ? "

என்னும் பாவேந்தரின் பாராட்டுரை இவ்வகையில் நினைத்தற்குரியது. இதில் இராமாநுசரின் பிறப்பு தமிழ்நாட்டின் தவப்பயன் என்று சிறப்பித்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

'திருமாலைப் பரம்பொருளாகக் கருதிச் சரணடைய விரும்பியவர்கள் அனைவரும் வைஷ்ணவர்கள்; அவர்களுக்குள் சாதி வேற்றுமை இல்லை' என்று கருதியவர் இராமாநுசர். இதனை வெறும் உபதேசமாக்காமல், உறுதியோடு கடைப்பிடித்துக் காட்டவும் அவர் தயங்கவில்லை. குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ்ப்பட்டவர்கள் என்று கருதப்பட்டவர்களைத் திருக்குலத்தாராகக் கண்டு போற்றியது அவர் திருவுள்ளம். கர்நாடக மாநிலத்தில் உள்ள திருநாராயணபுரம் என்னும் மேல்கோட்டையில் திருமால் கோயில் கட்டுதற்கு அவர்கள் செய்த உதவிக்கு நன்றி பாராட்டும் வண்ணம்

கோயிலுக்குள் அவர்கள் சென்று வழிபடவும் அனுமதி அளித்தார் இராமானுசர். இவ்வகையில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே ஹரிஜனங்களின் ஆலயப்பிவேசத்திற்கு அடிகோலியவர் அவர். மேலும் ஸ்ரீரங்கபட்டணம், பேலூர் ஆகிய கர்நாடக நகரங்களில் உள்ள பெருமாள் கோயில்களில், இத்தகைய அனுமதி அளிக்கப்பட்டிருந்ததைப் புக்கனன் (Buchnan) போன்ற வரலாற்றாசிரியர்கள் தகுந்த ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டியுள்ளனர். ரைஸ் (Rice) என்ற ஆங்கிலேயரால் தொகுக்கப்பெற்று, 1897இல் வெளிவந்த மைசூர் கெஜட்டீர் (Gazetteer) இதழிலும் இதுதொடர்பான விவரங்களைக் காணலாம். அனைத்துக்கும் மேலாக ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே உரிய 'பஞ்ச சம்ஸ்காரம்' (சங்கு சக்கர முத்திரை, திருமண் தரித்துக் கொள்ளுதல்) முதலியவற்றைத் திருக்குலத்தாரும் பெற்றுக் கொள்ளும் உரிமையினை அளித்தார் அவர். இப்படி இராமானுசரின் அன்புநெறி அனைவரையும் தழுவிக்கொண்டதை, ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரியர், இராமானுசரின் வாழ்க்கை (Life of Ramanujacharya) பற்றி எழுதிய தம் நூல் ஒன்றிலும் குறிப்பிட்டிருக்கிறார்.

சாதி வேறுபாடுகளை அடியோடு நிராகரித்தவர் இராமானுசர். எனவே, அதனை ஒழிக்கும் வகையில் வைணவம் அனைவர்க்கும் உரித்தாவது என்று அறிவித்தார். 'பரந்தாமனின் அடியார்கள் பண்டைக்குலத்தைத் தவிர்ந்து, தொண்டக்குலமாகி விடுகிறார்கள்' என்னும் பெரியாழ்வார் திருமொழியை அப்படியே கடைப்பிடித்தார். திருமால் அடியார்கள் கூட்டத்தில் (பாகவத கோஷ்டி) சாதியைக் குறிப்பிடுவது (ஜன்ம நிருபணம்) கூடாது - என்னும் கொள்கையைத் தம் வாழ்விலும் செயற்படுத்திக் காட்டினார். மற்றவர்களுக்குத் தாமே முன்னுதாரணமாக விளங்கினார். அவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளே இதனை உறுதி செய்கின்றன.

காவிரியில் நீராடச் செல்லும்போது அந்தணரான முதலியாண்டானின் கையைப் பற்றிச் செல்வாராம் இராமானுசர். நீராடித் திரும்பும்போதோ தாழ்த்தப்பட்டவரான உறங்கா வில்லியின் கையைப் பற்றிக்கொண்டு நடப்பாராம். சாதியபிமானம் கொண்டவர்கள் இக்காட்சி கண்டு மருண்டார்கள். தீப்பூண்டை மிதித்தது போல் திகைத்தார்கள். ஆனால் இராமானுசரோ, 'சாதிச்செருக்கு நாராயணனுக்குச் செய்யும் இழுக்கு' என்று உணர்ந்தார். அங்ஙனம் உணர்ந்தமையினாலே, தம் வாழ்விலும்

பொதுமையுணர்வைத் தப்பாமல் கடைப்பிடித்துக் காட்டினார். அவர் செய்த அரியவற்றுள் எல்லாம் அரிய செயல் இது.

## எம்பெருமானார் தரிசனம்

கருணைக்கடலான எம்பெருமானைக் காட்டிலும் கருணையில் விஞ்சி நின்றவர் இராமானுசர். எனவே, எம்பெருமானார் (எமக்கெல்லாம் தலைவர்) என்னும் சிறப்புப்பெயரும் அவருக்கு ஏற்பட்டது. இதனை அங்கீகரித்த திருவரங்கத்து எம்பெருமானும் (இறைவனும்) ஸ்ரீவைஷ்ணவ மதத்துக்கு 'எம்பெருமானார் தரிசனம்' என்றே பெயர் சூட்டி மகிழ்ந்தானாம். மணவாள மாமுனிகள் தாம் பாடிய உபதேச ரத்தினமாலையில் (38) கீழ்க்காணும் வெண்பா ஒன்றில் இதனைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

" எம்பெரு மானார் தரிசனமென் றேயிதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார் - அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமா னார்வளர்த்த
அந்தச் செயலறிகைக் கா "

இராமானுசருக்கு முன்னர் நாதமுனிகள், ஆளவந்தார் போன்ற ஆசார்யர்களாலும், அவர்களுக்கும் முன்னர் ஆழ்வார்களாலும் வளர்க்கப்பட்டுத் தமிழ்மண்ணில் 'தீதில் நன்னெறி'யாகத் தழைத்தது வைணவ சமயமாகும். ஆனால், அவர்கள் காலத்தில் பெறாத வளர்ச்சியைப் பெற்று, இராமானுசர் காலத்தில் அது, உயர்ந்தோங்கி நின்றது. அவர் மூலமாகக் கர்நாடகத்திலும் பின் அங்கிருந்து வடஇந்திய மாநிலங்களுக்கும் சென்று பரவியது.

தாம் கற்ற கல்வியாலும் பெற்ற தத்துவ ஞானத்தாலும் அகந்தை கொள்ளாமல் - சாதாரண மக்களோடும் சங்கமித்து அவர்களிடமிருந்தும் கற்பன கற்று, அன்புநெறியில் அனைவரையும் அரவணைத்து, வைணவப்பயிரைச் செழிக்கச் செய்தார் இராமானுசர். திருமலைப்பயணத்தின் போது வழிதவறி விடவே, ஏற்றமிறைப்போன் ஒருவன் சரியான வழியைக் காட்ட, அவன்செய்த நன்றியை நினைந்து அவனையும் தண்டனிட்டு வணங்கினார் அவர். அவரின் ஆளுமை வெளிச்சம் ஆயிரம் சூரியக் கதிர்களாய்ச் சுடர்விடும் இடங்களில் இதுவும் ஒன்று. 'துறவிகளுக்கெல்லாம் அரசர்' என்னும் பொருளில் 'யதிராசர்' என்று போற்றப்பட்டவர் அவர். தம் காலத்தில் வழங்கிய தத்துவ நூல்கள் அனைத்தையும் கற்றுக் கரைகண்டவர். அதனால், 'எல்லா நூல்களின்

உண்மையறிந்தவர்' (ஸர்வ சாஸ்த்ரார்த்த தத்வஜ்ஞ) என்று போன்றப்படுபவர். அவர் இயற்றிய ஸ்ரீபாஷ்யத்தைப் படித்தாலே அவரின் பலதிறப்பட்ட தத்துவப் புலமை புலனாகும் என்பர். எனினும், தத்துவ விசாரணையால்மட்டும் அவர்மனம் நிறைவு காணவில்லை. இறைவனை அணுகுவதற்கு அறிவு வழியைவிட இதயவழியே சிறந்தது என்று அவர் கருதினார். எனவே, இறைவழிபாட்டில் அழகுணர்ச்சியையும் இணைத்துக் கடவுளைப் புவனசுந்தரனாகப் பாவித்து வணங்கும் நெறியை இராமானுசர் அறிமுகம் செய்தார். இந்த நெறியே மக்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. இதனால் வைணவம் மக்கள் இயக்கமாக அவர்காலத்தில் மலரத் தொடங்கியது. சத்தியம், ஒழுக்கம், அழகு ஆகிய மூன்றையும் ஒருசேரக் கண்ட தத்துவமே இராமானுசரின் தரிசனம் என்பர்.

கர்மத்தை வலிறுத்தியது சநாதன தர்மம். ஆனால் இராமானுசர், ஒருவன் எந்தச் சாதியில் பிறந்திருந்தாலும் இறைவனுடைய லீலைகளில் மனம் ஈடுபட்டால் அவனருளைப் பெறுவதற்கு உரிமையுண்டு என்று நம்பினார். இந்த நம்பிக்கையின் அடிப்படையில் அவர் வளர்த்த வைணவநெறி மக்களிடம் செல்வாக்குப் பெற்றதில் வியப்பில்லை அல்லவா?

''விசிட்டாத்வைதம் சமய ஒழுக்கத்தையும் சமய அனுபவத்தையும் விளக்குகிறது. ஆனால், அது வெறும் கொள்கைகளின் அடுக்கு அல்ல. செயலைத் தன் அடிப்படையாகக் கொண்டு விளங்கும் வாழ்க்கை விளக்கம் அது. இறைவனருள் எல்லாச் சமயத்தினருக்கும் சாதியினருக்கும் உண்டு என்ற முற்போக்கான கருத்தை உலகுக்கு அளித்தது அதுவே'' என்று அறிஞர்கள் இராமானுசர் கண்ட நெறியைப் பாராட்டிக் கூறியுள்ளனர். இராமானுசர் வகுத்த வைஷ்ணவ மதத்தின் அரசியல் வியாக்கியானமே காந்தியடிகள் கண்ட ராம-ராஜ்யம் என்றும் அவர்கள் கருத்துரைக்கின்றனர்.

ஆழ்வார்களின் பாசுரங்களை அடியொற்றி இராமானுசர் வளர்த்த பக்திநெறி வடநாட்டிலும் பரவியது. இராமானந்தர், கிருஷ்ண சைதன்யர், இராமதாஸ் ஆகியோர் பிற மதத்தாக்குதலை எதிர்கொள்ளவும் அதுவே உதவியது. இதனைச் சுவாமி விபுலானந்தர் பின்வருமாறு வியந்து பேசுவார்.

"இராமாநுஜ முனியாகிய பகீரதர் தென்னாட்டுத் தெய்வக்காவிரி வெள்ளத்தினை வடநாட்டுக் கங்கையிலே கலக்குமாறு செய்தார்.

கலப்பினால் ஏற்பட்ட அன்பு வெள்ளம் பாரத நாட்டின் மேற்குத்திசையிலும் பரவியது. மும்மையும் செம்மை வாய்ந்த இப்பாரத நாட்டிலே அரியின் திருநாமம் ஆயிரமும் யாங்கணும் முழங்குவன வாயின.

'இராமாநுசர் ஒரு துறவி; தத்துவ ஞானி' என்று விலகிப்போகாமல் அணுகிப்பார்த்தால் பல அதிசயங்கள் நமக்குப் புலனாகும். 'கணந்தோறும் வியப்புக்கள் புதியன தோன்றும்'. 'இந்நாள்வரை இவற்றை அறியாமல் இருந்தோமே' என்னும் ஏக்கம் தலைதூக்கும். மறுகணத்தில் 'இப்போதாவது அறியும் வாய்ப்பு நேர்ந்ததே' என்னும் மகிழ்ச்சி மேலோங்கும். இந்த நூற்றாண்டின் வாழ்வியல் சிந்தனைகளோடும் இணங்கிப் போவதாய் அவர் கருத்துகளும் வாழ்க்கையும் அமைந்திருப்பதை நம உள்மனம் உணரத்தொடங்கும்.

பலரும் தத்தம் நோக்கில் கொண்டாடத்தக்க குணச்சிறப்புகள் கொண்டதாக அவர் வாழ்க்கை அமைந்திருந்தது. சமயவாதிகள் மட்டுமன்றி, சமுதாயச் சிந்தனையாளர்கள், சீர்திருத்தவாதிகள், மெய்விளக்க அறிஞர்கள், வரலாற்றாசிரியர்கள், கவிஞர்கள், பல்வகை இலக்கியப் படைப்பாளிகள் - என இராமாநுசரிடத்தே ஈடுபட்டோர் பலர். அந்த ஈடுபாட்டின் விளைவாக இன்றளவும் வந்துகொண்டிருக்கும் நூல்களே இதற்குச் சான்று.

'வேதநூற் பிராயம் நூறு' என்னும் ஆழ்வார் வாக்கையும் தாண்டி, நூற்றிருபது ஆண்டுகள் வாழ்ந்தவர் இராமாநுசர். அந்த நெடிய வாழ்க்கையில் அவர் செய்த அரிய சாதனைகள் பலவாகும்.

இனி வரும் இயல்களில் அவரின் வாழ்க்கைச் சுருக்கத்தையடுத்து அத்தகைய சாதனைகள் சுட்டிக்காட்டப்பெறும். அவரது வாக்கும் பணியும் சமுதாய மேம்பாட்டுக்கு உதவிய பாங்கும் எடுத்துக்காட்டப்பெறும்.



# 2. வரலாறு போற்றும் வாழ்க்கை

திருமாலையே பரம்பொருளாக ஏத்தி வழிபடும் வைணவ சமயப் பெரியோர் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் என இருவகைப்படுவர். இறைவனாலே மயர்வறமதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆசார்யர்கள் ஆவர். ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு வைணவ சமயத்தை அசைக்கவொண்ணாதபடி நிலைநாட்டிய பெருமை ஆசார்யர்களுக்கே உரியது. ஆழ்வார்கள் ஈரத்தமிழ்ப் பாசுரங்களால் பக்திக் கோயிலை எழுப்பியவர்கள் என்றும் ஆசார்யர்களோ அப்பூங்கோயிலுக்கு அரணாக ஞானக்கோட்டை கட்டியவர்கள் என்றும் சிறப்பித்துக் கூறுவதுண்டு.

காலத்தால் மிகவும் முற்பட்டவர்கள் ஆழ்வார்கள். ஆகையால் அவர்களின் வரலாற்றை நாம் சரியாக விளங்கிக்கொள்ள முடியவில்லை; அப்படி விளக்கிக் கூறும் நூல்களும் அதிகம் இல்லை. இருக்கும் சில நூல்களும் கற்பனை கலந்து புனையப் பெற்ற கதைக்கோவைகளாகவே உள்ளன. ஆதலின் வரலாற்று முரண்களைக் களைந்து, ஆழ்வார்கள் வாழ்ந்த காலப்பகுதி முதலியவற்றை அறுதியிடுவதில் ஆராய்ச்சியாளரிடையே இன்றளவும் கருத்து வேற்றுமை நிலவுகின்றது. ஆனால், ஆசார்யர்களைப் பொறுத்தவரை சரித்திரத்தோடு ஒத்துப்போகும் சாதகமான நிலை காணப்படுகிறது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் அவதரித்த நாதமுனிகள் தொடங்கிப் பதினான்காம் நூற்றாண்டில் அவதரித்த மணவாள மாமுனிகள் வரை, ஆசார்யர்கள் பலரும் தோன்றி, வைணவ சித்தாந்தத்தைக் கட்டிக் காத்தனர். இவ்வாசார்யர்களுள் பலர், நூற்றுக்கணக்கில் நூல்களை இயற்றியுள்ளனர். அவைகளில் சில வரலாற்று நூல்களாகவே அமைந்திருப்பது வைணவத்திற்குக் கிடைத்த பெரும் பேறாகும். இவையேயன்றி ஆசார்யர்களைப் பற்றிய சரித்திரச் சான்றுகளைக்

கொண்ட நூல்களும் நூற்றுக்கணக்கில் உள்ளன. நாதமுனிகள் முதலான முந்தைய ஆசார்யர்களின் (பூர்வாசார்யர்கள்) காலத்தையொட்டி ஒருசில நூற்றாண்டுகளுக்குள் எழுதப்பட்ட நூல்கள் இவை. குறிப்பாக இராமாநுசரின் சீடர் பரம்பரையினரால்



*திருவரங்கம் பெரியகோயிலில் சுவரோவியம் - இராமாநுசர்*

பதினான்காம் நூற்றாண்டுவரை எழுதப்பட்ட நூல்கள் பலவும் இவற்றுள் அடங்கும். இந்நூலாசிரியர் சிலர் ஆசார்யர்களின் சமகாலத்தில் வாழ்ந்து அவர்களின் குணச்சிறப்புகளையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் நன்கு அறிந்தவர்கள். வேறு சிலரோ அடுத்த தலைமுறையைச் சேர்ந்தவர்களாய் நம்பகத்தன்மையுடன் கூடிய செய்திகளை அவர்களோடு பழகியவர்கள் சொல்லக் கேட்டறிந்து அவற்றைப் பதிவு செய்தவர்கள். ஆகையால், இந்நூல்கள் அனைத்தையும் தொகுத்து நோக்கினால், நாதமுனிகள் தொடக்கமாக உள்ள ஆசார்யர்கள் அனைவரின் வரலாற்றையும் ஓரளவுக்கு நாம் அறிந்துகொள்ள இயலும்.

இந்நூல்களிலும் புனைவுகள் உண்டு; ஒன்றோடொன்று முரண்பட்டுச் செய்திகளை விவரிக்கும் இடங்களும் உண்டு. பக்திபூர்வமான மனநிலையிலும் அதீதமான ஆர்வத்திலும் உண்மைக்கு ஊறு செய்யும் போக்கினையும் காணலாம். ஆயினும், அவற்றை முழுதும் பொய் என்று புறம்தள்ள முடியாது. அவற்றிலும் உண்மை கலந்திருப்பதையும் சரித்திரம் சார்ந்திருப்பதையும் நம்மால் உணர முடியும்.

வைணவ குருபரம்பரையை - ஆசார்யர்களின் வரிசை முறையை ஒரு ரத்தின மாலையாக (ஆசார்ய ரத்ன ஹாரம்) உருவகித்துக் கூறுவர்.

அந்த மாலையை நம் கண்முன்பே கீழ்க்காணுமாறு நிறுத்திப் பார்க்கலாம்.

பெரியபெருமாள்

பெரியபிராட்டியார் ✦ ✦ மணவாளமாமுனிகள்

சேனைமுதலியார் ✦ ✦ திருவாய்மொழிப்பிள்ளை

நம்மாழ்வார் ✦ ✦ பிள்ளைஉலகாசிரியர்

நாதமுனிகள் ✦ ✦ வடக்குத்திருவீதிப்பிள்ளை

உய்யக்கொண்டார் ✦ ✦ நம்பிள்ளை

மணக்கால்நம்பி ✦ ✦ நஞ்சீயர்

ஆளவந்தார் ✦ ✦ பட்டர்

பெரியநம்பிகள் ✦ ✦ எம்பார்

✵

✵

இராமானுசர்

ஆசார்ய வரிசையில் பெரியபெருமானாகிய இறைவனே முதல் ஆசார்யன். கடைசி ஆசார்யர் மணவாளமாமுனிகள். அழகு ஒளிரும் ரத்தினங்களால் தொடுக்கப்பெற்ற இந்த ஆசார்யமாலையில், நடுநாயகமாய் ஒளிர்பவர் இராமானுசர் மட்டுமே. வைணவ சமயத்துக்கு அவரால் கிடைத்த ஏற்றம் கருதி, அவருக்கு முந்தையோர் கொடுத்த சிறப்பு இது. இச்சிறப்பினை அவரது வைபவம்பற்றிப் பேசும் எல்லா நூல்களும் ஒத்த குரலில் - ஒரு மிடறாக எடுத்துரைக்கின்றன. இவருக்கு முன்பிருந்தவர்கள் இவர் திருமுடி சம்பந்தத்தால் பேறு பெற்றதாகவும் பின்புள்ளோர் திருவடி சம்பந்தத்தால் பேறு பெற்றதாகவும் கொள்வது வைணவர் துணிபு.

"முன்புள்ள ஆசார்யர்கள் இவருக்கு ஆசார்யர்களாய்ப் பேறு பெற்றார்கள்; பின்புள்ள ஆசார்யர்கள் இவருக்குச் சிஷ்யர்களாய் ஸ்வரூபம் பெற்றார்கள்" எனக் கூறுவர் பிள்ளைலோகஞ் சீயர்.

### இராமானுசர் பற்றிய நூல்கள்

இராமானுசரின் வரலாறுபற்றிப் பேசும் நூல்கள் பலவாகும். அவை தமிழிலும், வடமொழியிலும், தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையிலும் அமைந்துள்ளன.

## வடமொழி நூல்கள்

இராமானுசரிடத்தில் எல்லையற்ற பக்தி செலுத்தியவர் வடுகநம்பி என்னும் சீடராவார். இராமானுசரின் அணுக்கத் தொண்டராய் விளங்கியவர் அவர். இராமானுசரின் திருவடிகளையே வழியும் (உபாயம்) பயனுமாகக் (உபேயம்) கொண்டு வாழ்ந்தவர். இவர் இயற்றிய 'யதிராஜ வைபவம்' என்னும் வடமொழி நூலே, இராமானுசரது வரலாற்றைத் தெரிவிக்கும் முதல்நூல் என்பர். இது தவிர ஸ்ரீயதிராஜ மங்களம், அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்திரம் என்னும் இரு நூல்களையும் வடுகநம்பி அருளிச் செய்துள்ளார். இவற்றிலும் இராமானுசர்பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

இராமானுசரது சமகாலத்தில் வாழ்ந்தவர் கருடவாகன பண்டிதர். இவர் இயற்றிய 'திவ்யசூரி சரிதம்' என்னும் வடமொழி நூலிலும் இராமானுசரின் வரலாற்றைக் காணலாம்.

இராமானுசர் காலத்திற்குப் பின்னர் ப்ரபந்நாம்ருதம், ஸ்ரீராமானுஜ ஜம்பு, யதிராஜ விஜயம் போன்ற நூல்கள் வடமொழியில் எழுந்தன. வெவ்வேறு ஆசிரியர்களால் இயற்றப் பெற்ற இம்மூன்று நூல்களும் முறையே சுலோக வடிவிலும், உரையும் பாட்டும் கலந்த நடையிலும் (ஜம்பு), நாடக வடிவிலும் அமைந்தவை.

இவை தவிரத் தோத்திர வடிவில் அமைந்த இரண்டு வடமொழி நூல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவை. 'யதிராஜ ஸப்ததி', 'யதிராஜ விம்சதி' என்னும் பெயர் கொண்டவை. முறையே இவற்றை அருளிச் செய்தவர்கள் வேதாந்த தேசிகரும் (கி.பி. *1268 - 1369*), மணவாள மாமுனிகளும் (கி.பி. *1370 - 1443*) ஆவர்.

## மணிப்பிரவாள நூல்கள்

தமிழும் வடமொழியும் கலந்து எழுதப்பெற்ற மணிப்பிரவாள நூல்களில் பலராலும் சிறப்பித்துப் பேசப்படுவது பின்பழகிய பெருமாள் ஜீயர் இயற்றிய 'ஆறாயிரப்படி குருபரம்பரை' என்னும் நூலாகும்.

பிள்ளைலோகஞ் சீயர் செய்த 'ராமானுஜார்ய திவ்யசரிதை' என்னும் நூல் இராமானுசரின் வாழ்க்கை வரலாற்றை விரிவாகக் கூறுகிறது. புதிய கோணங்களில் பல புதுச் செய்திகளைக் கூறும் நூலாகவும் இது மதிக்கப்படுகிறது. மற்றைய மணிப்பிரவாள நூல்கள் வருமாறு :

1. குருபரம்பரை மூவாயிரப்படி;
2. பன்னீராயிரப்படி;
3. பெரிய திருமுடியடைவு;
4. அந்திமோபாய நிஷ்டை;
5. ரகஸ்ய விவேகம்;
6. சரமோபாய நிர்ணயம்;
7. பழநடை விளக்கம்;
8. கோயில்ஒழுகு;
9. திருமலையொழுகு

என்பன அவை.

## தமிழ் நூல்கள்

குருபரம்பரை என்ற தலைப்பில் ஆசார்யர்களின் வரலாற்றைச் செய்யுள் வடிவில் தெரிவிக்கும் ஆறு நூல்கள் தமிழில் உள்ளன. இவற்றுள் ஒன்றான வடிவழகிய நம்பிதாசரின் குருபரம்பரை கவியழகிலும் நாடகப் பாங்கிலும் சிறப்புடையதாய்த் திகழ்கிறது. இந்நூலின் முதற்காண்டம் ஆழ்வார்கள் வைபவம் பற்றியும் இரண்டாவது காண்டம் நாதமுனிகள் தொடக்கமான ஆசார்யர்கள் வைபவம் பற்றியும் பேசுகின்றது. *1118* செய்யுட்களில் இராமாநுசர் வரலாறு இந்நூலில் விரித்துரைக்கப்படுகிறது. ஆதிசேடனாகிய அனந்தாழ்வான் இளையாழ்வராகப் பிறந்தது முதல் - எதிராசராகத் திகழ்ந்தது - மண்ணுலகத்தில் உள்ள உயிர்களையெல்லாம் கடைத்தேற்றிக் கடைசியில் திருமாமணி மண்டபம் சேர்ந்தது வரையிலான வரலாற்றைப் பக்திச் சுவையொழுகப் பாடுகிறது.

அடுத்துத் தமிழில் உள்ள இராமாநுசர் பற்றிய துதி நூல்களுள் தனிச்சிறப்பு வாய்ந்தது இராமாநுச நூற்றந்தாதியாகும். இதனை இயற்றியவர் திருவரங்கத்தமுதனார். இராமாநுசர் காலத்தில் வாழ்ந்து அவரின் பெருமையை உணர்ந்து, உலகுக்கு உணர்த்தியவர் இவர். ஆழ்வார்களின் ஈரச் சொற்களின் சாரமெல்லாம் ஏற்றிப் பாடிய இவரது அமுதத் தமிழ் நூல், இராமாநுசரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நெஞ்சில் நிறுத்தி, அவரின் சாதனைகளைச் சாறு பிழிந்தாற்போல் வடித்துத் தருகிறது. இத்தகைய சிறப்பு நோக்கியே திவ்வியப்பிரபந்தத்தின் ஒரு பகுதியாகவே இது மதிக்கப்பட்டு வருகிறது.

இவை தவிர திவ்வியப்பிரபந்த வியாக்கியானங்களிலும், வார்த்தாமாலை போன்ற நூல்களிலும் இராமாநுசரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன. உரைகளிற் காணலாகும் ஐதீக நிர்வாகங்களும் இராமாநுசரின் திவ்வியப்பிரபந்த ஈடுபாட்டுக்கும் புலமைக்கும் சான்று பகர்கின்றன.

நாம் இதுவரை குறித்த நூல்கள் யாவும் இராமாநுசர் பெருவாழ்வு வாழ்ந்ததன் அடையாளமாகப் பிறந்தவையே.

வையத்தாரை வாழ்வித்துக் கரையேற்ற வந்தவர் இராமாநுசர் என்பதை இந்நூல்கள் ஒருமுகமாக எடுத்துரைக்கின்றன. உய்யும் நினைவுடையார்க்கு அவர் திருவடிகளே தஞ்சம் என்பதையும் உறுதி செய்கின்றன.

வரலாறு போற்றும் மகோன்னதமான வாழ்க்கைக்குரியவர் இராமாநுசர்.

இனி, முந்தையோர் நூல்களின்வழிப் பொதுவாக அறியலாகும் அவரின் வாழ்க்கையை - அவர்தம் வரலாற்றை இவ்வியலில் சுருக்கமாகக் காண்போம்.

## ஆதிசேடனின் அவதாரம்

சென்னையையடுத்துள்ள ஸ்ரீபெரும்பூதூரில் கி.பி. 1017ஆம் ஆண்டில் பிறந்தவர் இராமாநுசர். பிங்கள ஆண்டு சித்திரைத் திங்கள் வளர்பிறையில், பஞ்சமி வியாழக்கிழமை கூடிய திருவாதிரை நாளில், 'கலியிருள் நீங்கிப் பேரின்ப வெள்ளம் பொங்கும்படி' இவர் பிறந்ததாகக் 'குருபரம்பரை' கூறும்.

திருமாலின் படுக்கையான ஆதிசேடனின் அவதாரம் என்றும், திருமாலின் ஐம்படைகளின் தோற்றம் என்றும், வைணவ நூல்கள் இவர் பிறப்பினைச் சிறப்பித்துப் பேசுகின்றன.

## பெற்றோரும் சுற்றமும்

யமுனைத்துறைவர் என்னும் ஆளவந்தாரின் சீடர்களுள் ஒருவர் பெரிய திருமலைநம்பி. அவர் திருமலையே இருப்பாகக் கொண்டு, திருவேங்கடமுடையானின் அடிக்கீழமர்ந்து தொண்டு செய்துவந்தார். அவருக்குப் பூமிப்பிராட்டியார் என்றும், பெரிய பிராட்டியார் என்றும் சகோதரிகள் இருவர் இருந்தனர்[1]. மூத்தவரான பூமிப்பிராட்டியாரை ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்ந்த ஆசூரிகேசவப்பெருமாள்[2] என்பவருக்கு மணம் செய்து கொடுத்தார் பெரிய திருமலைநம்பி. இளையவரான பெரிய பிராட்டியார், மழலை மங்கலத்தைச் சேர்ந்த கமலநயனபட்டருக்கு வாழ்க்கைப்பட்டார்.

இவர்களுள் ஆசூரிகேசவப்பெருமாள் - பூமிப்பிராட்டியார் தம்பதிகளின் 'அருமந்த ஒரு மைந்தராக' அவதரித்தவரே இராமாநுசர். செய்தியறிந்த தாய்மாமனான பெரிய திருமலைநம்பி,

1. இவர்களை முறையே காந்திமதியென்றும் ஸ்ரீதேவி என்றும் நூல்கள் குறிப்பிடும்.
2. ஆசூரிகேசவ தீட்சிதர் என்றும், கேசவசோமயாஜியார் என்றும் இவர் பெயர் வழங்கும்.

ஸ்ரீபெரும்பூதூருக்கு வந்து குழந்தையின் திருமேனியழகும் பொலிவும் கண்டு பூரித்து, இளையபெருமாளாகிய இலக்குவனின் தகுதிகள் யாவும் பொருந்தியிருப்பது கண்டு, 'இலக்குவனின் பெயர் தாங்குவதற்கு ஏற்றவர்' ('லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:') என்னும் கருத்தில் இளையாழ்வார் என்று பெயர் சூட்டினார்.

## கல்வியும் திருமணமும்

அதன்பின்னர் அந்தணர் குலத்துக்குரிய சடங்குகள் யாவும் செய்யப்பெற்றுத் தம் தந்தையாரிடமே மறைகளையும் சாத்திரங்களையும் கற்கத் தொடங்கினார். பிரமசரிய நெறியில் நின்று, வளர்பிறையென்று பலரும் விளம்பப் பதினாறாம் பிராயத்தையடைந்தார். அக்கால வழக்கத்திற்கேற்பப் பதினாறாம் வயதில் அவருக்குத் திருமணமும் நடந்தேறியது. மனைவி பெயர் தஞ்சமாம்பாள்[3]. திருமணம் முடிந்த சின்னாட்களுக்குள் தந்தையார் ஆசூரிகேசவர் காலமானார். அதன்பின்னர் இளையாழ்வார் தாயையும் மனைவியையும் அழைத்துக்கொண்டு, கல்விக்கும் கலைகளுக்கும் பெயர் போன பெருமாள் கோயில் எனப்படும் காஞ்சிபுரத்திற்குக் குடிபெயர்ந்தார்.

## வேதாந்தப் பயிற்சி

காஞ்சியையடுத்த திருப்புட்குழி என்னும் ஊரில், யாதவப்பிரகாசன் என்னும் அத்துவைதப் பண்டிதரிடம் வேதாந்தம் கற்கச் சென்றார். சிற்றன்னை மகனான கோவிந்தரும் இவரோடு அவ்வேதாந்தப் பயிற்சியிற் சேர்ந்துகொண்டார். இளையாழ்வாருக்கு, எட்டு வயது இளையவர் இவர். இருவரும் காஞ்சியிலிருந்து நாள்தோறும் திருப்புட்குழிக்குச் சென்று வந்தனர்.

## குருவை மிஞ்சிய சீடர்

யாதவப்பிரகாசரிடத்தே இளையாழ்வாரின் வேதாந்தப் பயிற்சி நீடிக்கவில்லை. மறைக்கூற்றுக்கள் சிலவற்றுக்கு யாதவர் கூறிய விபரீதப் பொருள்களைக் கேட்டு, அவரால் வாய்மூடிக்கொண்டு வாளா இருக்க முடியவில்லை. 'அவற்றின் உண்மைப் பொருள் இது' என்று குருவுக்கே எடுத்துரைத்தார் சீடர்.

சாந்தோக்கிய உபநிடதத்தில் இடம்பெறும் 'கப்யாஸம்' என்னும் சொல்லுக்கு 'இறைவனின் தாமரைக் கண்கள் குரங்கின் பின்புறம் போல் சிவந்திருந்தன' என்று அவப்பொருள் கூறினார்

---

3. அபயாம்பாள், இரட்சகாம்பாள் என்னும் பெயர்களும் இவருக்கு வழங்குகின்றன.

யாதவர். இதைக் கேட்டதும் அவருக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்த இளையாழ்வாரின் கண்களில் நீர் பெருகியது. துயரத்தால் வெப்பமிகுந்து சிந்திய அக்கண்ணீர் குருவின் தொடையைச் சுட்டது. பதறிப் போன யாதவர் கண்ணீருக்குக் காரணம் கேட்க, குருவின் விளக்கம் தவறானது என்றார் சீடர். ஏற்ற வகையில் பதங்களைப் பிரித்து, 'சூரிய மண்டலத்தினுள்ளே உறையும் இறைவனுடைய கண்கள், அக்கதிரவனால் மலர்ச்சி பெறும் கமலப்பூக்களைப் போல் இருந்தன' என்று பொருத்தமாகப் பொருளுரைத்தார் இளையாழ்வார்.

இவ்வாறே தைத்திரிய உபநிடத வாக்கியங்களுக்கு அத்வைத அடிச்சுவட்டில் யாதவர் கூறிய விளக்கங்களையும் அவர் ஏற்கவில்லை; தம் அறிவார்ந்த விளக்கங்களால் மெய்யான பொருளை நிலைநாட்டினார்.

## குருவின் கொலை முயற்சி

சீடரின் புத்திக்கூர்மை கண்டு குருவின் மனத்தில் மகிழ்ச்சி பொங்கவில்லை; மாறாகச் சினமே பொங்கியது. 'இவனால் அத்வைதத்துக்கு ஆபத்து ஏற்படுமோ?' என்று அஞ்சினார். அந்தரங்க சீடர்களோடு ஆலோசித்தார். 'காசியாத்திரை' என்ற பெயரில் 'இவரைக் கங்கையில் தள்ளிக் கொன்றுவிட வேண்டும்' என்று சதித் திட்டம் உருவாயிற்று.

## குருவும் மற்றைச் சீடர்களும் ஆடிய 'குருட்டாட்டம்' வெற்றி பெற்றதா?

வஞ்சனையறியாத இளையாழ்வார் தாயின் அனுமதி பெற்றுக் காசி யாத்திரைக்குப் புறப்பட்டார். அவரோடு சிற்றன்னை மகனான கோவிந்தரும் உடன் சென்றார். விந்திய மலைச்சாரலை யணுகிய நிலையில் குருவின் அந்தரங்க நோக்கம் கோவிந்தருக்குத் தெரிந்துவிட்டது. இந்தச் சதியிலிருந்து தம் தமையனைக் காக்க உறுதி பூண்டார். காலமும் வாய்ப்பும் கருதிக் காத்திருந்தார். ஒருநாள் விடிகாலைப் பொழுதில், இளையாழ்வார் நீர்நிலை நோக்கிச் சென்ற போது, பிறர் அறியாவண்ணம் அவரைப் பின்தொடர்ந்த கோவிந்தர், யாதவரின் கொலை நோக்கத்தை எடுத்துரைத்து, தப்பிப் போய்விடுமாறு அறிவுறுத்தினார்.

## காத்தது இறையருள்

இளையாழ்வாரும் உடனே அவ்விடத்தை விட்டு அகன்று குறுக்கே பாய்ந்து நெடுந்தூரம் போய்த் திக்குத் தெரியாத அக்காட்டில் வழி தெரியாமல் பக்கம் நோக்கி ஒரு மரத்தடியில்

நின்றார். மதியெலாம் உள்கலங்கி, 'ஆவாரார் துணை?' என்று அவர் அலமந்து நின்றபோது, வேடன் ஒருவனும் வேடுவச்சியும் தோன்றி, அவரின் கலக்சம் தீர்த்துக் கூடவே வந்து வழி காட்டக் காஞ்சி மாநகரையடைந்தார்.

இப்படி, கொலைக்கும் அஞ்சாமல் குருநாதர் வலை விரிக்க, கொலைத் தொழில் வேடன் ஒருவன் உயிர் காத்த அதிசயம் இளையாழ்வாரின் வாழ்வில் நடந்தது. இவ்வதிசயத்தைக் கருதியே, வேடர் வடிவிலே வந்து 'உருக்காட்டாதே ஒளித்துச் சென்றவர்கள்' காஞ்சிப் பேரருளாளனும் பெருந்தேவித் தாயாருமே என்று வைணவ நூல்கள் உற்சாகத்துடன் இதனை விவரிக்கின்றன.

யாதவரின் கருத்தைப் பிழைப்பித்துக் காஞ்சிக்குத் திரும்பிய இளையாழ்வார், தாயின் தகவுரைப்படி தாம் பெரிதும் மதித்துப் போற்றிய திருக்கச்சிநம்பியைச் சந்தித்தார். அவரின் அறிவுரைக்கேற்பச் சாலைக் கிணற்றிலிருந்து காஞ்சிப் பேரருளாளனுக்குத் திருமஞ்சன நீர் கொண்டுவரும் பணியில் ஈடுபட்டார்.

### ஒட்டாத உறவு

மூன்று மாதங்கள் கடந்தன. காசி யாத்திரை முடித்துக் கச்சிக்குத் திரும்பினார் யாதவப் பிரகாசர். 'காட்டில் கொடிய மிருகங்கள் இளையாழ்வாரைக் கொன்றிருக்கக் கூடும்' என்ற நினைப்பில் இருந்தவர் அவர். ஆனால், சீடன் உயிரோடிருப்பது அவருக்கு அதிர்ச்சியளித்தது. எனினும், அதை வெளிக்காட்டிக்கொள்ளாமல், 'இளையாழ்வார் விரும்பினால் மீண்டும் தம்மிடம் கல்வி பயில வரலாம்' என்று செய்தி சொல்லியனுப்பினார். அவரும் இசைந்து வந்தார். கல்விப் பயிற்சி தொடர்ந்தது; முன்போலவே யாதவரை மறுத்து, மறைக் கூற்றுகளுக்கு நற்பொருளுரைக்கும் சீர்மையும் தொடர்ந்தது.

### 'ஆம் முதல்வன் இவன்'

இந்நிலையில் திருவரங்கத்திலிருந்து தம்முடைய முதலிகளோடு[4] புறப்பட்டுக் காஞ்சிபுரத்திற்கு வரதராசப் பெருமாளைத் தரிசிப்பதற்காக வந்திருந்தார் ஆளவந்தார். இளையாழ்வாரைப்பற்றி முன்பே அறிந்தவராதலின், 'தமக்குப் பிறகு வைஷ்ணவத்தைக் கட்டிக் காத்து வளர்க்கக் கூடியவர் இவரே'

---

4. முதலிகள் - சீடர்கள்

என்று எண்ணியிருந்தார். 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்னும் பாசுரத்தின்படித் தம் பாட்டனாராகிய நாதமுனிகளுக்கு 'வருங்கால ஆசார்யர்' என்று நம்மாழ்வார் காட்டியருளியது இவரது அவதாரத்தையே என்று உறுதியுடன் நம்பினார்; 'இவராலேயே உலகம் தீங்கின்றி வாழப் போகிறது' என்பதும் அவரின் எதிர்பார்ப்பாக இருந்தது. ஆதலின், காஞ்சி வரதராசப் பெருமாள் கோயிலில் யாதவப் பிரகாசருடன் வந்த சீடர் கூட்டத்தை நோக்கி, இத்திரளில் 'இளையாழ்வார் யார்?' என்று திருக்கச்சிநம்பியிடம் ஆளவந்தார் கேட்க, அவரும், 'அதோ சிவந்து - உயர்ந்து - வலியராய், தாள்தோய் தடக்கையுடன் எடுப்பான தோற்றத்தோடு நடுவே வருகின்றவர்' என்று அடையாளம் காட்டினார். காட்டவும் தம் நயனங்களாலே அவரைக் குளிர நோக்கிய ஆளவந்தார், ஆழ்வாரின் அமுத வாக்கால் 'ஆம் முதல்வன் இவன்' (அடியார்களுக்குத் தலைவனாகக் கடவன்) என்று தொலைவிலிருந்தே வாழ்த்தியருளினார். 'இவரை நம் தரிசனத்திற்குக் கொண்டு வந்து சேர்க்க வேண்டும்' என்று காஞ்சிப் பேரருளாளனை வேண்டிக்கொண்டு, தம் முதலிகளோடே திருவரங்கம் திரும்பினார் அவர்.

## பீழை தராத பிரிவு

இளையாழ்வார் யாதவரிடம் தொடர்ந்து கற்றபோதும் முன்போலவே பொருள் உரைப்பதில் இருவருக்கும் இடையில் வேற்றுமை முற்றியது. 'இனிமேல் நீர் எம்மிடம் வாசிக்க வரவேண்டாம்; உம்முடைய தகுதிக்கேற்ப வேறு இடம் தேடிக் கொள்ளலாம்' என்றார் யாதவர். அன்றோடு பயிற்சி நின்றது. யாதவரைப் பிரிந்ததில் அவருக்கு மனவருத்தம் சிறிதும் இல்லை. மிகுந்த உகப்போடு முன்னர்த் திருக்கச்சிநம்பி தமக்கிட்ட தெய்வப் பணியினைத் தொடர்ந்தார். சாலைக் கிணற்றிலிருந்து நாள்தோறும் பேரருளாளனுக்குத் திருமஞ்சன நீர் கொண்டு வரும் கைங்கர்யத்தில் ஈடுபட்டார் இளையாழ்வார்.

## தென்னரங்கம் நோக்கி

இதற்கிடையில் நோயுற்றிருந்த ஆளவந்தார், தம் சீடரான பெரியநம்பியைக் காஞ்சிக்கு அனுப்பி, இளையாழ்வாரைத் தம்மிடத்தே அழைத்துவருமாறு பணித்தார். காஞ்சிக்கு விரைந்த பெரியநம்பி, திருக்கச்சிநம்பியிடம் செய்தி தெரிவித்து, மறுநாள் காலையில் நீராடி முடித்ததும், இளையாழ்வார் திருமஞ்சன நீர் கொண்டுவரும் வழியில் அமர்ந்து, ஆளவந்தாரின்

'தோத்திர ரத்தின'த்தை அவர் செவியில் படுமாறு இசைத்துக் கொண்டிருந்தார். அதன் பொருளிலும் இசையிலும் மயங்கிய இளையாழ்வார், 'இதனை அருளிச்செய்த பெரியார் யார்?' என்று வினவ, 'ஆளவந்தார் அருளியது' என்றார் பெரியநம்பி. 'அவரைக் காண வேண்டும்' என்னும் பேரவாவினை இளையாழ்வார் வெளியிடவும், இதனை எதிர்நோக்கிக் காத்திருந்த பெரியநம்பியும், 'நீர் நம்மோடே சேர வாரீர்' என்று அவரை உடன் அழைத்துக்கொண்டு, அப்போதே கோயில் (திருவரங்கம்) நோக்கிப் புறப்பட்டார். ஆனால், ஆளவந்தார் - இளையாழ்வார் கூட்டுறவு நிகழாவண்ணம் விதியின் முடிவு வேறாக அமைந்தது.

### ஆளவந்தார் மறைந்தார்

அவ்விருவரும் திருவரங்கத்தின் - வடதிருக் காவேரியை வந்தடைந்தனர். அப்போது விடாய்த்து வந்தவனுக்குத் தடாகம் வற்றிக் கிடந்தாற்போன்ற வருத்தம் உண்டாயிற்று இருவருக்கும். எங்கு நோக்கினும் வெள்ளம் போல் அடியார் கூட்டம்! எதிரேற வந்தவர்களை விசாரித்தபோது, 'ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளினார்[5]' என்றும், 'அவரைத் திருப்பள்ளிப்படுத்தவே[6] திருக்கரம்பன் துறையில் பெருந்திரளாக மக்கள் கூடியுள்ளனர்' என்றும் செய்தி தெரிந்தது. இதனைக்கேட்ட இளையாழ்வார், தளர்ந்து தரையில் விழுந்து ஏங்கி மோகித்து, 'இனி எங்கே காண்பேன்' என்று பலவாறு புலம்பிக் கண்பனிசோர நின்றார். பெரியநம்பி அந்தக் கோலத்தைக் கன்னுற்றுத் தாளாதவராய், 'வாளேறு காணத் தேளேறு மாயும்' என்றது போலே, தம்முடைய துயரத்தை மறந்து இளையாழ்வாருக்கு ஆறுதல் கூறத் தொடங்கினார்.

### மூன்று சபதங்கள்

அவர் தேற்றத் தெளிந்தபின்னர், ஆளவந்தாரின் திருவுடம்பைக் கண்டு அடிமுதல் முடிகாறும் சேவித்து, அவருடைய வலது திருக்கையில் மூன்று திருவிரல்கள் மடங்கியிருப்பதைக் கண்டார். அதற்குக் காரணம் வினவ, விவரமறிந்த திருவரங்கத்துப் பெரியயோர்களிற் சிலர் ஆளவந்தாரின் மனக் குறைகளாக மூன்றைக் குறிப்பிட்டனர்.

---

5. திருநாட்டுக்கு எழுந்தருளல் - காலமாதல்; மறைவு.
6. திருப்பள்ளிப்படுத்தல் - அடக்கம் செய்தல்.

1. வியாச, பராசர முனிவர்களிடத்தில் நன்றியுணர்வு.
2. நம்மாழ்வாரிடத்திலே அளப்பரும் பற்று.
3. பிரம்ம சூத்திரங்களுக்கு ஆழ்வார்களின் கொள்கைகளுக்கு இசைய விரிவுரை செய்யும் விருப்பம்

என்பன அவை.

அருகிருந்த பெரியநம்பியும் 'இம்மூன்றும் அவர் திருவுள்ளத்தில் ஓடிக் கொண்டிருந்த ஆசைகள்' என்பதை ஆமோதித்தார். அதைக் கேட்ட இளையாழ்வாரிடம் ஓர் உறுதி பிறந்தது. பலரும் அறியப் பின்வருமாறு அவர் பேசி முடித்தார்.

''இவ்வுடலும் வலியதாய், இவருடைய (ஆளவந்தார்) அருளும் அடியேனிடத்தில் பரிபூரணமாய், அந்தச் சர்வேச்வரனும் அடியேன் நினைத்தபடி தலைக்கட்டுவானாகில்[7] இக்குறைகள் மூன்றையும் தீர்க்கக்கடவேன்'' என்று சூளுரைத்தார். உடனே அம்மூன்று திருவிரல்களும் நிமிர்ந்தன. இதனைக் கண்டார் அனைவரும் 'இவற்றைச் செய்து முடிக்க வல்லவர் இவரே' என்றும், 'ஆளவந்தாருக்குப் பின்னர் இத்தரிசனத்தை (வைணவ நெறியை) வழி நடத்தும் தகுதியுடையவர் இவரே' என்றும் வாழ்த்தியருளினார்கள்.

## காஞ்சிக்குத் திரும்பினார்

அதன்பின்னர்ப் பெரியநம்பியை வணங்கி விடைபெற்றுக் கொண்டு, ஆளவந்தாரை உயிருடன் காண முடியாமைக்கு வருந்தி, திருவரங்கத்துப் பெருமாளையும் திருவடி தொழாதே அவரை வெறுத்து, காஞ்சிபுரத்திற்கு மீண்டு சென்றார். அங்குப் பேரருளாளனுக்குச் சாலைக்கிணற்று நீர் கொண்டுவரும் தொண்டிலும் அருளாளனின் அன்புக்கிசைந்த தொண்டரான திருக்கச்சிநம்பிகளுடன் உரையாடி மகிழ்வதிலும் காலம் கழித்தார். அவரைத் தம் ஆசார்யனாக்கிக் கொள்ள இளையாழ்வாரின் மனம் விரும்பியது. அந்தணரல்லாத திருக்கச்சிநம்பி அதற்கு இசையவில்லை. 'வைதிக வரம்புக்குப் பொருந்தாது' என்று மறுத்துவிட்டார்.

## நிறைவேறாத விருப்பம்

அதன்பின்னர், திருக்கச்சிநம்பி உண்டு முடித்த மிச்சிலை, ('போனகம் செய்த சேடம்') உண்ணும் எண்ணத்துடன், தம் குடிசைக்கு வந்து ஒருவேளை உணவருந்துமாறு அவரை வேண்டி

7. தலைக்கட்டுதல் - முடித்து வைத்தல்; நிறைவேற்றுதல்.

நின்றார். இசைந்த நம்பி, இளையாழ்வார் அழைக்க வருகையில், வேறு வழியாக அவரின் திருமாளிகைக்குச் சென்று, கோயிலில் தாம் செய்யும் திருவாலவட்டப் பணிக்கு[8]க் கடுகச்செல்ல வேண்டும் என்று காரணம் காட்டி, இளையாழ்வாரின் தேவியாரிடம் உடனே உணவளிக்குமாறு வேண்டி, அவர் வருவதற்குள் சாப்பிட்டு முடித்துச் சென்றார். அவர் சென்றதும், அவர் அமுது செய்த இலைத் தளிகையைக் கோலாலே தள்ளி, அவ்விடத்தைக் கோமயத்தால் சுத்தி செய்து, தானும் நீராடி நின்றார் தஞ்சமாம்பாள். வீடு வந்த இளையாழ்வாருக்குத் தம் விருப்பம் நிறைவேறாமை வருத்தத்தைத் தந்தது. அடியார்களிடத்தில் சாதி வேற்றுமை பாராட்டும் தம் மனைவியின் செயலால் அவர் மனம் கன்றியது. 'இனிச் செய்யத்தக்கது யாது?' என்று சிந்தித்தார். திருக்கச்சிநம்பியின் மடம் நோக்கி விரைந்தார். அவர் திருவடிகளில் வணங்கியெழுந்து, ''தேவரீர் திருவுள்ளத்தாலே அடியேனை[9] ஒதக்கியருளினீர்; ஆகிலும் அருளாளனைக் கேட்டாவது அடியேனுள்ளிருக்கும் சில நினைவுகளை நிறைவேற்றித் தரவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

### ஆறு வார்த்தைகள்

அவர் விரும்பியவண்ணம் பேரருளாளனிடம் 'ஆறு வார்த்தைகள்' பெற்று, அவற்றை இளையாழ்வாரிடம் தெரிவித்தார் திருக்கச்சிநம்பி.

1. திருமாலே பரம்பொருள்.
2. உயிருக்கும் இறைக்கும் (ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும்) வேற்றுமை உண்டு.
3. சரணாகதியே வழி.
4. உயிர் பிரியும்போது இறை நினைவு அவசியமன்று.
5. உடம்பின் முடிவில் வீடு.
6. பெரியநம்பியை ஆசார்யனாக அடைக

என்பன அவ்வார்த்தைகள்.

### இளையாழ்வார், இராமாநுசர் ஆனார்

இவற்றுள் ஆறாம் வார்த்தை உடனடியாக நிறைவேறி, அவர் வாழ்வில் திருப்பத்தை ஏற்படுத்தியது. அதனால் இதுகாறும் இளையாழ்வாராக இருந்தவர், சமய வாழ்வில் இராமாநுசராக மாறும் காலம் நெருங்கியது.

8. திருவாலவட்டப் பணி - இறைவனுக்கு விசிறி கொண்டு வீசும் பணி.
9. அடியேன் - திருமால் அடியார்கள் தம் பணிவு தோன்ற இவ்வாறு தம்மைப் பற்றிக் கூறிக்கொள்ளுதல் மரபு.

ஆம்! திருவரங்கம் பெரிய கோயிலில் உள்ள ஆளவந்தாரின் சீடர்களான பெரியோர்கள் இளையாழ்வாரைத் திருவரங்கத்திற்கு வரவழைத்துத் தங்களின் சமயத் தலைவராக்கிக் கொள்ள விரும்பினார்கள். அதனைச் செயலாக்கும் வகையில் பெரியநம்பியைக் காஞ்சிக்குச் செல்லுமாறு வேண்டினார்கள். பெரியநம்பியும் தம் தேவியாருடன் காஞ்சி நோக்கிப் புறப்பட்டார். இதற்கிடையில் இளையாழ்வாரும் திருக்கச்சிநம்பி மூலமாகப் பேரருளாளன் தமக்குக் கட்டளையிட்டபடி, பெரியநம்பியை ஆசார்யனாகப் பற்றும் நோக்கத்தில் கோயில் (திருவரங்கம்) நோக்கிப் புறப்பட்டார். இருவரும் மதுராந்தகத்தில் - ஏரிகாத்த பெருமாள் கோயிலில் சந்தித்தனர். 'எண்ணின பலம் எதிரே வந்து வாய்த்தது' என்று மகிழ்ந்தார் இளையாழ்வார். அப்போதே ஓடிச் சென்று பெரியநம்பியின் திருவடிகளில் விழுந்து - யாக்கைநிலையாமையைச் சுட்டிக்காட்டி, தமக்கு உடனே 'இதோபதேசம்' செய்தருள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவரின் ஆர்வத்துடிப்புக் கண்டு மகிழ்ந்து கையைப் பிடித்து அழைத்துக்கொண்டுபோய், அங்கேயே திருக்கோயில் மகிழ மரத்தடியில் தமக்கு வலப்புறத்திலே அமரச் செய்து, தமது வலத்திருக்கரத்தை அவர் தலையின் மேலும் இடது கையை அவர் இருதயத்துக்கு அருகிலும் வைத்துக் குளிர நோக்கி, தமக்கு ஆசார்யரான ஸ்ரீஆளவந்தார் திருவடிகளைத் தியானித்துக் கொண்டு, மந்திர ரத்தினமான துவயத்தை[10] அவரின் வலது திருச்செவியிலே உபதேசித்தருளினார். சங்கு சக்கர முத்திரை பொறித்தல் முதலான 'பஞ்ச சம்ஸ்காரங்க[11]'ளையும் செய்துவைத்தார். அப்போது அவர் உள்ளம் மகிழ்ந்தும் நெகிழ்ந்தும் சொன்ன வார்த்தைகள் வருமாறு:

''பெருமாள் நாட்டுக்காக ஸ்ரீபரதாழ்வான் தலையிலே திருவடி நிலைகளை வைத்துக் காட்டுக்கு எழுந்தருளினாற்போலே,

---

10. துவயம் : இரு தொடர்களால் ஆகிய மந்திரம்.

''ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:'' என்பது அது.

11. பஞ்ச சம்ஸ்காரம் : (1) தோளில் சங்கு சக்கர முத்திரை பொறித்தல் (தாபம்);
(2) பன்னிரு திருமண் தரித்தல் (புண்ட்ரம்);
(3) தாஸ்யநாமம் சூட்டுதல் (நாமம்);
(4) திருமந்திர உபதேசம் (மந்த்ரம்);
(5) திருவாராதன முறையுரைத்தல் (யாகம்)
என்னும் ஐவகைச் செந்நெறி ஆசார்யனிடமிருந்து பெறுபவை.

ஆளவந்தாரும் உமக்காகத் தம்முடைய திருவடித் தாமரைகளை என் தலை மேலே வைத்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார் என்று அறிவீராக''.

இதனால் தாம் ஒரு கருவியே என்றும் இளையாழ்வாருக்கு நேரடி ஆசார்யர் ஆளவந்தாரே என்றும் உணர்த்தினார் பெரியநம்பி. இதனையே,

''எதிகட்கு இறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம்
கதிபெற்றுடைய இராமாநுசன்''

என்று பாடி மகிழ்ந்தார் திருவரங்கத்தமுதனார்.

பெரியநம்பி 'பஞ்சசம்ஸ்காரம்' செய்த போது இளையாழ்வாருக்குச் சூட்டிய தாசிய நாமம் 'இராமாநுசன்' என்பதாகும். பின்னாளில் அவர் பல சிறப்புப் பெயர்களைப் பெற்ற போதும் பெரியநம்பி அருளிய 'இராமாநுசன்' என்னும் இவ்வரும் பெயரே அவரைச் சிறப்பிக்கும் பெரும் பெயராக நிலைபெற்றது.

### மூன்று பிழைகள்

மறுநாள் மதுராந்தகத்திலிருந்து தம் ஆசார்யன் பெரியநம்பியையும் அவர்தம் தேவியாரையும் அழைத்துக் கொண்டு, காஞ்சிக்கு வந்து சேர்ந்தார் இராமாநுசர். தம் வீட்டின் ஒரு பகுதியிலேயே ஆசார்யரின் குடும்பம் வாழ்வதற்கு இடம் ஒதுக்கிக் கொடுத்தார். பெரியநம்பியும் ஆறு மாத காலம் அங்கே தங்கியிருந்து, ஆழ்வார்களின் அருளிச்செயல்களான திராவிட வேதப் பிரபந்தங்களையும் ஆளவந்தாரின் சமயக் கருத்துக்களையும் அவருக்கு உபதேசித்தார். ஆசார்யனிடமிருந்து செவிக்கினிய செஞ்சொற்களைக் கேட்டு மனமகிழ்ந்திருந்த நாள்களில், இரக்கம் முதலான நற்குணங்கள் அமையாத தம் மனைவியை நினைந்து வருந்தினார் இராமாநுசர்.

ஒருநாள் அவருக்கு எண்ணெய் தேய்ப்பதற்காக வந்த ஏழையொருவனுக்கு உணவிடுமாறு அவர் கூறியும், 'இல்லை' என்று மறுத்துவிட்டார் தஞ்சமாம்பாள். அவரை ஒரு வேலையாக வெளியே அனுப்பிவிட்டு, அடுக்களை சென்று பார்த்த போது, நிறையப் பழைய சோறு இருப்பதைக் கண்டு மனம் பதைத்தார். 'இடும்பையால் அடர்ப்புண்டு இடுமினோ' என்று இரந்தவர்க்கு 'இல்லையென்று நெடுஞ்சொலால் மறுத்த' நீசை என்று தம் மனைவியைக் குறித்துக் கனத்த சீற்றம் கொண்டார் இராமாநுசர்.

முன்னொரு முறை திருக்கச்சிநம்பிகளை அவமதித்துத் தம்மைக் கலங்கப் பண்ணியதையும் எண்ணிப்பார்த்தார். ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டிருந்த நிலையில் மற்றொரு அடாத செயலையும் செய்து முடித்தார் தஞ்சமாம்பாள்.

கிணற்றடியில் பெரியநம்பி தேவியாரின் குடத்து நீர் தளும்பி, ஒரு துளி தம் குடத்தின் மீது பட்டுவிட்டது என்பதற்காக 'ஆசார்யன் பத்தினி' என்றும் பாராமல் அவரின் மனம் நோகும்படி நடந்து கொண்டார். செய்தியறிந்த பெரியநம்பி, தம் தேவியாரையே கண்டித்து, 'இனி நாம் இங்கிருப்பது தகாது' என்று அவரையும் உடனழைத்துக் கொண்டு, அப்போதே திருவரங்கம் புறப்பட்டார். வீடு திரும்பிய இராமாநுசர் தம் ஆசார்யன் குடும்பத்துடன் வெளியேறியதற்கான காரணத்தைக் கேட்டு, அதிர்ச்சிக்குள்ளானார். தம் மனைவியின் குணக்கேட்டால் நிகழ்ந்தவை ஒவ்வொன்றாக அவர் நினைவுக்கு வந்தன. அவை ஒன்றா இரண்டா? அடுத்தடுத்து மூன்று பிழைகள்; தவற்றுக்கும் தவறான பெருந்தவறுகள்!

1. சாதி காரணமாகத் திருக்கச்சிநம்பியை அவமதித்தது;
2. 'பசி' என்று கேட்ட ஏழைப் பணியாளனுக்கு வீட்டில் நிறைய உணவு இருந்தும் 'இல்லை' என்று மறுத்தது;
3. ஆசார்யன் மனைவியோடும் பிணங்கி மனம் நோகச் செய்தது.

இவற்றை நினைக்க நினைக்க 'இனி இவளோடு இசைந்து வாழ்தல் இயலாது; இல்லறமின்றேல் துறவறம்' என்னும் முடிவுக்கு வந்தார்.

## இல்லறம் துறந்தார்; துறவறம் புகுந்தார்

தம் மனைவியைப் பிறந்தகம் அனுப்பிவிட்டு நேரே பேரருளாளன் சந்நிதிக்குச் சென்றார். அங்கு நின்று, ''தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும் நோயே பட்டொழிந்தேன். சம்சார பந்தத்தை அடியேன் இனி வேண்டுவதில்லை; தேவரீரை ஆசார்யனாக அடைந்து துறவு மேற்கொண்டு தேவரீர் திருவடித் தாமரைகளில் சேவையே வேண்டுகின்றேன்'' என்று முறையிட்டார். இறைவனின் அனுமதி பெற்றுத் திருக்கோயிலின் பொய்கையான திருவனந்த ஸரஸ்ஸின் கரையிலே காவியாடை தரித்து முக்கோல் பிடித்துத் துறவியானார். இறைவன் அப்போது அர்ச்சகர் மூலமாக, 'இராமாநுஜமுனி' என்றும் 'யதிராஜன்' என்றும் திருநாமம் சாத்தினான். அதன்பின் திருக்கச்சிநம்பி முதலான கோயிற் பணியாளர்கள் பேரருளாளன் கட்டளைப்படி அவரை மடத்திற்கு அழைத்துச் சென்றனர்.

## சீடர்கள் சேர்ந்தனர்

கி.பி. 1017இல் அவதரித்த இராமாநுசர் கி.பி. 1049இல் துறவியானார். அப்போது அவருக்கு வயது முப்பத்திரண்டு. துறவியான நிலையில் ஆளவந்தாருக்குக் கொடுத்த வாக்குகள் அவர் நினைவுக்கு வந்தன. 'பிரம்ம சூத்திரத்திற்கு உரை (பாஷ்யம்) காண வேண்டுமெனில் அதற்கேற்பக் கல்வியைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். தத்துவ நூல்களைக் கற்றுத் தெளிந்து கரைகாண வேண்டும். தமக்கு உற்ற துணையாக ஒரு சீடர் கூட்டமும் உருவாக வேண்டும்' என்று அவர் நினைத்தார்.

நினைத்தபடி கூரேசன் என்கிற திருமறுமார்பரும், இராமாநுசரின் சகோதரி மகனான[12] தாசரி என்கிற முதலியாண்டானும் அவரை என்றும் பிரியாச் சீடரானார்கள்; நிழலும் அடிதாறும்[13] போல் அமைந்தார்கள். இராமாநுசரால் தண்டும் பவித்திரமும் என்று பாராட்டப் பெற்ற சிறப்பு இவ்விருவருக்கு மட்டுமே உண்டு. பின்னர், சைவம் சார்ந்திருந்த தம் சிற்றன்னை மகனான கோவிந்தரைத் (கோவிந்த பட்டர்) தம் அம்மான் பெரிய திருமலைநம்பி மூலமாகச் சைவத்திலிருந்து வைணவத்திற்குத் திருப்பித் தம் சீடர் குழாத்தோடு சேர்த்துக் கொண்டார்.

## குருவும் சீடரானார்

நாளும் சீடர் கூட்டம் பெருகியது. அவரோடு மாறுபட்டிருந்த யாதவப்பிரகாசரும் மனம் திருந்தித் தம் தள்ளாத வயதில் இராமாநுசரின் சீடரானார். இராமாநுசர் அவருக்குக் கோவிந்த ஜீயர் என்று பெயர் சூட்டினார். யாதவர், சீடரான செய்தி வைணவ உலகில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இராமாநுசரின் புகழ் இடம்பெயர்ந்து பரவுதற்கு இந்நிகழ்ச்சி ஒரு வாயிலாகவும் அமைந்தது.

## பேரருளாளன் விடை கொடுத்தான்

திருவரங்கத்திலிருந்த வைணவப் பெரியோர்கள் - இராமாநுசரின் பெருமைகளையெல்லாம் கேள்விப்பட்டு, அவர் திருவரங்கத்திலேயே தங்கி, வைணவ இயக்கத்தை வழிநடத்த வேண்டும் என்று விரும்பினார்கள். அவரை அழைத்து

---

12. இராமாநுசருக்குச் சகோதரிகள் இருவர். முறையே நாச்சியாரம்மாள், தாமரையம்மாள் என்று பெயர். நாச்சியாரம்மாள் குமாரனே தாசரதி என்னும் முதலியாண்டான். தாமரையம்மாள் குமாரர் வரதவிஷ்ணு என்னும் நடாதூராழ்வான்.

13. அடிதாறு - பாத ரேகை; பாதுகை.

வருவதற்காகத் திருவரங்கப் பெருமாளரையர் என்னும் இசை வல்லுநரைக் காஞ்சிப் பேரருளாளனிடம் அனுப்பிவைத்தார்கள். ஆழ்வார்கள் அருளிய பண்ணார் பாடல் இன்கவிகளை அரையர் தேவகானத்திலே இசைப்பதைக் கேட்டு மயங்கிய பேரருளாளன், அவர் வேண்டும் வரங்களைத் தருவதற்கு இசைந்தான். அரையரும் 'இவரை அடியேனுக்குத் தந்தருள வேண்டும்' என்று இராமானுசரை வேண்டி நின்றார். 'இனி இரண்டு வார்த்தைக்கு இடமில்லை' என்று கருதி, இன்னாப்புடன் 'தந்தோம்' என்று அருளி, இராமானுசருக்கு விடை கொடுத்து அனுப்பினான் அருளாளன்.

## தென்னரங்கன் 'உடையவர்' எனும் பெயர் கொடுத்தான்

இராமானுசர் அரையருடன் கோயில் (திருவரங்கம்) நோக்கிப் புறப்பட்டார். தென்னரங்கம் விழாக்கோலம் பூண்டு அவரை வரவேற்றது. வடவாற்றங்கரையளவும் வந்த அவரை எதிர்கொண்டது. இராமானுசர் அணியரங்கன் திருமுற்றத்தே புகுந்த பெரிய பெருமாளை வணங்கி நிற்க, இவரைப் பெருமாள் தம் தாமரைக் கண்களால் நோக்கிச் சோதிவாய் திறந்து, ''இராமானுசரே! 'பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்' என்கிற நம்முடைய உபய விபூதி ஐஸ்வர்யத்தையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம். ஆகையால் இன்றுமுதல் நீர் இவற்றுக்கு உடையவர் என்னும் பட்டத்தைப் பெற்று, நம் காரியத்தையெல்லாம் ஆராய்ந்து நடத்துவீர்'' என்றான். அப்போது அருகிருந்த - இராமானுசரின் ஆசார்யரான பெரியநம்பி - இவரை மார்போடணைத்துக்கொண்டு பலபடியாகப் புகழ்ந்து, 'உடையவரே' என்று ஒருமுறையழைக்க, அங்கிருந்த முதலிகள் எல்லாரும் அத்திருநாமத்தைப் பலமுறையும் சொல்லி அடங்காப் பெருமகிழ்ச்சியுடன் ஆனந்தக் கூத்தாடினர்.

இப்படித் தென்னரங்கன் மூலம் உடையவர் என்னும் ஒப்பற்ற சிறப்புப் பெயருக்கும் உரியவரானார் இராமானுசர்.

## கோயில் நிர்வாகம்

திருவரங்கமே இருப்பாகப் பெற்ற உடையவர் முதலில் கோயில் நிர்வாகச் சீர்திருத்தங்களில் கவனம் செலுத்தினார். தம் சீடரான முதலியாண்டானைக் கோயிலின் உள்துறை நிர்வாகத்தைக் கவனிக்கும்படி பணித்தார். சிலவற்றைத் தாமே நேரடியாக ஆராய்ந்தார். கோயில் அனைத்துக் கொத்தில்[14] அவரவர் ஏற்றத்

14. கோயில் அனைத்துக் கொத்து : கோயிற் பணியாளர் பிரிவுகள்.

தாழ்வுகளைக் கேட்டறிந்து, செய்யத்தக்க மாற்றங்களை நடைமுறைப்படுத்தினார். திருவிழாக்களை நெறிப்படுத்தி நடத்துவது முதல் (உத்சவ கிரமங்கள்) சிதிலமான கோயிற் சுவர்களைச் செப்பம் செய்வது வரை அவரின் பணி பல திறத்ததாய் அமைந்தது. அவரால் மேற்கொள்ளப்பட்ட கோயிற் காரியங்கள் இன்றளவும் 'ஸ்ரீராமாநுஜன் திவ்யாக்ஞை'ப்படியே நடைபெற்று வருகின்றன.

## ஐம்பெரும் ஆசிரியர்கள்

இப்படிக் கோயில் நிர்வாகப் பணிகளிலும் சமய வளர்ச்சிப் பணிகளிலும் ஈடுபட்ட இராமாநுசர், சாந்துணையும் கற்பதைக் குறிக்கோளாகக் கொண்டார். துறவியான பின்னரும் தொடர்ந்து கற்றார்.

பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப்பெருமாளரையர், பெரிய திருமலைநம்பி என்னும் ஐவரும் ஆளவந்தாரின் சீடர்கள் ஆவர். ஆளவந்தாரிடம் இவ்வைவரும் ஒவ்வொரு துறையில் பெற்ற அறிவுச் செல்வம் முழுவதையும் தாம் ஒருவரே பெறுகின்ற அரிய வாய்ப்பு இராமாநுசருக்குக் கிடைத்தது. பல கால்களாக ஓடிவரும் வெள்ளப்பெருக்கு, பெரிய நீர்நிலை ஒன்றை நிறைப்பது போல இவ்-ஐம்பெரும் ஆசிரியர்களின் திருந்திய ஞானம் இவரிடத்தே வந்து செறிந்து பெருகியது.

அரசன் ஒருவன் தன் மகன் பெரியவனானதும் அவனிடம் ஒப்படைக்குமாறு அருநிதியங்களையெல்லாம் ஐந்து கூறாக்கி அமைச்சர் ஐவரிடம் கொடுத்துச் சென்றது போலத்தான், ஆளவந்தாரும் தம் ஞானச் செல்வத்தைப் பெரியநம்பி முதலான சீடர்கள் ஐவரிடத்தும் வழங்கிச் சென்றார் எனக் குருபரம்பரை நூல்கள் இத்னை உவமித்துப் பேசுகின்றன.

இராமாநுசர், பெரிய நம்பியிடம் ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும், திருக்கோட்டியூர்நம்பியிடம் ரகஸ்யார்த்தங்களையும், திருமாலையாண்டானிடம் திருவாய்மொழி வியாக்கியானத்தையும், திருவரங்கப் பெருமாளரையரிடம் சரமோபாயத்தையும், பெரிய திருமலைநம்பியிடம் ஸ்ரீராமாயணத்தையும் கற்றுத் தெளிந்தார் என்பர்[15].

15. உடையவர் இவ்-ஐவரிடத்தும் கற்ற நூல்கள் பற்றிச் சிற்சில வேறுபாடுகள் அமையக் கூறும் கருத்துகளும் உண்டு. ஸ்ரீராமாயணம - வான்மீகி ராமாயணம்.

## எம்பெருமானார்

பெரிய நம்பியின் அறிவுரைப்படித் திருக்கோட்டியூர் நம்பியிடத்தே இவர் பெற்ற மறைபொருளும், அதனை நம்பியின் கட்டளையை மீறி உலகுக்கு உபதேசித்த இவரின் அருள் உள்ளமும் இவரை 'எம்பெருமானார்' என உலகுக்கு உயர்த்திக் காட்டின.

ரகஸ்யார்த்தங்களைப் பெறுவதில் இவருக்குள்ள ஊற்றத்தைச் சோதிப்பதற்காகத் திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்குப் பதினெட்டு முறை அலைக்கழித்தார் நம்பி. கடைசியில் தண்ணீர் மட்டுமே அருந்தி ஒரு மாதம் உபவாசம் இருந்து, 'தண்டும் பவித்திரமுமாய்[16] நீர் மட்டுமே வந்து உபதேசம் பெற்றுச் செல்லலாம்' என்றார். உபவாச காலம் முடிந்து முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும் அழைத்துக் கொண்டு, நம்பி திருமாளிகை நோக்கிச் சென்று அவரை வணங்கி நிற்க, அவரும், 'உம்மைத் தனியாகவன்றோ வரச் சொன்னோம்?' என்று கூற, இவரும் 'தேவரீர் கட்டளைப்படியே தண்டும் பவித்திரமுமாக வந்தேன். இந்த முதலியாண்டானே திரிதண்டம்; ஆழ்வான் பவித்திரம்' என்று பதிலிறுத்தார். நம்பியும் மனமிரங்கி, 'இவ்வர்த்தத்தை நீர் யாருக்கும் சொல்லக் கூடாது; சொன்னால் நரகம் புகுவீர்' என்று எச்சரித்து, நலந்தரு சொல்லான பெரிய திருமந்திரத்தை[17] உபதேசித்தார். பிரணவத்தின் ஆழ்பொருளையும் எட்டெழுத்தின் விரிபொருளையும் விளக்கிக் கூறினார். விளக்கம் பெற்றதுதான் தாமதம்; விரைந்தெழுந்தார் இராமாநுசர். தம்மை மறந்தார்; தம் ஞானாசிரியரான திருக்கோட்டியூர் நம்பிகள் தமக்கிட்ட கட்டளையையும் மறந்தார். அவ்வூர்க் கோயிலில் தெற்காழ்வான் (நரசிங்கப் பெருமான்) திருவோலக்கத்தில், 'சேர வாரும் செகத்தீரே' என்று மக்களைக் கூவியழைத்து, நம்பியுரைத்த மறைப்பொருளையெல்லாம் அவர்கள் முன்னே வெளியிட்டார். பலமுறை நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை (சீரிய நற்பொருளை) அவர்கள் உய்யும் பொருட்டுப் பெருங்கருணையுடன் உபதேசித்தார்.

நிகழ்ந்ததைக் கேள்விப்பட்ட நம்பி மனம் பதறி இராமாநுசரை வரவழைத்து, மிகுந்த சீற்றத்துடன், 'என் கட்டளையை மீறியதால் நீர் என்ன பெற்றீர்?' என்று வினவ, 'அழிவில்லாத நரகம் பெற்றேன்;

16. தண்டு : திரிதண்டம்; வைணவத் துறவியர் கையில் ஏந்தும் முக்கோல்.
பவித்திரம் : அத்தண்டின் மேல் உள்ள சிறு வெண்துகில்.

17. 'ஓம் நமோ நாராயணாய' என்பது (பெரிய) திருமந்திரம்.

இத்திரள்கள் எல்லாம் ஆனவான் பேரின்பத்தை அருந்துமே!' என்று பதிலுரைத்தார் இராமாநுசர். இதனைக் கேட்ட நம்பியின் திருவுள்ளத்தில் எதிர்பாராத மாற்றம் நிகழ்ந்தது. 'இந்தக் கருணையும் பிறர் வாழ வேண்டும் என்று விரும்பும் பெரிய உள்ளமும் நமக்கு இல்லையே' என்று நினைத்து, தம் சீடனை ஆரத்தழுவி, 'அவரோ நீர்? எம்பெருமானாரே!' என்று கொண்டாடினார். 'பாரதப் போரில் இரு சேனைகளின் நடுவே தேர்த் தட்டிலிருந்து மெய்ம்மைப் பெருவார்த்தையை அருளிச் செய்த ஸ்ரீபார்த்தசாரதியான கீதாசார்யனோ?' என்னும் கருத்தில் இவ்வாறு கூறினார். அன்றுமுதல் இவருக்கு எம்பெருமானார் என்னும் சிறப்புப் பெயரும் உண்டாயிற்று.

மேலும் 'பரம வைதீக சித்தாந்தம்' என்று பெயர்பெற்ற இந்தத் தரிசனம் இனி 'எம்பெருமானார் தரிசனம்' என்றே அழைக்கப்பட வேண்டும் என்றே நம்பி விரும்பினார். இவ்விருப்பத்தை முதலிகள் அனைவரும் அறியத் தெரிவித்தார். இதனைத் திருவரங்கத்து எம்பெருமானும் அங்கீகரித்ததாக மணவாளமாமுனிகள் தம் உபதேச ரத்தினமாலையில் குறிப்பிட்டுப் பேசியுள்ளார்.

திருக்கோட்டியூர் நம்பிகள் பின்னர் இராமாநுசருக்குச் சரமசுலோகத்தின்[18] பொருளையும் விளக்கியுரைத்து ஆளவந்தாரின் சீடரான திருமாலையாண்டானிடம் திருவாய்மொழி கேட்குமாறு பணித்தார்.

## திருவாய்மொழிப் பயிற்சி

அவ்வாறே ஆண்டானிடம் திருவாய்மொழி கற்றுவரும் நாளில் ஆளவந்தார் அருளியதாக அவர் கூறிய அர்த்தங்கள் சிலவற்றைக் கேட்டுச் சிலவிடங்களில் இராமாநுசர், 'இப்படியும் பொருள் காணலாமே' என்று விளக்கம் கூற, அதனைப் பொறாத ஆண்டான், 'இது என்ன விசுவாமித்திர சிருஷ்டியாய் இருந்ததே! இப்படி ஆளவந்தார் அருளிச்செய்ய யாம் கேட்டறியோம்' என்று கூறித் திருவாய்மொழிப் பாடத்தை நிறுத்திவிட்டார். இதனையறிந்த திருக்கோட்டியூர்நம்பி, 'அறியாக் காலத்துள்ளே' என்னும்

18. சரமசுலோகம் : இறுதி உபாயமான பிரபத்தியைத் தெரிவிக்கும் கீதையின் சுலோகம்.

''ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமிமாசுச:''
என்பது.

பாசுரத்துக்கு இராமாநுசர் கூறிய பொருளைக் கேட்டு மிகவும் மகிழ்ந்து ஆண்டானைத் தழுவிக் கொண்டு, 'இவ்வர்த்தத்தை ஆளவந்தார் அருளிச்செய்ய நாம் கேட்டிருக்கிறோமே' என்று கூறியதோடு அமையாது, ஆண்டானிடம் இராமாநுசரின் மேதைமையைக் கீழ்க்காணுமாறு எடுத்துக் கூறினார்.

''எம்பெருமானார் உம்மிடம் திருவாய்மொழி வியாக்யானம் கேட்பது, சாந்தீபனிடத்தில் கண்ணபிரான் வேதம் பயின்றது போலத்தான். ஆளவந்தாரின் திருவுள்ளத்தில் இருக்கிற அர்த்தமொழிய வேறொன்றும் இவர் உள்ளத்தில் தோன்றாது. ஆதலின் இவருக்கு நீர் அறியாதன அறிவித்ததாக எண்ண வேண்டாம்'' என்றார். அதன் பின்னர் நம்பியின் கட்டளைப்படியே ஆண்டானும் விட்ட இடத்திலிருந்து திருவாய்மொழியைத் தொடங்கி நடத்த, இராமாநுசரும் முற்றக்கேட்டு மகிழ்ந்திருந்தார்.

## அரையரிடம் உறுதிப் பொருள் கேட்டல்

பின்னர்ப் பெரியநம்பியின் அறிவுரைப்படி திருவரங்கப் பெருமாளரையரிடத்திலே ஆளவந்தார் விட்டுச் சென்ற பொருள் நுட்பங்களை(அர்த்த விசேஷம்)யெல்லாம் அறிய விரும்பினார். அதன் பொருட்டு ஆறு மாத காலம் அவருக்குப் பாலமுது காய்ச்சிச் சமர்ப்பித்தும், திருவத்யயன காலங்களில் அரையர் திருமேனிக்குப் பாங்காக மஞ்சட்காப்பு அரைத்துக் கொடுத்தும் தொண்டு புரிந்தார். அத்தொண்டுகளால் மனமகிழ்ந்த அரையரும் 'பஞ்சமோபாய நிஷ்டை[19]' என்று சொல்லப்படுகின்ற ஆசிரியப்பற்றே (ஆசார்ய அபிமானம்) முடிந்த நிலையில் பெறத்தக்க பேறாம் என்று அதன் சிறப்பினையெல்லாம் (சரமபதார்த்த விசேஷம்) அவர்க்கு எடுத்துரைத்தார். ஆசார்யனே தொழத்தக்க தெய்வமென்றும், அடையப்படுகின்ற கதியென்றும், தேடத்தக்க நிதியென்றும், கற்கத்தக்க வித்தையென்றும், காமிக்கத்தக்க பொருள் என்றும் விளக்கிக் கூறினார். முடிவாக 'உறங்கும் பெருமாள் தானே உலாவும் பெருமாளாய் வந்தார்' என்று கருதி அவனையே வழியும் பயனுமாகக் (உபாய உபேயம்) கொள்வீர் என்று இறுதியாக அடையத்தக்க உறுதிப் பொருளை (சரமபுருஷார்த்தம்) எடுத்துக் காட்டினார். இப்படித் தாம் பெற்ற ஞானச் செல்வத்தையெல்லாம்

---

19. பஞ்சமோபாய நிஷ்டை : கர்ம, ஞான, பக்தி, பிரபத்தி ஆகிய நான்கினை விடுத்து ஆசார்ய அபிமானம் என்னும் ஐந்தாம் உபாயத்தையே தனக்கு வழியும் பயனுமாகக் கொள்ளும் நிலை.

இராமாநுசருக்கு அள்ளி வழங்கிய அரையர், அவருக்கு 'லக்ஷ்மணமுனி' என்று திருநாமம் சாத்தியருளியதாகவும் கூறுவர் பிள்ளைலோகஞ்சீயர்.

## ஸ்ரீராமாயணம் கேட்டல்

பெரியநம்பி முதலாக நான்கு ஆசிரியர்களின் அடிக்கீழ் அமர்ந்து கற்றுத் தேர்ந்த இராமாநுசர், திருமலை யாத்திரையின் போது அங்கு ஓராண்டு தங்கியிருந்து தம் தாய்மாமனும் ஆளவந்தாரின் சீடர்களுள் ஒருவருமான பெரியதிருமலை நம்பியிடம் ஸ்ரீராமாயணம் கேட்டதாகக் கூறுகிறது குருபரம்பரை.

## ஞான வெற்றி

இப்படி ஐம்பெரும் ஆசிரியர்களை நாடிக் கல்விச் செல்வத்தைப் பெருக்கிக் கொண்ட இராமாநுசர், தம்மை நாடிவந்த சீடர்களுக்குத் தாமே ஆசிரியராக இருந்து கற்பிக்கத் தொடங்கினார். சமய, தத்துவ நூல்களையும் இயற்றலானார். பிற மதத்தவர்களோடு வாதிட்டு விசிட்டாத்வைதம் என்னும் வைணவ நெறியை நிலைநாட்டினார். வடநாட்டிலிருந்து வந்த யக்ஞமூர்த்தி என்ற அத்வைத அறிஞரோடு பதினெட்டு நாள்கள் வாதம் புரிந்து அவரை வெற்றி கொண்டார். அவரைத் தம் சீடராக்கிக் கொண்டு, அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்று பெயர் சூட்டினார். 'உடையவர் திருவடிகளே தஞ்சம்' என்றிருந்த அந்தத் தத்துவ வீரரும், 'ஞானசாரம்', 'பிரமேயசாரம்' என்னும் அரிய தமிழ் நூல்களை வைணவத்துக்குத் தம் கொடையாக வழங்கிச் சென்றார்.

## அன்பின் வெற்றி

இராமாநுசர் வைணவத்தின் தலைமைப் பீடத்தையேற்றுத் திருவரங்கத்தில் வாழ்ந்த நாட்களில் சமூகத்தின் பல தரப்பிலிருந்தும் அவரை நாடிச் சீடர் கூட்டம் குவிந்தது. கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான அறிவார்ந்த அந்தணச் சீடர்களோடு உறங்காவில்லி, பொன்னாச்சி போன்ற தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த சீடர்களையும் அவர் பெற்றார். விசாலப் பார்வையால் சாதி வேற்றுமையை விலக்கி அனைவரிடத்தும் அன்பு காட்டினார். 'அன்பிலன்றி ஆழியானை யாவர்காண வல்லரே' என்னும் திருமழிசையாழ்வாரின் வாக்கு அவரால் ஒளி பெற்றது; நடைமுறை வாழ்வில் உயிரும் பெற்றது.

உறங்காவில்லியை அவர் சீடனாக்கிக் கொண்டது சுவையான கதை.

தன் மனைவியின் கண்ணழகில் மயங்கிக் கிடந்த உறங்காவில்லியைத் தென்னரங்கனின் செவ்வரியோடிய கண்ணழகைக் காட்டி வைணவத்திற்குத் திருப்பினார் இராமாநுசர். அவரின் மனோதத்துவ அறிவு தீவிரமான மனிதக் காதலைக் கடவுட் காதலாக மாற்றிக் காட்டியது. 'அதிசுந்தர கோமளாங்கி' ஒருத்தியின் அன்புக் காதலன், தென்னரங்கனின் சீரருளுக்கு இலக்கான கதை இது.

திருவெள்ளறை என்னும் ஊரில் வாழ்ந்தவர் உறங்காவில்லி. உறையூரை ஆண்ட அகளங்கன் என்ற சோழர்குடியைச் சார்ந்த குறுநிலத் தலைவனிடம் பணிபுரிந்தவர். 'இனி அறிய வேண்டுவன எல்லாம் இராமாநுசர் சந்நிதியிலே அன்றி வேறு எங்கும் இல்லை' என்று உணர்ந்தபோதே தம் மனைவியோடும் அவரைச் சரணம் புகுந்து, தங்களைத் திருத்திப் பணிகொள்ளுமாறு வேண்டி நின்றார். உடையவரும் உறங்காவில்லிக்குப் பிள்ளையுறங்காவில்லிதாசர் என்றும், அவரின் மனைவிக்குப் பொன்னாச்சியார் என்றும் தாசிய நாமங்கள் இட்டு அவ்விருவரையும் அடியார்களாக ஏற்றுக் கொண்டார். உறங்காவில்லியின் மருமக்களான வண்டவில்லியும் செண்டவில்லியும் கூட இராமாநுச மடத்தின் சீடர்களானார்கள். அவர்களுக்கு வண்டலங்காரதாசர் என்றும், செண்டலங்காரதாசர் என்றும் பெயர் சூட்டி அன்பு காட்டினார் இராமாநுசர். இவ்வனைத்துக்கும் மேலாக இவ்வில்லிகள் மூவர்க்கும் தலைவனான அகளங்கனும் இராமாநுசரின் அடியாராகி, அகளங்கநாட்டாழ்வான் என்னும் திருநாமம் பெற்றான். அவன் அரசனாகையாலே அவனைக் கோயிற் காரியங்களை மேற்பார்வையிடும் பணியில் அமர்த்தினார் இராமாநுசர்.

## எதிர்ப்புகளுக்கு இடையே

உடையவரின் செல்வாக்கு இப்படி வளர்ந்தபோதும், அவரை மறைமுகமாக எதிர்க்கும் கூட்டமும் வளரத் தொடங்கியது. சாதி வேற்றுமை பாராத உடையவரின் சமத்துவ உணர்வு வைதிகர் சிலருக்குப் பிடிக்கவில்லை. அவரை வஞ்சகமாகக் கொல்லத் திட்டம் தீட்டினர். அர்ச்சகர் ஒருவரின் மனைவி மூலமாக உடையவர் பிச்சைக்குச் செல்லும்போது நஞ்சு கலந்த உணவை இடுவதற்கு ஏற்பாடு செய்தனர். அப்பெண்மணி அவ்வாறே செய்த போதும், சடக்கென அவரின் காலில் விழுந்து கண்ணீர் சிந்தித் தான் இட்ட உணவை விலக்குமாறு குறிப்பால் உணர்த்திச் சென்றாள். உடையவரும் அவ்வுணவைக் காவிரியில் கொட்டிவிட்டு, பலநாள்

உணவு கொள்ளாமல் பட்டினி கிடந்தார். செய்தி கேட்டுப் பதறி வந்த திருக்கோட்டியூர் நம்பி, அவரிடம் பரிவுமிக்க கிடாம்பி ஆச்சான் என்பவரை அவருக்கு உணவு சமைத்து வழங்குவதற்கு (தளிகைக்கு) ஏற்பாடு செய்தார்.

## பிரம்மசூத்திர விரிவுரை

இராமாநுசர் பிரம்மசூத்திரத்திற்கு விரிவுரை செய்வது பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார். போதாயன விருத்தி என்னும் நூலைப் பெறுவதற்காகக் கூரேசருடன் காஷ்மீர் யாத்திரை மேற்கொண்டார். அந்நூலில் கூறப்பட்ட மதத்தை அடியொற்றி ஆழ்வார்கள், நாதமுனிகள், ஆளவந்தார் முதலிய முன்னோர்களின் விசிட்டாத்வைதக் கொள்கைகளை நன்கு விளக்கினார். அதனோடு மாறுபட்ட புத்தர் சமணர் முதலான சமயவாதிகளையும் அத்வைதிகளையும் வாதப்போரில் வென்றார். அவர்களை வைணவர்களாக்கி விசிட்டாத்வைதத்தை நிலைபெறச் செய்தார். அவர் பிரம்மசூத்திரத்திற்குச் செய்த விரிவுரையைப் புகழ்ந்து 'ஸ்ரீபாஷ்யகாரர்' என்று சரஸ்வதிதேவியே அவருக்குப் பட்டம் தந்ததாகக் குருபரம்பரை கூறுகிறது. ஸ்ரீபாஷ்யம் எழுதியதற்குப் பிறகு இந்திய நாடு முழுதும் அவர் மேற்கொண்ட திருப்பயணத்தை அந்தத் தத்துவச் சக்கரவர்த்தியின் திக்(கு) விசயமாக நூல்கள் சித்திரிக்கின்றன[20].

## எங்கும் பரவியது வைணவம்

அவர் பாரத நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று வைணவத் திருப்பதிகளை வணங்கியும், மடங்களை நிறுவியும், மதத்தைப் பரப்பியதாக வரலாறு கூறுகிறது. . திருவனந்தபுரம், திருவேங்கடமலை, திருவதரி, வாரணாசி (காசி), ஸ்ரீபுருஷோத்தமம், ஸ்ரீகூர்மம், சிம்மாசலம் போன்ற தலங்களுக்கும் அவர் சென்று வந்தார். மதக் கொள்கைகளைப் பரப்புவதற்காக எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளை அவர் நியமித்தார். இதனால் பேரேரி ஒன்று தான் இருந்த இடத்தில் இருக்க, அதனுள் பெருகிய நீர் பல திசைகளிலும் சென்று பாய்வது போல வைணவம் பரவியது. இதனை முன்னோர்கள் பின்வருமாறு உருவகப்படுத்தி மொழிவர்.

---

20. அத்தகைய பயணத்தின் போது. திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்குச் சென்றார். அங்கு நம்மாழ்வாரின் திருமுன்னர் வணங்கி எழுந்து உலகம் தம்மை ஆழ்வாரின் பொன்னடிகளாகக் கருத வேண்டும் - என்று பிரார்த்தித்துக் கொண்டார். பிரார்த்தனையும் நிறைவேறியது. அதுவரை 'மதுரகவிகள்' என்று அழைக்கப்பட்டு வந்த நம்மாழ்வாரின் திருவடிகளுக்கு அன்றுமுதலாக 'இராமாநுசன்' என்னும் பெயரே வழங்கி வருகின்றது.

'திருமகள் கேள்வனாகிற பெருங்கடலில் சடகோபராகிய நம்மாழ்வார் என்னும் மேகம் படிந்து கருணை நீரைப் பருகி நாதமுனிகளாகிற மேருமலையிலே பொழிந்தது. அந்நீர் உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி என்னும் அருவிகள் மூலம் ஆளவந்தார் என்னும் பேராற்றை அடைந்தது. பின் அங்கிருந்து பெரியநம்பிகள் முதலான ஐந்து ஆசார்யர்களாகிற கால்வாய்கள் மூலம் எம்பெருமானார் என்னும் பெரிய ஏரியை அடைந்தது. எழுபத்துநாலு ஆசார்யர்களாகிற மதகுகளாலே உயிர்களாகிய பயிர்களின் பொருட்டுப் பாய்கிறது'.

### சோழனால் விளைந்த துன்பம்

வைணவத்தின் இத்தகைய பெருவளர்ச்சி சைவனான சோழன் ஒருவனுக்குப் பிடிக்கவில்லை. அவனைக் கிருமிகண்ட சோழன் என்று வைணவ நூல்கள் குறிப்பிடுகின்றன[21]. சிலர் கூறிய யோசனைப்படி, இராமாநுசரை அவைக்கு அழைத்து, 'சிவனிற்பெரிய தெய்வம் இல்லை' என்று எழுதி வாங்க அவன் முடிவெடுத்தான். அவன் ஆணைப்படி, அவனது வீரர்கள் இராமாநுசரின் மடத்தை நோக்கி விரைந்தனர். அப்போது அவர் நீராடிக்கொண் டிருந்தார். செய்தியறிந்த கூரத்தாழ்வான் உடையவரைக் காக்க நினைத்துக் காவியுடுத்து முக்கோல் பிடித்து, பெரியநம்பியுடன் சோழனின் அவைக்குச் சென்றார். பெரியநம்பியின் புதல்வியான அத்துழாய் என்பவளும் தன் தந்தைக்குத் துணையாகச் சென்றாள். அரசவையில் சோழனின் கருத்துக்கிசையாத கூரத்தாழ்வான், 'மாலவனே மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்' என்பதைப் பலபடியாகவும் எடுத்துரைத்தார். ஏற்காத அரசன், 'சிவனே பரன்' என்று எழுத்திடச் சொன்னான். கட்டாயப்படுத்தி ஓலையைக் கையிலே கொடுத்தான். ஏட்டினை வாங்கிக் கொண்ட கூரத்தாழ்வான், 'சிவம்' என்பதற்கு 'மரக்கால்' என்னும் ஒருபொருள் கொண்டு, 'மரக்கால் பெரியது; பதக்கு அதைவிடப் பெரியது' என்னும் பொருளில், 'சிவாத்பரதரம் நாஸ்தி, த்ரோணமஸ்தி தத:பரம்' என்று பரிகசித்துக் கையெழுத்திட்டார்[22]. அதனைக் கண்ட சோழன் சீற்றமிகுந்தவனாய்

---

21. இராமாநுசரின் வாழ்நாளில் சோழ மன்னர் ஐவரின் ஆட்சி நிலவியது. குருபரம்பரை நூல்கள் குறிக்கும் சோழன் யாவன் என நிர்ணயிப்பதில் வரலாற்றாசிரியரிடையே கருத் தொற்றுமை இல்லை.

22. ''குறுணிக்கு மேலுமுண்டு: அதுக்குமேலே பதக்குமுண்டு: அதுக்குமேலேயும் அதிகமுண்டு'' என்று எல்லாரும் கேட்கும்படி சொல்லிக் கையெழுத்திட்டார் எனக் கூறும் 'ராமாநுஜார்ய திவ்யசரிதை' என்னும் நூல்.
குறுணி - ஒரு மரக்கால் அளவு; பதக்கு - இரண்டு மரக்கால்.

அவ்விருவரின் கண்களையும் பறிக்குமாறு ஆணையிட்டான். உடனே கூரத்தாழ்வானும், 'பாவியான உன்னைப் பார்த்த கண்கள் எனக்கு வேண்டா' என்று சொல்லித் தம்முடைய கை நகங்களாலேயே கண்களைக் கீறிக்கொண்டார். பெரியநம்பியை அனுகிய வீரர்கள் அரசன் சொன்னவாறே செய்துமுடிக்க, வயது முதிர்ந்த பெரியநம்பி அவ்வேதனை தாங்காமல், கங்கைகொண்ட சோழபுரத்திலேயே உயிர்நீத்தார். திருவரங்கம் திரும்பிய கூரத்தாழ்வான் அங்கு வாழப் பிடிக்காமல் திருமாலிருஞ்சோலை மலைக்குச் சென்று தங்கியிருந்தார்.

### கர்நாடகத்தில் இராமானுசர்

இதற்கிடையில் சீடர்கள் மூலம் செய்தியறிந்த இராமானுசர் - அவர்கள் வேண்டியவாறே வெள்ளுடை அணிந்து நீலகிரிக் காடுகளின் வழியாக இன்றைய கர்நாடக மாநிலத்தைச்



*உடையவர் மடியில் செல்லப்பிள்ளை*
*(மேல் கோட்டை)*

சென்றடைந்தார். அப்போது ஹொய்சல வம்சத்தைச் சேர்ந்த விட்டல தேவராயன் என்பான் மைசூரை ஆண்டு வந்தான். அவன்

சமண சமயத்தைச் சார்ந்தவன். அவனது மகளைப் பீடித்திருந்த 'பேய் எனும் பிணி'யைப் போக்கியதன் மூலமும், போரில் உடல் ஊனமுற்ற அவனை மதித்து அன்பு காட்டியதன் மூலமும், அவனது இதயத்தில் இடம் பிடித்துக்கொண்டார் இராமாநுசர். 'உடலில் குறையுள்ளவன்' என்ற காரணம் காட்டித் தான் கொடுத்த விருந்தில் கலந்துகொள்ளாமல் தன்னை அலட்சியம் செய்த சமண முனிவர்களின் தொன்னை உள்ளத்தை நினைத்தான்; மனிதர் அனைவரையும் அன்பெனும் நோக்கால் அகப்படுத்தும் இராமாநுசரின் தூய - பெரிய உள்ளத்தையும் எண்ணிப் பார்த்தான். முடிவு? சமணத்தைத் துறந்து வைணவ சமயத்தைத் தழுவினான். இராமாநுசர் அவனுக்கு விஷ்ணுவர்த்தவராயன் என்று பெயர் சூட்டினார். பின்னர் அவ்வரசனின் உதவியோடு திருநாராயணபுரம் (இன்றைய மேல்கோட்டை) என்னும் இடத்தில் திருமால் கோயில் ஒன்றை எழுப்பினார். தொண்டனூரில் வாழ்ந்த ஹரிஜன மக்களைத் துணையாகக் கொண்டு காடுவெட்டி நாடுதிருத்தி, உடையவர் ஊரும் கோயிலும் புதிதாய் உருவாக்கிய இடம் இது. ஸ்ரீரங்கராஜ பட்டர் என்பவரைக் கொண்டு அங்கு எழுந்தருளிய திருநாராயணப் பெருமாளுக்கு வழிபாடுகளை முறைப்படி செய்வித்து, திருவிழாக்களையும் நடத்திக்கொண்டு வந்தார். அத்தலத்தின் உற்சவமூர்த்தியான செல்லப்பிள்ளையைத் தில்லிக்குச் சென்று மீட்டுக்கொண்டு வந்தார். அதனால் 'மஹோத்ஸவம்' நடக்காத குறையையும் தீர்த்து வைத்தார். விழாக் காலங்களில் ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத்திற்கும் ஏற்பாடு செய்தார். தொண்டனூரில் 'மோதிதலா' என்னும் ஏரி அமைவதற்கும் அவர் காரணமாயிருந்தார். அவரது முயற்சியால் மேல்கோட்டையில் எழுநூறு மடங்கள் உருவாயின. ஐம்பத்திரண்டு பேர் அவருக்குச் சீடரானார்கள்.

## திருவரங்கம் திரும்பினார்

இவ்வாறு சமயப் பணிகளோடு சமுதாயப் பணியும் செய்த இராமாநுசர் 'கிருமிகண்ட சோழன் மாண்டான்' என்னும் செய்தி கேட்டுத் திருவரங்கம் திரும்பினார். அவரது பிரிவுக்காற்றாது வருந்திய திருநாராயணபுரத்துச் சீடர்களுக்காகத் தம்முடைய அர்ச்சைத்திருமேனி(சிலை)யொன்றை அங்கு நிறுவுவதற்கு ஏற்பாடு செய்தார். இது 'தமருகந்த திருமேனி' என்று சிறப்பிக்கப்படுகிறது.

## ஆழ்வானின் பிரிவு

மைசூரிலிருந்து திருவரங்கம் திரும்பிய நிலையில் இராமாநுசருக்கு வயது நூறு என்பர். அந்த வயதிலும் தளர்ச்சியின்றி

எப்போதும் போல் தொடர்ந்து பணி செய்தார். 'தரிசனத்திற்காகத் தரிசனத்தை இழந்த'[23] கூரத்தாழ்வானின் நிலை அவருக்கு மிகுந்த துயரத்தை உருவாக்கிற்று. ஸ்ரீபாஷ்யத்தைத் தாம் சொல்லச் சொல்ல ஏடுபடுத்தியவர் ஆழ்வான் என்பதும், அப்போது அவரின் அறிவுக்கூர்மையால் அப்பேருரை சீர்மை பெற்றதும் அவரின் நினைவில் ஓடின. காஞ்சிப் பேரருளாளனை வேண்டித் துதித்து மீண்டும் அவர் புறக்கண்களைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினார் இராமாநுசர். தம் எண்ணத்தை ஆழ்வானிடத்தும் வெளியிட்டார். அவர் விரும்பியவாறே 'வரதராஜஸ்தவம்' பாடினார் கூரத்தாழ்வான். ஆனால் அவரின் வேண்டுதலோ வேறுவிதமாக அமைந்தது. 'நான் பெற்ற பேறு நாலூரானும் பெற வேண்டும்' என்று இறைவனிடம் வரம் வேண்டினார் ஆழ்வான். இந்த நாநூரான் சோழனுடைய அதிகாரிகளுள் ஒருவன். அவர், கண்களை இழப்பதற்குக் காரணமாய் இருந்தவன் அவனே. ஆழ்வானின் செயல் (தனக்கெனப் புறக்கண்களை இறைவனிடம் வேண்டிப் பெறாமை) இராமாநுசருக்கு ஏமாற்றமளித்த போதிலும், பகைவனுக்கும் அருளும் அவரின் மனப்பாங்கு கண்டு மகிழ்ந்தார்; ஆத்ம குணத்தைக் கண்டு வியந்தார். இந்த நற்சீடனால் தமக்கும் நற்கதி கிடைக்கும் என்று நம்பினார். அதன்பின்னர், கூரத்தாழ்வான் நீண்ட நாள்கள் வாழவில்லை. கண்களையிழந்தும் உள்ளொளியை இழக்காத ஆழ்வானின் பிரிவு உடையவருக்கு மிகுந்த துயரத்தைத் தந்தது.

## சபதங்கள் நிறைவேறின

நாள் திங்களாய், திங்கள் ஆண்டுகளாய்க் காலமெனும்பேராறு ஓடி மறைந்தது.

தம் அவதார நோக்கம் ஒவ்வொன்றாக நிறைவேறி வருவதை அவர் உணர்ந்தார். ஆம்! ஆளவந்தாரின் மூன்று விருப்பங்களையும் அவர் நிறைவேற்றிவிட்டார்.

பிரம்மசூத்திரத்திற்கு விசிட்டாத்வைத அடிப்படையில் விரிவுரை (பாஷ்யம்) செய்வதை எப்பணிக்கும் முதற்பணியாகக் கொண்டதால், ஆளவந்தாரின் முக்குறைகளில் ஒன்றை முதலில் முடித்துவைத்தார்.

23. 'எம்பெருமானார் தரிசனம்' என்னும் வைணவ நெறியைக் காப்பதற்காகத் தம் தரிசனத்தை - அதாவது பார்வையை இழந்தவர் கூரத்தாழ்வான் என்பது கருத்து.

ஆழ்வானின் குழந்தைகளுக்குப் பராசரன், வேதவியாசன் என்று பெயரிட்டதன் மூலம் இரண்டாவது குறையையும் நீக்கினார்.

திருக்குருகைப்பிரான்பிள்ளான் என்னும் சீடரைக் கொண்டு திருவாய்மொழிக்கு உரையிட்டதன் வாயிலாக மூன்றாம் குறையும் தீர்ந்தது[24].

ஆண்டாள் திருமாலிருஞ்சோலை அழகருக்கு நூறுதடா நிறைந்த அக்கார அடிசில் அமுது செய்விக்கப் பெரிதும் விரும்பியதைச் செயல்படுத்திக் காட்டி ஆண்டாளுக்கு அண்ணன் என்னும் பெயரையும் பெற்றார்.

திருக்குறுங்குடி இறைவனே இவருக்குச் சீடனாகும் ஆசை கொண்டு திருவிலச்சினை பெற்று வைணவநம்பி என்னும் திருநாமம் பெற்றான்.

சோழனால் அகற்றப்பட்ட தில்லை கோவிந்தராசன் மூர்த்தத்தை வடவேங்கடத்தில் (கீழ்த்திருப்பதி) நிறுவினார்.

இப்படி இவர்தம் நெடிய வாழ்வில் நிகழ்ந்த சிறப்புமிகு நிகழ்ச்சிகளை வைணவ சம்பிரதாய நூல்கள் பரவசத்தோடு விவரிக்கின்றன.

## உடையவர் இயற்றிய நூல்கள்

செயல்திறமிக்கவராகவும் தத்துவஞானத்தில் கற்றுத் துறைபோய வித்தகராகவும் விளங்கிய இராமாநுசர் தமிழில் ஒரு நூலும் இயற்றவில்லை.[25] அவர் இயற்றிய நூல்கள் யாவும் வடமொழியில் அமைந்தவையே.

1. நித்யகிரந்தம்
2. கீதாபாஷ்யம்
3. ஸ்ரீபாஷ்யம்
4. வேதாந்தசாரம்
5. வேதாந்ததீபம்
6. வேதார்த்த சங்கிரகம்
7. ஸ்ரீவைகுண்ட கத்யம்
8. ஸ்ரீரங்க கத்யம்
9. சரணாகதி கத்யம்

24. தம் சிற்றன்னை மகனான சிறியகோவிந்தப் பெருமாளின் பிள்ளைக்குப் பராங்குசன் என்று நம்மாழ்வாரின் பெயரினையிட்டு ஒரு குறையை நீக்கியதாகவும் கூறுவர். சிறியகோவிந்தப் பெருமாள், கோவிந்தர் என்னும் எம்பாரின் உடன்பிறந்தவர்.

25. ''அவர் (இராமாநுசர்) அருளிச் செய்ததாக ஒரு திராவிடப் பிரபந்தமும் இல்லையிறே'' - பிள்ளைலோகஞ் சீயர்

இவ்வொன்பதும் நவரத்தினங்களாக மதிக்கப்படுகின்றன. இவற்றுள் 'நித்யக்ரந்தம்' என்பது, நாள்தோறும் இறைவழிபாட்டில் கைக்கொள்ள வேண்டிய முறைகளை (பகவதாராதனக்ரமம்) விவரிப்பதால் இப்பெயர் பெற்றது. கீதாபாஷ்யம் முதலாக அடுத்துவரும் ஐந்து நூல்களும் விசிட்டாத்வைத சித்தாந்த பரமானவை. இறுதியில் உள்ள மூன்று நூல்களும் 'கத்யத்ரயம்' எனப்படும். இவை தோத்திர நூல்களாயமைந்து, வைணவ சமயக் கருத்துகளை வெளியிடுகின்றன. எம்பெருமானுடைய திவ்யமங்கள சொரூபத்தையும், திருமேனியழகினையும் (விக்ரஹவைலக்ஷண்யம்) கல்யாண குணங்களையும் புகழ்ந்து பேசுகின்றன. லீலா விபூதி (இவ்வுலகம்) நித்யவிபூதி (மேலுலகம்) ஆகிய இரண்டுக்கும் நாயகன் அவனே என்று ஏத்தி, அவனருளைப் பெறப் பிராட்டியாகிய திருமகளின் பரிந்துரையை (மகாலக்ஷ்மியின் புருஷகாரம்) வேண்டுகின்றன. பரபக்தி, பரஞான, பரமபக்தி[26]களைத் தமக்கு அருள வேண்டும் என்றும் அவற்றின் விளைவாக இறையனுபவம் ஏற்பட்டு அதனடியாகத் தொண்டில் சுவையும் (கைங்கர்யத்தில் ருசி) பிறக்க வேண்டும் என்றும் இம்மூன்று கத்யங்களிலும் எம்பெருமானார் வேண்டிக் கொள்கின்றார். திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய முச்சரடுகளால் பிணைக்கப்பட்ட மங்கலசூத்திரம் இந்தக் கத்யத்ரயத்தின் இழையாகிறது என்றும் பிரபத்தியாகிய சரணாகதியே இங்கே சாரமாக அமைகிறது என்றும் வைணவப் பெரியோர்கள் விளக்கிக் கூறுவர்.

### என்றும் வாழும் இராமாநுசர்

நூற்றிருபது ஆண்டுகள் உலகம் பயனுற வாழ்ந்த உடையவர், முடிவு நாளை எதிர்நோக்கினார். முதலியாண்டானின் விருப்பத்துக்கிணங்கத் தம் உருவச்சிலையை வடித்துத் தம் பிறப்பிடமான ஸ்ரீபெரும்பூதூரில் கோயிலமைத்து வழிபடுவதற்கு இசைவளித்தார். தாமே தழுவித் தந்த அந்த விக்கிரகத்தை ஸ்ரீபெரும்பூதூரில் ஒரு தைப்பூச நன்னாளில் வழிபாட்டுக்கு அமைக்கும்போதே, எம்பெருமானார் நோயுற்றார். ஒரு வாரத்தில்

---

26. பரபக்தி - பெருமானோடு கூடினால் இன்பமும் பிரிந்தால் துன்பமும் வாய்ந்த இயல்பு; அன்பின் எல்லை.
பரஞானம் - இதன் முதிர்ந்த நிலை.
பரமபக்தி - நொடிப்பொழுதும் பிரிவைப் பொறுக்காத நிலை.

திருநாட்டுக்கு எழுந்தருளினார்[27]. எம்பார் திருமடியிலே திருமுடியும், வடுகநம்பி திருமடியிலே திருவடிகளும் வைத்த நிலையில் அவர் உயிர் பிரிந்தது. 'இராமாநுசன் என்றன் சேமவைப்பு' என்று கருதிய அரங்கனின் விருப்பப்படி, நிதியை உள்ளே இட்டு வைப்பது போல, அவரது பூதவுடலை அரங்கத்துப் பெரியோர்களும் அவர் சீடர்களும் அரங்கன் கோயில் சுற்றிலேயே - வசந்த மண்டபத்தில் திருப்பள்ளிப்படுத்தினர். அங்கேயே கோயில் கட்டி உருவச்சிலையெழுப்பி வழிபடலாயினர். இத்திருமேனி தாமான



*தாம் உகந்த திருமேனி - ஸ்ரீபெரும்பூதூர்*

திருமேனி என்றும், ஸ்ரீபெரும்பூதூரில் அமைக்கப் பெற்ற திருமேனி தாமுகந்த திருமேனி என்றும், திருநாராயணபுரத்து அடியவர்கள் வழிபட அமைத்தது தமருகந்த திருமேனி என்றும் வழங்கி வருகின்றன.

27. ஒருநாள் நம்பெருமாளிடம், 'அடியேனைக் காலக்கழிவு செய்யாமல் உன் பொன்னடிக்கீழ் விரைவில் சேர்த்துக்கொள்ள வேண்டும்' என்று உடையவர் முறையிட்டதாகவும், திருவரங்கத்து இறைவனும் அவரைப் பிரிய மனமின்றி, 'இற்றைக்கு ஏழாம் நாள் அப்படியே செய்கிறோம்' என்று வாக்களித்ததாகவும் 'குருபரம்பரை' கூறும்.

தமக்குப்பின்னர் வைணவ சமயத்தைக் கட்டிக் காப்பதற்குத் தகுதியுடையவர் கூரத்தாழ்வானின் புதல்வரான பராசரபட்டரே என்று முடிவெடுத்தார் இராமாநுசர். அவரை எம்பாரிடம் ஒப்படைத்துச் சாத்திரங்களில் வல்லவராய் வளர்த்து ஆளாக்கினார். எனவே தாம் மறைவதற்கு முன்பு, பட்டரையே சமயத் தலைவராக ஏற்கும்படி தம்முடைய சீடர்களுக்கு ஆணையிட்டார்.


தாமான திருமேனி - ஸ்ரீரங்கம்

'முழுக்கச் சொல்லி முடியாது[28]' என்று வைணவ நூல்கள் வியந்தும் உகந்தும் பேசும் உடையவரின் வாழ்க்கைச் சுருக்கம் இது.

பெருக்காறு ஒன்று வற்றாத ஜீவ ஊற்றுக்களை உருவாக்கி விட்டு ஓடி மறைந்தது போலவும், ஆண்டு பலவாகத் தழைத்துச் செழித்திருந்த ஆலமரம் ஒன்று முத்து முதிர்ந்த பின்னர் விழுதுகளையே வேராக நிறுத்தித் தன் மூல வேர்களை முறித்துக் கொண்டது போலவும் தம் வாழ்க்கையை முடித்துக் கொண்டார் இராமாநுசர்.

ஆனால் மனித சமுதாயம் உள்ளவரை வரலாற்றில் அவர் ஆழப்பதித்துச் சென்ற சுவடுகளுக்கு முடிவு ஏது?



28. ''உடையவர் வைபவம் அடையச் சொல்லப்போகாதிறே'' என்று பேசும் 'ராமாநுஜார்ய திவ்ய சரிதை' என்னும் நூல்.

# 3. பாரினை உயர்த்திய பணிகள்

உலகம் உய்யப் பிறந்த மகான்களும் அருளாளர்களும் தம் வாழ்க்கையின் மூலமே மக்களுக்குப் பல செய்திகளை உணர்த்திவிடுகிறார்கள்; வாழ்ந்து காட்டுவதன் மூலம் மற்றவர்களுக்கு வழிகாட்டுகிறார்கள். 'என் வாழ்க்கையே, மக்களுக்கு நான் கூறும் செய்தி' என்று காந்தியடிகள் கூறியது இங்கு நினைக்கத்தகும். பெரியோர்கள் பிறர்க்கு அறிவுரை கூறுவதைக் கடமையாகக் கொள்வதில்லை. 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று பணிபுரிவதிலேயே கண்ணும் கருத்துமாய் இருக்கிறார்கள். இராமாநுசரின் வாழ்க்கையை ஆழ்ந்து நோக்குவார் அனைவரும் அவரின் பணிகள் யாவும் பாரினை உயர்த்தும் பணிகளாக அமைந்திருப்பதை உணர்ந்துகொள்ளலாம்.

## சொன்ன வண்ணம் செய்த 'பெருமாள்'

உயர்ந்த இடத்தில் இருந்துகொண்டு உபதேசம் செய்வது எளிது. தான் சொன்ன வண்ணமே செய்வதென்பது அரிது; அரிதினும் அரிது. அத்தகைய அரிய செயல் செய்யும் பெரியோனாகத் திகழ்ந்த இராமபிரானை,

'உரைசெயற்கு எளிதுமாகி அரிதுமாம் ஒழுக்கில் நின்றான்'

என்று புகழ்ந்துரைத்தான் கவிச்சக்கரவர்த்தி. அந்த 'இராமபிரானுக்கு இளவல்' என்னும் பொருளில் இராமாநுசர் என்னும் பெயர் தாங்கிய உடையவரும் தம் வாழ்நாளில் செயற்கரிய பணிகளையே செய்தார். செய்யும் பணிகளில் அவர் உயர்வு தாழ்வு கருதியதில்லை. ஸ்ரீபாஷ்யம் செய்வது முதல் ஆசார்யனுக்குப் பாலமுது காய்ச்சுவது வரை எல்லாப் பணிகளையும் வேறுபாடின்றி ஒன்றிய மனத்துடன் உகப்புடனே அவர் செய்து முடித்தார். வைணவக் கோட்பாடுகளை ஏட்டுச் சுரைக்காயாக்காமல் தாமே அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காட்டினார். நாம்

முன்னரே குறிப்பிட்டது போல அந்தணர்கள் மேற்கொண்ட தீண்டாமையை அலட்சியப்படுத்தி, நீராடித் திரும்புகையில் உறங்காவில்லி என்னும் தாழ்த்தப்பட்ட குலத்திற் பிறந்த சீடனைக் கைகோத்து அழைத்துச் சென்றதும் தொண்டனூர் அரிசனங்கள் திருநாராயணபுரம் திருக்கோயிலில் நுழைய அனுமதித்ததும், 'வைணவம் சாதிக் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டது' என்னும் கொள்கையை நடைமுறைப்படுத்திக் காட்டியதன் விளைவுகளே ஆகும்.

## எல்லார்க்கும் பெய்த 'இன்பமாரி'

விண்ணிற் சூல்கொண்ட கார்மேகம் காடு மேடென்றும் ஏரி கடலென்றும் பார்க்காமல் தன்னிடத்துள்ள நீரை எல்லாவிடங்களிலும் கொட்டித் தீர்க்கிறது. அத்தகைய 'வானமாய் நின்றின்ப மழையாய் இறங்கி' வையத்தை வாழ்விப்பதே நோக்கமாய்க் கொண்டவர் இராமாநுசர். முளைக்கும் போதே மணக்கும் துளசி போல, இந்த அருள் நெஞ்சம் அவர்க்கு இயல்பிலேயே அமைந்திருந்தது.

'சீடனுடைய ஆருயிரைப் பேணுமவனே ஆசார்யன்' என்னும் ,கொள்கைப்படி, தம் சீடர்களுடைய ஆன்மிக வளர்ச்சியில் பெருநோக்குடையவராய்த் திகழ்ந்தவர் இராமாநுசர். அரும்பாடுபட்டுத் திருக்கோட்டியூர் நம்பியிடம் திருமந்திரார்த்தம் பெறச் சென்றபோது - தாம் மட்டும் தனியே செல்லாமல் கூடவே கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் கூட்டிச் சென்றார். அதனைக் கண்ட நம்பி, தாம் கூறியவாறு தனியே வராமைக்குக் காரணம் கேட்க, சமத்காரமாக - அவ்விருவரும் தமக்குத் தண்டும் பவித்திரமும் எனக் கூறி, அவரின அனுமதியோடு மூவருமாக உபதேசம் பெற்றனர். உடையவருடைய கருணையினால் நம்பியினுடைய சம்பந்தமும் செம்பொருளை எந்தச் சிரமமுமின்றி அவரிடமிருந்தே பெறுகின்ற வாய்ப்பும் ஆண்டானுக்கும் ஆழ்வானுக்கும் கிடைத்தன. இந்த நன்றியை நினைந்தே, "ஒரு மலையில் இருந்தும் ஒரு மலைக்குத் தாவும் சிம்மத்தின் உடம்பில் உள்ள உயிர்களைப் போல - உலச வாழ்க்கையைக் கடத்துதற்கு உதவிய உடையவரின் தொடர்பாலே நாம் கரை சேர்ந்தோம்"[1] என்று முதலியாண்டான் குறிப்பிடக் காணலாம்.

## கருணைப் பெருவெள்ளம்

ஆழ்வான், ஆண்டான் என்ற இருவரோடும் அவருடைய கருணை அளவுபட்டு நிற்கவில்லை. பெருக்காற்று வெள்ளம்

1. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் - அதிகார விபாகாதிகாரம்.

மேட்டிலும் ஏறிப் பாய்வது போலத் திருக்கோட்டியூர் நம்பியிடத்தே தாம் பெற்ற திருமந்திரப் பொருளை உலகம் உய்யுமாறு அறிவித்தார் அவர்.

காரேய் கருணை கரைபுரண்டபடியால் அர்த்தத்தின் சீர்மை பாராமல் சம்சாரிகள் படும் அனர்த்தத்தை (கேட்டினை) நோக்கியே இங்ஙனம் மறைப்பொருளை வெளியிட்டார் இராமாநுசர். இதனால் கருணைக் கடலான எம்பெருமானைக் காட்டிலும் கருணையில் விஞ்சி நின்றார். அதன் அடையாளமாக 'எம்பெருமானார்' (எமக்கெல்லாம் தலைவர்) என்னும் பெயரும் பெற்றார்.

'தன் ஆத்ம லாபத்துக்காக உலகத்தையும் தியாகம் செய்துவிடலாம்' என்பது தத்துவப் பேரறிஞர்களின் கொள்கை. வேதரிஷிகள் காலம்தொட்டு இதுவே நிலைமை. ஆனால், இராமாநுசரோ உலக மக்களுக்காக இரங்கித் தம் ஆத்ம லாபமாகிய முக்தியையும் துறக்கத் துணிந்தார். அதனால் மற்றைய முனிவர்களிலும் மேம்பட்டு 'முனிவர்களின் தலைவர்' என்னும் பொருளில் 'யதிராசர்' ஆனார். எனவேதான்,

"தன்னுயிர் தன்னைக் கொண்டு
தான்பிழைத்திடுவ தன்றி
மன்னுயிர்க்கு இரங்கித் தன்னை
மைந்தனே! மாய்க்கப் புக்கார்
இந்நிலத்து இல்லை; இல்லை;
ஏழுல கத்தும் இல்லை..."

என்று வியந்தார் திருக்கோட்டியூர்நம்பி. இராமாநுசர் வரவால் பக்தி நெறியாளர் பெற்ற பெரும் பயன் இது.

### வரம்பறுத்த வள்ளல்

நாதமுனிகள் காலம் தொடங்கி வைணவக் கல்வி ஓரான் வழியாகவே உபதேசிக்கப்பட்டு வந்தது. அதாவது ஓர் ஆசிரியனிடத்தில் (ஆசார்யன்) சீடன் ஒருவன் மட்டுமே கற்கலாம். பொருளின் சீர்மை கருதி எல்லார்க்கும் உரைக்காமல் அதனை மறைத்து வைத்து, தகுதியுடையான் ஒருவனைத் தேர்ந்தெடுத்து அவனைப் பலபடியாகவும் சோதித்து, அவனுக்கு மட்டுமே உபதேசிப்பது என்பது அந்நாளைய மரபாக இருந்தது. இத்தகைய வரம்பினை நீக்கத் திருவுள்ளம் கொண்டார் இராமாநுசர். அவரது கருணை திருக்கோட்டியூர்நம்பி - தம்மைச் சோதித்த அளவுக்கு அதில் இம்மியளவு கூடச் சோதிப்பதற்கு இடம் தரவில்லை.

முன்னோர்கள் நாட்டிவைத்த வரம்பினையறுத்து - ஆசையுடன் வந்து கேட்டவர்க்கெல்லாம் உபதேசிக்கலாம் என்பதற்குத் தாமே முன்னுதாரணமாய் நின்றார். திருக்கோட்டியூர்நம்பியிடம் பெற்ற ரஹஸ்யார்த்தத்தைப் பலரும் அறிய உபதேசித்தமை இதற்குச் சான்று. இதனையே,

''ஓரான் வழியாய் உபதேசித் தார்முன்னோர்
ஏரார் எதிராசன் இன்னருளால் - பாருலகில்
ஆசையுடை யோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று
பேசி வரம்பறுத்தார் பின்''

என்று மணவாளமாமுனிகள் பாடி மகிழ்ந்தார்.

திருவரங்கத்தமுதனாரும்,

''காரேய் கருணை இராமாநுச! இக்கடலிடத்தில்
ஆரே அறிபவர் நின்னருளின் தன்மை?''

என்று போற்றி வியந்தார்.

சிறிய திருமடல் வியாக்கியானத்திலும் உடையவரின் கருணை மிகுந்த இப்பணி பின்வருமாறு பதிவு செய்யப்பட்டுள்ளது.

''முன்பிருந்த ஆசார்யர்கள் பகவத் விஷயம் சொல்லும்போது நாலிரண்டு பேருக்காயிற்றுச் சொல்லுவது. அதுதானும் அவர்கள்படி(ஆர்வமுள்ள நிலை)யறிந்தால் சொல்லுவது. அங்ஙனமின்றி ருசியுடையார் என்று தோன்றினவாறே சொல்லுவார் எம்பெருமானார்''.

இவ்வாறே திருநெடுந்தாண்டக வியாக்கியானத்திலும் ''சொல்லென்னச் சொன்னாள்'' என்னும் தொடருக்கு உரை கூறுகையில், ''ஆசையுடையோர்க்கெல்லாம் வார்த்தை சொல்லிப் போந்த உடையவரையே'' நினைவுகூர்கிறார் உரையாசிரியர் பெரியவாச்சான்பிள்ளை.

## உடையவரின் விரைவும் பரிவும்

தாம் கற்றதையும் பெற்றதையும் உடனே பிறருக்கு அறிவித்துப் பயன் கொள்ளுமாறு செய்வதில் உடையவர் காட்டிய விரைவும் பரிவும் எழுத்தில் வடித்துச் சொல்லல் இயலுமோ? திருவிருத்தம் 99ஆம் பாசுரத்தில் இடம்பெறும் குறிப்பு ஒன்று நம்மை இத்தகைய நினைப்புக்கு இட்டுச் செல்கின்றது.

ஒருமுறை திருவரங்கத்திற்கு வந்திருந்த திருக்கோட்டியூர்நம்பி உடையவரைத் தனியே அழைத்துச் சென்று, ''எம்பெருமானைத் தவிரக் கர்ம யோகமோ, ஞான யோகமோ, பக்தி யோகமோ, பிரபத்தி

யோகமோ உபாயங்கள் அல்ல; இவை ஒன்றையும் எதிர்பாராமல் தானே உபாயமாக நின்று வீட்டினை அளிப்பவன் எம்பெருமானே ஆவான்'' என்னும் அர்த்தத்தை அருளிச் செய்தார். இதனை வடமொழியில் 'ஸஹகாரிநைரபேக்ஷ்யம்' என்பர். யாருமறியாமல் ரகசியமாக இதனை உபதேசித்த திருக்கோட்டியூர் நம்பி, 'ஒருவர்க்கும் இதனைச் சொல்லக் கூடாது' என்றும் கட்டளையிட்டார்.

ஆனால் இராமாநுசரின் கருணை(யு/வெ)ள்ளம் அதற்குக் கட்டுப்படவில்லை. 'முன்போல ஊரறியச் சொல்லாவிட்டாலும், ஒருவருக்காவது சொல்லித் தரிக்கலாமே' என்னும் முடிவுக்கு வந்தார். அப்போது அவரின் நினைவுக்கு வந்தவர் அவரின் அன்புக்குப் பாத்திரமான கூரத்தாழ்வானே.

உச்சி வெயில் கொளுத்துகின்ற நடுப்பகல் நேரம் அது. அதையும் பொருட்படுத்தாமல் நேரே கூரத்தாழ்வான் திருமாளிகைக்குச் சென்றார் இராமாநுசர். அப்போது உணவருந்திக் கொண்டிருந்த ஆழ்வானை அழைத்து, ''திருக்கோட்டியூர் நம்பி, 'ஒருவர்க்கும் சொல்லக் கூடாது' என்று கூறி, எனக்கு இவ்வர்த்தத்தை அருளிச் செய்தார். ஆனால் உமக்கு மட்டும் சொல்லாமல் இருக்க என்னால் முடியவில்லை'' என்று சொல்லி, ''எம்பெருமானைத் தவிர வேறு எவருமே தஞ்சமல்லர்'' என்பதனைக் கூரத்தாழ்வானுக்கு அருளிச் செய்தார்.

இந்நிகழ்ச்சி, 'கூரத்தாழ்வான் சாப்பிட்டு முடிக்கும் வரை உடையவர் பொறுமையோடு காத்துக் கொண்டு இருந்திருப்பாரா?' என்னும் ஐயத்தையே நம்முள் எழுப்புகிறது. உடையவர் அழைத்தவுடனே உண்பதை முடித்துக் கொண்டு - கழுவிய கையின் ஈரம் உலர்வதற்கு முன்பாகவே விரைந்து வந்து, உணவுக்குப் பின்னர் நீரைப் பருகும் ஆர்வத்தோடு, அவர் கூறிய அர்த்தத்தினை ஆழ்வான் கேட்டிருக்க வேண்டும்!

இந்த முடிவுக்குத்தான் நாம் வரவேண்டியவர்களாகிறோம். அடடா! எப்பேர்ப்பட்ட குரு! எத்தகைய பெருமை வாய்ந்த சீடர்!

## எல்லார்க்கும் உரியது இறையருள்

தம்முடைய சீடர்களுக்கும் பொறிபுலன்களால் குறைவற்ற ஏனைய மக்களுக்கும் மட்டுமே இறையருள் உரியது என்று அவர் கருதவில்லை. 'பொறியின்மை யார்க்கும் பழியன்று' என்பது உடையவரின் திருவுள்ளம். ஓர் ஊமையினிடத்தும் கரைபுரண்டு பெருகிய கருணை இதனை உறுதி செய்கின்றது.

உடையவர் ஒருநாள் ஊமையன் ஒருவனை அழைத்து மடத்துக்குள்ளே நிறுத்தித் திருவாசற் கதவுகளையடைத்து, கைக்குறி முகக்குறிகளாலே தம் திருவடிகளை அடைக்கலமாகப் பற்றும்படி அவனுக்கு உணர்த்தினார். அந்த ஊமையும் பாக்கிய வசத்தாலே 'இத்திருவடிகளே நமக்குத் தஞ்சம்' என்று அறிந்து, அவற்றைத் தலைமேல் அணிந்து கிடந்தான். ஆழ்வான் இதைக் கதவின் புரை வழியாகவே கண்டு, ''ஐயோ! ஆழ்வானாகப் பிறந்து சாஸ்திரங்களைக் கற்றுக் கெட்டேனே! ஊமையாகப் பிறவா தொழிந்தேனே'' என்று தலைமேல் மோதிக் கொண்டு கதறினாராம்.

கூன் குருடு செவிடு பேடு - முதலான பிறவி படைத்தோரை மதிக்காமல் புறக்கணித்து ஒதுக்குவது உலக இயல்பு. மானிட சாதியில் அவ்வாறு பிறந்த குறைப்பிறவிகளையும் கடைத்தேறச் செய்யும் அருள் நெஞ்சம் கொண்டவராய்த் திகழ்ந்தவர் இராமாநுசர். ஊமைக்கும் 'தம் திருவடிகளே தஞ்சம்' என்பதை உணர்த்தி உய்வு பெறச் செய்தார். இதனையே,

''கொள்ளக் குறைவற்று இலங்கிக் கொழுந்துவிட்டு ஓங்கியஉன்
வள்ளல்தனம்''

என்று கொண்டாடினார் பிள்ளையமுதனார்.

### சாதிக்கு எதிரான 'பாடம்'

இந்த வள்ளல்தனம் - சாதித்தடைகளைத் தாண்டி, எப்படியெல்லாம் கொழுந்துவிட்டுப் படர்ந்தது என்பதற்கு இராமாநுசரின் வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகள் உண்டு.

'சாதி வேற்றுமைக்கு இடமின்றி எல்லார்க்கும் உரியது இறையருள்' என்பதை அவர் உறுதிபட நம்பினார்; நம்பியபடியே நடந்து காட்டினார். அப்போதும் உணராதவர்களை உணர்ந்து திருந்தும்படி செய்தார். அவர் வாழ்ந்த காலச் சமுதாயம் சாதி வேற்றுமையால் புரையோடிப் போயிருந்தது; சாதிச் செருக்கு, செல்வச் செருக்கு, கல்விச் செருக்கு ஆகிய முச்செருக்குகளாலும் மனித மனம் பாழ்பட்டிருந்தது. இத்தகைய சமுதாயத்தை வாழ்விக்க வந்தவரே இராமாநுசர். அதன்பொருட்டு அவர் மேற்கொண்ட செயல்பாடுகள் நம்மை மெய்சிலிர்க்க வைக்கின்றன.

உறங்காவில்லி போன்ற 'தாழ்குல'ச் சீடர்களிடத்தும் அவர் வேற்றுமை காட்டாது பழகியது அக்காலத்து வைதிகர்களுக்குப் பிடிக்கவில்லை. குறிப்பாக அவர் மடத்தைச் சேர்ந்த சீடர்களுக்கே அதில் உடன்பாடில்லை. சாதித் திரை அவர்களின் கண்களை

மறைத்தது; இராமாநுசர்பால் குற்றமே கண்டது. எனினும், அவர் மனம் தளரவில்லை. அவர்களிடத்தே மனமாற்றம் நிகழுதற்கு முயற்சிகளை மேற்கொண்டார்; வெற்றியும் பெற்றார்.

சீடர்களுக்குப் பாடம் புகட்டுதற்கு அவர் செய்த 'சூழ்ச்சி' சுவாரஸ்யமானது.

சீடர் ஒருவரைக் கொண்டு மற்றவர்கள் அறியா வகையில் - மடத்தில் காய்ந்துகொண்டிருந்த காவியாடைகளில் - ஒவ்வொரு முழம் கிழிக்கும்படி செய்தார் இராமாநுசர். 'இப்படிச் செய்தவர் யார்? காரணம் என்ன?' என்பதை அறியாத சீடர்கள், சீறிச் சினந்தார்கள்; வாய்க்கு வந்தபடி வைதார்கள். துறவுக்குரிய பொறுமையோ, வெகுளாமையோ அவர்களிடம் சிறிதும் இல்லை. ஒருமுழக் காவித்துணிக்காக அவையிரண்டும் அவர்களை விட்டுத் துறந்து போய்விட்டன.

இந்நிலையில் இரவு நேரத்தில் சீடர் இருவரை உறங்காவில்லியின் வீட்டிற்கு அனுப்பித் தூங்கிக்கொண்டிருக்கும் தாசரின் மனைவி பொன்னாச்சியிடமிருந்து நகைகளைக் களவாடி வரும்படி பணித்தார் இராமாநுசர். அன்று இரவு பிள்ளை உறங்காவில்லிதாசர் நெடுநேரம் தம்முடன் இருக்குமாறு பார்த்துக் கொண்டார்.

உறங்காவில்லியின் வீடு நோக்கிச் சென்ற சீடர்கள், ஒருபக்கமாகச் சாய்ந்து படுத்துக்கொண் டிருந்த பொன்னாச்சியின் நகைகளைக் கழற்றிக்கொண்டனர். பொன்னாச்சி அதையறிந்தும் அறியாதவள்போல், அச்சடித்த பதுமையாய் அசையாது படுத்திருந்தாள். 'பாவம்! அடியார்களுக்கு என்ன வறுமையோ? மறுபக்கத்தில் உள்ள காதணிகளையும் கழற்றிக் கொள்ளட்டும்' என்று கருதி அதற்கு வாய்ப்பாகத் திரும்பிப் படுத்தாள். அவளின் உள்நோக்கத்தை அறியாத சீடர்கள், அவள் விழித்துக் கொண்டதாக நினைத்துப் பயந்து அங்கிருந்து ஓடிவிட்டனர்.

சீடர்கள் மடத்துக்குத் திரும்பியது கண்டு உறங்காவில்லியை வீடு செல்லுமாறு பணித்தார் உடையவர். அங்கு நடந்தது எதுவும் வில்லிக்குத் தெரியாது. அவரும் வீடு நோக்கிப் புறப்பட்டார். இந்நிலையில் பொன்னாச்சியின் ஒரு பக்கத்து நகைகளைக் கவர்ந்து கொண்டு வந்த சீடர்களைப் பார்த்து, வில்லியை - அவர் அறியாதவாறு பின்தொடர்ந்து சென்று, அவர் வீட்டில் நடப்பதை அறிந்துவருமாறு கட்டளையிட்டார்.

வீடு திரும்பிய வில்லிக்கும் அவர் மனைவி பொன்னாச்சிக்கும் இடையில் நடக்கும் உரையாடலைச் சீடர்கள் கவனிக்கிறார்கள் :

நடந்ததை அறிந்த வில்லி, தம் மனைவியைக் கோபிக்கிறார். 'நகையைக் களவு கொடுத்துவிட்டாளே?' என்ற கோபமா? இல்லை. 'புரண்டு படுத்ததன் மூலம் அவர்களை அச்சுறுத்தி அனுப்பிவிட்டாளே' என்ற கோபம்தான் அவருக்கு. 'என் நகைகளை அவர்களுக்குக் கொடுப்பேன்' என்ற ஆணவம் தான் அவர்களைத் துரத்திவிட்டது - என்று சீறினார் அவர். ''எல்லாம் 'அடியவர் உடைமை' அல்லவா? 'உன்னது' என்று நினைக்கும் அதிகாரம் உனக்கு ஏது? நீ ஆபரணங்களை இட்டு வைத்த செப்புப் போலே இருந்திருக்க வேண்டாமா? அப்படியிருந்திருந்தால் பாகவதர்களுடைய திருவுள்ளக் கருத்து முழுவதும் நிறைவேறியிருக்குமே. நீ உரிமை (ஸ்வாதந்தர்யம்) உணர்ச்சியைக் காட்டியதால்தானே அவர்கள் பாதி விருப்பம் நிறைவேறியதோடு திரும்பும்படி ஆயிற்று'' என்று தம் மனைவியைக் கடிந்து கொண்டார். உத்தமமான மனைவி தமக்கு வாய்த்திருந்தும் 'என் உடைமை' என்பதன் அடியாகப் பிறந்த அகந்தைக்காக அவளைக் கண்டித்தார் உறங்காவில்லி. தம்பதிகளுக்கு இடையில் நடந்த உரையாடலைக் கேட்டு வியப்படைந்த சீடர்கள் ஓடிவந்து உடையவரிடம் தெரிவித்தனர்.

சீடர்கள் எல்லார்க்கும் இந்த விவரம் தெரிந்தது; பிள்ளை உறங்காவில்லிதாசரும் அவர் மனைவி பொன்னாச்சியும் 'மாமனிதர்கள்' என்னும் உண்மை புரிந்தது. புரிய வைத்தார் இராமாநுசர். இராமாநுசரின் செயல் வீரம் இது.

### ஆசார்யன் காட்டிய வழி

இப்படிச் சாதி வேற்றுமை களைந்து சமயப்பணி புரிந்ததற்குப் பெரியநம்பி போன்ற ஆசார்யரின் வாழ்நெறிகள் இராமாநுசருக்கு வழிகாட்டின.

இராமாநுசரின் ஐம்பெரும் ஆசிரியர்களுள் ஒருவர் பெரியநம்பி என்பதை நாம் அறிவோம். திருக்குலத்திலே பிறந்த மாறனேர்நம்பி என்னும் இறையடியார் (பாகவதர்) மறைந்தபோது, அவருக்கு அடியார்க்குரிய இறுதிச் சடங்குகளை (பிரமமேத ஸம்ஸ்காரம்[2])

2. பிரமமேத ஸம்ஸ்காரம் - வேதமோதிய அந்தணர்க்குரிய முறையில் செய்யப்படும் ஈமச்சடங்கு.

முறைப்படி செய்தவர் பெரியநம்பி. அந்தணரான பெரியநம்பியின் இச்செயல் கண்டு வைதீகர்கள் வெறுப்படைந்தனர். அந்நிலையில் இராமாநுசர் அவரை அணுகி, ''இக்காரியத்தை உத்தமரான தாங்களே செய்ய வேண்டுமா? சீடர்களில் யாரையாவது ஏவிச் செய்யும்படி பணித்திருக்கலாமே'' என்று வினயத்துடன் கேட்க, அதற்கு நம்பி பின்வருமாறு விடையிறுத்தாராம் :

''மாறனேர்நம்பி ஆளவந்தாரின் சீடர்களுள் ஒருவர். அவரின் கருணைக்குப் பாத்திரமானவர். பாகவதர்களுள் தலை சிறந்தவர். சக்கரவர்த்தித் திருமகனான இராமபிரான், ஜடாயு என்ற ஒரு கழுகுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்யவில்லையா? தர்மபுத்திரர், கீழ்க்குலத்தவரான விதுரருக்கு அந்திமச் சடங்குகளைச் செய்யவில்லையா? நமது மாறனேர்நம்பி ஜடாயுவுக்கோ, விதுரருக்கோ குறைந்தவரா? அடியேன் இராமபிரானையும் தர்மபுத்திரனையும்விட உயர்ந்தவனோ? மேலும் அந்தி தொழுகைக்கு ஆளிடலாமோ?[3] ஆழ்வாரின் திருவுள்ளத்தை நீர் அறியாதவரோ? பாகவதர் (இறையடியார்) பெருமையைப் பேசுகின்ற 'நெடுமாற்கடிமை' என்னும் திருவாய்மொழி வெறும் கடலோசையோ? நாம் கற்றுக் கடைப்பிடிப்பதற்காக எழுந்ததன்றோ அது? இவையெல்லாம் அடியேன் சொல்லித்தான் தேவரீர் உணர வேண்டுமோ?'' என்றார்.

இந்நிகழ்ச்சி, 'பாகவதர்களின் குலம் பற்றிச் சிந்திப்பதே பழிப்பாகும், பாவமாகும்' என்னும் உடையவரின் எண்ணத்துக்கு மேலும் உரமூட்டுவதாக அமைந்துவிட்டது.

## வித்தும் விளைவும்

தம் இளவயதிலேயே அந்தணரல்லாத திருக்கச்சிநம்பிகளை ஆசார்யனாக ஏற்க விரும்பியவர் இராமாநுசர். மேலும் அவர் உண்டொழிந்த மிச்சிலை உண்ணவும் விரும்பியிருந்தார். திருக்கச்சிநம்பியோ அதற்கு இடமளிக்கவில்லை. தாம் துறவுபூண்டு காஞ்சியை விட்டுத் திருவரங்கம் வந்த பிறகும் சாதி வேற்றுமை கருதாது தொடர்ந்து நம்பியை நினைந்து போற்றியது இராமாநுசரின் திருவுள்ளம். நம்பியினிடத்துத் தம் சிறுவயதில் கொண்டிருந்த பக்தி நாளாக ஆக ஏறியதே தவிரச் சிறிதும் மாறியதில்லை. திருவிருத்தம் எட்டாம் பாசுரத்தில் காணப்படும் குறிப்பு இதற்கு ஆதாரமாகின்றது.

3. அந்தி தொழுகை - சந்தியாவந்தனம். தானே செய்ய வேண்டும். அதனை ஆளிட்டுச் செய்ய முடியாது என்பது கருத்து.

ஒருசமயம் திருவரங்கத்தில் சீடர்களுக்கு நல்லுரைகள் கூறிக் கொண்டிருந்தபோது, திருக்கச்சிநம்பியின் நினைவு வரவே, ''பெருமாள் கோயிலுக்குச் (காஞ்சிபுரம்) சென்று திருக்கச்சிநம்பி நலனை ஆராய்ந்து வருவார் யாரேனும் உளரோ?'' என்று கேட்டாராம் இராமாநுசர். அப்போது 'நான் போகிறேன்' என்று சீடர் எவரும் முன்வரவில்லை. இச்செய்தியை அறிந்த பெரியநம்பி, மறுநாள் விடிகாலையில் உடையவர் மடத்துக்கு வந்து, ''காஞ்சிப் பேரருளாளனைத் தொழுதுவரும் நினைவாயுள்ளேன்'' என்று கூறி விடை கொண்டு காஞ்சிக்குச் சென்றார். அங்குத் தேவப்பிரானையும் திருக்கச்சிநம்பியையும் சேவித்து, நம்பியுடன் சிறிது நேரம் உரையாடி மகிழ்ந்து, உடனே திருவரங்கம் செல்வதாகப் புறப்பட்டார். நம்பியும் ''திருநாள் நெருங்குகிறது; தங்கிச் செல்லலாமே!'' என்று வேண்ட, பெரியநம்பியும் ''நாம் வந்த காரியம் ஆயிற்று; திருநாளுக்கு இருக்க இயலாது. புறப்பட வேண்டும்'' என்று கூறவும் திருக்கச்சிநம்பிக்கு ஒன்றும் விளங்கவில்லை. உடனே பெரியநம்பியும், ''நம் உடையவருக்கு உம் நினைவாக இருந்து, உமது நலனறிந்து வருவார் உண்டோ? என்று சீடர் குழுவில் கேட்க, ஒருவரும் எழுந்தாரில்லை. 'நாம் சென்று வருவோம்' என்று வந்தேன். வந்த காரியமாயிற்று. விடை தந்தருள வேண்டும்'' என்றாராம்.

இவ்விரு நிகழ்ச்சிகளும் நமக்கு எதனை உணர்த்துகின்றன?

சாதி வேற்றுமை கருதாத தன்மை, உடையவர் உள்ளத்தே வித்தாக முளைத்திருந்தது என்றால், அதற்கு நீர்வார்த்து வளர்த்த பணி பெரியநம்பி போன்ற ஆசார்யர்களைச் சாரும் என்ற பேருண்மையைத் தானே!

### சீடர்களுக்கு வழிகாட்டினார்

தம் ஆசார்யர்களிடம் சமய, தத்துவ நூல்களை மட்டும் கற்கவில்லை இராமாநுசர்; வாழ்க்கை நெறிகளையும் கற்றார். கற்றதற்கேற்பக் கடைப்பிடித்தார். பராசரபட்டர் முதலான சீடர்களையும் அவ்வாறே உருவாக்கினார். தம் அருமைச் சீடரான பிள்ளை உறங்காவில்லிதாசர் மறைந்தபோது அந்திமக்கிரியைகளை அவருக்குச் செய்யுமாறு கூரேசரின் மூத்த புதல்வரான பராசரபட்டருக்குக் கட்டளையிட்டார். வில்லிதாசரின் பூதவுடலை விமானம் போல அலங்கரித்த பூப்பல்லக்கிலே ஏற்றி வைத்து, ஏகாங்கிகளும் பாகவதர்களும் மாறி மாறித் தோள் கொடுத்துத் தூக்கிக் கொண்டு போனார்கள். அதை வைத்த கண் வாங்காமலும்,

கண்களிலிருந்து துளிநீர் சிந்தாமலும் பார்த்துக் கொண்டே நின்றாள் பொன்னாச்சி. பல்லக்கு தூரத்தில் சென்று மறைந்தது. 'மாரிமாக்கடல்' என்னும் பெரிய திருமொழிப் பாசுரம் அவள் நினைவுக்கு வந்தது. ''துணை காணேன்; ஊரும் துஞ்சிற்று; உலகமும் துயின்றது; தேரும் போயிற்று; திசைகளும் மறைந்தன. செய்வதொன்று அறியேனே'' என்று புலம்பிக் கொண்டே திசை நோக்கித் தொழுது தரையில் மூர்ச்சித்து விழுந்தாள். அப்போதே உயிரும் நீங்கியது. உடையவர் பணித்தவாறே பொன்னாச்சியையும் வில்லிதாசருடன் பள்ளிப்படுத்தி (அடக்கம் செய்து) இறுதிக் கடன்களைச் செய்தார் பட்டர்.

இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்ச் சாதிக்கட்டுகள் இறுகியிருந்த காலத்தில், அந்தண குலத்தோன்றலான பட்டர் - தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த தம்பதிகளுக்கு அந்திமக் காரியங்களை முன்னின்று நடத்தியது எத்துணைப் பெரிய செயல்!

இதற்கு அடிப்படையாக அமைந்த இராமானுசரின் சமுதாயப் பணிகளை அக்காலச் சூழலைக் கருத்திற் கொண்டு நோக்கும் போதுதான் அவற்றின் அருமையை நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

பகவத் கீதையின் சுலோகம் ஒன்றில் வரும் 'ஸமதா' என்பதை விவரிக்கும் போது, ''சமத்வமாவது தன்னிடத்திலும் பிறரிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடைமை'' என்று இராமானுசர் விளக்கம் தருகிறார். அந்த விளக்கம் வெறும் 'அறிவு விளக்கமாக' இல்லாமல் 'வாழ்வியல் விளக்கமாக' அமைந்ததைத்தான் இத்தகைய நிகழ்ச்சிகள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

### எதிராசரின் 'ஏற்றம்'

இராமானுசர் தம் முதலிகளுடன் திருமலைக்குச் (திருவேங்கடம்) சென்றபோது, வழி தவறிவிட்டது. அப்போது அங்கு ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த ஒருவன், அவர்களுடன் சிறிது தொலைவு நடந்துவந்து சரியான வழியைக் காட்டினான். அவன் கீழ்க்குலத்தவன் என்று பாராமல் அவன் கால்களில் விழுந்து வணங்கினார் இராமானுசர். சீடர்களையும் வணங்குமாறு ஆணையிட்டார். 'சீடர்களுக்கு இது பிடிக்கவில்லை' என்பதை அவர்களின் முகக்குறிப்பால் கண்டுகொண்ட இராமானுசர், அவர்களிடம் 'இவன் நம்மைக் காட்டிலும் ஏற்றம் உள்ளவன்' என்றார் சிலேடையாக. அவர் தொடர்ந்து சொன்னார் : ''சாதி

உங்கள் கண்களை மறைக்கிறது. இந்தப் பாகவதன் இன்று நமக்குப் 'பெருநல்உதவி' புரிந்திருக்கிறான். திருமலைக்கு வழி காட்டியிருக்கிறான். திருமலையப்பனோ நமக்கு மோக்ஷத்துக்கு வழி காட்டுபவன். இவ்வாறு இறைவனிடத்தே நம்மை ஆற்றுப்படுத்தியவன் நமக்கு ஆசார்யன் அல்லவா? எனவே இவனை வணங்குவது எப்படிக் குற்றமாகும்?'' என்றார். இப்படி இராமாநுசர் செயற்படுத்திக் காட்டிய சமத்துவம்தான் வைணவத்தை மக்கள் இயக்கமாக மாற்றியது.

## பெண்களை மதித்த பெருந்தன்மை

தென்பாண்டிநாட்டு யாத்திரையின்போது ஒவ்வொரு திருப்பதிகளாக வணங்கிக்கொண்டுவந்த இராமாநுசர், திருப்புளிங்குடி இறைவனைத் தொழுத பின்னர், நம்மாழ்வாரின் பிறப்பிடமான திருக்குருகூர் நோக்கிப் புறப்பட்டார். எதிர்ப்பட்ட பெண்கள் இருவரைப் பார்த்து, 'திருக்குருகூர் இன்னும் எவ்வளவு தொலைவு?' என்று விசாரித்தார். அந்தப் பெண்களில் ஒருத்தி சிரித்துக் கொண்டே, 'சுவாமிக்குத் திருவாய்மொழி பாடம்தானே' என்று கேட்க, உடையவரும் 'ஆமாம்' என்றார். உடனே அவள், 'கூவுதல் வருதல் - என்ற பாசுரம் தெரியாதா?' என்று கேட்டாள். 'தெரியும் தெரியும்' என்று இருமுறை சொல்லி அவர்களைப் பணிந்து வணங்கினார் இராமாநுசர். 'பாசுரம் முன்பே தெரியும்; புளிங்குடியிலிருந்து குருகூர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது? என்பது இப்போது தெரியும்' என்பது இதன் கருத்தாகும். 'கூவுதல் வருதல்' என்னும் ஆழ்வார் பாசுரத்திலிருந்து, 'திருக்குருகூர் கூப்பிடு தூரத்தில் இருக்கிறது' என்பதை ஊகித்துக் கொண்டார் உடையவர். இதுவரை புலப்படாத பொருள்நயம் அந்தப் பெண்களாற் கிடைத்த சிறப்பினை எண்ணி அவர் உள்ளம் பூரித்தார்.

திருக்குருகூரிலிருந்து திருக்கோளூருக்குச் சென்ற போது, அவ்வூரிலிருந்து எதிரே வருகின்ற பெண்ணொருத்தியைக் கண்டார் இராமாநுசர். 'அவளோடு உரையாடுவதன் மூலம் ஆழ்வார் பாசுரப் பகுதிக்கு முன்போலத் தமக்குப் புலப்படாத புதுப்பொருள் கிடைக்கக் கூடும்' என்று கருதினாரோ என்னவோ? அவளிடம் பேச்சுக் கொடுத்தார் :

'அவள் திருக்கோளூரிலிருந்து வருகின்றாள்' என்று தெரிந்து கொண்டதால், ''அம்மா! 'புகும்ஊர் திருக்கோளூரே' என்று ஆழ்வார் பாசுரமிட்டிருக்கிறாரே; உனக்கு மட்டும் அது 'போகும் ஊர்' ஆயிற்றோ?'' என்று வினவினார்.

உடையவர் அப்படிக் கேட்டதுமே பட்டென்று பதில் வந்தது அவளிடமிருந்து. ''முயல் புழுக்கை வரப்பிலே கிடந்தால் என்ன? வயலிலே கிடந்தால் என்ன? ஞானமில்லாத அடியவளாகிய நான், கோளூரில் இருந்தால் என்ன? வேற்றூரில் இருந்தால் என்ன?'' என்றாள். அதனை மேலும் விளக்குவது போல எண்பத்தொரு வாக்கியங்களில் தன் கருத்துக்களை வெளியிட்டார். அவை யாவும் நாட்டார் மொழிநடையில் அமைந்தவை.

'அழைத்து வருகிறேன் என்றேனா அக்ரூரரைப்போலே'
'அந்தரங்கம் சொன்னேனா திரிசடையைப்போலே'
'பிஞ்சாய்ப் பழுத்தேனா ஆண்டாளைப்போலே'
'அவன் சிறியன் என்றேனா ஆழ்வாரைப்போலே'
'ஆயனை வளர்த்தேனா அசோதையாரைப்போலே'

என்பன அவற்றுட் சில.

இவை யாவும் வைணவப் பெரியோரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் அவர்தம் வாய்மொழிகளையும், அவர்களின் வாழ்வில் பொதிந்து கிடக்கும் உண்மைகளையும், இதிகாச புராண நிகழ்ச்சிகளையும் உள்ளடக்கியவை. இவற்றைத் தொகுத்துத் 'திருக்கோளூர்ப் பெண்பிள்ளை இரகசியம்' என்று வைணவர்கள் கொண்டாடுகின்றனர். குருபரம்பரைக் கதைகளிலும் இந்நிகழ்ச்சி பதிவு செய்யப்பட்டுள்ளது.

பெண்களையும் 'எளிய சாதி'யினராகக் கருதி அவர்களை அறிவுலகத்தினின்றும் ஒதுக்கி வைத்த காலம் ஒன்று உண்டு. அறிவிற் குறைந்த 'ஏழையராக' அவர்களைத் தவறாக எடை போட்டதும் உண்டு.

இந்நிலையில் இராமாநுசர் அவர்களை மதித்துப் போற்றி அவர்களிடமிருந்து உயரிய கருத்துக்களை வருவித்து - அவர்களின் பெருமையை உலகுக்கு உணர்த்தினார் என்பதை நாம் இங்கு நினைவிற் கொள்ள வேண்டும்.

இப்படி அவர் பெண்களை மதித்துப் போற்றியதனாலே தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் திருவனந்தபுரத்தம்மை, திருவாட்டாற்றம்மை, திருவண்பரிசாரத்தம்மை, கொங்குப்பிராட்டி எனப் பெண்களின் திருக்கூட்டம் ஒன்றும் அவர் சீடர் குழுவில் இடம் பெற்றதை அறிய முடிகின்றது.

இச்சீடர்களிடையே உடையவருக்கிருந்த பெருமதிப்பினை இங்கு எடுத்தக்காட்டுவது பொருத்தமாகும்.

திரிபுராதேவியார் என்பவர் எம்பெருமானுடைய சிஷ்யைகளுள் ஒருவர். அவரைப் பார்த்து, ''ஸ்ரீவைஷ்ணவர்களாகிய நீங்கள் ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள் என்று உறுதி கொண்டிருப்பதற்குக் காரணம் என்ன? எல்லாப் பிரமாணங்களும் அவனே பரம்பொருள் என்று கூறுவதால் தானோ?'' என்று ஒருவர் வினவினார். அதற்குத் திரிபுராதேவியார், ''அப்படியெல்லாம் இல்லை. எங்கள் ஆசார்யருடைய உகப்பிற்கு இலக்கான பொருளே எம்மாலும் கைக்கொள்ளத்தக்கது. எங்கள் எம்பெருமானார் யாரைப் பரம்பொருளாகக் கொண்டிருக்கிறாரோ அந்தத் தேவதையே எங்களுக்கும் பரம்பொருள். எம்பெருமானார் காடிச்சால் மூலைத்திசைக்கு அதிபதி.யான தேவதையைப் பரம்பொருள் என்று கொண்டாலும் எங்களுக்கும் அவளே பரம்பொருள்'' என்றாராம்.


தமருகந்த திருமேனி

இதனால் அக்கால மகளிரிடையே உடையவருக்கு இருந்த செல்வாக்கினையும் நாம் உணர முடியும்.

**சாதாரண மக்களுடன் சங்கமம்**

உடையவர் ஆழ்வார்திருநகரி என்னும் திருக்குருகூருக்குச் சென்றிருந்த போது நடந்த நிகழ்ச்சி ஒன்று அவர் எளிய மக்களிடம் கொண்ட ஈடுபாட்டுக்கு எடுத்துக்காட்டாகிறது.

பொருநைத்துறையில் நீராடித் திருமண் காப்பு அணிந்து கொண்டு 'ஆழ்வார் - ஆதிநாதன் திருக்கோயில்' நோக்கிப் புறப்பட்டார் இராமாநுசர். சுற்றிலும் சீடர் குழாம். அப்போது அவரை நோக்கி வந்த அவர் திருவடிகளில் விழுந்து வணங்கிய

ஈரங்கொல்லி (சலவைத் தொழிலாளி) ஒருவன், தன் மக்கள் நால்வரையும் இராமாநுசரை வணங்குதற்கு வருமாறு பெயர் சொல்லி அழைத்தான். 'சடகோபா! காரிமாறா! வகுளாபரணா! குருகூர்நம்பி!' என்று ஒவ்வொருவர் பெயரையும் சொல்லி அவன் அழைத்ததைக் கேட்டார் எம்பெருமானார். நம்மாழ்வாரின் திருப்பெயர்கள் அவை. அப்பெயர்களையிட்டு அவன் பிள்ளைகளை அழைப்பதைக் கேட்ட இராமாநுசர் ஒருகணம் திகைத்து நின்றார். காரணம் தெரியாமல் அருகிருந்தோர் அவர் முகம் பார்த்து நிற்க, உடையவர் அவர்களை நோக்கிச் சொன்னார் :

''இந்த ஈரங்கொல்லியைப் போல இல்லறத்தைத் தழுவி, தேனூறும் ஆழ்வார் திருப்பெயர்களைப் பிள்ளைகளுக்கு இட்டு வாயார அழைப்பதன் மூலம் நாவூறி நிற்கும் பேறு பெற்றேன் இல்லையே; இப்படிக் காவி தாங்கி நாள்களைக் கழித்தேனே'' என்றாராம்.

சலவைத் தொழிலாளி ஒருவனின் வாழ்க்கையும் 'நல்ல பதத்தால் மனைவாழும்' சிறந்த வாழ்க்கையாக இருப்பதை அவர் கண்டார். கண்டு, மனமுவந்து போற்றினார். 'நால்வகைச் சாதியினரும் நாராயணன் மக்களே' என்று அவர் கொண்ட கொள்கையின் விளைவு இது.

சமய, தத்துவ உலகின் ஒப்பற்ற மேதையாக விளங்கியவர் அவர். அவரது மேதைமையைக் கலைமகளே கொண்டாடியதாகக் குருபரம்பரைக் கதைகள் கூறும். அத்தகைய பேரறிஞர் எளிய மக்களோடு கொண்டிருந்த உறவும் இணக்கமும் அவர் வாழ்வில் எப்போதோ உணர்வுப்பூர்வமாக மட்டுமே தோன்றி மறைந்தவைகள் அல்ல. சமுதாயம் புறக்கணித்து ஒதுக்கிய அடித்தட்டு மக்களையும் அரவணைக்கும் பாங்கு அவரிடம் இயல்பாகவே அமைந்திருந்தது. திருக்குருகூரில் வண்ணான் ஒருவன் செயலை மற்றவர் முன்னிலையில் மனமார மதித்துக் கொண்டாடிய அவர், திருவரங்கத்தில் அத்தகைய சலவைத் தொழிலாளி ஒருவனுக்காக இறைவன் முன்னர்ப் பரிந்து பேசியதைப் பார்க்கிறோம்.

ஒருநாள் வண்ணான் ஒருவன்[4] திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனுடைய (அழகிய மணவாளன்) ஆடைகளை (திருப்பரிவட்டங்கள்) மிக நன்றாகத் துவைத்து வெளுத்துக் கொண்டு வந்து எம்பெருமானாரிடம் காட்டினான்.

4. இவனை 'ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான்' என்று வைணவ நூல்கள் குறிப்பிடுகின்றன.

அவைகளைக் கண்ட எம்பெருமானார் மிகவும் மகிழ்ச்சி கொண்டார். அவ்வண்ணானின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பெருமாள் சந்நிதி நோக்கிச் சென்றார்; இறைவன் திருமுன்னே அவனை நிறுத்தினார். பெருமாளைப் பார்த்து, ''நாயந்தே![5] இவன் தேவரீருடைய திருவரைக்குத் தகுதியாக ஆடைகளை மிக அழகாக வெளுத்துக் கொண்டு வந்திருப்பதைக் கண்டருள வேண்டும்'' என்று அவ்வாடைகளை அழகியமணவாளனுக்குக் காட்டினார். இறைவனும் மிக மகிழ்ந்தவனாய் உடையவருக்கு அருள்பாடு[6] செய்தருளி, ''இவ்வண்ணானுக்காகக் கம்சனுடைய வண்ணான் முன்பு நம்மிடத்தில் செய்த குற்றத்தைப் பொறுத்தோம்'' என்று அருளிச் செய்தானாம். திருவாய்மொழி ஈட்டுரை சொல்லும் செய்தி இது.

சலவைத் தொழிலாளியின் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு போய் அவனை இறைவனுக்கு முன்னால் நிறுத்திய உடையவரின் செயலை நாம் ஒருகணம் நெஞ்சில் நிறுத்திப் பார்க்க வேண்டும்.

இவ்வாறு தென்னரங்கனிடத்தே பரிந்து பேசிய உடையவர், தும்பையூர்க் கொண்டி என்னும் ஆய்மகள் ஒருத்திக்காகத் திருவேங்கடமுடையானுக்குப் பரிந்துரைக் கடிதம் கொடுத்ததையும் பார்க்கிறோம்.

இராமாநுச மடத்துக்குத் தயிர் கொடுத்து வந்த அந்தப் பெண், தயிருக்கு விலைபெற மறுத்து, ஒரு விசித்திரமான கோரிக்கையை வைத்தாள். தனக்கு நற்கதி கொடுக்குமாறு திருவேங்கடமுடையானுக்குக் கைச்சாத்திட்டு ஓலை தருமாறு வேண்டிக் கொண்டாள். உடையவரும் அதைப் புறக்கணிக்காமல் அவள் நம்பிக்கையை மதித்து, அவள் விரும்பியவாறே, ஓலை நறுக்கொன்றில் எழுதிக் கொடுத்தார். எத்தகைய கருணை உள்ளம் அவருக்கு!

இப்படி எளியோரையும் மதித்து அவர் தம் இதயத்தில் புகுந்த சீலத்தை நினைந்தே 'இன்புற்ற சீலத்து இராமாநுச' என்று கொண்டாடினார் அமுதனார்.

### தொண்டக்குலமே தொழுகுலம்

இந்த அருள் நெஞ்சம் தான் ஹரிஜனங்களுக்குத் திருக்குலத்தார் என்று பெயர் சூட்டியது; ஆலய நுழைவுக்கும் அனுமதி தந்து மகிழ்ந்தது.

5. நாயந்தே - சுவாமி என்று பொருள்.
6. அருள்பாடு செய்தருளி - அருள்புரிந்து.

இறையடியார் எவரும் தம் பண்டைக்குலம் நீங்கித் தொண்டக்குலமாகிவிடுகிறார்கள் - என்பது இராமாநுசரின் கொள்கை. இத்தொண்டக்குலத்தினருள் தாழ்த்தப்பட்டவர்களைத் திருக்குலத்தார் என்று பெயரிட்டு அழைத்தால் மட்டும் போதுமா? 'நுரை தின்று பசியாறுமா?' செயல்வீரரான இராமாநுசர் சாதிக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி - திருநாராயணபுரத்துக் கோயிலில் - ஆண்டுதோறும் மூன்று நாள் ஹரிஜனங்களுக்கு ஆலயப்பிரவேச உரிமையளித்தார். இராமாநுசரின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய சுவாமி இராமகிருஷ்ணானந்தா, ஆட்கொண்டவில்லி கோவிந்தாசார்யர், சி.ஆர். சீனிவாச ஐயங்கார் போன்றோர் இதனை உறுதி செய்துள்ளனர். இவ்வாறு ஹரிஜனங்கள் கோயிலுக்குள் செல்லும் சந்தர்ப்பங்களில் அவர்கள் தொடும்படி நேர்ந்துவிட்டாலும் பிராமணர்கள் குறைகூறக்கூடாது - என்று இராமாநுசர் விதித்திருந்தார் என்பதையும் ஆட்கொண்டவில்லி கோவிந்தாசார்யர் குறிப்பிட்டிருக்கிறார்.

## செருக்கறுத்த செம்மல்

இராமாநுசரின் இத்தகைய சீர்திருத்தம் அக்காலத்தில் வாழ்ந்த அந்தணர் சிலரின் அக இருளை அகற்றியது. 'சாதியில் நாம் உயர்ந்தவர்' என்னும் செருக்கினை அகற்றுவது எளிய செயல் அல்லவே!

இதற்கேற்பவே தம் சீடர்களையும் அவர் பக்குவப்படுத்தினார். சிறந்த கல்விமானாகவும் செல்வராகவும் உறவுமுறையில் தம் சகோதரி மகனாகவும் இருந்த முதலியாண்டான் என்னும் உத்தம சீடரை அத்துழாயின்[7] புகுந்த வீட்டுக்குச் சீதனவெள்ளாட்டி (வேலைக்காரி)யாக அனுப்பிச் சாதனை படைத்தவர் இராமாநுசர். முதலியாண்டானும் தம் ஆசார்யன் கட்டளைப்படி அத்துழாயின் புக்ககம் சென்று பணிப்பெண் செய்யக்கூடிய எல்லா வேலைகளையும் சலிப்பின்றிச் செய்தார். எதையும் அவர் இழிவாகக் கருதவில்லை. அத்துழாயின் மாமன் - மாமியார் உண்மையறிந்து அதிர்ச்சியடைந்து அவரை மடத்துக்குத் திருப்பியனுப்பும் வரை அப்பணிகளையெல்லாம் உவப்புடனே செய்து வந்தார்.

7. அத்துழாய் - இராமாநுசரின் ஆசார்யரான பெரியநம்பியின் புதல்வி. அவளின் மாமியார் 'அவள் சீதனவெள்ளாட்டி கொண்டு வரவில்லை' என்று பழித்துக் கூறியதை அறிந்த இராமாநுசர் தம் சீடரையே அங்குப் பணிப் பெண்ணுக்குரிய வேலைகளைச் செய்யுமாறு அனுப்பி வைத்தார். இந்நிகழ்ச்சி குருபரம்பரைச் சுவடிகளில் இடம் பெற்றுள்ளது.

இராமாநுசர் கற்றதும் தம் சீடர்களுக்குக் கற்பித்ததும் வெறும் ஏட்டுக்கல்வி மட்டுமல்ல என்பதற்கு இந்நிகழ்ச்சி ஓர் எடுத்துக்காட்டு.

## உடையவர் உருவாக்கிய 'நல்லான்'

அக்காலத்தில் திருமலை நல்லான் சக்கரவர்த்தி என்பார் நீலகிரிப் பகுதியில் வாழ்ந்த திருமால் அடியார் ஆவார். இராமாநுசரின் சீடர் அவர். குருவின் கொள்கைகளை நடைமுறைப்படுத்தியவர் நல்லான். அவருக்கு 'நல்லான்' என்னும் பெயர் ஏற்பட்டதற்கு ஒரு காரணம் உண்டு.

ஒருமுறை நல்லான் சக்கரவர்த்தி ஆற்று நீரில் மிதந்து வந்த - தீண்டத்தகாதவராக அறியப்பட்ட - பாகவதர் ஒருவரின் பிணத்தை எடுத்து, இறுதிச் சடங்குகளைச் செய்து புதைத்தார். அவ்வூர் அந்தணர்கள் அவரது செயல் கண்டு வெறுத்தனர்; முகம் சுளித்தனர்; சாதி வரம்பை மீறியதாகக் குறை கூறினர். ஊர்கூடிப் 'பொல்லான்' என்று அவரைப் பழித்தனர். அந்நிலையில் இறைவன் அர்ச்சகர் மூலமாக ஆவேசித்து, 'நாட்டுக்குப் பொல்லான்; நமக்கு நல்லான்' என்று அவர் பெருமையை ஊருக்கு உணர்த்தினானாம்.

இராமாநுசரின் சீர்திருத்தம் இறைவனாலும் அங்கீகரிக்கப் பட்டதற்கு இது, உதாரணம்.

## முன்னோடி முயற்சிகள்

நம் காலத்தில் காந்தியடிகள் தாழ்த்தப்பட்ட மக்களைக் 'கடவுளின் குழந்தைகள்' என்னும் பொருளில் 'ஹரிஜனங்கள்' என்று அழைத்தார். அவர்களின் ஆலயப்பிரவேசத்திற்காகவும் போராடினார். இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர்த் தீண்டாமை ஒழிப்பு சட்டரீதியாக நடைமுறைக்கு வந்தது. என்றாலும் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தாழ்த்தப்பட்ட மக்களுக்காக இராமாநுசர் தொடங்கிவைத்த பணிகள் ஒப்பற்றவை என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும். வைதீக மதத்தில் உள்ள பல கண்மூடிப் பழக்கங்கள் மண்மூடிப் போவதற்கு இராமாநுசர் மேற்கொண்ட முன்னோடி முயற்சிகளாக இவற்றை நாம் மதிப்பிடுவது தவறாகாது.

''சொல்வதின் மதிப்பு செயலில்தான் என்று பரிபூரணமாக உணர்ந்தவர் இராமாநுசர். தாமும் தம்முடைய உபதேச நெறியில் நின்று வைணவத்தை ஒரு பொதுஜன இயக்கமாக மாற்றிய - முதல் சமயத் தலைவர் இராமாநுஜர்'' என்று அவரை மதிப்பிடுகிறார் ஆர். பார்த்தசாரதி. இம்மதிப்பீடு துல்லியமானது என்பதை இதுவரை நாம் சொல்லிய இராமாநுசரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளால் அறிந்துகொள்ளலாம்.

## முக்தி சிலரின் சொத்து அன்று

முக்தி என்பது உயர்சாதி மக்களுக்கும் மெத்தப் படித்தவர்களுக்குமே உரியது என்ற கொள்கையை மாற்றிக் காட்டியவர் இராமாநுசர். இறைவனிடத்தில் பக்தி செய்யும் எளிய மக்கள் எவரும் முக்தியடையலாம் - என்பது அவர் நம்பிக்கை. ஒருமுறை பிள்ளை உறங்காவில்லிதாசர் எழுப்பிய வினாவுக்கு அவர் கூறிய விடை இதனை உறுதி செய்கின்றது.

'விபீஷண சரணாகதி' குறித்துச் சீடர்களிடையே விளக்கிக் கொண்டிருந்தார் இராமாநுசர். அப்போது கூட்டத்துள் ஒருவராகக் கேட்டுக் கொண்டிருந்த வில்லிதாசர் எழுந்திருந்தார். ''இராமபிரான் திருவடிகளே தனக்குத் தஞ்சம் என்று வந்தவன் விபீடணன். அவனையும் இராமன் தரப்பில் உள்ள சிலர் சந்தேகித்தார்களே! கல்லும் தடியும் கொண்டு அடித்து நொறுக்கவும் ஆயத்தமானார்களே! அப்படியிருக்கத் தாழ்குலத்திற் பிறந்து தங்களை அண்டிய அடியேனும் வாழ்வு பெறுவேனோ?'' என்றார்.

கண்களிற் கருணை பொங்க அவரை ஏறிட்டு நோக்கினார் இராமாநுசர். அந்த நோக்கினைத் தொடர்ந்து, 'காரேய் கருணைமுகில்' தம் அன்புத் தாரைகளைப் பொழியத் தொடங்கியது:

''பிள்ளாய்! அஞ்சாதே கொள்ளும் அப்பேற்றினை. அதனை நான் பெற்றேனாகில் என் சம்பந்தத்தையிட்டு நீரும் பெறுகிறீர்! என் ஆசார்யர் பெரியநம்பி பெற்றாராகில் அடியேனும் பெறுகிறேன். நம்மாழ்வார் பெற்றாராகில் நாதமுனி தொடக்கமாக வரும் ஞானபரம்பரையில் நாமும் பெறுகிறோம். 'அவாஅற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன்' என்று ஆழ்வார் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்கிறாரே! அந்த அமுதவாக்கில் அவர் வீடு பெற்றமை தெளிவாகக் காணப்படுகிறது. முடிவற்ற ஒரு பொற்சங்கிலித் தொடராக நீண்டு வளர்ந்தது நம் பாகவத பரம்பரை. ஆழ்வார் காட்டும் ஆதிபகவனும் சாதாரண வாழ்க்கை நடத்தும் பாகவதர்களும் 'ஆசார்ய பரம்பரை சம்பந்தத்தால்' அந்தச் சங்கிலித் தொடரில் இருக்கிறார்கள்; இடம் பெறுகிறார்கள் - என்பதை வில்லிதாசரே! எங்ஙனம் மறந்தீர்? எனவே அஞ்ச வேண்டாம்'' என்றார்.

மேலும் தொடர்ந்து கூறினார் : ''கமுகுக்குப் பாய்ச்சிய தண்ணீரைத் தோப்பில் உள்ள வாழையும் உண்டு வாழும் அன்றோ? விபீஷணனோடு நாலுபேர் வந்தார்களே! அவர்களை விலக்கி விபீஷணனை மட்டும் ஏற்றுக் கொள்ளவில்லையே?

ஆனபின்பு, அடியேன் பெற்றேனாகில் என்னைப் பற்றிய நீரும் பெறுவீர்; 'ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்?' என்றன்றோ திருமழிசைப்பிரானும் அருளினார்! ஏத்தியிருந்தவர் ஸ்ரீபரதாழ்வான்; அவரைச் சாத்தியிருந்தவர் ஸ்ரீசத்ருக்கனாழ்வான். ஏத்தியிருந்தார் நம்மாழ்வார்; அவரைச் சாத்தியிருந்தார் மதுரகவிகள். ஏத்தியிருந்தார் பெரியாழ்வார்; அவரைச் சாத்தியிருந்தார் ஆண்டாள். இங்கெல்லாம் ஏத்தியிருந்தவர்களைக் காட்டிலும்அவரைச் சார்ந்திருந்தவர்களின் தவம் பெரிதன்றோ? ஆதலின் அஞ்ச வேண்டாம்'' என்று 'அபய தானம்' செய்தருளினார் இராமாநுசர்.

இப்படிக் கருணை பொங்கப் பொங்கப் பிள்ளை உறங்காவில்லிதாசருக்கு அவர் கூறிய விளக்கம் அடியார்களிடத்துப் 'பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிவு' கொண்டவர் என்பதை உணர்த்தும்.

### சமய எல்லை தாண்டிய நட்புறவு

சாதி வேற்றுமையைக் கடந்த வைணவத்தை அடியார் அனைவர்க்கும் உரித்தாக்கிய இராமாநுசர் சமய எல்லையைத் தாண்டிய நட்புறவுக்கும் விதை தூவியிருக்கிறார்.

திருநாராயணபுரத்துக் கோயிலில் பீபிநாச்சியார் என்னும் தில்லி நவாபின் பெண்ணுக்கும் இடமளித்தார். அவளை இறைவனுக்கு மணம் புரிவித்து அது தொடர்பான விழாவையும் சிறப்பாக நடத்தினார். இதே முறையில் ஆழ்வார் பதின்மரும் பாடிய திருவரங்கத்திலேயே துலுக்கநாச்சியார் வழிபாட்டையும் உருவாக்கினார். இன்று அதிகமாகப் பேசப்பெறும் இந்து முஸ்லீம் ஒற்றுமைக்கும் 'சமய நல்லிணக்கம்' என்பதற்கும் அன்றே அடிகோலியவர் அவர். வைதீகம் கோலோச்சிய காலத்தில் இராமாநுசர் அமைதியாகச் செய்த புரட்சிகள் இவை. இன்று சட்டத்தாலும் நீதிமன்றக் கட்டளைகளாலும் நடைமுறைப் படுத்தப்படும் பல சமூகச் சீர்திருத்தங்களை எதிர்ப்புகளுக்கிடையில் ஆரவாரமின்றிச் செய்து முடித்தவர் அவர். ''அவருடைய சட்டம் பகவத் பாகவத கைங்கர்யம்'' என்றும், ''அவரது ஆயுதம் கடல் போன்ற கருணை''யென்றும் சிறப்பித்துப் பேசுகிறார் சாண்டில்யன். இதில் இரண்டு கருத்துக்கு இடம் ஏது?

### பன்முகப் பணிகள்

சமயத்தத்துவ நூல்களை வரைதல், பிற சமயத்தாருடன் வாதிட்டு வெற்றி கொள்ளுதல், வைணவத்தை மக்கள் இயக்கமாக வளர்க்கும் முயற்சியில் ஓய்வின்றி ஈடுபடுதல், அதற்காக நாடு

தழுவிய பயணம் மேற்கொள்ளுதல், ஆலய நிர்வாகத்தை ஒழுங்குபடுத்துதல், புதிய உற்சவங்களை உருவாக்கி நடத்துதல், திவ்வியப்பிரபந்தக் கல்வியைப் பரப்புதல், சமயத்தின் பாதுகாவலர்களாகச் சிம்மாசனாதிபதிகளை நியமித்தல், அவர்களின் செயல்பாடுகளைக் கண்காணித்தல், நாடு முழுதும் உள்ள சீடர்களுக்கு வழிகாட்டுதல், புதிதாகத் தனிக்கோயில்களை அமைத்தல், மூர்த்திகளையும் ஆழ்வார்களையும் பிரதிட்டை செய்தல், தகுதிமிக்க அர்ச்சகர்களை உருவாக்குதல், காலத்தை வென்று நிற்கும் சமயமாக வைணவத்தை வளர்த்து நிலைபெறச் செய்தல் - ஆகிய பன்முகப் பணிகளைத் தனியொருவராக ஆற்றலோடு செய்து முடித்தவர் இராமாநுசர். அவரது நீண்ட வாழ்நாளில் ஒருநாள் ஒருபொழுதும் பழுதாகாதபடி செயல்பட்டதன் விளைவுகள் இவை.

## வெற்றியின் இரகசியம்

சிறு பணியும்கூடத் திருத்தமுறச் செய்யப்பட வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை காட்டியவர் இராமாநுசர்.

> ''பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட
> மணிமாயன்''

என்று திருவாய்மொழியில் ஓரிடத்தில் இறைவனைக் கொண்டாடுகின்றார் ஆழ்வார். ''கைங்கர்யம் (அடிமை) செய்வதில் ஒருசிறிதும் குறை ஏற்படாமல் அடியேனைத் திருத்திப் பணிகொண்ட மணிமாயன்'' என்பது இதன் பொருளாகும். இவ்விடத்தில் ஈடு வியாக்கியானம் - உடையவரோடு தொடர்புடைய நிகழ்ச்சி ஒன்றை எடுத்துக்காட்டுகிறது.

ஒருமுறை எம்பெருமானார் எழுந்தருளியிருக்கிற மடத்தில் திருமாலடியார்களுக்கு உணவு வழங்கும் நிகழ்ச்சி (ததியாராதனம்) நடைபெற்றுக்கொண் டிருந்தது. அப்போது உடையவரின் சீடர்களுள் ஒருவரான கிடாம்பியாச்சான் என்பவர் தண்ணீர் பரிமாறிக்கொண் டிருந்தார். ததியாராதனங்களில் தண்ணீர் பருக விரும்புபவர்களுக்கு ஒருவர் தண்ணீர் ஒரு பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு அவரவர் வாயில் சிறிதுசிறிதாக ஊற்றுவது வழக்கம். கிடாம்பியாச்சான் தண்ணீர் கேட்ட ஒருவருக்கு நேரே நின்று பரிமாறாமல், ஒருபக்கமாக இருந்து தண்ணீர் பரிமாற, தண்ணீர் கேட்டவரும் கழுத்தைச் சாய்த்துக் குடித்துக் கொண்டிருந்தார். இதைக் கண்ணுற்ற இராமாநுசர் ஓடிச் சென்று கிடாம்பியாச்சான் முதுகில் அறைந்து, 'நேரே நின்றன்றோ தண்ணீர் பரிமாற

வேண்டும்? இப்படித் தண்ணீர் பரிமாறினால் குடிப்பவர்க்குப் புரைக்கேறுமே!' என்று கடிந்துகொண்டார். இதனால் மகிழ்ச்சியே ஏற்பட்டது கிடாம்பியாச்சனுக்கு. ''இந்தச் சிறு விஷயத்தைக்கூடத் தேவரீர் கவனித்து அடியேனைத் திருத்திப் பணிகொள்வதே!'' என்று நினைத்து எம்பெருமானாரின் திருமுகம் நோக்கிப் ''பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட மணிமாயன்'' என்று கொண்டாடினாராம்.

இராமாநுசர் 'வெற்றிவீர'ராகத் திகழ்ந்ததன் சூட்சுமத்தை இக்குறிப்பு நமக்குத் தெளிவுபடுத்துகின்றது. 'சிறுதுளி பெருவெள்ளம்' ஆவதுபோல அவர் செயல்கள் யாவும் மகத்தான பணிகளாக உயர்ந்ததன் இரகசியத்தை இதனால் உணர்ந்து கொள்ளலாம்.

## செயல்! செயல்! செயல்!

'செய்வன திருந்தச் செய்ய வேண்டும்' என்று உடையவர் தமக்கு உணர்த்தியதைத் திருவாய்மொழிப் பாசுரத் தொடரால் சுட்டிக்காட்டினார் சீடர் கிடாம்பியாச்சான்.

ஆசார்யரான உடையவரோ, திருவாய்மொழிப் பாசுரம் ஒன்றைச் சீடர்களுக்குக் கற்பித்தபோது, இது கற்பதற்கு மட்டுமன்றிக் கற்றபடி செய்வதற்கும் உரியது என்னும் முடிவுக்கு வந்தார். அதனைச் செயற்படுத்த அனந்தாழ்வான் என்னும் சீடரும் முன்வந்தார்.

உடையவர் ஒருமுறை 'ஒழிவில் காலமெல்லாம்' என்னும் திருவாய்மொழிக்குப் பொருள் கூறிக்கொண் டிருந்தார். அப்பதிகத்தில் இடம்பெறும் 'சிந்துபூ மகிழும் திருவேங்கடம்' என்னும் தொடருக்கு அர்த்தம் அருளிச் செய்யும் சமயத்தில் கூடியிருந்த முதலி(சீடர்)களைப் பார்த்து, ''புஷ்பமண்டபமான பெரியதிருமலையில் அப்பனுக்கு உகப்பாகத் திருநந்தவனம் அமைத்துத் திருமாலை கட்டிச் சாத்துவார் யாரேனும் இங்கு உளரோ?'' என்று கேட்க, குளிர் அருவி வேங்கடம் ஆகையினாலே குளிருக்கு அஞ்சி ஒருவரும் விடை கூறாதிருந்தனர். அனந்தாழ்வான் எழுந்திருந்து, ''தேவரீர் கட்டளையிட்டால் அடியேன் திருமலைக்கு விடைகொள்ளுகிறேன்'' என்று வணங்கி நின்றார். அது கேட்டு மகிழ்ந்த எம்பெருமானார், ''இக்கூட்டத்துள் நீர் ஒருவரே ஆண்பிள்ளை! நம்முடைய ஆசார்யரான ஆளவந்தார் முன்பு ஒருமுறை திருமலையிலே சிலநாள்கள் தங்கியிருந்து

கோவிலுக்கருகில் குடில் அமைத்துத் திருவேங்கடமுடையானுக்கு மாலை கட்டிச் சாத்திக்கொண் டிருந்தார் - என்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீர் சென்று அவ்விடத்தில் ஒரு மண்டபம் கட்டுவித்து அதற்கு யமுனைத்துறைவர் என்று திருநாமம் சாத்தி, அதில் ஆளவந்தாரை அர்ச்சை வடிவில் எழுந்தருளச் செய்து வழிபட்டுக்கொண்டே, உமது தோட்டத்தில் பூத்த மலர்களையெல்லாம் கொண்டு அம்மண்டபத்திலே மாலையாகக் கட்டி, ஆளவந்தார் போலவே பெருமாளுக்குச் சமர்ப்பித்துக் கொண்டிருப்பீராக'' என்று அனந்தாழ்வானுக்குக் கட்டளை யிட்டார். அவரும் உடனே திருமலைக்குப் புறப்பட்டுச் சென்று நிலத்தைப் பண்படுத்தித் திருநந்தவனம் உண்டாக்கி அதற்கு 'இராமாநுசன்' என்று திருநாமமிட்டுப் பலவகை மலர்கள் பூக்கும் செடிகளையும் மரங்களையும் வளர்த்து, உடையவர் கருத்தின்படி திருமாலைத் தொண்டு செய்துவந்தார். இராமாநுசரும் திருமலை யாத்திரையின்போது அந்த நந்தவனத்தையும் அனந்தாழ் வானுடைய திருத்தொண்டையும் கண் குளிர நோக்கி மிகவும் மகிழ்ந்து, 'வளர்த்ததனால் பயன் பெற்றேன்' என்று அவரைத் தழுவிக் கொண்டாராம். இந்நிகழ்ச்சி ஆழ்வார் வாக்கினுக்கேற்பச் செயல்பட்ட அவரின் வினைத்திறத்தையே காட்டுகிறது.

இத்தகைய செயல்பாட்டுக்கு மேலும் ஓர் உதாரணமும் காட்டலாம்.

''நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்குநான்
நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவிவைத்தேன்;
நூறுதடா நிறைய அக்கார அடிசில் சொன்னேன்;
ஏறுதிருவுடையான் இன்றுவந்து இவை கொள்ளுங்கொலோ?''

என்பது நாச்சியார் திருமொழிப் பாசுரமாகும். இதில் ஆண்டாள் திருமாலிருஞ்சோலை அழகருக்கு நூறுதடா நிறைந்த வெண்ணெயும் நூறுதடா நிறைந்த அக்கார அடிசிலும் படைப்பதாக அருளிச் செய்துள்ளாள். இப்படி வாயால் நேர்ந்து பரவியதைச் செயல்படுத்தியதாகச் செய்தியில்லை. அவள் வேண்டிக் கொண்ட பிரார்த்தனையை அடியார் குடியில் (பிரபந்நகுடி) வந்தவராகிய எம்பெருமானார் நிறைவேற்றித் தலைக்கட்ட வேண்டும் என்று நினைத்தார். நினைத்தபடியே திருமாலிருஞ்சோலைக்குச் சென்று, அழகருக்கு நூறுதடா வெண்ணெயும் நூறுதடா அக்கார அடிசிலும் படைத்தார். இப்படி ஆண்டாளின் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தபின்னர் உடையவர் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாளின்

திருவடிகளை வணங்கி நின்றார். அப்போது - தம் நினைவறிந்து இவர் செய்த செயலுக்கு மனமுகந்த ஆண்டாள் - அர்ச்சை நிலையையும் கடந்து சில அடிகள் முன்னே நடந்து வந்து, இராமானுசரைப் பார்த்து 'நம் அண்ணரே' என்று அழைத்தாளாம். தங்கையின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பது தமையன்மார் கடமையன்றோ? இதனாலேயே எம்பெருமானாரைத் தமக்குத் தமையனாகக் கருதி, 'அண்ணரே' என்று அழைத்தாள் ஆண்டாள். இந்நிகழ்ச்சியைக் கருத்திற்கொண்டு,

''பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே!''

என்று ஆண்டாளைக் கொண்டாடுகிறது வைணவ உலகம். காலத்தால் முற்பட்ட ஆண்டாளை உடையவர்க்குப் பின்வந்த தங்கையாகக் குறிப்பிடுவது ஒரு வரலாற்று முரணே ஆகும். ஆயினும் உடையவரின் செயல் திறத்தையே பெரிதாக மதித்து அவருக்கு உணர்ச்சிப்பூர்வமாக வழங்கப்பட்ட ஒரு தனிப் பெருமையாகவே இதைக் கொள்ள வேண்டும். 'வரலாறு கூறும் உண்மை' என்னும் அறிவைப் புறம் தள்ளி, இலக்கிய சிம்மாசனத்தில் 'உணர்ச்சி' கம்பீரமாகக் கொலுவீற்றிருக்கும் இடம் இது. வினைத்திறத்தால் உடையவரின் வாழ்க்கை உயர்ந்தோங்கி நிற்பதற்கு இந்நிகழ்ச்சி ஓர் அரணாகிறதே தவிர முரண் இல்லை.

## இடைவிடாத் தொடர் முயற்சி

எண்ணிய இலக்கை அடைந்தே தீருவது என்னும் விடாமுயற்சியுடன் செயல்பட்டவர் இராமானுசர். அவர் வாழ்வில் பெற்ற பெருவெற்றிகளுக்கு அதுவே காரணம். அவர் பணிகள் யாவும் பெரும் பணிகளாய் அமைந்து பாரினை உயர்த்தியதற்கும் அதுவே அடிப்படை.

எப்போதும் இடைவிடாத் தொடர் முயற்சியுடன் செயல் புரிந்ததை அவர் வாழ்வின் எல்லாக் கட்டங்களிலும் கண்டுணரலாம்.

யாதவரிடம் மாணாக்கராய் இருந்தபோதே அவருடன் காசி யாத்திரை தொடங்கி விந்தியமலைச் சாரல்வரை சென்று திரும்பியவர் அவர். பின்னர் பெரியநம்பியோடு ஆளவந்தாரைக் காண்பதற்காகக் காஞ்சியிலிருந்து திருவரங்கம் வந்து சென்றார். அதன்பின்னர்த் தாம் மட்டும் திருவரங்கம் வரும் வழியில் மதுராந்தகத்தில் பெரியநம்பியைச் சந்தித்து அவரோடு காஞ்சிக்குத் திரும்பிச் சென்றார். அதனையடுத்துத் துறவுபூண்ட பின்னர் மூன்றாம் முறையாக அரையரோடு திருவரங்கம் வந்து அத்திருப்பதியே இருப்பாகப் பெற்றார். அங்கிருந்து நம்பியிடம் ரகஸ்யார்த்தம் பெறுவதற்காகப் பதினெட்டுமுறை திருக்கோட்டியூருக்குச் சென்று

திரும்பினார். சமய வாழ்வில் எழுச்சியுற்ற நிலையில் இந்திய நாடு முழுதும் சுற்றுப்பயணம் செய்தார். தெற்கில் திருவனந்தபுரம் முதல் வடக்கில் காஷ்மீரம் வரை என அப்பயணம் அமைந்தது. திவ்வியதேசங்களைத் தரிசிக்கவும், சமயவாதிகளை வெற்றி கொள்ளவும், போதாயன விருத்தி போன்ற தத்துவ நூல்களைத் தேடிப்பெறவும் அத்தகைய நெடிய பயணங்களை அவர் பயன்படுத்திக் கொண்டார். 'திக்குற்ற கீர்த்தி இராமானுசன்' என்று அமுதனார் பாடியதற்கேற்பத் திசையெட்டும் அவரின் புகழ் பரப்பும் யாத்திரைகளாகவே அவை அமைந்தன. ஏறக்குறைய என்பதாம் வயதில் சோழனால் ஏற்பட்ட இடையூறு காரணமாகத் திருவரங்கத்திலிருந்து வெள்ளையுடுத்து வெளியேறினார். கொங்குநாடு மற்றும் நீலகிரிக் காடுகளின் வழியாக மைசூரையடுத்துள்ள மேல்கோட்டை என்னும் இடத்தை அடைந்தார். விட்டலதேவன் என்னும் அரசனுடைய ஆதரவைப் பெற்றுத் திருநாரணனுக்குக் கோயில் கட்டி அங்குப் பத்தாண்டுகளுக்கு மேலாகத் தங்கியிருந்தார். முஸ்லீம் படையெடுப்பால் கவர்ந்து செல்லப்பெற்ற உற்சவமூர்த்தி ராமப்பிரியனைப் பெறுவதற்காகத் தில்லி வரை சென்று திரும்பினார். 'சோழன் மறைந்தான்' என்னும் செய்தி கேட்டுத் திருவரங்கம் மீண்டார். அப்போது அவருக்கு வயது நூறு என்பர். அந்த வயதிலும் அவர் எப்போதும் போலவே செயல்பட்டார்; பயணங்களை மேற்கொண்டார். முன்பு திருமலைக்கு இருமுறை சென்றுவந்த இராமானுசர் மேல்கோட்டையிலிருந்து திரும்பி பின்னர், திருப்பதிக்குச் சென்று சோழனால் அகற்றப்பட்ட தில்லைச் சித்திரகூடத்துப் பெருமாளை அங்குப் பிரதிட்டை (கீழ்த்திருப்பதியில்) செய்தார்.

''தென்தில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை
மின்னி மழைதவழும் வேங்கடத்தென் வித்தகனை''

என்று திருமங்கையாழ்வார் தில்லைக்கோவிந்தராசனுக்கும் திருவேங்கடமுடையானுக்கும் ஒற்றுமை தோன்றப் பெரிய திருமடலில் அருளிச் செய்திருக்கும் கருத்தினை உய்த்துணர்ந்து உடையவர் இங்ஙனம் செய்ததாகக் கூறுவர்.

இவ்வாறு வாழ்நாள் முழுக்கச் 'செயல், செயல், செயல்' என வாழ்ந்த ஞானப்பெருவீரர் இராமானுசர். உலக வாழ்வின் ஒட்டுப் பற்றுக்களை விட்டு விலகிச் 'சும்மா' இருக்கும் துறவு அவர் அறியாதது. மானுடத்தை மேம்படுத்தி வையத்தாரை வாழ்வாங்க வாழ்விக்கும் துறவு வாழ்க்கையே அவர் அறிந்த வாழ்க்கை; வாழ்ந்த வாழ்க்கையாகும்.

அவரது 'திருவரங்கம் - திருக்கோட்டியூர்ப் பயணம்' பற்றிய ஒரு சிறு கணக்கே அவர் பெரு முயற்சியாளர் என்பதை நமக்குப் புலப்படுத்தும். திருக்கோட்டியூர்நம்பி 'அப்புறம், பிறகு' என்று பதினெட்டு முறை அலைக்கழித்தபோதும் அவரிடத்தே வெறுப்புக் கொள்ளவில்லை இராமாநுசர். சோர்வடையவும் இல்லை. சீரிய நற்பொருளையறிவதில் அவருக்குள்ள ஊற்றத்தை அறியவே இப்படிச் சோதனைக்குட்படுத்தினார் நம்பி. அந்தச் சோதனையில் புடம்போட்ட பொன்னாகவே ஒளிர்ந்தார் - மிளிர்ந்தார் இராமாநுசர்.

திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூர் சுமார் நூற்றிருபது கல்தொலைவு. சாலை வசதிகள் இல்லாத அக்காலத்தில் ஒருமுறை நடந்து செல்லுதற்கு ஐந்து அல்லது ஆறு நாள்கள் ஆகக்கூடும். அவ்வாறே திரும்பிச் செல்ல ஆறு நாள்கள். இப்படிப் பதினெட்டுமுறை - இருநூற்றுப் பதினாறு நாள்கள் பயணத்தில் செலவழித்திருக்க வேண்டும். சாதாரண மனிதனாயின் சலித்துப்போய் இடையிலேயே முயற்சியைக் கைவிட்டிருப்பான். கருமமே கண்ணாய்ச் செயற்கரிய செய்யப் பிறந்த இராமாநுசர் அம்முயற்சியில் அசாதாரண வெற்றி பெற்று நம்பியின் பேரன்புக்கும் உரியவரானார்.

## குருவிடம் நிகழ்ந்த மனமாற்றம்

இராமாநுசரை உபவாசம் இருக்கச் செய்து உயிர் துறக்கும் நிலைக்கு ஆளாக்கியவர் நம்பி. இராமாநுசரின் உடல்நிலை கண்டு "இப்படியும் இவரை ஈடழிக்கலாமோ? இரங்கலாகாதோ?" என்று ஊரார் சிலர் நம்பியிடம் முறையிட்டனர். அப்போது, "உயிரோடிருந்தால் என்னிடத்தே ரகஸ்யார்த்தங்களை அறிந்து கொள்வார். உயிர் நீங்கினால் மேல்வீட்டிலே ஆளவந்தாரிடம் கேட்டறிவார். ஆகையால் பிரபந்நனுக்கு[8] உபயவிபூதியிலும் நயமே அன்றிப் பயம் ஒருகாலும் இல்லை" என்றாராம். அத்தகைய பிடிவாதம் கொண்டவரும் இராமாநுசரின் நன்னோக்கத்தையும் செயலார்வத்தையும் கண்டு, தாம் அவரிடத்தே முன்னர்க் காட்டிய கடுமைக்கு மாறாக அன்பினைப் பொழியத் தொடங்கினார். அவரை வலிய அழைத்துத் தாம் சொல்ல நினைத்த 'சரமசுலோகார்த்தம்' முதலிய நற்பொருள்களை அவருக்குச் சொல்லலானார். திருமாலையாண்டான், திருவரங்கப்பெருமாள்அரையர் போன்ற ஆளவந்தாரின் சீடர்களிடத்தும் கற்பன கற்றுத் தெளியுமாறு

8. பிரபந்நன் - இறைவனைச் சரணாகப் பற்றும் பிரபத்தி நெறியில் நம்பிக்கையுள்ளவன்

தூண்டினார். அவர்களையும் இராமானுசருக்குக் கற்பிக்குமாறு வேண்டிக் கொண்டார். நாளாக ஆக, உடையவரிடத்தே நம்பி காட்டிய அன்பு பெருகி வெள்ளமிட்டது.

'பிச்சைக்குச் சென்றபோது நஞ்சு கலந்த உணவைப் பெற்ற இராமானுசர் அன்றுமுதலாக உணவு கொள்ளாமல் உபவாசம் இருக்கிறார்' என்பதை அறிந்து மனம் பதறித் திருவரங்கத்திற்கு விரைந்து வந்தார் திருக்கோட்டியூர்நம்பி. தம் ஆசார்யன் தம்மைக் காண்பதற்காக வருவதைக் கேட்ட இராமானுசர் அவரை எதிர்கொண்டு வரவேற்பதற்காக மடத்திலிருந்து புறப்பட்டார். இடையில் காவிரியாற்றில் நம்பியைக் கண்டதும், சுடுமணலில் விழுந்து தண்டனிட்டு வணங்கினார் உடையவர். அப்படி விழுந்தவரை எழுந்திருக்குமாறு சொல்லவில்லை நம்பி. அப்போது உடையவரோடு வந்த சீடர்களுள் ஒருவரான கிடாம்பியாச்சான் - அது உச்சிப்பொழுதாகையாலே மனம் பதறி, ''இது என்ன குரு சீட முறையோ? தெரியவில்லையே! அவள்அங்கே இட்ட நஞ்சைக் காட்டிலும் இந்த வெயிலில் - திருக்காவேரி மணலில் விழுந்து கிடப்பது கொடிது அல்லவா? கருமுகைமாலையைக் கடும் வெயிலிலே இட்டுக் கனக்க மகிழ்ந்திருப்பார் உண்டோ?'' என்று, ஓடிப் பரிவுடன் உடையவரைத் தூக்கி நிறுத்தினார். அது கண்டு நம்பி மிகவும் மகிழ்ந்து, ''உம்மைப் போலும் பரிவுடையாரைத்தான் நாம் தேடிக் கொண்டிருக்கிறோம். 'அத்தகைய ஒருவர் இக்கூட்டத்தில் உளரோ?' என்று அறியவே இத்தனைப்போது தாமதித்தோம். எம்பெருமானார் பக்கல் இவ்வளவு பரிவுடைய நீரே இன்றுமுதல் இவருக்குத் தளிகைசெய்து அவ்வுணவினை இவருக்கு அளித்துவாரும்'' என்று கட்டளையிட்டார். நம்பியின் நெஞ்சத்தில் ஈரம் பெருகியதைக் காட்டும் இந்த அரிய நிகழ்ச்சி உடையவரின் விடாமுயற்சிகளுக்குக் கிடைத்த வெற்றியை அல்லவா எடுத்துக்காட்டுகிறது!

## தவத்தின் உரு

வஞ்சகர் சிலரின் தூண்டுதலால் - பெண்ணொருத்தி நஞ்சு கலந்த உணவை இட்டபோது உடையவர் தனிப்பட்ட எவர்மீதும் சினம் கொள்ளவில்லை. யாரையும் பழி தீர்த்துக் கொள்ளவும் நினைக்கவில்லை. மாறாகத் தம்மைத் தாமே வருத்திக் கொண்டார்; பலநாள் பட்டினி கிடந்தார். திருக்கோட்டியூர்நம்பியிடம் ரகஸ்யார்த்தம் பெறச் சென்றபோது நீரும் பருகாமல் உபவாசம் இருந்த அனுபவம் அவருக்குண்டு. தமக்கு வரும் துன்பங்களைத்

தாங்கிக்கொள்ளுதலும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலும் தவத்தின் அடையாளம் - என்று கூறுகிறது தமிழ்மறை.

''உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு''

என்னும் திருக்குறளுக்கு ஏற்ப உடையவரின் வாழ்க்கை அமைந்திருத்தலைப் பார்க்கிறோம்.

## அண்ணலின் முன்னோடி

சிறுமை கொண்ட நெஞ்சினரைத் திருத்துதற்குப் பட்டினி கிடந்து தம்மையே வருத்திக் கொண்டார் உடையவர். சமுதாயக் கேடுகளைக் களையக் காந்தியடிகள் உண்ணாவிரதத்தை ஒரு கருவியாகக் கொண்டதை நாம் அறிவோம். அண்ணலின் அரசியல் வாழ்க்கையில் அவரின் உண்ணாவிரத நிகழ்ச்சிகள் பெரும்புகழ் படைத்தவை. ஹரிஜனங்களை மேம்படுத்தவும், சமூக மதிப்புடன் நடத்தவும் அவர் மேற்கொண்ட முயற்சிகளும் புகழுடையனவே. இவ்விரு நிலைகளிலும் அண்ணல் காந்திக்கு முன்னோடியாக விளங்கியவர் இராமாநுசர் என்பதை நாம் மறத்தலாகாது. இவ்வாறான சமூக அரசியல் பின்னணியில் இராமாநுசரின் சமயப் பணிகளை மதிப்பீடு செய்யும்போதுதான் அவற்றின் முழுவீச்சையும் நம்மால் விளங்கிக்கொள்ள முடியும். அவரின் உயர்வற உயர்ந்த பெருமையையும் புரிந்த கொண்டு போற்ற இயலும்.

## கோயில் பணிகள்

இராமாநுசர் திருவரங்கத்திற்கு எழுந்தருளியது தம்முடைய நாற்பதாம் வயதில் ஆகும். அதாவது கி.பி. 1057இல் எனலாம். கி.பி. 1057 முதல் 1137 முடிய எண்பது ஆண்டுகள் (இடையில் திருநாராயணபுரத்தில் வாழ்ந்த காலப்பகுதி நீங்கலாக) ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்து வந்தார் என்பர்.

திருவரங்கம் வந்ததுமே திருக்கோயில் நிர்வாகத்தைச் சீரமைத்துப் பல புதிதான கோயிற்பணியாளர்களைக் கைங்கர்யத்திற்கு உரியோராக நியமித்தார். அவர்களைப் 'பத்துக் கொத்தாகப்' பெருக்கி'ப் பணியில் அமர்த்தியதாகக் 'கோயில்ஒழுகு' என்னும் நூல் குறிப்பிடுகிறது. திருப்பதியார், திருப்பணி செய்வார்,

9. பணியாளர்களில் ஒவ்வொரு வகைப் பிரிவும் ஒரு 'கொத்து' எனப்படுகிறது.

பாகவதநம்பிமார், உள்ளூரார், விண்ணப்பம் செய்வார், திரக்கரகக்கையார், ஸ்தானத்தார், பட்டாள்கொத்து, ஆரியபட்டாள், தாசநம்பிகொத்து எனப் பத்துப் பிரிவினரையும் பத்துக்கொத்தாக நியமித்து அவர்களுக்குரிய கோயிற் பணிகளை அவர் வரையறுத்துத் 'திட்டம் செய்து அருளியதாக' அந்நூல் விவரிக்கிறது.

மேலும் தேசாந்தரிகளான ஏகாங்கிகள் நாலுபேருக்கும் சாத்தாத முதலிகளுக்கும் சில கைங்கர்யங்களை நியமித்துத் 'திருவரங்கச்செல்வம் சிந்தாமே மங்காமே பொங்கும்படி'ச் செய்தார் எனக் கோயில்ஒழுகு பெருமிதத்தோடு பேசுகின்றது.

## திருமொழித் திருநாள்

இக்கோயிலின் ஆட்சிமுறைத் திட்டங்கள் இராமாநுசர் வகுத்தபடியே இன்றளவும் நடைபெற்று வருகின்றன. வைணவத் திருக்கோயில்களில் நடத்தப்பெறும் திருமொழித்திருநாள், திருவாய்மொழித் திருநாள்களை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

திருமங்கையாழ்வார் நடத்திய திருவாய்மொழித் திருநாள் பற்றிக் கேட்டறிந்த நாதமுனிகள், அரங்கனின் அனுமதி பெற்று இத்திருவிழாவை முன்னிலும் சிறப்பாக நடத்தக் கருதி, மார்கழி ஏகாதசிக்கு முன்னர்ப் பத்து நாள்கள் திருமொழித் திருநாளாகவும், பின்னர்ப் பத்து நாள்கள் திருவாய்மொழித் திருநாளாகவும் நடத்த ஏற்பாடு செய்தார். இதனையே முறைப்படுத்தி எல்லாத் திருத்தலங்களிலும் நடக்கும்படிச் செய்தவர் இராமாநுசர். ஏகாதசிக்கு முன் பத்து தினங்களும் நாதமுனிகள் அடைவுபடுத்திய முதலாயிரம், பெரியதிருமொழி ஆயிரம் ஆகிய ஆழ்வார் பாசுரங்களைப் பகற்பொழுதில் எம்பெருமான் முன்பு சேவிப்பது (பாடுவது) வழக்கம். இது பகல்பத்து உற்சவம் எனப்பெறும். ஏகாதசிக்குப் பின்னர்ப் பத்து நாள்கள் இரவுப்போதில் திருவாய்மொழிப் பாசுரங்களைப் பாடுவது வழக்கம். இது, இராப்பத்து உற்சவம் ஆகும். இதனையடுத்து இருபத்தோராம் நாளில் இயற்பாப் பாசுரங்கள் முழுதும் பாடி முடிக்கப்பெறும். இவ்வாறு இருபத்தொரு நாள்களில் நடக்கும் இப்பெரிய திருநாள் 'திருவத்யயனோத்வசம்' என்றழைக்கப்படுகிறது.

பெரும்பாலும் எல்லாக் கோயில்களிலும் பின்பற்றப்படும் 'அத்யயன உற்சவ'த்தின் முறை இதுவே ஆகும். ஆயினும் சில இடங்களில் மற்றைய விழாக்களை முன்னிட்டு உற்சவ காலமும் சேவாக்ரமும் மாறுபடுவதாகக் கூறுவர். எனினும் பொதுவாகப் பின்பற்றப்படும் நடைமுறை இராமாநுசரால் ஏற்படுத்தப்பட்டதே என்பதை நாம் மனங்கொள்ள வேண்டும்.

இத்திருவிழாவுக்காகத் திருமங்கையாழ்வார், நாதமுனிகள் ஆகியோர் காலத்தில் நம்மாழ்வாரை ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளச் செய்வது வழக்கமாயிருந்தது. அதில் உள்ள நடைமுறைச் சிக்கல்களால் ஆழ்வார் திருவரங்கத்திற்கு எழுந்தருள்வது காலப்போக்கில் நின்று போயிற்று. இந்நிலையில் திருவரங்கத்திலேயே ஆழ்வார் திருமேனியைப் புதிதாக வடித்து அங்கு அவரைப் பிரதிட்டை செய்தார் இராமாநுசர். இதனால் நடைமுறைச் சாத்தியத்துக்கு ஏற்ப முடிவெடுத்து அதனைச் செயற்படுத்தியவர் இராமாநுசர் என்று அறியலாம்.

இராமாநுசர் காலத்தில் காவிரியில் வெள்ளப்பெருக்கெடுக்கும் போது திருவரங்கம் கோயிலுக்குள் நீர் புகுந்துவிடும். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கிருஷ்ணராஜசாகர் எனப்படும் கண்ணம்பாடி அணையோ மேட்டூர் அணையோ இல்லை. மேற்கே பொழிகின்ற மழையெல்லாம் வெள்ளமாகப் பெருகிக் கரைகளையுடைத்துக் கொண்ட பெரியகோயிலுக்குள் (அரங்கன் ஆலயம்) அடிக்கடி அழிவை உண்டாக்கும். அவ்வாறு வெள்ளத்தால் உடைப்புகள் ஏற்படாதவாறு இராமாநுசர் இருகரைகாப்பான் என்ற ஒரு பொதுப்பணித்துறை அமைப்பையே உருவாக்கி வைத்திருந்தார்.

இத்தகைய அனுபவமே அவர் கர்நாடகத்தில் வாழ்ந்தபோது தொண்டனூர் என்னும் இடத்தில் 'மோதிதலா' என்னும் ஏரி உண்டாவதற்கு உதவியது. குன்றுகளுக்கு இடையே பெருகிவரும் ஒரு சிற்றாற்றிலிருந்து இந்த ஏரிக்கு நீர் கொண்டுவரும் யோசனையைத் தெரிவித்தவர் இராமாநுசரே என்று ஹில்டன் ப்ரௌன் என்ற சரித்திர ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இதனால் இராமாநுசரின் சமூகப்பணியும் பார்வையும் எத்தகைய விசாலமுடையன என்பதை நாம் விளங்கிக் கொள்ளலாம்.

திவ்வியப்பிரபந்தத் திருநாள்களைக் கொண்டாடுவது, பூசை முறைகளைத் திட்டமிட்டு ஒழுங்குபடுத்துவது என்ற நிலைகளில் மட்டும் அவரின் கோயிற்பணிகள் அமையவில்லை. பழுதுபட்ட கோயில் திருமதில்களைச் செப்பனிடச் செய்தார். வசந்தமண்டபங்கள், நந்தவனங்கள், பூங்காக்கள் ஆகியவற்றையும் அவ்வப்போது பார்வையிட்டு அவற்றைப் பராமரிக்கவும் ஏற்பாடு செய்தார். மடைப்பள்ளிகளில் காலந்தவறாத நைவேத்திய உணவுவகைகள் சித்தமாவதையும் மேற்பார்வையிட்டார். அவற்றைப் பக்தர்களுக்கும் கோயிலுக்கு வந்து செல்லும் வெளியூர்ப் பயணிகளுக்கும் வழங்குதற்கு உரிய திட்டங்களை உருவாக்கினார்.

## உடையவரின் ஒருநாள்

திருவரங்கத்தில் அவர் வாழ்ந்த சேரன் மடத்தில் - சிற்றஞ்சிறுகாலை எழுந்திருந்து, திருக்காவிரியில் - தவராசன் படித்துறைக்கு நீராடச் சென்றது முதல் பகற்பொழுதெல்லாம் கோயிற் பணிகளைக் கண்காணித்து ஆராய்ந்தும், பணியாளர்களை ஏவியும் அறிவுறுத்தியும், பின்னர் அடியார்களோடு கூடியிருந்து குளிர்வதுமாய் இறைபணிகளிலேயே கழித்து இரவில் அமுதசெய்த பின்னர்ச் சிறிதுநேரம் திருவாய்மொழி அனுசந்தானத்துடன் உலாவி, திருப்பள்ளிக் கட்டிலிலே ஏறி, அவர் துயில் கொள்வதுவரை ஒருநாள் பொழுதை - அவர் பெரியகோயில் கைங்கர்யங்களோடு இழைந்தும் இணைத்தும் - எப்படிக் கழித்தார் என்பதை 'ராமாநுஜார்ய திவ்யசரிதை' என்னும் நூல் அலகு அலகாக விவரிக்கிறது. அதைப் படித்துத்தான் அனுபவிக்க வேண்டும்.

இராமாநுசர் இப்படிக் கோயில் நிர்வாகத்தைத் தாமே நேரடியாகக் கண்காணித்தபோதிலும் அதை நிர்வகிக்கும் பொறுப்பைத் தக்காரிடம் ஒப்படைத்திருந்தார். இவ்வாறு, 'இதனை இதனால் இவன் முடிக்கும்' என்னும் திறனறிந்து செயல்பட்டதாலே திருவரங்கச்செல்வம் சிதையாமல் காக்க முடிந்தது: இந்தக் காத்தற்பணியைக் கருதியே,

'தென்னரங்கன் செல்வமுற்றம் திருத்திவைத்தான் வாழியே'

என்று வைணவ உலகம் அவரைக் கொண்டாடுகிறது.

## வேங்கடத்திற் செய்த திருப்பணிகள்

திருவரங்கச் செல்வத்தைத் திருத்திக் காத்ததுபோல, தம் செயல்திறத்தால் திருவேங்கடச் செல்வத்தைக் காத்தளித்த பெருமையும் இராமாநுசருக்கு உண்டு.

இராமாநுசர் மூன்றுமுறை திருமலைக்கு (வடவேங்கடம் என்னும் திருவேங்கடம்) எழுந்தருளியதாக வரலாறுகள் தெரிவிக்கின்றன.

முதல்முறையாகப் பெரியதிருமலைநம்பி என்னும் தம்முடைய அம்மானிடம் ஸ்ரீராமாயணம் பாடம் கேட்பதற்காகச் சென்று அங்கு ஓராண்டுக் காலம் தங்கியிருந்தார்.

இரண்டாம் முறையாக வைணவர்களும் சைவர்களும் திருவேங்கடமுடையானைத் 'தம்தெய்வம் எம்தெய்வம்' என்று வழக்கிட்டபோது அவர் திருமலைக்குச் சென்றார். அவ்வழக்கினைத் தீர்த்துத் 'திருவேங்கடமுடையான் திருமாலே' என்று நிறுவும்

திருப்பயணமாக அது, அமைந்தது. திருவேங்கடமுடையானுக்குத் திருவாழி, திருச்சங்குகளைச் சாத்தியருளி, கோயில் கோபுரத்தில் உள்ள விமானத்தில் வைகானச ஆகமத்திற் கூறியபடியே வராக, நரசிம்ம, வேங்கடேச தேவதைகளை அமைத்து, அக்கோயில் திருமாலுக்கே உரியது என உலகிற்கு அறிவிக்கக் குடமுழுக்கும் (சம்புரோட்சணம்) செய்வித்தார்.[10]

திருமலையிலும் கீழ்த்திருப்பதியிலும் அவர் இத்தகைய திருப்பணிகளைச் செய்வதற்குத் துணைபுரிந்தவன் கட்டியம் யாதவநாராயணன் என்னும் அரசனாவான். இவன் இராமாநுசருடைய திருவடிகளைப் பற்றி அவரின் சீடனாகவும் திகழ்ந்தான்.

இவன் உதவியோடு அவர் அங்குச் செய்த திருப்பணிகளிற் சில வருமாறு:

'பெருமான் திருமார்பில் திருமகளை இரு கைகளையுடைய திருவுருவோடு ஒரு நன்னாளில் அமைத்தார்; திருமஞ்சனகாலத்தில் திருமகள் மார்பினின்றும் இறங்கியிருக்கும்போது நாச்சியார் திருமொழியை ஓதும்படிச் செய்தார். திருமஞ்சனத்துக்குப் பின் பெருமான் திருநெற்றியில் இருகோடுகளான திருமண் காப்பைக் கருப்பூரப் பொடிகளால் அமைத்து மூன்று நாட்கள் காட்சியளிக்கவும், மற்றைய நான்கு நாட்களிலும் முத்துப்பொடிகளால் அமைத்துக் காட்சியளிக்கவும் செய்தார். திருக்கண் மலர்களில் குளிர்ச்சிக்காக அஞ்சனக்காப்பு இடவும் ஏற்பாடு செய்தார். திருமலையிலே புரட்டாசி விழாவைச் செய்யத் தகுதி வாய்ந்த முறையில் திருவீதிகளையமைத்தார். மலைகுனிய நின்றபெருமாளை[11] உற்சவமூர்த்தியாக்கினார். அவர்க்கு முன் உற்சவமூர்த்தியார் இருந்த வேங்கடத்துறைவாரை (போகசீநிவாசன்) நிலைத்துள்ள (கௌதுகபேரம்) மூர்த்தியாக்கினார். தண்ணீரமுது வழிதிருத்தல், பூந்தோட்டத்தில் பெருமான் பூப்பறித்த விழா

10. இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் முதல் அருணகிரியாரின் திருப்புகழ் வரை திருமால் கோயில்கொண்ட தலமாகவே வடவேங்கடம் புகழ் பெற்றிருந்தும், இராமாநுசர் காலத்தில் மட்டும் இவ்வழக்கு நிகழ்ந்ததற்கான காரணம் இங்கு விளக்கிக் கூறப்படவில்லை. இராமாநுசரின் செயல்திறத்தைப் புலப்படுத்தவே இந்நிகழ்ச்சி இங்கு எடுத்துக்காட்டப்பெறுகிறது. மேலும் விவரங்களுக்கு, காண்க : 'திருமலைஒழுகு' என்னும் நூலில் உள்ள அறிஞர் கோ. பாலசுந்தரநாயகர் அவர்களின் முகவுரை, பக். V - VII.

11. இவரை, மலைக்கு இனிய - நின்றபெருமாள் எனவும் கூறுவர்.

ஆகியவற்றை உருவாக்கினார். வேங்கடத்தரியைத் திருவேங்கடமுடையான் கோயிலிலே பிரதிட்டை செய்துவைத்தார். திருவேங்கடமுடையான் வலக்கரத்தில் (வைகுண்டஹஸ்தம்) உள்ளது போலவே இடக்கரத்திலும் நாகாபரணத்தை (அரவப்பணி) அணிவித்தார். திருமலையில் வாழ்வோர் கைக்கொள்ள வேண்டிய விதிகளையும் வகுத்தளித்தார்.

இவையனைத்துக்கும் மேலாக திருவேங்கடமுடையானது செல்வம் நாளுக்குநாள் வளர்ச்சியடைவதற்காக அவர் ஒரு யந்திரத்தை மந்திரபூர்வமாக அமைத்து வைத்தார். அதனாலேயே அத்திருக்கோயிலின் செல்வம் என்றும் குறைவுபடாது வளர்ந்து கொண்டே வருகின்றது என்பர்.

## 'வைஷ்ணவஸ்ரீ'

இங்ஙனம் அயராது பணிசெய்த இராமாநுசர் சிம்மாசனாதிபதிகள் எழுபத்து நால்வரும், சீயர் எழுநூற்றுவரும், ஏகாந்திகள் பன்னீராயிரவரும், திருநாமதாரிகள் பல்லாயிரவரும் சூழ வாழ்ந்தார்.

நாடெங்கிலும் சீடர்கள்!

அவர் திருவார்த்தைக்கு மறுவார்த்தை சொல்லாத அடியார் திருக்கூட்டம்!

இவ்வாறு அவர் வாழ்ந்த பெருவாழ்வினை 'வைஷ்ணவஸ்ரீ'யோடே வாழ்ந்ததாகக் குறிப்பிடுகிறது 'சரமோபாயநிர்ணயம்' என்னும் நூல். மேலும் அந்தச் செல்வம் இன்றளவும் வெள்ளமிட்டுப் பெருகும்படி 'ராமாநுஜ தர்சனம்' கொழுந்துவிட்டுச் செல்லுகிறது - என்றும் அந்நூல் கொண்டாடுகின்றது. அதற்கேற்ப வைணவ சமயம் இவர் பெயராலேயே சிறப்புற்று விளங்குகிறது.

## இராமாநுசப் பெருவெள்ளம்

''குளப்படியிலே நீர் தேங்கினால் குருவி குடித்துப்போகும்; வீராணத்து ஏரியிலே நீர் தேங்கினால் நாடு விளையும்''[12] என்பாராம் நாதமுனிகள். குளப்படி நீரைக்காட்டிலும் நாட்டினை வாழ்விக்கும் வீராணத்து ஏரிநீர் சிறந்ததன்றோ? நாட்டினை வாழ்விக்கும்

12. குளப்படி : மாட்டின் குளம்பு பதிந்ததனால் உண்டான மிகச்சிறிய இடம்; பள்ளம். வீராணத்தேரி : காட்டுமன்னார் கோயில் என்னும் வீரநாராயணபுரத்து ஏரி.

அத்தகைய சமயமாக வைணவம் தழைக்க வேண்டும் என்று விரும்பியவர் நாதமுனிகள். அவ்விருப்பத்தைத் தம் வினைத்திறத்தால் நிறைவேற்றி வைத்தவர் இராமாநுசர். வீராணத்து ஏரியில் நிறைந்த பெருவெள்ளம் எழுபத்துநான்கு மதகுகளின் வழியாகப் பாய்ந்து பயிர்களை வாழ்வித்தது போலவே தாம் நியமித்த எழுபத்துநான்கு சிம்மாசனாதிபதிகள் (வைணவசமயத் தலைவர்கள்) மூலம் உயிர்களை வாழ்வித்தவர் இராமாநுசர். இராமாநுசப் பெருவெள்ளம் நாடெங்கிலும் பாய்ந்து வளம் பெருக்குவதற்குக் காரணமாய் அமைந்தவர்கள் இந்தச் சிம்மாசனாதிபதிகளே.

உடையவரின் திருவடிகளைப் பற்றிய முதலியாண்டான், கூரத்தாழ்வான், வடுகநம்பி, அனந்தாழ்வான், எம்பார், திருக்குருகைப்பிரான்பிள்ளான் ஆகியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் அனைவரையும் 'ஆசார்ய புருஷர்கள்' என்று குறிப்பிடுகிறது 'பெரியதிருமுடியடைவு' என்னும் நூல். இவர்களுள் நால்வர் துறவியர்; எழுபதுபேர் இல்லறத்தார்; அனைவருமே தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் என்பதும் மனங்கொள்ள வேண்டிய செய்தியாகும்.

மேலும் அருளாளப்பெருமாள் எம்பெருமானார் சீயர், திருவெள்ளறை சீயர், ஈச்சம்பாடி சீயர், ஆட்கொண்டவில்லி சீயர், ஸ்ரீகோவிந்தசீயர், குன்றத்தூர் சீயர், நம்பெருமாள் கோயில் சீயர் முதலான எழுநூறு சீயர்களைப் பற்றியும் 'பெரியதிருமுடியடைவு' என்னும் நூல் பேசுகின்றது. ஏகாங்கிகள் பன்னீராயிரவர் என்றும் அந்நூல் கணக்கிட்டுக் கூறுகிறது. பிள்ளை ராமாநுஜவேளக்காரர், ஜகந்நாத பிரம்மராயர், சேனாநாத பிரம்மராயர், தொண்டைமான் சக்கரவர்த்தி முதலான திருநாமதாரிகள் கணக்கற்றோர் என்றும் அந்நூல் குறிக்கின்றது.

இராமாநுசரின் திருவடிகளைப் பற்றிய மகளிரும் எண்ணிலடங்காதவர் ஆவர். அவர்களை உக்கலம்மாள், பருத்திக்கொல்லையம்மாள்[13], அம்மங்கியம்மாள், கோமடத்தம்மாள், கோமாண்டூர் இளையவில்லி, திருவனந்தபுரத்தம்மை, திருவண்பரிசாரத்தம்மை, திருவாட்டாற்றம்மை, மன்னார்கோயில்

13. இவர்களுள் பருத்திக்கொல்லையம்மாள் முதலான சிலர் ஆண்பாலர் எனவும் இவர்களது பெருமை கருதி அம்மாள் எனப் பெயர் ஏற்பட்டது எனவும் கூறுவர்.

பொரத்தம்மை, திருப்பதியில் ஸ்ரீகாரியம் ஆரியூரம்மை, நாயகத்தேவியார், சிறியபெருந்தேவியார், பெரியபெருந்தேவியார், திரிபுராதேவியார், கொங்கிற் பெரியபிராட்டியார், ஸ்ரீபெரும்பூதூரம்மை, திருவரங்கத்தம்மை, திருக்கோட்டியூராண்டாள், கூரத்தாண்டாள், தேவகிப்பிராட்டியார், அத்துழாய், அம்மங்கி, இன்னிளவஞ்சியார், ஆசூரியம்மாள், சூடிக்கொடுத்தாள், பொன்னாச்சியார் என்று பட்டியலிடுகிறது 'பெரிய திருமுடியடைவு'.

பெண்களைப் பெரும்பாலும் இயற்பெயர்களாற் குறிக்காமல் ஊர்ப்பெயரால் குறிப்பிடுவது தமிழ்நாட்டு மரபு. இங்குப் பேசப்பெறும் பெரும்பாலான பெயர்களை நோக்க, தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் வாழ்ந்த பெண்கள் இராமாநுசரின் கொள்கைகளில் ஈடுபட்டவர்கள் என அறியலாம்.

இவ்வாறு வகைப்படுத்திப் பேசப்படும் ஆசார்யர்கள், சீயர்கள், அரையர்கள், சந்நியாசிகள், ஏகாங்கிகள், அம்மையார்கள் ஆகியோர்களின் எண்ணிக்கை எதனைக் காட்டுகிறது? 'இராமாநுசப்பெருவெள்ளம்' எங்கும் ஓடிப் பரவியதன் அடையாளத்தைத் தானே!

இராமாநுசரின் மறைவையொட்டிக் குருபரம்பரை ஆறாயிரப்படி குறிக்கும் சில செய்திகளால் இத்தகைய ச்மயப்பரவலை நாம் அறிந்துகொள்ள முடிகின்றது.

திருவேங்கட நாட்டினின்றும் அநந்தாழ்வான் - ஸ்ரீகுகதாசர் முதலான முதலிகளைக் கூட்டிக் கொண்டு திருவரங்கத்திற்கு வந்திருந்தாராம்.

அப்படியே கீழைத்திக்கில் சோழவளநாட்டுத் திருக்கண்ணபுரம் முதலான திருப்பதிகளிலிருந்து எச்சான் முதலானவரும், தெற்குத்திக்கான பாண்டிநாட்டிலிருந்து திருக்கோட்டியூர் நம்பி குமாரரான - யாமுநாசார்யர் சொக்கத்தேவர், திருமாலிருஞ்சோலையிலிருந்து திருமாலையாண்டான் குமாரரான சுந்தரத்தோளுடையான் முதலானவர்களும், மேல்நாட்டிலிருந்து (மைசூர்ப் பகுதியிலிருந்து) சோமாசியாண்டான், மருதூர்நம்பி முதலானவர்களும் திருவரங்கம் நோக்கித் திரண்டு வந்தனராம். திருநாராயணபுரம் முதலான தலங்களில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றுமுண்டான திருப்பதிகளில் உள்ளவர்களும் (தேசாந்தரஸ்தலர்) பெருங்கூட்டமாகக் கோயில் (திருவரங்கம்) நோக்கி வந்தார்களாம். அப்படி வந்தவர்கள்

எல்லாரும் எம்பெருமானாருடைய பிரிவாலே பெரிதும் வருந்தி, பின்னர்ப் பட்டரைச் சேவித்துத் தங்கள் வருத்தமெல்லாம் தீர்ந்து தத்தம் ஊருக்குத் திரும்பிச் சென்றதாகக் 'குருபரம்பரை' கூறுகின்றது.

உடையவரின் மறைவுச்செய்தி கேட்டு நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து - பலநூறு கல்கள் தாண்டிவந்த அடியார்களின் திருக்கூட்டமே அவர் வாழ்நாளிற் செய்து முடித்த இமாலயப் பணிகளுக்கான அங்கீகாரமாய் அமைந்துவிடுகிறது.

### அறிவுலகப் பணிகள்

இதுவரை இராமாநுசரின் சமயப்பணிகள் சமுதாயத் தொண்டாய் உலகியலுக்குப் பொருந்துமாறு மக்களின் வாழ்க்கையோடு இணைந்து சிறந்த வகையினைப் பார்த்தோம்.

இனி, அச்சமயப்பணி அறிவுலகப் பணியாய்ச் சிறந்து செழித்ததைக் காண்போம்.

### இராமாநுச சித்தாந்தம்

இராமாநுசர் நிறுவிய கொள்கை விசிட்டாத்வைதம் எனப் பெயர் பெற்றுள்ளது. எனவே, திருமாலடியார்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்களை விசிட்டாத்வைதிகள் என்று கூறுவதுண்டு.

இக்கொள்கையின் பல கூறுகள் இராமாநுசருக்கு முன்பே பல நூல்களில் சிதறுண்டு கிடந்தன. எனினும், அவற்றை முறைப்படுத்தி வகுத்தளித்தவர் இராமாநுசரே. ஆதலின் இது அவர் பெயராலேயே 'இராமாநுச சித்தாந்தம்' என வழங்குகிறது.

'விசிட்டாத்வைதம்' என்னும் பெயரும் அவர் இட்டதன்று. அவருடைய சீடபரம்பரையில் ஏறத்தாழ அவருக்கு இருநூறு ஆண்டுகளுக்குப் பின்புவந்த சுதர்சனசூரியும் வேதாந்ததேசிகரும் சூட்டிய பெயர் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

### விசிட்டாத்வைதம்

பிரம்மசூத்திரத்திற்கு விசிட்டாத்வைத முறையில் உரை வகுத்தவர் இராமாநுசர். இவருக்குக் காலத்தால் முற்பட்டவரான சங்கராசாரியார் அத்வைத முறையில் உரைகண்டார். பிற்பட்டவரான ஆனந்ததீர்த்தரோ (மத்வர்) துவைத முறையில் உரை செய்தார். இப்பெரியார் மூவரும் தத்தம் மதத்திற்கு ஏற்பவே சூத்திரங்களுக்குப் பொருள் கண்டிருப்பது மிகவும் 'ரஸமான விஷயம்' என்று அறிஞர்கள் கூறுவர்.

இறையும் உயிரும் ஒளியும் இருளும்போல ஒன்றுக்கொன்று முரண்பட்டவை என்பது துவைதம்.

இறைவன் ஒருவனே உண்மைப் பொருள்; மற்றவையெல்லாம் நிழல்களே என்பது அத்வைதம்.

சித்து, அசித்து, இறை (பிரம்மம்) ஆகிய மூன்றும் தம் இயல்பை விடாமல் எப்போதும் ஒன்றாக உள்ளன என்பதே விசிட்ட ாத்வைதம்.

துவைதம் என்பதற்கு இரண்டாய் இருக்கும் தன்மை என்பது பொருளாகும். இதனால் 'பேதம்' என்றாகிறது. எனவே, 'அத்வைதம்' என்றால் 'அபேதம்' (இரண்டற்ற தன்மை) என்று பொருள் ஆகிறது. இனி, அத்வைதம் என்கிற சொல்லோடு 'விசிஷ்ட' என்னும் சொல் சேர்வதால் 'விசிட்டாத்வைதம்' என்று ஆகிறது. இது, 'விசிஷ்டஸ்ய அத்வைதம்' என்று விரியும். இதற்கு விசிட்டத்தினுடைய அபேதம் என்று பொருளாகும். அதாவது விசிஷ்டமானதொன்றன் அபேதம் என்னும் பொருள் கிடைக்கிறது. விசிஷ்டமான அவ்-ஒன்று யாது? எனில், விசேஷணத்தோடு கூடியது விசிஷ்டமாகும். இங்குப் பிரம்மமே விசிஷ்டமான பொருள். அது சேதன, அசேதனத் தொகுதிகளை விசேஷணமாகக் கொண்டு ஒன்றாக உள்ளது. சேதனங்கள் தன்னுணர்வு கொண்ட உயிரிகள். அசேதனங்கள் தன்னுணர்வில்லாத உயிரற்ற ஜடப்பொருள்கள். இவற்றைப் பிரம்மம் தன்னைவிட்டுப் பிரியாத விசேஷணங்களாகக் கொண்டு எப்போதும் ஒன்றாக உள்ள தன்மையே விசிட்டாத்வைதம் எனப்படும்.

எனவே, எல்லாவகைச் சேதன (சித்து) அசேதன(அசித்து)ப் பொருள்களோடு கூடின பிரம்மம் ஒன்று - என்று ஏற்றுக் கொள்வதால் வைணவ சமயமானது 'விசிட்டாத்வைதம்' என்று வழங்கப்படுகிறது.

சேதனம், அசேதனமாகிய இரண்டும் இல்லையென்றும் பிரம்மம் ஒன்றே உள்ளதென்றும் கொள்ளுகின்ற பிறருடைய மதத்தைத் தள்ளி, சேதனம், அசேதனம் என்னும் இரண்டு; அவற்றை விட்டுப் பிரியாத - விசேஷணமாகக் கொண்ட பிரம்மம் என்னும் ஒன்று - ஆகிய இம்மூன்று தத்துவங்களும் உண்மையில் உள்ளன என்று கொள்ளுவதே விசிட்டாத்வைத தரிசனத்தின் தேர்ந்த பொருளாகும்.

இராமாநுசர் நிறுவிய தத்துவம் இதுவே.

இதனை மேலும் சிறிது விளக்கமாகக் காண்போம்.

இராமாநுசரின் விசிட்டாத்வைதம் சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் முப்பொருள் உண்மை கூறுவது.

இம்மூன்றில் சித்து என்பது உயிர்த்தொகுதியைக் குறிக்கும்.

அசித்து என்பது மக்கள் விலங்கு முதலியவற்றின் உடல், உலகிலுள்ள ஏனைய பௌதிகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமாகவுள்ள பிரகிருதியைக் குறிக்கும். பிரகிருதி, மூலப்பகுதி எனவும் வழங்கப்படும்.

மூன்றாவதாக ஈசுவரன்.

சித்து என்பது அறிவுள்ள பொருளாகும்; அசித்து என்பது அறிவில்லாப் பொருள். இறைவன் சித்து, அசித்து ஆகிய இரண்டையும் தனக்கு உடம்பாகக் கொண்டிருக்கிறான். அவற்றுள் அந்தர்யாமியாய் (மறைந்து உறைபவனாய்) நிற்கிறான்.

இவ்வாறு இம்முப்பொருள்களும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் எக்காலத்தும் தம் இயல்பை விடாமல் ஒன்று சேர்ந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கையாகும்.

**உடல் - உயிர்க் கொள்கை**

இறைவனுக்கும் சித்து, அசித்து ஆகிய இரு பொருள்களுக்கும் இடையில் உள்ள உறவு உயிருக்கும் உடலுக்கும் உள்ளதைப் போன்ற உறவாகும். அதாவது,

''உயிர்கள் அனைத்தும் உலகமும் இறைவனது சரீரம். இறைவன் அச்சரீரத்தை உடையவன் - சரீரி''. இந்த உடல் உயிர்க்கொள்கையே (சரீர - சரீரிபாவம்) வைணவத்தின் உயிர்நிலையாகும். இதனைக் கீழ்க்காணும் நம்மாழ்வார் பாசுரம் தெளிவுறுத்தல் காணலாம்.

''திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவது மாய்அவை யவைதொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே''

இப்பாசுரத்தின் மூன்றாம் அடியின் பொருளை அடிப்படையாகக் கொண்டே இராமாநுசர் தம் விசிட்டாத்வைத சித்தாந்தத்தை நிலைநிறுத்தினார் என்பர்.

## சங்கரர் – இராமாநுசர் வேறுபடும் இடம்

சங்கரர் - இறை, உயிர், உலகு என்பன ஒன்றுதான் என்று கேவலாத்துவிதக் கொள்கையினை நிலைநாட்டுதற்குக் காரணமான பிரம்மசூத்திரம், சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் முப்பொருள் உண்மையினை இராமாநுசர் சாதிப்பதற்குத் துணையாயிற்று. ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பயிற்சியினாற் பெற்ற ஞானச்செல்வமே இத்தகைய விளக்கத்திற்குக் காரணம் என்பர்.

சங்கரரும் இராமாநுசரும் தம்முள் வேறுபடுவது குறித்து, 'இந்திய தத்துவ ஞானம்' என்னும் நூலில் அறிஞர் கி. லக்ஷ்மணன் ரத்தினச் சுருக்கமாகத் தரும் விளக்கம் இங்கு எடுத்துக்காட்டத்தக்கது.

''.... சங்கரர், இரண்டில்லை; உள்ளது ஒன்றுதான் என்னும்போது உயிர்கள் கிடையா. உலகு கிடையாது. பிரம்மம் ஒன்றே உள்ளது. என்பது கருத்து. ஆனால் இராமாநுசர் பேசும் அத்வைதத்தில் உலகும் உண்டு; உயிர்களும் உண்டு. ஆனால் அவை பிரம்மத்துக்கு விசேஷணங்கள். பிரம்மம் அவ்விசேஷணங்களையுடைய விசேஷியம். இந்த விசேஷணம், விசேஷியம் ஆகிய இரண்டும் சேர்ந்த விசிஷ்டமே இராமாநுசர் பேசும் பரம்பொருள். இதனாலேயே அவரது அத்வைதக் கொள்கைக்கு 'விசிஷ்டாத்வைதம்' என்று பெயர் ஏற்படலாயிற்று. சங்கரர் ஒரேயொரு பொருளுக்கு மட்டுமே முதன்மை கொடுக்கின்றார். ஆனால் அவர் ஏனைய யாவற்றையும் இல்லாதனவாக்கித் தாம் பேசும் பொருளுக்கு முதன்மை தேடுகின்றார். இராமாநுசர் ஏனைய யாவற்றையும் தாம் பேசும் பரம்பொருளுக்குச் சரீரமாக்கி அப்பரம்பொருளைச் சரீரியாக்கி அதற்கு முதன்மை கொடுக்கின்றார்.''

## விசிட்டாத்வைதத்தின் சிறப்பு

மேனாட்டறிஞரான மாக்ஸ் முல்லரும் (Max Muller), ''உபநிஷத்துகள் வேண்டுமானால் சங்கரரது அத்வைதக் கொள்கைக்கு இடம் தரலாமேயொழிய, வியாசரது பிரம்மசூத்திரத்துக்கு விசிட்டாத்வைத அடிப்படையிலான இராமாநுசரது பாஷ்யமே சிறந்ததாகும்'' என்கிறார். மேலும் அவர் ''இராமாநுசரது கொள்கை அறிவுக்கு விருந்தாகவும் அமைவதோடு இதயத்தைத் தொடக்கூடியதாகவும் உள்ளது'' என்று குறிப்பிட்டுள்ளார். அமெரிக்காவில் சர்வசமய மாநாட்டில் கலந்து கொண்டு இந்திய ஞானிகளைப் பற்றி (Spritual Giants of India) உரை

நிகழ்த்திய சுவாமி விவேகானந்தர், ''ஆதிசங்கரர் ஞானத்தினால் மிகச் சிறந்தவராக இருந்தபோதிலும் இராமாநுசரது இதயமும் கருணையும் உலகத்தின் அளவு பரந்ததாக உள்ளது'' (Although Adi Sankara was great by intellect yet Ramanuja's heart and compassion were as wide as the universe) என்று பாராட்டியுள்ளார்.

'சங்கரரின் அறிவு வழியை விட இராமாநுசரின் இதய வழியே சிறந்தது' என்னும் அடிப்படையில் எழுந்த கருத்துகள் இவை.

''நிர்க்குணப்பிரம்மம்[14] என்ற சங்கரரின் கோட்பாடு அறிவாளிகளுக்கு ஏற்றதாக அமையலாம். ஆனால் பெரும்பான்மையோராக இருக்கும் சாதாரண மக்களுக்குத் தேவையான அனுபவம் அதில் கிடைக்காது என்று உணர்ந்தவர் இராமாநுசர். எனவே அனைவர்க்கும் ஏற்றதான பக்திமார்க்கத்தையும் அதன் எல்லை நிலமான பிரபத்தி(சரணாகதி நெறி)யையும் அவர்கண்ட தரிசனத்தின் நிலைத்தூண்களாக நிறுத்தினார்'' என்று இராமாநுச சித்தாந்தத்தின் சிறப்புக்களை மேலும் துலக்கிக் காட்டுகிறார் ஆர். பார்த்தசாரதி. ''இறைவழிபாட்டில் அழகுணர்ச்சியையும் இணைத்துக் கடவுளைப் புவனசுந்தரனாகப் பாவித்து வணங்கும் நெறியை இராமாநுசர் அறிமுகம் செய்தார் என்றும் இத்தகைய முறையினால் சமயத்தைச் சாதாரண மக்களிடையே பரப்பும் முயற்சியில் அவர் பெரும் வெற்றிபெற்றார்'' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய மதிப்பீடுகளால் சாதாரண மக்களையும் மறவாத சமயநெறியே இராமாநுசர் கண்ட தத்துவ தரிசனம் என்று நாம் விளங்கிக் கொள்ளலாம்.

### தமிழ்ப் பணி

இராமாநுசர் செய்த ஒன்பது நூல்களும் வடமொழியில் அமைந்தவை என்பதை முன்பே குறித்தோம். தமிழில் அவர் ஒரு நூலும் செய்யவில்லை. இந்நிலையில் அவரின் 'தமிழ்ப் பணி யாதாயிருக்கக்கூடும்?' என்று அறியும் ஆர்வம் வாசகர்க்கு எழலாம்.

அந்நாளில் இந்திய அளவில் புகழுடன் விளங்கிய மொழிகள் இரண்டு மட்டுமே. அவை வடமொழி எனக் குறிக்கப்பெறும் சமஸ்கிருதமும் தென்மொழி என வழங்கிய தமிழுமே ஆகும்.

---

14. நிர்க்குணப்பிரம்மம் : குணங்களற்ற இறை. சகுணபிரம்மம் - குணங்களோடு கூடிய இறை.

இவ்விரண்டனுள், 'வடமொழியே சமயத் தத்துவக் கருத்துக்களை வெளியிடற்கு ஏற்ற மொழி' என எல்லாச் சமயத்தவரும் கருதினர். அம்மொழியிலேயே நூல்களும் எழுதினர். கற்றாரிடையே சமயக் கருத்துக்களைப் பரப்புதற்கு அம்மொழியே ஓர் ஊடகமாகத் திகழ்ந்தது. இராமாநுசரும் அதற்கு விலக்கல்லர். வடமொழியில் அமைந்த பிரம்மசூத்திரம், கீதை முதலான நூல்களுக்கு விசிட்டாத்வைத அடிப்படையில் விளக்கம் அளித்தவர் இராமாநுசர். அவ்விளக்கம் இந்திய நாட்டின் பிற சமயவாதிகளிடம் போய்ச் சேர்வதற்கும், அதனால் விளையும் ஏற்பு, எதிர்ப்புகளை எதிர்கொள்வதற்கும் வடமொழியில் நூல் செய்வதே பொருத்தம் என்று அவர் கருதியிருக்கக் கூடும். வாழ்நாள் முழுதும் பல எதிர்ப்புகளுக்கிடையில் சமயம் பரப்புதலை நோக்கமாகக் கொண்டு செயல்பட்டவர் அவர். சமயவாதிகளோடு வாதிட்டு வாகை சூடியவர். தமிழின் இன்சுவையே வடிவெடுத்தாற் போன்ற ஆழ்வார்களின் திவ்வியப்பிரபந்தங்களைக் கொண்டே 'ஸ்ரீபாஷ்யம்' போன்ற நூல்களில் அவரின் உரைவிளக்கங்கள் அமைந்திருப்பதாகக் கூறுவர். ''அருளிச்செயல் பரிமளம் கமழக்கமழ அவர் அருளிச் செய்திருக்கும் அர்த்த விசேஷம் ஸ்ரீபாஷ்யத்திற்குச் சிகரமாக விளங்குகின்றது'' எனத் தென்மொழியும் வடமொழியும் கற்ற அறிஞர்கள் முடிவு கட்டியுள்ளனர்.

இவ்வாறு அவரின் அருளிச்செயல் ஆர்வமே தமிழ்ப்பணியாய் அமைந்ததற்குச் சில சான்று காட்டுவோம்.

ஆதிசங்கரருக்கும் ஆனந்த தீர்த்தருக்கும் (மத்வர்) கிட்டாதபேறு இராமாநுசருக்குக் கிடைத்தது. ஆழ்வார்களின் அருளிச்செயல்களை - திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களைப் பயிலும் பேறுதான் அது. தம் ஆசார்யரான பெரியநம்பியிடத்தே முதலாயிரம் உள்ளிட்ட மூவாயிரத்தையும், மற்றோர் ஆசார்யரான திருமாலை யாண்டானிடம் திருவாய்மொழி ஆயிரத்தையும் கற்றுத் தேர்ந்தவர் இராமாநுசர். வேதங்கள், உபநிடதங்கள், புராணங்கள் என வடமொழி நூல்களைக் கசடறக் கற்ற இராமாநுசர், ஆழ்வார்களின் பாசுரங்களை உண்ணும் சோறும் பருகும் நீருமாகப் பெற்று அனுபவித்தார். சூடிக்கொடுத்தவளான கோதையின் சுந்தரத்தமிழில் மனம் பறிகொடுத்து, 'திருப்பாவை சீயர்' என்றே புகழ்பெற்றார். உலகேழின் தாகம் தீர்க்கும் திருவாய்மொழியில் - தணியாத தாகமும் தனிக்காதலும் கொண்டவர் அவர். இந்த உண்மையை உணர்ந்தே, திருவாய்மொழியில்

"மணம்தரும் இன்னிசை மன்னும்
இடம்தொறும் புக்குநிற்கும்
குணம் திகழ் கொண்டல்"

என்று கொண்டாடினார் திருவரங்கத்தமுதனார்.

இடையில் மறைந்துபோன ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களை நம்மாழ்வாரின் திருவருளாலும் தம் பெருமுயற்சியாலும் திரும்பப் பெற்று நாலாயிரமாக அடைவுசெய்து, பண்ணும் தாளமும் வகுத்து உலகிற் பரவச் செய்தவர் நாதமுனிகள்; வேதத்தைக் காட்டிலும் விஞ்சிய மதிப்பைத் தந்து கோயில்களில் அவற்றை ஓதும் மரபினை முறைப்படுத்தித் திருவத்யயனத் திருநாளாகக் கொண்டாடச் செய்தவர் இராமாநுசர். இவையேயன்றி ஆழ்வார் பாசுரங்களுக்குக் கோயிற் சடங்குகள் மூலம் இன்றளவும் நிலைத்த வாழ்வு தந்தவரும் அவரே. இப்பெருமையை உணர்ந்தே தமிழ்மறையான திருவாய்மொழியைப் பெற்றதாய் சடகோபனாகிய நம்மாழ்வார் என்றும், காத்து வளர்த்த செவிலித்தாய் இராமாநுசர் என்றும், 'தனியன்' ஒன்று அவரைச் சிறப்பிக்கின்றது.

இவ்விடத்தில் திருவாய்மொழி, பெரியதிருமொழி ஆகிய பிரபந்தங்களுக்கு அமைந்த இரண்டு தனியன்[15]களை நினைவுகூர்வது பொருத்தமாகும். பெரும்பாலும் தனியன்களில் அந்தந்தத் திவ்வியப் பிரபந்தங்களின் பெருமை, அவற்றை யருளிச் செய்தவர்களின் பெருமை, அவர்கள் அவதரித்த தலத்தின் பெருமை முதலியன பேசப்படும். ஆனால் இங்கு நாம் குறிப்பிடும் தனியன்கள் அவ்வாறு அமையாமல் எம்பெருமானாரை நோக்கிச் செய்யும் பிரார்த்தனைகளாக உள்ளன.

"ஏய்ந்தபெருங் கீர்த்தி இராமா நுசமுனிதன்
வாய்ந்தமலர்ப் பாதம் வணங்குகின்றேன் - ஆய்ந்த பெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வே தம்தரிக்கும்
பேராத உள்ளம் பெற."

திருவாய்மொழித் தனியன்களுள் ஒன்று இது. பாடியவர், அனந்தாழ்வான்.

15. தனியன் : ஆழ்வார்களின் பிரபந்தங்களுக்கு அமைந்த சிறப்புப் பாயிரமே 'தனியன்' எனப்படுகிறது. நூலில் அடங்காது தனியே நிற்றல் பற்றி இப்பெயர் பெற்றது.

''எங்கள் கதியே! இராமா நுசமுனியே!
சங்கை கெடுத்தாண்ட தவராசா! - பொங்குபுகழ்
மங்கையர்கோன் ஈந்த மறையா யிரமனைத்தும்
தங்குமனம் நீ எனக்குத் தா.''

பெரியதிருமொழித் தனியன்களுள் ஒன்று இது. பாடியவர், எம்பார்.

இவ்விரண்டும் எம்பெருமானாரை முன்னிலைப்படுத்திப் பாடப்பட்டவை. சொல்லும் பொருளிலும் போக்கிலும் ஒரேமுறையில் அமைந்தவை. 'நம்மாழ்வாரின் திருவாய்மொழி ஆயிரத்தையும் திருமங்கை மன்னனின் பெரியதிருமொழி ஆயிரத்தையும் கற்று நெஞ்சில் தரிக்கவல்ல ஆற்றலை எம்பெருமானார் தந்தருள வேண்டும்' என்பது இத்தனியன்களின் சாரமான கருத்தாகும். இப்பிரார்த்தனைகளை அந்தந்தப் பிரபந்தங்களைத் தந்த ஆழ்வார்களை நோக்கிச் செய்யாமல், எம்பெருமானாரை நோக்கிச் செய்ததன் கருத்து யாது? இக்கேள்விக்கு நாம் எளிதில் விடையை ஊகித்து அறிதல் கூடும். இத்தனியன்களைப் பாடிய அனந்தாழ்வானும், எம்பாரும் இராமாநுசரின் நேர்சீடர்கள். 'இராமாநுசர் இட்ட வழக்காய் இருப்பன திவ்வியப் பிரபந்தங்கள்' என்பதை நேர்முகமாய் உணர்ந்தவர்கள். 'இராமாநுசரின் அருளாலன்றி அவற்றை ஓதியுணர்தல் அரிது' என்பது அவர்களின் கருத்தாதலின், இராமாநுசரிடத்தே இங்ஙனம் வேண்டிக்கொள்கிறார்கள்.

இவ்விருவரைப் போலவே இராமாநுசர் காலத்தில் வாழ்ந்தவர் திருவரங்கத்தமுதனார். அவர், தம்முடைய துதி நூலான இராமாநுச நூற்றந்தாதியில், இராமாநுசரின் திவ்வியப்பிரபந்தப் பயிற்சியை முன்னிட்டே அவரைப் பெருமைப்படுத்துகிறார். குறிப்பாக, 'திருமங்கையாழ்வாரின் பெரியதிருமொழியை அனுபவித்துத் தமது உள்ளம் பூரித்து அதனால் மிடுக்கு அதிகரித்துச் சிங்கம் போன்று விளங்கினாராம் எம்பெருமானார்'.

''கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல், கலைப்பெருமான்
ஒலிமிக்க பாடலை உண்டுதன் உள்ளம் தடித்து, அதனால்
வலிமிக்க சீயம் இராமாநுசன்''

என்பன அப்பாடல் அடிகள்.

இவ்வெடுத்துக்காட்டுகளால் திவ்வியப்பிரபந்தம் ஓதுதலையும் ஓதுவித்தலையும் நித்திய நியமமாகக் கொண்டு உயிர்தரித்திருந்தவர் உடையவர் என்று அறியலாம்.

வேதங்களுக்கு இணையாக அவர் திவ்வியப்பிரபந்தங்களைத் தெளியக் கற்றவர் - என்பதையும் அமுதனார் தம் இராமானுச நூற்றந்தாதியில் குறிப்பிட்டுப் பேசியுள்ளார்.

''சொல்லார் தமிழ்ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லை
இல்லா அறநெறி யாவும் தெரிந்தவன்; எண்ணருஞ்சீர்
நல்லார் பரவும் இராமாநுசன்''

என்று போற்றுகிறார் அவர். இங்குச் 'சொல்லார் தமிழ் ஒரு மூன்று' என்பது இயல், இசை, நாடகம் எனப்படும் முத்தமிழையும் (அதில் உள்ள நூல்கள் அனைத்தையும்) முற்றக்கற்றவர் என்பதை உணர்த்துகிறது. எனினும் அவரின் திவ்வியப்பிரபந்தத் தேர்ச்சி கருதி, பிறிதொரு வகையாகவும் இதற்குப் பொருள் கூறுவதுண்டு. 'சொல்லார் ஒரு தமிழ்' என்று கூட்டித் திருவாய்மொழியும், 'ஒருமூன்று' என்றதனால் மற்றை அருளிச்செயல் மூவாயிரமும் (முதலாயிரம், பெரியதிருமொழி, இயற்பா) உணர்த்தப்பட்டன என்பர். இதனை அரண் செய்வது போலவே அவரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் அமைந்துள்ளன.

திருக்கோட்டியூர்நம்பியிடம் பலமுறை நடந்து துவண்டு - சீரிய நற்பொருளைச் செவியாரக் கேட்டவர் இராமாநுசர் என்பதை நாம் அறிவோம்.

திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்கு இவர் வருவதும் செல்வதுமாயிருந்த நாளில், ஒருமுறை நம்பியின் சீடர் ஒருவர் அரங்கனைச் சேவிப்பதற்காகத் தென்னரங்கம் வந்திருந்தார். இதனையறிந்த இராமாநுசர் அச்சீடர் திருக்கோட்டியூர் திரும்பும் தருவாயில் அவர் திருவடிகளில் விழுந்து வணங்கி, நம்பியிடத்தே தம் ஆர்த்தியை (அரும்பொருளைப் பெறாமையால் தமக்குள்ள பெருவருத்தத்தை)த் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டாராம். அப்போது தம் பேராவலையும் துடிப்பினையும் (த்வரை) தாம் கற்ற திருவாய்மொழியின் மூலமாகவே வெளியிட்டாராம்.

''பொன்னாழிக் கையார்க்குப் பூந்துழாய் முடியார்க்கு இங்கு
என்னாவி ஈடழித்தல் தகவல என்று இயம்பீரே!''

என்பதே அவர் கூற்றாகும்[16]. இராமாநுசர் கூறிய வண்ணமே அந்தச் சீடரும் சென்று நம்பியிடத்தே விண்ணப்பிக்க நம்பியும் கேட்டருளி,

16. பறவைகளை இறைவனிடத்தே தூது அனுப்பும் பராங்குச நாயகி பேச்சாக அமைந்த திருவாய்மொழிப் பாசுரப் போக்கினைத் தழுவி இராமாநுசர் கூறியதாகும் இது.

''இராமாநுசருடைய ஆர்த்தி இருந்தபடியறிந்தோம். அவரை வரச்சொல்லும்'' என்று அந்தச் சீடரையே அவர்பால் அனுப்பியதாகக் 'குருபரம்பரை' கூறுகின்றது. உடையவரின் திவ்வியப்பிரபந்தப் பயிற்சியும் ஈடுபாடுமே நம்பியின் நெஞ்சத்தைக் கரைத்துக் கருணைக்கு இலக்காக்கியதைக் காட்டும் நிகழ்ச்சி இது.

மாலாதரர் என்னும் திருமாலையாண்டானிடம் திருவாய்மொழியின் நுண்பொருள்களையெல்லாம் கற்றுக் கொண்டவர் இராமாநுசர். அங்ஙனம் கற்கும்போது தம் ஆசார்யருக்கே 'அறியாதன அறிவிக்கும் ஆசானாக' அவர் விளங்கினார். இதனால் பிணங்கிய திருமாலையாண்டானிடம் இராமாநுசரின் மேன்மையைத் திருக்கோட்டியூர்நம்பி எடுத்துரைத்ததையும், அதனால் ஆண்டான் மனமாற்றம் பெற்றதையும் நாம் முன்னரே குறித்தோம்.

தமிழ் மண்ணிற் பிறந்தவர் இராமாநுசர். ஆழ்வார்களின் அருந்தமிழைக் கற்றுப் பெருந்தமிழராக வாழ்ந்தவர் அவர். தம் நூல்களில் தாம் எடுத்துப் பேசிய தத்துவ விளக்கத்துக்கு ஆழ்வார்களின் அமுத மொழிகளையே அருந்துணையாகக் கொண்டவர். பிரம்மசூத்திரத்துக்கு உரையெழுதுகையில் - ஐயம் எழுந்த இடங்களிலெல்லாம் திருவாய்மொழிப் பாசுரங்களைக் கொண்டே ஐயம் அகற்றி அறுதியிட்டதாகக் கூறுகிறது, 'ஆசார்யஹ்ருதயம்' என்னும் நூல்.

''பாஷ்யகாரர் இது கொண்டு சூத்ர வாக்யங்கள் ஒருங்க விடுவர்'' (சூ.65) என்பது அந்நூலிற் காணப்படும் ஒரு குறிப்பு.

இதே கருத்தினை வேதாந்ததேசிகரும் தம் பாடலொன்றில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

''செய்யதமிழ் மாலைகள்நாம் தெளியஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே''

என்பது அவர் வாக்கு. வேதங்களினால் கலங்கின ஞானமே உண்டாகுமென்றும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களைக் கொண்டே அதனைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும் என்றும் துணிந்துரைத்தார் அவர். இப்படி, 'வேதங்களைக் காட்டிலும் அருளிச்செயல்களுக்குத் தனி ஏற்றம் உண்டு' என்று பின்வந்தோர்க்கு அடையாளம் காட்டியவர் இராமாநுசரேயாவார்.

தமது தத்துவ ஞானக் கல்விக்கிடையே இடைவிடாது திவ்வியப்பிரபந்தங்களைக் கற்றவர் இராமாநுசர். அதன் விளைவாகப் பாசுரங்களுக்கு நுண்பொருள் கூறுவது அவரின்

வழக்கமாக இருந்தது. தம்முடைய சீடர்களிடத்தும் ஆழ்வார்களின் பாசுரங்களைப் படித்தாக வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். அவர்களை வலிய அழைத்து அவர்களுக்குத் திவ்வியப்பிரபந்தங்களைக் கற்பித்தார். அவரே பல சமயங்களில் நாலாயிரத்தைச் சேவித்துக் கொண்டிருப்பது வழக்கம். 'திருமாலிருஞ்சோலைமலை என்றேன்' என்னும் திருவாய் மொழிக்குச் சொல்லப்படும் ஐதிகம்[17] இதனை எடுத்துக்காட்டும்.

எம்பெருமானார் இரவுப்பொழுதிலே அமுதுசெய்த பின்னர் சிறிதுநேரம் திருவாய்மொழியை மனத்திற்குள் சொல்லிக்கொண்டே (அனுசந்தானம்) குறிப்பிட்ட தொலைவு வரை உலாவியருளிப் பின்னர்த் துயில் கொள்வது வழக்கம். ஒருமுறை அவ்வாறே திருவாய்மொழி அனுசந்தானத்துடன் நடந்து சென்ற உடையவர், குறிப்பிட்ட தூரம் செல்வதற்கு முன்னரே சடக்கெனத் திரும்பிவிட்டார். அப்போது அவர் மனத்துக்குள் சொல்லிச்சென்றது - அனுசந்தித்தது, 'திருமாலிருஞ்சோலைமலை என்றேன் என்ன' என்று தொடங்கும் திருவாய்மொழிப் பதிகமாகும். அதில் ஒரு பாசுரத்தொடரான, 'மடித்தேன் மனைவாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை' என்பதை நினைத்தபோதே, 'மடித்தேன்' என்பதற்குத் 'திரும்பினேன்' என்பது பொருளாதலின் அதன் அர்த்தத்தில் ஈடுபட்டுத் தாம் வழக்கமாகச் செல்லும் குறிப்பிட்ட தூரம்வரை செல்லாமல் திரும்பிவிட்டார் உடையவர். இப்படி அவர் சடக்கெனத் திரும்பியதற்கான காரணத்தை ஊகித்த எம்பார், 'திருமாலிருஞ்சோலைப் பாசுரம் திருவுள்ளத்தில் ஓடுகிறதோ?' என்று எம்பெருமானாரைக் கேட்க, அவரும் 'ஆம்! அப்படியே!' என்றாராம்.

திருவாய்மொழி ஈட்டுரை காட்டும் (10-8-3) ஐதீகம் இது.

பிறர் கூறாத புதுப்பொருள்களைக் கூற வேண்டும் என்பதற்காகவோ, தம் புலமைத்திறத்தைக் காட்டவேண்டும் என்பதற்காகவோ இராமாநுசர் திவ்வியப்பிரபந்தங்களைக் கற்கவில்லை. ஆழ்ந்த ஈடுபாட்டுடன் கூடிய பக்திச் சிறப்பே அவர் திவ்வியப்பிரபந்தங்களை விரும்பிக் கற்றதற்குக் காரணம் ஆகும். ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவையின் மீது அளவற்ற ஈடுபாடு அவருக்குண்டு. திருப்பாவையின் பொருளை

17. ஐதிகம் : ஆழ்வாருடைய பாசுரக் கருத்துகளை விளக்குதற்கு ஆசார்யர்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறுவது ஐதிகம் எனப்படும்.

ஆண்டாளுடைய மனப்பாங்குடன் சொல்லுவதும் உணர்வதும் எளிதன்று என்பது அவர் கருத்து. எனினும் திருப்பாவை நுதலும் பொருளிலும் சுவையிலும் தம்மை மறந்தவர் என்பதனை அவரது வாழ்க்கை நிகழ்ச்சி ஒன்றன் மூலம் வைணவ நூல்கள் உணர்ச்சிமயமாகச் சித்திரிக்கின்றன.

இராமாநுசர் தினமும் பிச்சைக்கு (மாதுகரம்) எழுந்தருளும்போது மனத்திற்குள் திருப்பாவையைச் சொல்லிக் கொண்டே செல்வது வழக்கம். ஒருநாள் திருக்கோட்டியூரில் நம்பி திருமாளிகைக்கு அருகே சென்றபோது 'உந்து மதகளிற்றன்' என்னும் பாசுரத்தை (18) அனுசந்தித்துக் கொண்டிருந்தார். 'செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய்' என்ற அடிகளை எம்பெருமானார் சொல்லி முடித்த அதேகணத்தில் நம்பி குமாரத்தியான தேவகிப்பிராட்டியார் தன் வளைக்கரங்களால் கதவைத் திறக்கவே இராமாநுசர் அவளை நப்பின்னைப் பிராட்டியாகவே நினைத்துக் கீழே விழுந்து வணங்கினார். தேவகியார் அதனைக் கண்டு பதைத்துத் தம் தந்தையாரிடம் ஓடி நடந்ததை நவின்றார். தந்தையார் அதுகேட்டு எந்தப் பதைப்பும் அடையாமல் - அமைதியாக இராமாநுசரை அணுகி, ''இளையாழ்வீர்! இன்று நம் வாசலைக் கிட்டிய நிலையில், 'உந்துமதகளிற்றன்' அனுசந்தானமோ?'' என்று கேட்க, அதற்கு உடையவரும் 'ஆம்' என்று விடையிறுத்தாராம். ராமானுஜார்ய திவ்யசரிதை, வடிவழகிய நம்பிதாசரின் குருபரம்பரை, வார்த்தாமாலை (206) போன்ற நூல்களில் இச்செய்தி விவரிக்கப்பட்டுள்ளது[18]. இதனாலேயே உடையவர் 'திருப்பாவை சீயர்' எனச் சிறப்பிக்கப் பெற்றார் என அறிகிறோம்.

இவ்வகையில் முதல்திருவந்தாதி உரையில் இடம்பெறும் ஐதிகம் ஒன்றும் இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது.

''தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே''

(முதல்திருவந்தாதி - 44)

என்னும் அழகிய பாசுரத்தொடரால், ''தம் அடியவர்கள் எந்த உருவத்தை விரும்புகிறார்களோ அந்த உருவத்தைத் தானே அடைவான் எம்பெருமான்'' என்னும் கருத்தினை

18. இந்நிகழ்ச்சியைக் குறிக்கும் வேறுசில நூல்கள் திருக்கோட்டியூர்நம்பி, தேவகிப்பிராட்டியார்க்குப் பதிலாக முறையே பெரியநம்பியையும் அவர் புதல்வி அத்துழாய் என்பவரையும் குறிப்பிடுகின்றன.

வெளியிடுகின்றார் பொய்கையாழ்வார். இதற்கு விளக்கமாக உடையவர் வாழ்க்கையில் நடந்த ஓர் உயரிய நிகழ்ச்சியை நஞ்சீயர் வாக்காக எடுத்துக்காட்டுகிறார் உரையாசிரியர்.

''ஸ்ரீரங்கத்தில் மணலிலே விளையாடுகின்ற சிறுபிள்ளைகள் சிலர் கோயிலில் நடக்கின்ற நிகழ்ச்சிகளை அப்படியே பின்பற்றி விளையாடிக் கொண்டிருந்தனர். மணலிலேயே பெருமாள், நாச்சியார் மண்டபம் இவைகளைச் சமைத்து, பிறகு சிறிது மணலையெடுத்துப் பெருமாளுக்கு அமுதுசெய்யும் பிரசாதமாகவும் வைத்தனர். பிறகு கோயிலில் அழைப்பது போலவே, 'எம்பெருமானார்! பிரசாதத்தைப் பெற்றுக்கொள்ளும்' என்று கூறி அச்சிறுவர்கள் மணலை முகந்து எடுக்க, தற்செயலாக அப்போது அங்குப் பிச்சைக்காக எழுந்தருளிய எம்பெருமானார், அதைக் கேட்டு உண்மையாகவே பெருமான் எழுந்தருளியிருப்பதாகவும், அந்த மணலை மெய்யாகவே பிரசாதமாகவும் கொண்டு கீழே விழுந்து வணங்கி, அந்த மணல் பிரசாத்தைத் தம்முடைய பிச்சைப் பாத்திரத்தில் ஏற்றுக் கொண்டாராம்''.

ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் பொருளற்ற வெறும் கடலோசை போன்றவையோ? இல்லை, வாழ்க்கைக்கு வாய்த்த வரப்பிரசாதம் என்று நம்பி, அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காட்டியவர்கள் வைணவப் பெரியார்கள். நாதமுனிகள், ஆளவந்தார், பெரியநம்பி முதலான ஆசார்யர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளால் இதனை நாம் தெளிவாக உணரலாம். அத்தகைய பெரியார்கள் வழிநடந்த இராமாநுசரும் திவ்வியப்பிரபந்தத்தைப் போற்றுதலுக்கு மட்டும் உரியதாக்காமல் வாழ்க்கைக்கு உதவும் வழிகாட்டி நூலாகக் கடைப்பிடித்தமை இங்கு உணரத்தகும். கூரத்தாழ்வான் மறைந்தபோது,

''ஒருமகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண்மால் தான்கொண்டு போனான்''

என்னும் பெரியாழ்வார் பாசுரத்தைச் சொல்லிக் கதறினாராம்; ஆண்டாளைப் பிரிந்த அந்த ஆழ்வாரைப் போலவே வருந்தினாராம். இதனால் அன்புடையாரைப் பிரிந்தபோது பரிவுடையார் எவரும் நினைவு கூரத்தக்க பாசுரம் இதுவென்று அறியலாம்.

அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு திவ்வியப்பிரபந்தப பாசுரங்களை உடையவர் நினைவுகூர்ந்தார் என்பதற்கு உரைகளில் மேலும் பல சான்றுகள் காணப்படுகின்றன.

தமிழ் அகப்பொருள் மரபைத் தழுவிப் பாடப்பெற்றது நம்மாழ்வாரின் திருவிருத்தம் என்னும் நூலாகும். தலைவன் பொருளீட்டும் பொருட்டுப் பிரிந்து செல்லப் போகிறான் என்பதைக் குறிப்பால் உணர்ந்த தலைவி, அதனைத் தன் தோழிக்குத் தெரிவிக்கின்றாள்.

''தோழி! நம் குன்றநாடர் என்னிடத்தே நடந்துகொள்ளும் விதமே தனியாக உள்ளது. வெளிப்பூச்சான பேச்சுக்களால் என்னை மகிழ்வித்துப் பொருள் தேடும் பொருட்டு என்னைப் பிரிந்து செல்லப் போகிறார் என்று தெரிகிறது. வடவேங்கடம்மலையை விரும்பிச் சென்று அங்குப் பொருளீட்டக் கருதியுள்ளார். அதற்காக அவர் கற்றுள்ள வலிய செயல்தான் என்னிடத்தே உபசாரமாகப் பேசும் பசப்பு வார்த்தை என்பதை நான் தெரிந்துகொண்டேன்'' என்கிறாள்.

இக்கருத்தமைந்த தலைவியின் பேச்சு 'காண்கின்றனகளும் கேட்கின்றனகளும்' எனத் தொடங்கும் திருவிருத்தச் செய்யுளில் (8) இடம்பெற்றுள்ளது.

இதனையடுத்து வரும் 'திண்பூஞ்சுடர்' எனத் தொடங்கும் செய்யுள் (9) தலைவன் பேச்சாகவுள்ளது. தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுதற்கு இயலாது என்கிற அருமைப்பாட்டை எடுத்து மொழிவதாய் அச்செய்யுள் பாடப்பட்டுள்ளது. 'இம்மணிவல்லிஂய யாரால் பிரிய முடியும்?' என்னும் பொருளில் ''வண்பூமணிவல்லியார்ரே பிரிபவர்?'' என்னும் அழகிய பாசுரத் தொடரால் அவ்வருமைப்பாட்டினை வெளியிடுகின்றான் தலைவன்.

இச்செய்யுட்கள் இரண்டனையும் முறையே பிள்ளை உறங்காவில்லிதாசரும் இராமாநுசரும் சந்தர்ப்பத்துக்கேற்பப் பயன்படுத்திய செய்தியைத் திருவிருத்த உரையாசிரியர்கள் நமக்கு எடுத்துக்காட்டியுள்ளனர்.

திருவரங்கத்தில் வாழ்ந்து வந்த உடையவர் ஒருசமயம் ஏதோ மனக்கசப்புக் காரணமாகத் திருமலை (திருவேங்கடம்) செல்லத் திட்டமிட்டிருந்தார். அதனை அறிந்த பிள்ளை உறங்காவில்லிதாசர், எம்பெருமானாரின் பிரிவுக்கு ஆற்றாது, அவ்வாற்றாமையினால் கதவைத் தாழிட்டுக் கொண்டு, 'காண்கின்றனகளும் கேட்கின்றனகளும்' என்னும் பாசுரத்தைச் சொல்லி அழுது கொண்டிருந்தாராம். அந்நிலையில் நெல் வேண்டி வந்த ஸ்ரீவைஷ்ணவர் ஒருவரை உறங்காவில்லியிடம் பெற்றுக் கொள்ளுமாறு அனுப்பி வைத்தார் உடையவர். இவ்வாறு தாசரிடத்தே அனுப்பப் பெற்ற ஸ்ரீவைஷ்ணவர் தம் விருப்பத்தை

அவரிடம் தெரிவிக்க இயலாதவராய் உடையவரிடமே திரும்பிவந்தார். உடையவர், 'ஏன்' என்று கேட்க, அவரும், ''நான் சென்ற காரணத்தைப் பிள்ளை உறங்காவில்லி தாசரிடம் சொல்ல முடியவில்லை. அவர், 'காண்கின்றனகளும் கேட்கின்றனகளும்' என்னும் பாசுரத்தையே சொல்லிக் கொண்டு கதவை மூடி அழுது கொண்டிருக்கிறார்'' என்றார். அதைக் கேட்ட எம்பெருமானார், ''வண்பூமணிவல்லி யாரே பிரிபவர்? என்னும் அடுத்த பாசுரத்தை நீ கூறியிருக்கலாமே?'' என்றாராம். இவ்வாறு எம்பெருமானார் குறிப்பிட்டதன் உட்கருத்து பிள்ளை உறங்காவில்லிதாசரைப் பிரிந்து தம்மாலும் இருக்க முடியாது என்பதைத் தெரிவிப்பதற்கேயாகும். இந்நிகழ்ச்சிக்குப் பின்னர், திட்டமிட்டபடி அவர் திருமலைப்பயணம் மேற்கொள்ளவில்லை எனக் கூறுகிறது 'ராமாநுஜார்ய திவ்யசரிதை'.

இந்நிகழ்ச்சி இராமாநுசரைப் போலவே அவர்தம் சீடர்களும் திவ்வியப்பிரபந்தத்தில் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பதைத் தெரிவிக்கிறது.

வடநாட்டிலிருந்து வந்த மாயாவாதியான யக்ஞமூர்த்தி என்பவரை வாதில் வென்று தம் சீடராக்கிக் கொண்டவர் இராமாநுசர். அவருக்கு அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்று திருநாமமிட்டு அவரை அழைத்துக் கொண்டு போய் நம்பெருமாளைச் சேவிக்கச் செய்து, திருவரங்கத்திலேயே வாழும்படிச் செய்தார். அப்படி வாழ்ந்து வரும் நாளில் ஒருநாள் உடையவர் அவரைப் பார்த்து, ''வாரீர்! அருளாளப்பெருமாள் எம்பெருமானாரே! ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்களை ஓதீர்!'' என்று அருளிச்செய்து, திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து, மற்றும் வேண்டுகிற தத்துவக் கல்வியெல்லாம் கற்பித்தார் என்று குருபரம்பரை கூறுகின்றன. இதனால் எக்கல்விக்கும் முதற்கல்வியாய்த் திவ்வியப்பிரபந்தப் பயிற்சியை அவர் முன்னிறுத்தினார் என்று அறியமுடிகின்றது.

''நம்மிடத்து இறைவன் இருப்பதால் இந்த உயிரையும் உடலையும் அவன் இருப்பதற்குத் தகுதியுள்ள இடமாகச் செய்தல் வேண்டும். நாம் தகுதியோடு வாழ முற்பட்டால் பரமபதத்தைக் காட்டிலும் இகஉலக வாழ்வு நன்று'' என்னும் கருத்துக் கொண்டவர் இராமாநுசர். இதன் விளக்கமாகத் தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாசுரம் ஒன்றை அவர் எடுத்துக்காட்டுவதுண்டு.

''பச்சை மாமலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிரயான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே!''

(திருமாலை, 2)

இப்பாசுரம் கூறும் உண்மையை வற்புறுத்த, இராமாநுசர் மூன்று நூல்கள இயற்றியுள்ளதாகக் கூறுவர். அவை சரணாகதி-கத்யம், ஸ்ரீரங்க-கத்யம், வைகுண்ட-கத்யம் என்பன.

எம்பெருமானார் பகலெல்லாம் ஸ்ரீபாஷ்யத்திலே ஈடுபட்டவராக இருப்பார்; இரவு பாலமுது செய்தபிறகு பள்ளிக்கட்டிலிலே ஏறியருளியபின், வடுகநம்பியைச் 'சந்தை[19] சொல்லவாராயோ?' என்று அழைப்பாராம். முதல் சந்தை சொல்லிக் கொடுக்கும் போதே பாசுரத்தில் மிகவும் ஈடுபட்டுப் புளகாங்கிதம் கொள்வார். இரண்டாவது முறை சொல்லும்போது நெஞ்சு உடை குலைப்பட்டுச் சிதிலராக ஆகிவிடுவார். ஏதேனும் பாசுரத்தின் பொருளை நினைத்து ஈடுபட்டுவிட்டாரானால் பல மேலாடைகள் கொண்டு துடைக்குமளவுக்கு எம்பெருமானாருக்குக் கண்ணீர் வெள்ளம் பெருகுமாம்.

திருவிருத்தம் (99) பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்தில் காணப்படும் குறிப்பு இது.

இங்ஙனம் ஈடுபட்டதனாலேயே திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்குப் புதிய முறையில் அவர் பொருள் விளக்கம் செய்ததைக் காண முடிகின்றது. சில பாசுரங்களுக்கு அவர் கூறிய நுட்பமான பொருளாட்சிகள், நிர்வாகம் என்னும் பெயரில் உரைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

'துயர்அறுசுடர்-அடி' என்னும் திருவாய்மொழித் தொடருக்கு முன்னோர்கள் சொன்ன 'அடியவர்களின் துயர் அறுக்கும் சுடர்அடி' என்ற பொருளுடன் நிறைவடையாமல், 'துயர்அறும்சுடர்அடி' என்று பொருள் கொண்டார். அதாவது 'அடியவர்கள் துயர்தீரத் துன்துயரம் தீரும் திருவடி' என்பது இவர் கொண்ட பொருளாகும்.

---

19. சந்தை சொல்லுதல் : வேதம் பயிற்றுவித்தல் போலத் திவ்வியப்பிரபந்தமும் அந்நாளில் பயிற்றுவிக்கப்பட்டது. சந்தை சொல்லுகை என்பது, ஆசிரியர் பாசுர அடிகளை ஒருமுறை சொல்ல மாணாக்கர் அவற்றை மும்மூன்றுமுறை திருப்பிச் சொல்லுதல்.

'அடியவர் துயரமே அவன் துயரமுமாகும் என்று சொல்லும்படி' ஆண்டவனின் ஒப்பற்ற அருளின் திறத்தைத் திருவாய்மொழியின் துணைகொண்டு நிறுவிக்காட்டினார் அவர்.

இயலாகவும் இசையாகவும் சேவிக்கப்படும் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்கு நாடகத்தன்மையுடன் அபிநயித்துப் பொருள் கூறுவதும் உண்டு. இதனை 'அரையர்சேவை' என்பர்.

அரையர் அபிநயம் பிடித்தப் பொருள் உணர்த்திய காலத்தில் அவற்றை நோக்கி மகிழ்ந்த இராமாநுசர், ஓர் இயக்குநருக்குரிய திறத்தோடு திருத்தங்கள் கூறியதையும் உரைகளிற் காண முடிகின்றது.

''அன்னை என்செய்யில்என்? ஊர்என் சொல்லில்என்? தோழிமீர்!
என்னை இனிஉமக்கு ஆசையில்லை அகப்பட்டேன்
முன்னை யமரர் முதல்வன் வண்துவராபதி
மன்னன் மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே''

என்னும் திருவாய்மொழியில் (5-3-6) நாயகிபாவத்தில் பாடும் ஆழ்வார், வாசுதேவனுடைய வலையில் தாம் அகப்பட்டதாகக் கூறுகிறார்.

இப்பாசுரத்திற்கு அபிநயம் பிடிக்கின்றபோது ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையர், 'வலை' என்பதற்கு மீன்பிடிக்கும் வலை போன்று தம் கைகளால் அபிநயம் பிடித்துக் காட்டினார். இதைக் கண்ட எம்பெருமானார், இறைவன் தன் திருக்கண் நோக்கினால் ஆழ்வாரை வசப்படுத்தியமையால், இங்கு ஆழ்வார் தம்மை அகப்படுத்திய வலையாகக் குறிப்பிடுவது எம்பெருமானுடைய திருக்கண்களையே என்பதைத் தெரிவிக்கும் வகையில் 'வலை' என்று திருக்கண்களைக் காட்டியருளினார். அதாவது, இறைவன் திருக்கண்களையே வலையாகக் காட்டி அபிநயிக்க வேண்டும் என்று அரையருக்கு உணர்த்தினார்.

இவ்வாறே, ''நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன'' (எம்பெருமான் நின்றபடியும், இருந்தபடியும், கிடந்தபடியும் நினைப்பதற்கு அரியனவாகும்) என்னும் ஆழ்வார் பாசுரத்திற்குப் பலவிதமான விளக்கங்களைக் கூறிய உரையாசிரியர், இராமாநுசரின் 'நிர்வாகம்' (பொருளாட்சி) ஒன்றையும் எடுத்துக்காட்டுகிறார்.

இது முன்னர்க்காட்டியது போல அரையர்சேவையின் போது நிகழ்ந்ததாகும்.

ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையர் ஒருமுறை 'நின்றவாறும் இருந்தவாறும்' என்னும் இப்பாசுரத்தைப் பாடியபோது, ''இவையெல்லாம் கண்ணபிரான் தொட்டிலிலே செய்தவை'' என்று எம்பெருமானார் அருளிச்செய்தாராம். அதாவது சிறுகுழந்தையான கண்ணன் தொட்டிலில் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு நின்றது; குழந்தையாகையால் தரித்து நிற்க முடியாமல் தொட்டிலிலேயே அமர்ந்துவிட்டது; அதுவும் முடியாமல் தொட்டிலிலேயே சாய்ந்து சயனித்தது ஆகியவற்றையே இங்கு 'நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும்' என்று ஆழ்வார் அருளிச்செய்ததாக அவர் விளக்கம் அளித்தாராம். 'பிறந்தவாறும்' என்னும் திருவாய்மொழி முழுவதுமே ஆழ்வாரின் கிருஷ்ணாவதார அனுபவமாகையாலே, வேறுவகையாக அன்றி இப்பாசுரத்தையும் கிருஷ்ணாவதார அனுபவமாகக் கொள்ளுதலே பொருத்தம் என்பது அவர் கருத்தாகும்.

இவையேயன்றி ஆழ்வார் பாசுரங்களின் பொருளை விளக்குதற்கு இறையனார் களவியல் போன்ற தமிழ் நூல்களிலிருந்து அவர் மேற்கோள் காட்டியிருப்பதும் அவரின் தமிழ்ப்புலமைக்குச் சான்றாகின்றது.

''மாறில்போர் அரக்கன் மதிள்நீறுஎழச் செற்றுகந்த
ஏறுசேவகனார்க்கு என்னையும் உளன் என்மின்களே''

என்பது நம்மாழ்வார், நாயகிநிலையில் பாடிய பாசுரப் பகுதியாகும்.

எம்பெருமானிடத்தில் பறவைகளைத் தூது அனுப்புகிற பராங்குசநாயகி, 'தலைவனிடத்திலே நான் ஒருத்தி உயிருடன் இருக்கிறேன் என்பதைக் கூறுங்கள்' என்கிறாள்.=

'தன்னைப் பிரிந்தவர்கள் எவரும் உயிருடன் தரித்திருக்க மாட்டார்கள் என்று கருதியே எம்பெருமான் மீண்டும் வரவில்லை. இந்நிலையில் நான் ஒருத்தி உயிருடன் இருப்பதை அவனுக்கு நினைவூட்டுங்கள்' என்று பராங்குசநாயகி கூறுவதாக இதற்கு ஆளவந்தார் பொருள் கொண்டார்.

எம்பெருமானார் இதைக் கேட்டு, ''இப்பொருள் அழகியது தான். ஆயினும் உத்தமநாயகனும் நாயகியும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து வெவ்வேறு இடங்களில் இருந்தாலும் ஒருவர்

உயிரோடு இருந்தால் மற்றொருவரும் உயிருடனே இருப்பார்கள். ஒருவர் இறந்துவிட்டால் மற்றொருவர் அதை அறியாவிட்டாலும் அவர்களுடைய உயிர் தானாகவே பிரிந்துவிடும். இதைத் தமிழ்ப்புலவர்கள் 'இன்றியமையாமை' என்பர். எம்பெருமான் தான் உளனாகையால் நாயகியும் உளள் என்பதை அறிந்தே இருப்பான். அவன் 'வாலி, இராவணன் முதலிய பகைவர்களை அழித்துச் சுக்கிரீவன், வீடணன் முதலிய அடியவர்களுக்கு முடிசூட்டிச் செய்ய வேண்டிய செயல்களையெல்லாம் செய்துவிட்டோம். இனிச் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை என்று நினைத்திருக்கிறான்'. அவனிடம் சென்று, இன்னும் அவனால் காப்பாற்றப்பட வேண்டியவள் நான் ஒருத்தி இருக்கிறேன் என்பதைச் சொல்லுங்கள் என்கிறாள் பராங்குசநாயகி'' என்று பொருள் உரைத்தார்.

இங்ஙனம் அவர் நயம்பட உரைத்ததற்கு இறையனார் களவியல் உரை கூறும் 'ஒருவர் ஒருவரை இன்றியமையாமை' என்பது அவருக்குக் கை கொடுத்திருக்கிறது. இத்தகைய குறிப்புகள், தமிழ் இலக்கண நூல்களிலும் அவருக்கிருந்த பயிற்சியை எடுத்துக்காட்டுகின்றன.

இவ்வாறு திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்கு கற்றோர் வியக்கும் முறையிலும் ஏற்கும் வகையிலும் பொருள் கூறிய உடையவர், தாம் கூறும் பொருளையே சிறந்தது எனக் கருதியது இல்லை. மற்றவர் கூறும் பொருளை 'அழகியது' என மதித்துக் கொண்டாடியவர் அவர். தம்மைப் போலவே பிறருக்கிருந்த திவ்வியப்பிரபந்த ஈடுபாட்டையும் மதித்துப் போற்றிய பெருந்தன்மை அவருக்கே உரியது.

ஒருமுறை ஆழ்வானிடம் திருவாய்மொழி காலட்சேபம் கேட்டுத் திரும்பிய கிடாம்பியாச்சானைப் பார்த்து, 'இன்று ஆழ்வான் கூறியது என்ன? நீ கேட்டது என்ன?' என்று வினவினாராம் எம்பெருமானார். அதற்கு ஆச்சான், 'ஒரு வார்த்தையும் சொல்லவில்லை'. இன்று 'பிறந்தவாறும்' என்கிற திருவாய்மொழியை (5-10) விளக்கத் தொடங்கிய ஆழ்வான், முதலில் ஒருமுறை பாசுரத்தை அனுசந்தித்தார். உடனே அதன் பொருள் நெஞ்சிலே ஓடி, உள்ளம் உருகி ஆழ்வாருடைய ஈடுபாட்டை நினைத்துக் கொண்டு நெடுநேரம் கண்ணீர் பெருக்கினார். 'இல்வாழ்வாரும் ஒருவரே! இவருக்கு இருக்கின்ற ஈடுபாட்டை, ஈடுபாடில்லாத நாம் விளக்குவது எப்படி?' என்று கூறி,

இன்றைக்கு என்னால் சொல்ல முடியாது. விட்டுவிடுங்கள்' என்று முடித்துவிட்டார் என்றார் கிடாம்பியாச்சான். இதைக் கேட்ட எம்பெருமானார், 'ஆழ்வானுடைய ஈடுபாடுதான் என்னே!' என்று அருளிச்செய்தாராம்.

இவ்வாறு ஆழ்வார் பாசுரங்களுக்குச் செவிலித்தாயாகி அவற்றைப் பேணி வளர்த்துக் காத்த போதிலும் பிரம்மசூத்திரத்துக்கு விரிவுரை செய்தது போல, திவ்வியப்பிரபந்தங்களுக்கு அவர் உரை செய்யவில்லை. அத்தகையதொரு வேண்டுகோள் அவர்முன் வைக்கப்பட்ட போது, தாம் உரையெழுதாமைக்கான காரணத்தைப் பின்வருமாறு விளக்கினார்.

''அவரவர் அறிவுத் திறனுக்கும் பக்திச் சிறப்புக்கும் ஏற்பப் பொருள் சுரப்பன ஆழ்வார் பாசுரங்கள். அவைகளுக்கு நான் உரையிட்டால் வரம்பிட்டது போல் ஆய்விடும். சில மந்தமதிகளுக்கு இவ்வளவே பொருள் என்று தோன்றும்'' எத்தகைய தொலைநோக்குப் பார்வை இது!

இதனால் பிறர் உரை செய்வதற்கு அவர் தடையாக நிற்கவில்லை என்பது விளங்கும்; மேலும் புதிய உரைகள் தோன்றுவதை அவர் ஊக்குவித்தார் என்பதும் புலப்படும்.

'ஆழ்வான் இன்று திருவாய்மொழிக்குக் கூறிய பொருள் என்ன?' என்று தெரிந்து கொள்வதில் காட்டிய ஆர்வமும், தாம் நுண்பொருள் கண்ட போதிலும் அதே தொடருக்கு முன்னையோர் கொண்ட பொருளும் சிறந்ததே என்று கொண்டாடிய பாங்கும் அவரின் குணச்சிறப்பைப் புலப்படுத்தும். திருவரங்கத்தமுதனார் அவரைக் 'குணந்திகழ்கொண்டல்' எனக் கொண்டாடியது எத்துணைப் பொருத்தம்!

உடையவர் காலம்வரை திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்கான விளக்கங்கள் அடியவர் கூட்டத்தில் சொல்லி அனுபவிக்கப்படும் நிலையிலேயே அமைந்தன. அவை ஏடுபடுத்தப்படவில்லை. அந்நிலையில் தம் சீடரான திருக்குருகைப்பிரான்பிள்ளான் என்பவரைத் திருவாய்மொழிக்கு உரையெழுதுமாறு பணித்தார் இராமாநுசர். அதன் பயனாய் அவதரித்ததே ஆறாயிரப்படி என்னும் உரை விளக்கம். அதன்பின்னர் நஞ்சீயரின் ஒன்பதினாயிரப்படியும், பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படியும், அழகியமணவாளச்சீயரின் பன்னீராயிரப்படியும் எழுந்தன.

இவ்வைந்து உரைகளும் நாலாயிரத்தின் ஒரு பகுதியான திருவாய்மொழிக்கு மட்டுமே அமைந்தவை. இவையாவும் பகவத்விஷயம் என்னும் பெயரில் எழுத்தெண்ணிக் காக்கப்படும் ஞானச்செல்வங்களாகத் திகழ்கின்றன. திருவாய்மொழியைக் காலமுழுதும் கட்டிக்காக்கும் அரண்களாகவும் திகழ்கின்றன.

இங்ஙனம் இராமாநுசர் காட்டிய வழியில் மற்றுமுள்ள மூவாயிரத்துக்கும் (முதலாயிரம், திருமொழி, இயற்பா) பின்னர் உரைநூல்கள் தோன்றலாயின. நாம் மேலே குறித்த உரையாசிரியர்களோடு, 'தெள்ளார் வடக்குத்திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி, அழகியமணவாளப்பெருமாள் நாயனார், ஆய் என்ற ஐநந்யாசார்யர், மணவாளமாமுனிகள், போன்ற உரையாசிரியர்களும் தோன்றித் திவ்வியப்பிரபந்தங்களைக் காத்த குணவாளர்களாய்த் திகழ்கிறார்கள்.

இத்தனைக்கும் ஆதிமூலமாய் அமைந்தவர் இராமாநுசர் அல்லரோ?

எனவேதான் நாம் முன்னர்க்குறித்தது போல,

''வான்திகழும் சோலைமதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்றதமிழ்மறைகள் ஆயிரமும் - ஈன்ற
முதல்தாய் சடகோபன்; மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமா நுசன்''

என்று வைணவ உலகம் வாயாரப் பாடி மகிழ்கின்றது.

## செந்தமிழ்பாடுவார் வீதி

வைணவத் திருக்கோயில்களில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களான பிரபந்தங்களை இசையுடன் பாடி அபிநயித்து அவற்றின் வியாக்கியானங்களை அழகுறப் பேசி நடிக்கும் முத்தமிழ்க்கலை ஒன்று நாதமுனிகள் காலம் தொடங்கி நடைபெற்று வருகின்றது. 'அரையர்சேவை' என்பது அக்கலையின் பெயராகும். அரையர்[20] இறைவனுக்குச் செய்யும் தொண்டு என்பது இதன் பொருள். இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழ் மரபின் தொடர்ச்சியாக இதைக் கருதலாம். எளிய மக்களும். உணருமாறு ஆழ்வார் பாசுரங்களைப் பண்ணும் கூத்துமாக வெளியிடுவதே இக்கலையின் நோக்கமாகும். அந்நாளில் வைணவத் திருக்கோயில்களில் 'அரையர்சேவை'

20. அரையர் : ஆழ்வார்களின் பிரதிநிதிகளாய் இருந்து இறைவன் முன் பாசுரங்களைச் சொல்லும் உரிமை பெற்றவர்கள்; இவர்கள் 'பாசுரங்களுக்கு அரசன்' எனும் பொருளில் 'அரையர்' எனப்பெயர் பெற்றனர். ஆழ்வார் பாசுரங்களைச் சொல்லுதலால் - அறைதலால் - இவர்களை 'அறையர்' எனக் குறிப்பதும் உண்டு.

நடைபெற்று வந்ததற்கான சான்றுகளை 'ஈடு' முதலிய உரை நூல்களிற் காணலாம். இராமாநுசரும் ஒரு பார்வையாளராக இருந்து இக்கலையினை ஆதரித்தும் அபிமானித்தும் இதன் வளர்ச்சிக்கு உதவியதை முன்பே குறித்தோம்.

இவ்வருங்கலையைத் தொடர்ந்து காத்த பெருமை உடையவருக்கே உரியது. தம் காலத்தில் திருவரங்கத்தில் அரையர்களுக்கான மனையிடங்களை ஒதுக்கி இல்லங்களை அமைத்து - அவ்வீதிக்குச் 'செந்தமிழ்பாடுவார் வீதி' என்று இராமாநுசர் பெயரிட்டதாக அறிகிறோம்.

முதற்குலோத்துங்கன் முதலான அரசர்கள் காலத்திலும் இவ்-அரையர் சேவைக்கான அறக்கொடைகள் அளிக்கப்பட்டு வந்தன. ஆயினும் அத்தகைய ஆதரவுகள் இடையறவுப்பட்டதால் இன்று கோயில்களில் அரையர் நிகழ்ச்சி நடைபெறுவது அருகிவிட்டது. திருவரங்கம், திருவில்லிபுத்தூர், ஆழ்வார்திருநகரி ஆகிய மூன்று ஊர்களில் மட்டுமே அரையர்சேவை நிகழ்ந்து வருகின்றது. இவ்வூர்களிலும் ஒன்றிரண்டு அரையர் குடும்பங்களே இன்று உள்ளன. உடையவர் போன்ற 'தமிழ்க்காப்பாளர்கள்' இன்றைக்கு இல்லை என்பதைச் சொல்லாமற் சொல்லும் அவல நிலை இது.

## எம்பெருமானாரின் கவித்திறம்



நாயகி அலங்காரத்தில் இராமாநுசர்

தமிழில் நூல் எதுவும் செய்யாத இராமாநுசர் ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்குப் பாடிய தனியன்கள் சில அவரின் கவித்திறத்தையும் கலை வாழ்வையும் எடுத்துக் காட்டுகின்றன. பெருமாள் திருமொழி, பெரியதிருமொழி, பெரியதிருவந்தாதி ஆகிய மூன்று பிரபந்தங்களுக்கும் அவர் பாடிய மூன்று வெண்பாக்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவை. ஒரு சோற்றுப்பதமாகக் குலசேகராழ்வாரின் பெருமாள்திருமொழிக்குப் பாடிய தனியனின் சிறப்பை மட்டும் இங்கு எடுத்துக் காட்டுவோம்.

''இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே!
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்-பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் எங்கள்
குலசேக ரன்என்றே கூறு''

என்பது பாடல்.

'இராமாநுச நாயகி'யின் பேச்சு இது.

தலைவி கிளியை நோக்கிப் பேசுகிறாள். இன்னடிசிலோடு பாலமுது ஊட்டி வளர்த்த கோலக்கிளி அது. அக்கிளிக்குத் தலைவனாகிய குலசேகரன் பெயரைக் கற்பித்துக் கிளியின் வாயால் அப்பெயரைக் கேட்க விரும்பும் தலைவியின் பேச்சான இது பாடப்பட்டுள்ளது.

பிரேமை பெருகிய நிலையில் இறைவன் திறத்துப் பெண்ணாக மாறிப் பேசுவது ஆழ்வார்களின் இயல்பு. அதே நிலைதான் இங்கும். ஆனால் இறைவனுக்குப் பதிலாக இறைவனைப் பாடிய ஆழ்வாரின்மீது காதல் பொங்குகிறது இராமாநுசருக்கு. தான் வளர்த்த கிளியிடம் நாயகனான, 'குலசேகரன்' என்னும் பெயரைக் கூறுமாறு கொஞ்சுகிறாள் நாயகி. அவளின் கொஞ்சலுக்கு இரங்கிக் கிளியும் 'குலசேகரன்' என்னும் காதலன் பெயரைக் காதலி கேட்டு நெஞ்சம் குழையுமாறு பலமுறையும் கூறி மகிழ்விக்கின்றது. அந்நிலையில்,

''வளர்த்ததனால் பயன்பெற்றேன் 'வருக' என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே''

என்று பரகால நாயகியைப் போல 'இராமாநுசநாயகி'யும் பரவசம் அடைந்திருப்பாள்.

இத்தகைய எண்ணங்களுக்கு இடமளிக்கும் வகையில் ஒரு கலைச் சுரங்கமாகத் திகழ்கிறது இந்தக் கவிதை.

ஆழ்வார்கள் காட்டிய வழியில் பழைய அகப்பொருள் மரபைத் தழுவி, இராமாநுசர் பாடிய இந்தக் 'காதல் கவிதை' சங்கப்பாடல் ஒன்றையும் நினைவூட்டுகின்றது. 'செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி' - கிளியை நோக்கித் தலைவி பேசுகின்றாள் :

''கிளியே! பிரிந்து சென்ற நம் தலைவரைப் பற்றி ஒன்று நீ உரைக்கமாட்டாயா? அதுவும் அவர் 'இன்றே வருவார்' என்னும் வார்த்தையாக இருக்கக் கூடாதா?'' என்று வீட்டில் உள்ளார் அறியாவண்ணம் தான் பேசப் பழக்கிய கிளியைப் பார்த்து நாணத்துடன் மொழிந்தாளாம். அகநானூறு (34) காட்டும் அன்புச்சித்திரம் இது.

ஆக, முன்னை அகத்தமிழ் மரபின் தொடர்ச்சியையே இந்த நேரிசை வெண்பா நமக்கு அடையாளம் காட்டுகிறது.

உணர்ச்சித்தெறிப்பே சிறந்த கவிதையாவதுண்டு. உடையவரும் அத்தகைய கவிதையனுபவம் உடையவர் என்பதற்கு மேலும் ஒரு சான்று காட்டலாம். திருவழுதி நாட்டின் பொருநையாற்றங்கரையில் உள்ள நம்மாழ்வாரின் பிறப்பிடமான திருக்குருகூரை அடைந்ததுமே,

''இதுவோ திருநகரி, ஈதோ பொருநல்,
இதுவோ பரமபதத்து எல்லை - இதுவோதான்
வேதம் பகர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன் ஊர்''

என்று உணர்ச்சியின் எல்லையிலே நின்று உருகுகின்றார்.

இன்றும் கூடப் படிப்பவர் நெஞ்சத்தில் அன்றைக்கு எம்பெருமானார் உள்ளத்தில் பிறந்த அதே பரவசத்தை - உணர்ச்சி பாவத்தை எழுப்புகிற பாட்டல்லவா இது!

இங்குப் பிறிதொரு கருத்தையும் நாம் எண்ணிப் பார்க்கலாம். தமிழ் யாப்பில் இலக்கணக் கட்டுப்பாடுகள் அதிகம் கொண்டது வெண்பா என்னும் பா வகையாகும். தளைதட்டாமல் வெண்பா இயற்றுவது அரிது. எனவேதான் 'புலவர்க்கு வெண்பா புலி' என்ற கூற்றும் எழுந்தது. அந்த வெண்பா யாப்பிலேயே இராமாநுசர் - தம் பாடல்களை அமைத்திருப்பதும் அவை இலக்கணத்தால் மட்டுமன்றி இலக்கியச் சிறப்பாலும் கற்றாரைப் பிணிக்கும் கலைநயத்தோடு திகழ்வதும் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

இராமாநுசர் காலத்தில் வாழ்ந்த கவிவாணர்கள் அவருடைய இந்தக் கவித்திறத்தில் மனம் பறிகொடுத்திருக்கக் கூடும். இதனைக் குறிப்பாக உணர்த்துவது போல இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரம் ஒன்று அமைந்துள்ளது. 'சொல்லும் பொருளும் பொருந்தத்தொடுக்கும் கவிவாணர்கள் அவரிடத்தே அன்பு கொண்டு மயங்கி வாழ்த்தினார்களாம்'. இதனை,

''இயலும் பொருளும் இசையத்தொடுத்து ஈன்கவிகள் அன்பால்
மயல்கொண்டு வாழ்த்தும் இராமாநுசன்''

என்று குறிக்கிறது அப்பாசுரம்.

இராமாநுசர் வாழ்க்கையில் நிகழ்ந்த இத்தகைய நிகழ்ச்சிகளைக் கருதியே எம்பெருமானார் வாழ்வைக் கலைவாழ்வாகக் காண்கிறார் அறிஞர் தெ.பொ.மீ.

**'இராமாநுசர்' என்னும் திருப்பெயர்**

'ராம, அனுஜ, என்னும் இரு வடசொற்கள் இணைந்து தமிழ் மரபுக்கேற்ப இறுதியில் ஆண்பால் 'அன்' விகுதிபெற்று அமைந்த பெயரே 'ராமாநுஜன்' என்பது. தமிழில் மொழிக்கு முதலில் 'ர'கரம் வராது; ஆதலால் 'இ'கர உயிர் சேர்த்து 'இராமாநுசன்' எனக் குறித்தலே தமிழ் இலக்கணத்துக்குப் பொருந்துவதாகும். இராமாநுசர், இத்தமிழ் இலக்கண மரபைப் போற்றி 'இராமாநுசன்' என்றே கையெழுத்திட்டதாகக் கூறுகின்றனர். திருநாராயணபுரத்தில் உள்ள ஏடுகளில் இருந்து எடுக்கப்பெற்ற புகைப்பட நகல்கள் மூலம் இதனை நாம் உறுதி செய்து கொள்ள முடிகின்றது. இதனால் வடமொழியில் வல்லவராக விளங்கிய இராமாநுசர் தமிழ் மரபினை உணர்ந்து அதனைக் காப்பவராக விளங்கினார் என்று அறியலாம். ''வடசொற்களைத் தமிழில் வழங்கும் போது வடமொழி எழுத்துக்களை நீக்கித் தமிழ் எழுத்துக்களால் எழுத வேண்டும்'' எனத் தொல்காப்பியம் (884) குறிப்பிடுகின்றது. அக்குறிப்பின் படியே, ஆழ்வார்கள் வடசொற்களைக் கையாண்டிருப்பதை அருளிச்செயல் பாசுரங்களிற் காணலாம். ஆழ்வார்கள் காட்டிய நெறியிலேயே உடையவரின் தமிழ்ப்பணியும் அமைந்திருந்தது என்பதற்குத் தக்க எடுத்துக்காட்டாகும் இது.

இத்தகைய பின்னணியில் நோக்கும்போது அவரின் தமிழ்ப் பணிகள் முன்னைய மரபைத் தழுவிக் காப்பு, வளர்ச்சி ஆகிய இரு நிலைகளில் அமைந்தன எனத் தெளியலாம்.

இங்கு நாம் இறுதியாக விளக்கிய தமிழ்ப்பணி உட்படச் சமய, தத்துவ உலகில் இராமாநுசர் செய்த அரும் பணிகள் பலவாகும்.

மனிதர்களைக் கடைத்தேற்றவும் கரையேற்றவும் பிறந்த 'உத்தாரகர்' என்று வைணவ நூல்கள் அவரைக் கொண்டாடுகின்றன.

இதுவரை நாம் விவரித்த நிகழ்ச்சிகளின் மூலமே அவரின் பணிகள் சமுதாயத்தின் அடித்தட்டு மக்களையும் மேம்படுத்தும் பணிகளாக - பாரினை உயர்த்தும் பணிகளாக அமைந்தவை என்று அறிந்துகொள்ளலாம்.

சமய உலகின் அந்தகாரத்தை நீக்குவதற்குப் 'பொங்கிவரும் புதுநிலவு' போன்றது இராமாநுசரின் வரவு.

பசித்துப் பல நாள் பட்டினி கிடந்தவனுக்கு 'அமிழ்தம் அகப்பட்டது' போன்றது சமுதாயத்துக்கு அவர் ஆற்றிய பணி.

இராமாநுசரின் வரவும் கொடையும் பற்றிய இம்மதிப்பீடு மெய்யானதே என்பதை அவரது மானுடம் தழுவிய பணிகளை நோக்குவார் எவரும் எளிதில் உணர்ந்துகொள்ளலாம். ஜ

# 4. வாழ்நெறி காட்டிய வாக்கு

உலகை வாழ்விக்கப் பிறந்த சான்றோர்களுக்கு அமர வாழ்வு தருவன அவர்தம் சொற்களே ஆகும். அவர்களின் பூதவுடம்பு அழிந்தபோதும் அவர்களைப் பொன்றாப்புகழுக்கு உரியவர்களாக்கும் ஆற்றல் சொற்களுக்கே உண்டு. செயல்களுக்குச் சிறகு தருவன சொற்களே.

சான்றோர்களும் தத்துவஞானிகளும் சிந்தனையாளர்களும் உலகுக்கு வாழ்நெறி காட்டும் வாக்கினை வழங்கிச் சென்றிருக்கிறார்கள். அந்த வாக்கே உலகை வாழ்விக்கின்றது; இடையறாது இயக்குகின்றது. அவர்கள் தம் சிந்தனைகளை நூல்களாக வடிக்காமலும், சீடர்கள் வழி உலகுக்கு வழங்காமலும் போயிருந்தால் வையகம் வாழ்ந்திருக்குமா? மானுடம் மேம்பட்டிருக்குமா? இந்த வள்ளன்மையைக் கருதியே, 'வண்சடகோபன்' என்றும், 'கம்பநாடுடைய வள்ளல்' என்றும் கொண்டாடும் மரபு நம்மிடையே தோன்றியது.

அந்த மரபின், தொடர்ச்சியாகவே இராமாநுசரின் 'வள்ளல்தனத்தை'க் கொண்டாடுகின்றார் திருவரங்கத்தமுதனார். நூற்றெட்டுப் பாசுரங்கள் கொண்ட இராமாநுச நூற்றந்தாதியில் 'செறுகலியால் வருந்திய ஞாலத்தை எடுத்து அளித்த' அவரின் வன்மையினைப் பன்னிரண்டு இடங்களில் சிறப்பித்துப் பேசுகிறார் அவர். இவ்வண்மை மூன்று பாடல்களில் (71, 72, 73) தொடர்ச்சியாக நினைக்கப்படுவதையும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும்.

''வண்மையி னாலும்தன் மாதக வாலும் மதிபுரையும்
தண்மையி னாலும்இத் தாரணியோர்கட்குத்தான் சரணாய்
உண்மைநன் ஞானம் உரைத்த இராமாநுசர்...'' (73)

என்பது அவற்றுள் ஒரு பாடல். இங்குப் பொருளின் சீர்மையையோ, பெறுவோரின் தகுதியையோ பாராது வன்மையே

காரணமாக - உலகுக்கு அவர் செய்த உபதேசத்தை - உண்மைநல் - ஞானத்தைப் பற்றிப் பேசுகின்றார் அவர்.

நம் வசதிக்காக - இராமாநுசர் உலகுக்கு உரைத்த வாக்கினை இருவகையாகப் பகுத்துக் காணலாம்.

தத்துவ ஞானத்தின் எல்லைகண்டு, மெய்யுணர்வில் என்றும் குன்றாதவராய், 'மெய்ம்மதிக்கடலாய்' விளங்கியவர் இராமாநுசர். அதன் பயனாய் அறிவுலகுக்கு - பிற சமயத்தவர் உள்ளிட்ட - சமய தத்துவ ஞானியர்களுக்கு - தம் நூல்களின் வழியாகவும், வாதங்களின் மூலமாகவும் தந்த விளக்கங்கள் ஒருவகை. சாதாரண மக்களுக்கும் பயன்படும் வகையில் அமைந்த உபதேசங்கள் பிறிதொரு வகை.

முதல் வகை சார்ந்த கருத்துகளைக் கற்றுத் துறைபோய அறிஞர்களே விளங்கிக் கொள்ள முடியும்; உணர்ந்து கொள்ள முடியும். குறிப்பாக அவர் இயற்றிய ஸ்ரீபாஷ்யத்தில் அத்வைதக் கொள்கையை மறுத்து விசிட்டாத்வைதத்தை நிலைநாட்டிய பாங்கு அறிஞர் உலகுக்கு விருந்தாய் அமையும்.

''உலகம் உண்மையானது; மாயை அல்ல. பகவான் ஸமஸ்த கல்யாண குணங்களின்[1] இருப்பிடம். அவனே பர, வியூஹ, விபவ, அர்ச்சை அந்தர்யாமி[2] ஆகிய ஐந்து நிலைகளிலும் உள்ளான்''.

''நித்தியமாயும் ஜீவ சமூகங்களைக் கடந்தவனாயும் பகவான் இருப்பான். கல்யாண குணங்களின் இருப்பிடமாக உள்ளவன் அவன். குற்றங்கள் எதுவுமே இல்லாத யாரையும் விடத் தனிப்பட்ட முழுமை உடையவன். நமக்காக அவன், தன் வாத்சல்ய, சௌசீல்ய, சௌலப்ய, ஆர்ஜவ[3] குணங்களால் நம்மை ஏற்றுத் திறம்பெறச் செய்கிறான்'' என்று இராமாநுசர் தம் சித்தாந்தக் கருத்துகளை வெளியிட்டுள்ளார்.

---

1. ஸமஸ்தகல்யாண குணங்கள் - எல்லா மங்களமான குணங்கள்.
2. பரம் - பரத்துவம் - பரமபதத்தில் இருக்கும் இருப்பு; விண்ணாட்டு நிலை.
   வியூஹம் - பாற்கடலிலே பள்ளி கொண்டிருப்பது; அணிவகுப்பு நிலை.
   விபவம் - இராமன், கண்ணன் முதலான அவதாரங்கள்; பிறப்பு நிலை.
   அந்தர்யாமி(த்துவம்) - அண்ட சராசரங்களிலும் ஆத்ம வர்க்கங்களிலும் எள்ளுக்குள் எண்ணெய் போல் உள்ளுறைந்து நிற்கும் நிலை.
   அர்ச்சை - அடியார்களின் இல்லங்களிலும் திருவரங்கம் முதலான திருப்பதிகளிலும் கோயில் கொண்டிருக்கும் வழிபடு நிலை.
3. வாத்சல்யம் - அடியார்களுடைய குற்றத்தைக் குணமாகக் கொள்ளும் பேரன்பு.
   சௌசீல்யம் - உயர்ந்தவன், தாழ்ந்தவனோடு ஒரு நீராகக் கலந்து பழகுதல்.
   சௌலப்யம் - அடைதற்கு எளியனாயிருத்தல்.
   ஆர்ஜவம் - செப்பமுடைமை; உள்ளம், உரை, செயல் மூன்றினாலும் ஒத்திருத்தல்.

''பிருஹ்மம்'' என்ற சொல்லை ஆராய்வோம். 'பிருஹத்' என்ற சொல்லினின்றும் பெறப்படுவது இது. 'பிருஹ்மம்' என்றால் நிறையுள்ள பரிபூரணமான குணங்களுடன் கூடிய அரும்பொருள் - என்று பொருள்''.

''பிருஹ்மத்தை நேராக உய்த்துணரும் அனுபவமே உபாசனை''.

''பிருஹ்மத்தை அறிவதைக் காட்டிலும் வேதவாக்கியங்களால் உணர முடியும்''.

''வேதவாக்கியங்கள் நினைவை உள்செலுத்தித் தியானம் செய்யச் சொல்கின்றன''.

''ஞானம், அது நிற்கும் அளவில் பொருளைத் தெளிவுறுத்திக் காட்டுகிறது''.

இத்தகைய இராமாநுசரின் வாக்குகள் அவர் தாம் கண்டுணர்ந்த மெய்யுணர்வை அறிவுலகுக்கு உணர்த்தும் வகையில் அமைந்தவை; நான்கு வேதங்களாகிய சுடரொளியின் துணை கொண்டு - நாராயணனே உயிரை உடையவன் - (அதாவது ஆத்மாவுக்கே உடையவனான ஆத்மாவாய் இருப்பவன்) என்னும் கருத்தை நிலைநாட்டி அத்வைத இருளை நீக்கியவை. எனவேதான்,

''கலியிருளே
மிடைதருகாலத்து இராமாநுசன்மிக்க நான்மறையின்
சுடரொளியால் அவ்விருளை''

அகற்றியதாகக் குறித்தார் அமுதனார்.

அவரின் வாய்மொழிகள் அறிவுலகுக்குப் பயன்பட்ட வகை இது.

இனிக் கல்லார்க்கும் கற்றார்க்கும் களிப்பருளும் வகையிலும் எல்லாரும் எளிதில் கடைப்பிடிக்கத் தக்க முறையிலும் அவர் கூறிய அமுத மொழிகள் பலவுண்டு. அவற்றுள் சிலவற்றை இங்குத் தொகுத்துக் காண்போம்.

''பிறர் துக்கம் கண்டு பொறுக்க முடியாதவனாக எவன் இருக்கிறானோ அவனே உண்மையான வைணவன்'' என்பது உடையவரின் முடிவான கொள்கை. இது, அவரால் உருவாக்கப்பட்டு, அவர்தம் சீடர் பரம்பரையால் போற்றி வளர்க்கப்பட்டதை நூல்கள் வழியாக அறியலாம்.

இராமாநுசருக்குப்பின் வைணவ சமயத் தலைவராக, அவராலேயே அறிவிக்கப்பட்டவர் பராசரபட்டர். பட்டரின் சீடராக விளங்கியவர் நஞ்சீயர். ஒருமுறை நஞ்சீயர், 'வைணவன் யாவன்?' என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் கூறினார்.

''ஒருவன் தனக்கு வைணவத் தன்மை 'உண்டு, இல்லை' என்பதைத் தானே அறிந்துகொள்ளலாம். பிறர் துன்பம் கண்டு 'ஐயோ!' என்று இரங்கினால், அவன், 'நமக்கு இறைவனோடு தொடர்புண்டு' என்று கருதுதல் பொருந்தும். 'இத்தனைத் துன்பமும் இவன் படவேண்டியவனே' என்று நினைப்பானாகில், 'நமக்கு அத்தகைய தொடர்பில்லை' என்னும் முடிவுக்கு அவனே வந்துவிடலாம்'' என்றார். இதனைப் பலமுறையும் பல்வேறு சந்தர்ப்பங்களில் அவர் கூறியதாக ஈட்டுரை குறிப்பிடுகிறது.

''பக்கத் திருப்பவர் துன்பம் தன்னைப்
பார்க்கப் பொறாதவன் புண்ணியமூர்த்தி''

என்று நம் காலத்துக் கவிஞரான பாரதியார் பாடியதைத்தான் இது நினைவூட்டுகின்றது. காந்தியடிகளுக்குப் பிடித்தமான 'வைஷ்ணவ ஜனதோ' என்னும் பாடலும் இக்கருத்துக் கொண்டதே ஆகும்.

இராமாநுசரின் எல்லையற்ற கருணையும் மனித நேயமுமே அவரின் சீடர் பரம்பரையிடத்திலும் வழிவழியாக இத்தகைய சிந்தனைகளை வளர்த்து வந்திருக்க வேண்டும்.

செய்யும் செயல்களில்தான் வாழ்க்கை இருக்கிறது என்பதை உணர்ந்து நடந்தவர் இராமாநுசர். எனவே சொல்லைச் சுருக்கிச் செயலைப் பெருக்கியவர் அவர். செயல்பாடுகளின் நுட்பங்கள் சிலருக்கு விளங்காத போது தேவையான விளக்கம் கொடுக்க அவர் தயங்கியதில்லை. 'தீண்டத்தகாதவர் உறங்காவில்லி' என்னும் அந்தணர்களின் கருத்தினை மாற்ற அவர் சொன்ன அமுதவாக்கு ஒன்று இங்கு எடுத்தக்காட்டத் தக்கது.

''இரும்பைப் பொன்னாக மாற்றுகின்ற வேதகப் பொன்னைப் போன்றவர் (ஸ்பர்சவேதி) பிள்ளை உறங்காவில்லிதாசர். உள்ளத்தால் தூயரான அவரின் ஸ்பரிசம் (தீண்டுதல்) சாதியபிமானம் என்னும் நமது குற்றத்தை நீக்கி நம்மைத் தூய்மை செய்யவல்லது'' என்றாராம். அவர் அவ்வாறு குறிப்பிட்டதாலே, அன்றுமுதலாகத் தாசருக்கு 'ராமாநுச ஸ்பர்சவேதி'' என்னும் சிறப்புப் பெயர் ஏற்பட்டதாம். உடையவரின் இந்தப் பொன்னான

4. இராமாநுசரின் இத்திருவாக்கு. 'ஆசார்யஹ்ருதயம்' எனும் நூலில் 'காய அன்ன ஸ்தலசுத்திபண்ணின விருத்தாசாரம்' என்ற சூத்திரமாக மலர்கிறது.

வாக்கினை ஆறாயிரப்படி குரபரம்பரையிலும் வார்த்தா மாலையிலும் (326) கண்டு மகிழலாம்.

"ஆசார்யனுடைய திருவடி சம்பந்தத்தால் அடியவர்கள் உய்வு பெறலாம்" என்பது வைணவக் கொள்கை. ஒருமுறை கூரத்தாழ்வான் இறைவனிடம், "அடியேனோடு சம்பந்தம் உடையவர்கள் எல்லாரும் பரமபதம் பெறவேண்டும்" என்று வேண்டிக் கொள்ள, இறைவனும் "தந்தோம்" என்றான். இதைக் கேட்ட உடையவர் தம் மேலாடையைக் கையில் பிடித்துக் கொண்டு உயர எறிந்து மகிழ்ச்சிக் கூத்தாடினாராம். அருகில் இருந்தவர்கள் வியப்படைந்து காரணம் கேட்க, "நமக்கு ஆழ்வானோடு சம்பந்தம் உண்டாகையாலே, நாமும் பரமபதம் பெறலாமே" என்றாராம். இதனால் ஆசார்ய சம்பந்தமட்டுமன்றிச் சீரிய நற்சீடனின் சம்பந்தமும் பரமபதமளிக்கவல்லது என்பதைத் தம் வாக்கின் மூலமாகவே உலகுக்கு உணர்த்தினார் அவர்.

தாம் உலக வாழ்வை விட்டு மறைவதற்கு முன்னர் - திருவரங்கத்து எம்பெருமானிடம் "என்னுடைய சம்பந்த சம்பந்திகள் எல்லாரும் நான் பெற்ற லோகம் பெற வேணும்" என்று பிரார்த்தித்துக் கொண்டார் இராமாநுசர். இங்ஙனம் அருள் நெஞ்சோடு வேண்டிக் கொண்ட திருவாக்கினை நெஞ்சிற்பதித்தே, அவர் சீடரான பிள்ளை உறங்காவில்லிதாசரும்,

"நன்றுந்திருவுடையோம் நானிலத்தில் எவ்வுயிர்க்கும்
ஒன்றுங் குறையில்லை ஓதினோம்; - குன்றம்
எடுத்தான் அடிசேர் இராமா நுசன்தாள்
பிடித்தார் பிடித்தாரைப் பெற்று"

என்று அருளிச்செய்தார்.

இராமாநுசர் மறைவதற்கு முன்னால் சீடர் திரளை நோக்கிக் கூறிய சில பொன்னுரைகள் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

"சரணாகதி நெறியில் நம்பிக்கை வைத்த வைணவன் (பிரபந்நன்) தன்னுடைய ஆத்ம யாத்திரை குறித்துக் கவலைப்பட வேண்டாம். அது, இறைவன் பொறுப்பு, கவலைப்பட்டால் அவன் ஆத்மசமர்ப்பணம் பொய்யாகிவிடும். தேகயாத்திரை குறித்தும் கவலைகொள்ளக்கூடாது. அது விதியின் விளைவு, கவலைப்பட்டால் அவன் நாத்திகனாகிவிடுவான். ஆக, இவ்விரண்டிலும் அவன் கவலை கொள்வதற்கு இடமே இல்லை" என்றார்.

மனிதன் கவலையின்றி வாழ்வதற்கு இராமாநுசர் காட்டிய நல்வழி இது.

அவர் மேலும் சொன்னார் :

''வைணவன் ஒருவனுக்குத் திருமால் அடியார்களே நண்பர்கள் (அநுகூலர்) ஆவர். அவர்களைக் காணும்போது சந்தனம், தாம்பூலம், நிலா, தென்றல் இவறறைக் கண்டாற் போல மகிழ்ச்சி கொள்ள வேண்டும்; நெருங்கி உறவாட வேண்டும். இறைவனை வெறுப்போர் பகைவர்கள் (பிரதிகூலர்) ஆவர். அவர்களைக் கண்டால் பாம்பையும் நெருப்பையும் பார்த்தாற்போல அஞ்சி ஒதுங்கி வாழ்தல் வேண்டும். இவ்விருவகையிலும் சேராத சம்சாரிகளைக் (அநுபயர்) கண்டால் கல்லையும் புல்லையும் கண்டாற்போல அலட்சியம் செய்து அவர்களிடம் பேசாமலும் அற்ப லாபத்துக்காக அவர்களை அணுகாமலும் இருக்க வேண்டும். அவர்கள் மனம் திருந்தி அநுகூலரானால் - அதற்காக மகிழ்ந்து அவர்களுக்கு ஆத்ம ஞானத்தை உபதேசிக்க வேண்டும். அப்படி அநுகூலராகாத நிலையில், 'ஐயோ' என்று இரங்கிக் கருணை செய்வதே இறையடியார் கடமையாகும்''.

உடையவரின் இத்தகைய அருள்மொழிகளைக் கேட்டுக் கொண்டிருந்த சீடர்கள், அவருடைய பிரிவையறிந்து மனம் கலங்கினர். 'உடையவர் மறைந்தால் நாமும் உயிர்துறப்போம்' என்னும் முடிவுக்கு வந்தனர். இதனையறிந்த இராமாநுசர், ''ஆளவந்தாரின் திருவடிகள் மேல் ஆணை! நம்முடைய பிரிவினாலே எவரேனும் உயிர்துறந்தால் என்னோடு சம்பந்தமற்றவர்கள் ஆவார்கள்'' என்றார். இவ்வாறு ஆணையிட்டுத் தடுத்து அவர்களை உயிர் வாழுமாறு காத்த அந்தக் கருணையுள்ளத்திலிருந்து மேலும் சில அமுதமொழிகள் உதிர்ந்தன.

''ஆசார்ய அபிமானமொழிய மோட்சத்திற்கு வேறு வழியில்லை'' என்றும், ''பாகவத அபசாரம் ஒழிய மோட்சத்திற்கு நிலையான வேறு தடையில்லை'' என்றும், ''கைங்கர்யம் தவிரப் பெறத்தக்க வேறு பேறு இல்லை'' என்றும் உறுதிபட மொழிந்தார்.

இதனால் ஆசிரியப் பற்றும், அடியாரிடத்து வெறுப்பு இன்மையும், கைங்கர்யமுமே வீடு பேற்றுக்கான வழிகள் என்பதை விளக்கியருளினார்.

உடையவர் மறைவதற்கு முன்பு எழுபத்துநான்கு வார்த்தைகள் அருளிச் செய்ததாக, 'பிரபந்நாம்ருதம்' என்னும் நூல் குறிப்பிடுகிறது. அதில் இறைவன் சந்நிதியிலும் ஆசார்யன்

முன்னிலையிலும் அடியார்களிடத்திலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கடைப்பிடிக்கத்தக்க ஒழுகலாறுகள் பல பேசப்படுகின்றன. பகவானைப் போலவே பாகவத சமுதாயத்தை(இறையடியார் கூட்டத்தை)ப் போற்றிப் பெருமைப்படுத்த வேண்டும் என்னும் கருத்தே இம்மொழிகளில் உயிர்நிலையாக அமைந்து கிடக்கிறது.

''விஷ்ணுபக்தர்களை ஆராதிப்பதைக் காட்டிலும் வேறொரு புருஷார்த்தம் (உறுதிப்பொருள்) கிடையாது'' என்றும், ''அவர்களை வெறுப்பதைக் காட்டிலும் ஆத்மநாசத்தை விளைக்கக்கூடியது வேறு ஒன்று இல்லை'' என்றும் எழுபத்துநாலாம் வார்த்தை கூறுகின்றது.

இதே கருத்தினை முதலாவது வார்த்தையிலும் காணலாம்.

''பகவத் கைங்கர்யத்திலும் பாகவத கைங்கர்யத்திலும் ஆசார்ய கைங்கர்யத்திலும் சமபுத்தி கொள்ள வேண்டும்'' என்பது முதலாவது வார்த்தையாகும்.

இதனால் ஏற்றத்தாழ்வு கருதாமல் வைணவர் அனைவருக்கும் பணிபுரிய வேண்டும். அந்தப் பணி குருவுக்குச் செய்யும் பணி போலவும் பகவானுக்குச் செய்யும் பணி போலவும் மதிக்கப்பட வேண்டும் என்னும் கருத்து இதில் புலப்படக் காணலாம்.

வைணவத்துக்கு அடிப்படையாகவுள்ள இச்'சமபுத்தி'க் கொள்கையைப் பேதைக்கும் சிறுபிள்ளைக்கும் புரியும்படி பலவகையாக மேலும் விளக்கிக் கூறினார் அவர்.

''இறையடியார்களை அவர்களின் சாதியைக் கருதி இகழ்தல் கூடாது; சரீரத்தைக் கருதியும் இகழ்ச்சி செய்யலாகாது. அதாவது 'பாம்பு' என்று திருவனந்தாழ்வானையும், 'பறவை' என்று பெரிய உடையாரையும் (ஜடாயு), கருடாழ்வாரையும், விலங்குகள் என்று கஜேந்திராழ்வான், அநுமன், சுக்ரீவன் போல்வாரையும், அரக்கர்கள் என்று பிரகலாதாழ்வான், விபீஷணாழ்வான் போன்றோரையும் இகழ்தல் கூடாது. ஆடவர், மகளிர் எனப் பால்வேறுபாடு காண்பதும் கூடாது. அடியாரிடத்தில் இளமை, முதுமை பற்றிய ஆராய்ச்சியும் விலக்கத்தக்கதே. மாணாக்கன் (பிரமசாரி), இல்லறத்தாள், துறவி என்று வேற்றுமை பாராட்டலும் தகாது. உடல் ஊனமுற்றோரை இகழாமல் அவர்களின் ஊனமே இனியது என்றும் ஞானமே சிறந்தது என்றும் கொண்டாட வேண்டும். திருவரங்கம், திருமலை முதலான திவ்விய தேசங்களில் வசிப்பவர்களை மதிப்பது போலவே, குப்பம், கிராமம் முதலியவற்றில் வாழும் வைணவர்களையும் மதித்து வணங்க

வேண்டும். அவர்களின் வாழ்விடத்தையே திவ்வியதேசமாகக் கருத வேண்டும். தம் உறவினர்களுள் ஒருவர் ஸ்ரீவைஷ்ணவராக இருந்தால், அவரை 'ஸ்வாமி' ஆகவே நினைக்க வேண்டும். உறவினராக நினைத்திருப்பது குற்றமாகும். எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளைச் சேர்ந்த ஆசார்யர்களையும், கௌரவிக்கத்தக்க சீயர் முதலானோரையும், ஏதாவது ஒரு மூலையில் வாழ்கிற ஸ்ரீவைஷ்ணவர்களையும் 'ரக்ஷகர்கள்' என்றே ஒக்க மதிக்க வேண்டும். வேற்றுமை பாராட்டக்கூடாது. எம்பெருமானுக்குத் தொண்டு செய்பவர்கள் அனைவரையும் உயர்வு தாழ்வின்றிச் சமமாகவே நினைக்க வேண்டும். இறையடியார்கள் எத்தொழிலைச் செய்தாலும் அத்தொழிலையிட்டு 'அவர்கள் இன்ன தொழில் செய்கிறார்கள்' என்று கூறுதல் கூடாது. 'இவர்கள் அறிவுக்குறைவுடையவர்கள்; விதிக்கப்பட்ட ஒழுக்க நெறிகளில் நில்லாதவர்கள்' என அடியார்களைக் குறித்து மனத்தால் நினைப்பதும் குற்றமாகும்''.

இப்படி இரர்மாநுசர் சீடர்களுக்குக் கூறிய அறிவுரையின் சாரமாகக் கொள்ளத்தக்க கருத்து யாது?

சாதி, உடலமைப்பு, பால், வயது, ஊனம், வாழ்விடம், பணிநிலை, வாழ்க்கை முறை போன்றவை பற்றி எந்தப் பேத உணர்ச்சியும் காட்டாமல் அவர்கள் 'வைணவர்கள்' என்ற காரணத்திற்காகவே அனைவரிடத்திலும் அன்போடும் மதிப்புடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பதே உடையவரின் கருத்தாகும்.

மேலோட்டமாகப் படிப்பவர்களுக்கு, 'இது இராமாநுசர் வைணவர்களுக்குப் போதித்த வாழ்க்கை நெறி, சமய ஒழுக்கம்' என்று தோன்றலாம். ஆனால் மனித நேயமிக்கவர்கள் 'எவ்வுயிரையும் தம்முயிராய்' எண்ணிப் போற்றுகிற ஆன்மநேய ஒருமைப்பாட்டினை இதில் கண்டு மகிழலாம்.

இவ்வளவும் கூறிய இராமாநுசர் நிறைவடையாமல், கடைசியாக அனைவராலும் கடைப்பிடிக்கத்தக்க சில அறிவுரைகளைச் சொல்லி முடித்துத் தம் உபதேசத்தை நிறைவு செய்கிறார் :

''ஸ்ரீபாஷ்யத்தைக் கற்று அதைப் பிறர்க்குக் கற்பிக்க வேண்டும். ஆழ்வார்களின் அருளிச்செயல்களைக் கறறு அதை மாணவர்களுக்கு ஓதுவிக்க வேண்டும். இவையிரண்டும் இயலாதபோது ஆழ்வார்கள் பாடிய திவ்விய தேசங்களுக்குச் சென்று அங்குள்ள எம்பெருமான்களுக்குத் தொண்டு புரிய வேண்டும். அல்லது திருநாராயணபுரத்தில் ஒரு குடிசை கட்டிக்

கொண்டு வாழ வேண்டும். அதுவும் முடியாவிட்டால் முழுச்சுமையையும் பரமனிடமோ ஆசார்யனிடமோ ஒப்படைத்துவிட்டு 'துவயம்' என்னும் மந்திரத்தை இருந்த இடத்திலிருந்தே பொருள் உணர்ந்து ஓதிக்கொண்டு இருக்க வேண்டும். இவற்றுள் எதையுமே செய்ய முடியாதவர்களுக்கும் ஒரு வழி உண்டு. அறிவும் ஒழுக்கமும் ஞானமும் அனுஷ்டானமும் உள்ள ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அன்பினைப் பெற்று அவனுடைய நிழலிலே ஒதுங்கி வாழ வேண்டும். இதுவே கடைசி உபாயம். இதைவிட்டால் வேறு வழியில்லை'' என்கிறார்.

இறுதியாகச் சொல்லி முடித்த இந்த உபதேச மொழிகள் 'இறங்குமுகமாக' அமைந்திருத்தல் காணலாம். உயரத்தை எட்ட முடியாதவனுக்கு ஒன்றிலிருந்து ஒன்றாக இறக்கிக் கொண்டு வந்து கடைசியில் அவன் கைக்கெட்டும் நிலையில் கடைப்பிடிக்கக் கூடிய எளிய வழியைக் காட்டுகிறார் இராமாநுசர். அவருக்கே உரிய தண்ணளியின் விளைவுதான் இது.

''நான் பட்ட பாடு இந்த நாடு படாது ஒழிய வேண்டும்'' என்பது உடையவரின் பொன்னுரைகளில் ஒன்று[5]. இதைப் படிக்கும் போது, 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் திருமூலரின் திருமந்திரத் தொடர் நினைவுக்கு வராமற்போகாது. இன்பத்தில் திளைக்கும் ஒருவர் 'யான் பெற்ற இன்பத்தைப் பிறரும் பெறுக' என்பதில் உள்ள பரோபகார உணர்வு பாராட்டுக்குரியதுதான். ஆனால் அதேசமயத்தில் இடும்பைக்கே கொள்கலமான ஒருவர் 'நான் பட்ட பாடு போதும்; மற்றவர்களுக்கு இத்தகைய பாடுகள் வேண்டாம். அவர்கள் துன்பம் நீங்கி இன்புறுவாராக' என்பது எத்தகைய கருணை உள்ளம்! இந்தக் கருணையின் விரிவே உடையவரின் பெருமை எல்லாம்.

ஆக, அவருடைய வாய்மொழிகளில் எதை நோக்கினும், எவ்விதமாக நோக்கினும் அது மானுடத்துக்கு வாழ்நெறி காட்டும் வாக்காகவே அமைந்திருத்தல் தெளிவு. எனவேதான்,

''இராமாநுசரின் திருவாணை வளரட்டும்; திக்கெல்லாம் பரவட்டும்; ஏனெனில் உலகின் நன்மையை அது நாடுகின்றது'' என்னும் பொருளமைந்த வடமொழிப் பாடல் நாள்தோறும் கோயில்களில் ஓதப்பட்டு வருகின்றது. இதனால் இராமாநுசர் நமக்குச் செய்த நன்மை அன்றாடம் நன்றியுடன் நினைக்கப்படுகின்றது.

---

5. நாயகி பேச்சாக அமைந்த திருவாய்மொழிப்பாசுர அடி ஒன்றுக்கு (9-5-10) விளக்கம் அளிக்கையில் உடையவர் கூறியது இது.

சான்றோர்களால் குறிப்பிட்ட இனத்தினரோ பிரிவினரோ மட்டும் பயன்பெறுவதில்லை. உலகம் முழுதும் பயன் அடைகின்றது. ஆதலின் இனம் மொழி முதலான வேற்றுமைகளைக் கருதாது உலகம் அவர்களைப் போற்றுகின்றது; மதிக்கின்றது. அத்தகைய சான்றோர்களுள் ஒருவர் இராமாநுசர்.

அவர் வைணவ சமயப் பெரியாராக மட்டுமன்றி, மன்பதை முழுமைக்குமே உரியவராக அறிவறிந்த மக்களால் கொண்டாடப்படுகிறார். மானுடத்தை மேம்படுத்த வந்த மகானாக அவர்களின் உள்ளத்துள் எல்லாம் உயர்ந்து நிற்கிறார்.

''உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்''

என்பது தமிழ் மறையன்றோ?

பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும்நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்து எடுத்தளித்த
அருந்தவன் எங்கள் இராமாநுசனை அடைபவர்க்கே.

- இராமாநுச நூற்றந்தாதி, 32.



இராமாநுசரின் கையெழுத்து

# இராமாநுசர் வாழ்க்கை - சில முக்கியமான காலக்குறிப்புகள்

| | |
|---|---|
| *கி.பி. 1017* | பிறப்பு (அவதாரம்) |
| *கி.பி. 1033* | திருமணம் (வயது 16)<br>இராமாநுசருக்குத் திருமணம் முடிந்த ஆண்டில் தந்தையார் மறையவே, இராமாநுசரின் குடும்பம் பிறப்பிடமான ஸ்ரீபெரும்பூதூரை விட்டுக் காஞ்சி புரத்திற்குக் குடிபெயர்ந்தது. ஆதலின் இராமாநுசர் தம் பதினேழாம் வயது முதல் காஞ்சிபுரத்தில் வாழத் தொடங்கினாா என்று கருதலாம். |
| *கி.பி. 1034* | காஞ்சிபுரவாசம்; யாதவப்பிரகாசரிடம் கல்வி. திருக்கச்சிநம்பி தொடர்பு. காஞ்சிப் பேரருளாளனுக்குத் திருமஞ்சன நீர் கொண்டுவருதல் போன்ற நிகழ்வுகள். |
| *கி.பி. 1042* | ஆளவந்தாரைத் தரிசிக்கப் பெரிய நம்பியுடன் காஞ்சியிலிருந்து திருவரங்கம் வருகை. ஆளவந்தார் மறைவு. அப்போது இராமாநுசருக்கு வயது 25. |
| *கி.பி. 1049* | இராமாநுசர் துறவு மேற்கொள்ளல். வயது 32. |
| *கி.பி. 1057* | துறவியான பின்னர் முதலியாண்டான், கூரேசன் முதலான சீடர்களுடன் எட்டு ஆண்டுகள் காஞ்சிப் பேரருளாளன் கோயிலில் வாசம் - அதன்பின்னர்த் திருவரங்கப் பெருமாள் அரையருடன் திருவரங்கம் வருகை, வயது 40.[1] |

1. 32 வயதில் துறவியானவுடனேயே திருவரங்கம் வந்து, ஆளவந்தாரையடுத்து ஆசார்ய பீடத்தில் அமர்ந்தார் என்றும் கூறுவர்.

| | |
|---|---|
| *கி.பி. 1057 - 1096* | திருவரங்கமே இருப்பாகக் கொண்டு சமயத் தொண்டு புரிதல். (சுமார் நாற்பது ஆண்டுகள்). |
| *கி.பி. 1096* | சோழன் ஒருவனால் திருவரங்கத்தை விட்டு வெளியேறி, மைசூர்ப் பகுதியை அடைதல். வயது 80. |
| *கி.பி. 1096* முதல் | திருநாராயணபுரத்தில் வாழ்தல். சுமார் இருபது ஆண்டுகள்.[2] *1118* வரை (*1098* திருநாராயணன் பிரதிட்டை, *1117* பஞ்ச நாராயணர்கள் பிரதிட்டை). |
| *கி.பி. 1118* | சோழன் மறைவுக்குப் பின்னர்த் திருவரங்கம் திரும்புதல். வயது 100. |
| *கி.பி. 1137* | மறைவு. (திருநாடு அலங்கரித்தல்). வயது 120. |

திருநாராயணபுரத்திலிருந்து திரும்பியபின் இராமாநுசர் திருவரங்கத்தில் வாழ்ந்த ஆண்டுகள் 20. அதற்கு முன்னர் 40 ஆண்டுகள். ஆக மொத்தம் 60 ஆண்டுகள்.

இதனைக் கருத்திற் கொண்டே இராமாநுசர் "அறுபது ஸம்வத்ஸரம் கோயிலிலே எழுந்தருளியிருந்தார்" என வைணவ நூல்கள் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

இக் காலக்குறிப்புகள் பொதுவாக அறிஞர்களால் ஏற்கப்பட்டவை.



2. இராமாநுசர் திருநாராயணபுரத்தில் வாழ்ந்தது பன்னிரண்டு ஆண்டுகள் மட்டுமே என்னும் கருத்தும் உண்டு.

# துணைநூற் பட்டியல்

## (1) திவ்வியப்பிரபந்தப் பதிப்புகள்

*நாலாயிர திவ்யப்பிரபந்தம், திருநாராயணபுரம் கோவிந்தராஜ ஐயங்கார் பதிப்பு, சென்னை, 1903.*

*.........., காரிமாறன் கலைக்காப்பகப் பதிப்பு, சென்னை, 2001.*

## (2) வைணவ சம்பிரதாய நூல்கள்

*அநந்தாசார்யர், ப்ரபந்நாம்ருதம் - முதல்பாகம், ஸ்ரீராமாநுஜ சரித்ரம், எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், (சுதர்சனர் பதிப்பு), திருச்சிராப்பள்ளி, 1983.*

*அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஆசார்ய ஹ்ருதயம் (மூலம் மட்டும்) சுதர்சனர் பதிப்பு, திருச்சிராப்பள்ளி, 1993.*

*கோயில் கந்தாடைநாயன், பெரிய திருமுடியடைவு, சுதர்சனர் பதிப்பு, திருச்சிராப்பள்ளி, 1975.*

*திருவரங்கத்தமுதனார், இராமாநுச நூற்றந்தாதி (பெரிய ஜீயர், பிள்ளைலோகாசார்ய ஜீயர் உரையுடன்), சென்னை, 1891. மறுபதிப்பு 'ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ', ஸ்ரீரங்கம், 1999.*

*நாயனாராச்சன்பிள்ளை, சரமோபாய நிர்ணயம், சுதர்சனர் பதிப்பு, திருச்சிராப்பள்ளி, 1975.*

*பிள்ளைலோகாசார்யர், ஸ்ரீவசனபூஷணம் (மூலம் மட்டும்), பி.ப. அண்ணங்கராசாரியர் பதிப்பு, சென்னை, 1976.*

*பிள்ளைலோகஞ்சீயர், ராமாநுஜார்ய திவ்ய சரிதை, கந்தாடை திருவேங்கடாசார்யர் 1886இல் பதிப்பித்ததன் மறுபதிப்பு, ஸ்ரீரங்கநாச்சியார் அச்சுக்கூடம், திருவரங்கம்.*

*பின்பழகிய பெருமாள்சீயர், ஆறாயிரம்படி குருபரம்பரை, சுதர்சனர் எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் பதிப்பு, திருச்சிராப்பள்ளி, 1975.*

*.........., வார்த்தாமாலை, சுதர்சனர் பதிப்பு, திருச்சிராப்பள்ளி, 1983.*

வடிவழகிய நம்பிதாசர், ஸ்ரீராமானுஜ வைபவம், வித்துவான் ஆர். கண்ணன்சுவாமி உரையுடன், சென்னை, *1988.*

ஆறாயிரப்படி பன்னீராயிரப்படி முதலிய குருபரபம்பராப்ரபாவம் - முதற்பாகம், திருமலை - நல்லான் சக்கரவர்த்தி கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி முதலிய நால்வர் பதிப்பு, சச்சிதானந்த அச்சியந்திர சாலை, சென்னை, *1909.*

திருமலை ஒழுகு, கோ. பாலசுந்தர நாயகர் பதிப்பு, திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு, திருப்பதி, *1953.*

கோயிலொழுகு, சுதர்சனர் பதிப்பு, திருச்சிராப்பள்ளி, *1976.*

### (3) இராமாநுசர் - வைணவம் தொடர்பான நூல்கள் மலர்கள்

அண்ணங்கராசார்யர், பி.ப., பூர்வாசார்ய வைபவம், க்ரந்தமாலா, காஞ்சிபுரம், *1970.*

ஆசார்யா, பி.ஸ்ரீ., ஸ்ரீராமாநுசர், பாரி நிலையம், சென்னை, *1973.*

கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (தொகுப்பாசிரியர்), ஆசார்ய வைபவ மஞ்சரி - முதல்பாகம், திருச்சிராப்பள்ளி, *1992.*

கிருஷ்ணமாசார்யர், அ., இராமாநுசருடன் ஒருநாள், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ வெளியீடு, ஸ்ரீரங்கம், 2003.

சாண்டில்யன், மதப்புரட்சி செய்த மகான் ஸ்ரீராமாநுஜர், வானதி பதிப்பகம், சென்னை, 2000.

சிற்பி பாலசுப்பிரமணியம், இராமாநுசர் வரலாறு, கோலம் வெளியீடு, பொள்ளாச்சி, *1999.*

சுப்ரமண்ய சிவம், ஸ்ரீ. ஸ்ரீராமாநுஜ விஜயம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை, *1924.*

பார்த்தசாரதி, இந்திரா., ராமாநுஜர் (நாடகம்), தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, *1997.*

பார்த்தசாரதி, ஆர்., இராமாநுஜர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி, *1969.*

ராமாநுஜாசாரியார், சே., குமாரவாடி, பகவத் ராமாநுஜர், திருமால் பதிப்பகம், சென்னை, *1997.*

வேங்கடகிருஷ்ணன், எம்.ஏ., வைணவ ஆசாரியர்களின் வாழ்வும் வாக்கும், (ஐதிஹ்ய நிர்வாஹ விளக்கம்), கீதாசார்யன், சென்னை, 2003.

Swami Ramakrishnananda, Life of Ramanuja, Sri Ramakrishna Math, Madras, 1959.

(4) மலர்கள்

ஸ்ரீராமாநுஜ விஜயம், எம்பெருமானாரின் 961-வது திருநக்ஷத்ரமான 16வது மணிவிழா மலர், திருவல்லிக்கேணி தென்னாசார்ய ஸம்ப்ரதாய சபை, சென்னை, 1978.

ஸ்ரீராமாநுஜர் வைபவப்ரகாசிகை, (ஸ்ரீரங்கநாராயண ஜீயர் சுவாமிகள் திக்குவிஜய சிறப்புமலர்), அ.வே. ரங்காசாரியார் பதிப்பு, ஸ்ரீரங்கம், 1995.

(5) தத்துவச் சிந்தனை தொடர்பானவை

கந்தசாமி, சோ.ந., இந்தியத் தத்துவக் களஞ்சியம் - தொகுதி 3, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2003.

லஷ்மணன், கி., இந்திய தத்துவ ஞானம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1997.

Varadachary, K.C., Sri Ramanuja's Theory of Knowledge - A Study, Tirumala Tirupati Devasthanams, Tirupati, 1980.

(6) கட்டுரை

அரங்கராசன், இரா., "விசிஷ்டாத்வைதம்", தத்துவ தரிசனங்கள் - எனும் (இ.எஸ்.டி., செ. ஞானன்) தொகுப்பு நூலில் உள்ள கட்டுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.



# வள்ளலார்

## பொருளடக்கம்


1. 'அவதரித்த' சூழல் - 1
2. வள்ளலார் வாழ்வும் வழியும் - 9
3. வள்ளலார் அருளிச்செயல்கள் - 61
4. வெற்றியா, தோல்வியா? - 82
5. வாழ்ந்த முறையும் வாழக் காட்டிய நெறியும் - 92
6. இருக்கின்றார், இருப்பார் - 104
7. முடிவாக ... - 115

பின்னிணைப்பு :

Vallalar and string theory - A speculative link – - 118

# வள்ளலார்

## 1. 'அவதரித்த' சூழல்

### முன்னுரை

உலக அரங்கிலே அண்மைக் காலத்தில் மிகுதியாக விற்பனையாகும் நூல்களில் ஒன்று - The Power of NOW - A Guide to Spiritual Enlightenment என்பது. தம் நூல் எவ்வாறு ஆர்வத்தோடு வாங்கப்படுகிறது என்பதை விளக்குவதற்காக மிக அண்மையில் வெளியான புதிய பதிப்பின் முன்னுரையில் அதன் ஆசிரியர் எக்ஹார்ட் டோல் ஒரு செய்தியைத் தெரிவிக்கிறார். உலகத்து நாடுகள் பலவற்றிலும் வரவேற்கப்படுவதைச் சுட்டும்போது, 'ஆன்மிக ஞானத் தேடலுக்குத் தாயகம் என்று பல்லோராலும் கருதப்படுகின்ற இந்தியாவில்கூட நல்ல விற்பனைப் பட்டியலில்' தம் நூல் இடம் பெற்றிருப்பதாகக் குறிப்பிடுகிறார். (It has been very well received and become a best seller even in India, a country considered by many to be the birthplace of humanity's quest for spiritual enlightenment).

ஆன்மிகத்தின் பிறப்பிடம் நம் பாரத நாடு என்பது எவ்வளவு உண்மையோ - அதே அளவு உண்மையானது - பாரத ஆன்மிகத்துக்குத் தாயகம் தென்னகம் - குறிப்பாகத் தமிழகம் என்பதுமாகும்.

அத்வைதம், விசிட்டாத்துவைதம் ஆகிய மாபெரும் தத்துவங்களின் மூலநாதர்களாகிய சங்கரரும் இராமானுசரும் தமிழர்கள். சைவ சித்தாந்தத்தின் மூல நாயகராகிய மெய்கண்டார்

தமிழர். துவைத தத்துவத்தின் மூல நாயகராகிய மத்வர், தமிழகத்தார் அல்லர்; என்றாலும், தமிழகம் சார்ந்த பகுதியினரே யாவார். பவுத்தமும் சமணமும் வைதிகத்துக்கு மாற்றாக உருவானவை; அவற்றின் மூலநாதர்கள் வடநாட்டவரே; ஆயினும், வடக்கில் நிலைக்க முடியாமல் தென்னகத்துக்கு வந்து சேர்ந்தன என்பது வரலாறு. (உலகியலுக்கு ஒத்துவராத அளவுக்கு நிலையாமையை மிகவும் வற்புறுத்தியது போன்ற காரணங்களால் தென்னகத்திலும் நிலைபெற முடியாமற் போனது வேறு செய்தி). சித்தர் மார்க்கமும் தமிழகத்தின் தனிக்கொடை என்று சொல்வது மிகையாகாது.

சமய அரங்கிலே பக்தியுணர்வுக்கு உரிய இடம், வேறு எந்த உணர்வுக்கும் கிடையாது. சமய அரங்கிலேயே கொடுமுடியான பக்திக்குத் தாயகம் தமிழ்நாடே. இதனை வடமொழியிலுள்ள பாகவதமே ஏற்றுப் பதிவு செய்துள்ளது. கடவுள் நம்பிக்கையுள்ள எவரும் பக்திக்குத் தரும் மதிப்பினைப் பிற அம்சங்களுக்குத் தரமாட்டார்கள். ஆகம வழிப்பட்ட ஆலய அமைப்புக்கும் நடைமுறைக்கும் திராவிடப் பண்பாடே உரிமையுடையது. இந்த உண்மையைச் சர்வபள்ளி இராதாகிருஷ்ணன் முதலாகச் சமய வரலாற்றாளர் எல்லாரும் ஏற்றுக்கொண் டுள்ளனர்.

ஆக, சமயங்களின் தத்துவப் பாங்காயினும் வழிபாட்டுப் பாங்காயினும் தமிழகமே முதன்மை இடத்தைப் பெற்றுள்ளது. இது பாரத வரலாற்றுண்மை யாகும்.

தமிழகத்துச் சமய அரங்கிலே தொன்றுதொட்டு இமாலய ஆளுமை கொண்ட சான்றோர்கள் வாழையடி வாழையாகத் தோன்றினார்கள்; நம் காலத்திலும் அத்தகு சான்றோர்கள் தமிழகத்தில் உண்டு.

பெருமைக்குரிய தமிழ் ஞான பரம்பரையில் *1823 - 1874* ஆகிய காலப் பரப்பில் மானிட உடம்பொடு தமிழகத்துச் சமய / தத்துவ அரங்கை வளப்படுத்திய பெருமை வள்ளலார் என்று சிறப்பிக்கப்படுகின்ற இராமலிங்க சுவாமிகளுக்கு உரியது. வள்ளற் பெருமானின் வாழ்க்கை வரலாற்றையும் அவர் உருவம் கொடுத்து வளப்படுத்திய சமரச சுத்த சன்மார்க்க நெறியையும் விரித்து உரைத்து விளக்கும் நூல்கள் மிகமிகப் பலவாக உள்ளன. அந்த நூற்பெருக்கிலே மேலும் ஒன்றை உருவாக்கித் தரும் வாய்ப்பு அருட்பேராற்றலால் வாய்த்துள்ளது. மிகமிக எளிவந்த தன்மையும்

சிந்தனைக்கு எட்டாத அருமைப்பாடும் ஒருங்கே கொண்ட அப்பெருமானின் செயல்களையும் அருளிச்செய்த நூல்களையும் நுணுகி நோக்கிக் கணிக்கும் திறம் எனக்கு உண்டா என்று கேட்டால், ‘ஆம்’ என்று உரைக்கும் துணிவு இல்லை.

ஆயினும்,

‘ எல்லாம் செயல்கூடும்
என்ஆணை - அம்பலத்தே
எல்லாம் வல்லான்தனையே
ஏத்து’

என்ற வள்ளற்பெருமானின் அருளிப்பாட்டை முன்னிறுத்தியே இம்முயற்சியில் இறங்குகிறேன். ‘அமைய அருள் அனைத்தும் ஆட்டுமேல் நெஞ்சே! சுமை நீ பொறுப்ப தெவன் சொல்லாய்’ என்பது மனோன்மணீயம் தந்த சுந்தரனாரின் அவையடக்கம். சான்றோர்களுக்கு அதனை இப்போது நினைவூட்டுவது என் கடமையாகும்.

வள்ளலார் தொடர்பான எண்ணற்ற நூல்களைப் பார்த்தேன்; பலவற்றை ஊன்றிப் படித்தேன். அவற்றுள் மூன்றை மட்டும் பேராதாரமாகக் கொண்டே இந்நூல் உருவாகிறது.

1. ம.பொ.சி. அவர்கள் எழுதிய ‘வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு’
2. தவத்திரு. ஊரனடிகள் எழுதிய ‘இராமலிங்க அடிகள் வரலாறு’
3. பேராசிரியர் க. வெள்ளைவாரணனாரின் ‘திருவருட்பாச் சிந்தனை’

வள்ளற்பெருமான்பற்றிய சிந்தனையிலும் திருவருட்பாப் பற்றிய ஆய்விலும் ஈடுபட நினைப்போர்க்கு இம்மூன்று நூல்களும் ஒப்பரிய வழித்துணையாகும் என்பது உறுதி. நல்ல நூல்கள் வேறு இல்லை என்று நான் சொல்லவில்லை என்பதையும் சான்றோர்கள் மனங்கொள்ள வேண்டும். திருமிகு துளசிராம் அவர்கள் எழுதிச் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள ஆங்கில நூல் (இரு பெருந்தொகுதிகள் கொண்டது) போன்ற அரிய நூல்கள் பல உண்டு என்பதை நான் மறுக்கவில்லை, மறக்கவுமில்லை.

வள்ளற்பெருமானின் அருளிப்பாடுகளில் ஆழங்காற்பட்டுப் பயன்பெற்று வளர்வதற்கு இந்த நூல்கள் சிறந்த ஆதார நூல்கள் என்ற அளவில்தான் என் கணிப்பு அமைகின்றது.

## பின்னணி

மானிட வாழ்க்கை மூன்று கூறுகள் கொண்டது. (1) உலகியல் (material), (2) மனவளம் சுட்டும் உளவியல் (mental), (3) ஆன்மிகம் என்ற உயிரியல் (spiritual). எந்தத் தனிமனித வாழ்வையும் சமுதாய வாழ்வையும் இந்த மூன்று கூறுகளைக் கொண்டே கணிக்க வேண்டும்.

மூன்றுமே வாழ்வுக்கு இன்றியமையாதவை. ஆனாலும், சீர்மைக் கணிப்பிலே உலகியலைவிட உளவியலும், உளவியலைவிட உயிரியலும் சிறப்புடையவை. தமிழ் அகப்பொருள் நூல்களிலே முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று கூறுகள் உண்டு. அவற்றைக் கணிக்கும்போது முதற்பொருளைவிடக் கருப்பொருளும் கருப்பொருளைவிட உரிப்பொருளும் சிறந்தவை என்ற கருத்தை விளக்கி,

> ' முதல் கரு உரி என்ற மூன்றே
> நினையுங் காலை முறைசிறந் தன'

என்று விதி வகுத்தார், தொல்காப்பியர். முதற்பொருள் இல்லாத பாடல்கள் உண்டு; கருப்பொருள் சுட்டாத பாடல்களும் உண்டு. ஆனால், உரிப்பொருள் இல்லாத அகப்பாடல்கள் இல்லை. உரிப்பொருள் இன்றேல் பொருட்பயம்(ன்) இன்றாம் என்பது சங்க இலக்கிய விதி. அதுபோலவே, உணவு உடை உறையுள் ஆட்சி ... போன்ற உலகியலைவிட - அன்பு, அருள், கண்ணோட்டம், பிழை பொறுத்தல் போன்ற மனப்பாங்கின் வளத்தைவிட - பிறவிப் பயன், அப்பயனைத் தருகின்ற ஞானம், முத்தி சித்தி நாட்டம் முதலான இறைவழிச் சிந்தனையைப் புலப்படுத்தும் ஆன்மிகம் மிகச் சிறந்தது. மூன்றில் ஆன்மிகம் சிறந்தது என்ற மட்டில் நிறுத்திவிடாமல் - 'உரிப்பொருள் இன்றேல் பொருட்பயம் இன்றாம்' என்னுமாப்போலே - ஆன்மிகம் நாடாத, அஃதனை நாட்டாத வாழ்க்கையும் பயனற்றதே என்று முடிவு கொள்ள வேண்டும்.

வள்ளற்பெருமான் தோன்றிய காலத்தில் இந்த மூன்று அம்சங்களைப் பொறுத்தவரையில் நம் நாடு எப்படி இருந்தது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

லௌகிகம் என்று சொல்லப்படுகிற உலகியல் நிலையில், வள்ளலார் பிறந்த காலத்தில், தமிழகத்தை உள்ளிட்ட பாரத நாடு முழுமையும் வெள்ளையரின் ஆட்சியில் ஒடுங்கிக் கிடந்தது. வையத்து நாட்டிலெல்லாம் தாழ்வுற்று, வறுமை விஞ்சி, விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்றது பாரத நாடு. வள்ளலார் தோன்றுதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே பாரதம் அடிமைப்பட்டுவிட்டது; வெள்ளை யாதிக்கத்தின் இருப்புக்கரத்தின் வன்பிடியிலே சிக்கிக் கிடந்த பாரதம், அடிமையாக வாழ்கிறோமே என்ற வாட்டம்கூட உறைக்காமல் 'சொரணை' கெட்டுக் கிடந்தது. முடி சூடிக்கொண்டிருந்த அரசர்கள்கூடத் தாங்கள் சூடிய கிரீடத்தை வெறும் ஆடம்பர ஆபரணமாகக் கொண்டிருந்தார்களே தவிர, 'ஆளப் பிறந்தவர் நாம்', 'ஆண்ட பரம்பரையினர் நாம்' என்று கனவில் கற்பனை செய்யக்கூடத் துணிச்சல் இல்லாத பேடியராய் உலவிவந்தனர். சாதாரணக் குடிமக்களைப்பற்றி என்ன சொல்ல முடியும்!? வேளாண்மை செய்தார்கள்; ஆனால், எப்போதும் போலவே ஏரும் கலப்பையும்தான் மிச்சம்.

'ஊரான் ஊரான் தோட்டத்திலே
ஒருவன் போட்டானாம் வெள்ளரிக்காய்
காசுக்கு ரெண்டு விற்கச் சொல்லிக்
காயிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்'

என்றொரு நாட்டுப்பாடல் உண்டு. விளைத்தது வெள்ளரிக்காய்தான்; அதைத் தான் நினைத்த விலையில் விற்கலாமே என்ற உணர்வுக்குக்கூட அந்த விவசாயிக்கு உரிமையில்லை. 'காசுக்கு இரண்டு' என்று விலை வரையறுத்து விற்கச் சொன்னானாம் வெள்ளைக்காரன்!

'கஞ்சி குடிப்பதற் கிலார் - அதன்
காரணம் இவையென்னும்
அறிவுமிலார்'

என்று சுருங்கச் சொல்லி விளங்கவைத்தார், தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியார்.

சாதி, சமயப் பிளவுகளைப் பெரிதுபடுத்தி - பிரித்தாளும் சூழ்ச்சியிலே வெற்றி கண்டு வெள்ளையராட்சி வேரூன்றிவிட்டது. 'சுதந்திரம்', 'தன்னாட்சி' என்ற சொற்களெல்லாம் வழக்கிறந்து மறக்கப்பட்ட சொற்களாகிவிட்டன. தூக்கத்தையே வரமாகப் பெற்ற கும்பகருணனைப் போல அடிமைப் பெருந்துயிலிலே தன்னுணர்வின்றிக் கிடந்தது பாரத சமுதாயம்.

அடுத்து, மனவளம் தரும் உளவியல் வாழ்க்கை எப்படி இருந்தது? உழுவித்து உண்போரும், எப்படியோ இருந்த செல்வத்தைப் பெற்றோரும் தவிர அரிச்சுவடிப் படிப்புக்கூடப் பாமரர்க்கு இல்லை. படிக்க வேண்டும் என்ற உணர்வுகூட இல்லாமல் வெறும் உழைப்புப் பொம்மைகளாய் உலவிக் கிடந்தனர், மக்களில் பெரும்பாலோர். தொலைக் கட்டுப்பாட்டில் இயங்கும் ரோபாட்டுகளுக்குத் தனியுணர்வு உண்டா, என்ன! அப்படித்தான் குரங்காட்டத் திருவிளையாடல் நடத்திய வெள்ளையாட்சியில் இயக்கப்பட்டுத் தன்னுணர்வு இல்லாமல் இருந்தனர், மக்கள். ஆதாரமாகும் பொருள் அடகு வைக்கப்பட்டுவிட்டதால் பொருளாதார அடிப்படைக்கு அன்றைய அடிமைச் சமுதாயத்தில் இடம் இல்லாதது போலவே மன வள அளவிலும் சுத்த சூனியங்களாக வாழ்ந்தனர், நம் மக்கள். 'பிச்சை புகினும் கற்கை நன்றே' என்று வழிகாட்டிச் சென்றனர் நம் முன்னோர்; பிச்சை நிலைத்தது; கற்கை மறைந்தது.

மனவளம் குறித்த மற்றக் கூறுகளிலும் பாரதம் இருட்டிலே தான் இருந்தது.

ஆன்மீகம்....!?? ஐயோ, பாவம். பரம்பொருளைத் தொந்தரவு பண்ணுவானேன் என்று ஆன்மிகத்திலும் வறண்டுதான் கிடந்தது, பாரதம். ஏன், சாமியார்கள் எங்கே போனார்கள் என்று கேட்கத் தோன்றும். செங்கோலுக்கு விஞ்சின சங்கீதமா என்று எண்ணியோ - என்னவோ, ஆன்மிகக் கூறும் நலிந்தே கிடந்தது. 'சோறு கண்ட இடம் சொர்க்கம்' என்பது பெரும்பாலோரின் நிலை; மேட்டுக் குடியினர் ஆன்மிகம்பற்றி நினைப்பதைவிட - ஆண்டவனை நினைப்பதைவிட - ஆள்பவனை நினைப்பதே நலம் தரும் என்று 'அனுபவ ஞானம்' பெற்றுவிட்டார்கள். சமயக் காவலர்களாகிய துறவிகளுக்கு அத்வைதம் x த்வைதம் x விசிஷ்டாத்வைதம் -

ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலம் - சுவர்க்க நரக பதங்கள் ... இப்படிப் பல சொற்றொடர்களை வைத்துச் சொக்கட்டான் ஆடவே நேரம் சரியாக இருந்தது.

சாதாரணப் பாமரர்களுக்குத் திருநீறு பூசுதல், திருமண் இடுதல், உபவாசம் காத்தல், பொங்கல் இடுதல் ... போன்ற வெறுஞ் சடங்குகளே சமயமாக ஆகிவிட்டன. வெள்ளிக்கிழமைகளில் வாசல் நிலையில் மஞ்சள் தடவிக் குங்குமப் பொட்டு வைத்துப் பொழுது சாயும் நேரத்தில் விளக்கு ஏற்றி வைத்துவிட்டால் 'சாமி'யைத் திருப்தி செய்துவிடலாம் - என்பது பாமரனின் சமய நம்பிக்கை.

உலகத்துக்கே சமய உணர்வைத் தோற்றுவித்த ஞானத் தாயகம் பாரத நாடு என்ற வரலாற்றுண்மை யெல்லாம் பொய்யாய் - கனவாய் மெல்லக் கரைந்துபோன நிலை.

தொப்பியைப் பார்த்தாலே தோப்புக் கரணம் போடும் அடிமைச் சிறுமதியில் மயங்கி, எல்லாவற்றையும் இழந்த நிலையில் குற்றுயிரும் குறையுயிருமாய் ஏதோ பெயரளவிலாவது மூச்சு விட்டுக்கொண் டிருந்தது சமயத் துறை ஒன்றுதான் என்று நமக்குள்ளே சொல்லிக்கொள்ளலாம்.

லௌகிகமும் மனவளமும் அடியோடு வறண்டு போன நிலையில் - புரிந்தும் புரியாத அளவில் மூச்சுவிட்டுக் கொண்டு இருந்தது, ஆன்மிகம் மட்டுமே. அது பற்றிய தேர்ச்சியும் தெளிவும் நூலாளர்களிடையே மட்டும் ஓரளவு இருந்தது. அவர்களும் கீழ்த்தட்டு மக்களை ஏறிட்டுப் பார்க்க மாட்டார்கள்.

இதுதான் வள்ளலார் தோன்றுவதற்குமுன் இருந்த பாரத சமுதாயம் / தமிழ்ச் சமுதாயம். 'பெண்ணுக்கு ஏது மோட்சம்' என்று கேள்வி எழுப்பியவர்களும், தத்துவச் சொற்களை வைத்துக் கொண்டு வீண் வாதமாடிய வெற்றர்களும், பிறப்புவழிச் சாதி என்று சாதித்து மனிதர்களையே தீண்டத் தகாதவர்கள், தாழ்ந்த பிறப்பினர் என்று ஆசாரம் பேசியவர்களும்தான் அன்றைய சமய / மத அரங்கில் தலை(மை) தாங்கி, அடிமைகளிடையே தலைமை தாங்கிகளாய் இருந்தார்கள்.

இந்த நிலையை நினைத்துத்தான் தம்மை இறைவன் ஏன் இந்த உலகத்துக்கே வருமாறு செய்தான் என்பதை வள்ளற்பெருமான் பின்வரும் பாடலில் தெளிவுபடுத்தினார் :

‘ அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்து
இருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத்து அடைவித்திட, அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்
திடுதற் கென்றே எனை இந்த
உகத்தே இறைவன் விடுவிக்க
உற்றேன்; அருளைப் பெற்றேனே’ - 5485

குறிப்பிட்ட குழப்பச் சூழலில், குறிக்கோள் நெறியில் உறுதி காட்டி, சமுதாயப் பணி செய்யவே பிறப்பவர்களின் தோற்றத்தை ‘அவதாரம்’ என்று குறிப்பது இந்த நாட்டு ஞான பரம்பரையின் மரபு. அந்த மரபிலே கணித்தால் வள்ளற்பெருமானை அவதாரச் செம்மல் என்று மதிப்பது பொருத்தமே.

அந்த ‘அவதார’ வாழ்வு முகிழ்த்து மலர்ந்து மணம் பரப்பியதை இனிக் காண்போம்.



# 2. வள்ளலார் வாழ்வும் வழியும்

## சிதம்பரம் இராமலிங்கம்

நால்வர் நான்மணி மாலையில் திருநாவுக்கரசரைப்பற்றிக் கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள்,

'பெற்றால் நினைப் பெற்றவர்போல்
பெறலும், பிறப்பதுண்டேல்
நற்றா ரணியில் நினைப்போல்
பிறப்பதும் நல்லகண்டாய்'

*சிவப்பிரகாசர் செந்தமிழ் நூல்கள். 1030*

- என்று பாடியுள்ளார். பிள்ளைகளைப் பெறுவதென்றால் திருநாவுக்கரசரின் பெற்றோர்போல் பெற வேண்டும்; பிறவி எடுக்க வேண்டுமென்றால் திருநாவுக்கரசரைப் போல் பிறக்க வேண்டும் என்பது இந்த வரிகளின் கருத்து. மருதூர் இராமையா பிள்ளையும் அவருக்கு வாய்த்த ஆறாவது மனைவி சின்னம்மையாரும் வள்ளற்பெருமானின் பெற்றோராவர். சாதி சமயச் சழக்கை விட்டுச் சமரச சன்மார்க்க சங்கம் கண்டதோடு, மரணமிலாப் பெருவாழ்வும் பெற்ற ஒரு பிள்ளையைப் பெற்ற பெருமை இராமைய பிள்ளைக்கும் சின்னம்மைக்கும் வாய்த்தது; ஒப்பரிய தவம் செய்த அப்பெற்றோரின் பிள்ளையாய்ப் பிறந்த இராமலிங்கர்போல் இன்னொரு பிள்ளையை வையகம் இன்றுவரையில் கண்டதில்லை. பிறந்த சூழல் தந்த பின்னணியைக் கடந்து, சமய - மத எல்லை கடந்து, உயிர்க்குலம் அனைத்தும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டில் திளைக்க வழிகாட்டிய வகையில் வள்ளற்பெருமான்போல் பிறந்தவர் வேறு எவர்? சிவப்பிரகாசர் வகுத்த இலக்கணத்துக்கு இலக்கியமாக அமைந்த அணி இம்மூவர் அணி.

'கோயில்' என்றாலே சைவர்க்குச் சிதம்பரம்தான். வள்ளற்பெருமான் வாழ்க்கையொடு இரண்டறப் பின்னிப் பிணைந்த திருத்தலம், சிதம்பரம். பொற்சபை - சிற்சபை விடுத்து, வள்ளலாரே தனிச்சபை அமைத்தபோது அந்த இடத்தை உத்தர ஞான சிதம்பரம் என்றே குறிப்பிட்டார், அல்லவா?

தம் திருப்பெயருக்குரிய தலைப்பெயரெழுத்தாகத் தம் தந்தையார் பெயரின் முதலெழுத்தை அடிகள் பதிக்கவில்லை. 'சிதம்பரம் இராமலிங்கம்' என்றே அம்பலவாணர் திருத்தலப் பெயரையே முன்னமைத்தார். 'சாலை சம்பந்திகளுக்கு இட்ட சமாதிக் கட்டளை' என்ற தலைப்பிட்டு எழுதியபோது, அடிகளார் '.... எனது தந்தையாராகிய திருச்சிற்றம்பலக் கடவுள் ...' என்று குறிப்பது மனங்கொள்ளத் தக்கது. ஆறாம் திருமுறையில் 'தத்துவ வெற்றி' என்ற தலைப்பில் இருபது பாடல்கள் வள்ளலாரால் அருளப்பெற்றுள்ளன. அவற்றில் சிவனுக்குத் தாம் பிள்ளையென்பதைத் தொடர்ந்து குறிப்பதைக் காண முடிகிறது. முதற்பாட்டில் சிற்சபையானுக்குத் தாம்மட்டுமே ஒரே பிள்ளை என்றுகூடக் குறித்துள்ளார். அப்பகுதியிலிருந்து ஒரு பாடலை மட்டும் இங்கே தருகிறேன் :

' மனம்எனும்ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே நீதான்
மற்றவர்போல் எனைநினைத்து மருட்டாதே கண்டாய்;
இனமுறஎன் சொல்வழியே இருத்தியெனில் சுகமாய்
இருந்திடுநீ - என்சொல்வழி ஏற்றிலையா னாலோ
தினையளவுன் அதிகாரம் செல்லவொட்டேன்; உலகம்
சிரிக்கஉனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே;
நனவில்எனை அறியாயோ! யாரெனஇங் கிருந்தாய்?
ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே' - 4835

இராமைய பிள்ளைக்கும் சின்னம்மைக்கும் மகனாகப் பிறந்தது பருவுடல் மட்டுமே; மாறிப் பிறந்த வள்ளலார் அம்பலவாணரின் மகன்; யாக்கைக்குப் பெற்றோர் மருதூரில் இருந்தனர்; ஆளுமைக்குத் தந்தை சிதம்பரத்தான். ஆதலால்தான், இராமைய இராமலிங்கம் என்றோ இரா. இராமலிங்கம் என்றோ கையொப்பமிடாமல் 'சிதம்பரம் இராமலிங்கம்' என்று கையொப்பமிடுவதை வழக்கமாகக் கொண்டார்.

சமுதாய உறுப்பினர்களில் யார் யாருக்கு என்ன கடமைகள் என்பதை விளக்கியுரைத்த பொன்முடியார் 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' (புறநா. 312) என்று குறித்துள்ளமை இங்கு எடுத்துக்காட்டத் தக்கது. இந்த வரிக்கு விளக்கம் சொன்ன நச்சினார்க்கினியர் 'பிள்ளை உயர்ச்சி மிகுதற்குக் காரணமான தந்தை' என்று விளக்கினார். (சீவக. 473). இந்தக் கருத்தை நினைவிற் கொண்டே வள்ளலார் தம் தந்தையாராகிய அம்பலவாணரிடம் விண்ணப்பம் செய்திருக்கிறார்.

' சழக்கிருந்தது என்னிடத்தில் ஆயினும் நீர்
தந்தை யாதலின் சார்ந்த நன்னெறியில்
பழக்கி வைப்பது தேவரீக் குரிய
பண்பன்றோ' - *1027*

அம்பலவாணரே தந்தை என்று உறவு கொண்டாடிய வள்ளலார், உலகியலில் உறவினர் எவரையும் அக மனத்தில் ஏற்க விரும்பவில்லை.

' தந்தைதாய் மனை மக்களென்று உலகச்
சழக்கிலே இடர்உழக்கும் என் மனந்தான்
கந்த வாதனை இயற்றுகின் றதுகாண்
கடையனேன் செயக்கடவ தொன் றறியேன்
எந்தையே எனை எழுமையும் தொடர்ந்த
இன்ப வெள்ளமே என்உயிர்க் குயிரே
சிந்தை ஓங்கிய ஒற்றிஎம் தேவே
செல்வமே பரசிவ பரம்பொருளே' - *1157*

இங்கே எடுத்துக்காட்டிய பாடல்கள் திருவருட்பாவின் இரண்டாம் திருமுறையில் இருப்பவை. அதாவது, இளமைப் பருவத்திலேயே இராமைய பிள்ளையே தம் தந்தை என்பதை அவர் மனம் துறந்துவிட்டது; பரசிவப் பரம்பொருளுக்கே தந்தையின் கடமை என்று வற்புறுத்தியிருக்கிறார், வள்ளலார்.

கைக்குழந்தையாக அவரைப் பெற்றோர் சிதம்பரத்துக்கு எடுத்துச் சென்றபோது அம்பலவாணரைப் பார்த்துக் குழந்தை இராமலிங்கம் சிரித்ததாக ஒரு நிகழ்ச்சி பதிவாகியுள்ளது. கைக்குழந்தைப் பருவத்திலேயே தூல சரீரம் தாங்கிவர

நேர்ந்துவிட்ட போதும் தாம் ஞானசபை நாயகனுக்குத்தான் பிள்ளை என்பதை உணர்த்திடவே சிரித்தார் என்று சொல்லத் தோன்றுகிறது.

வள்ளற்பெருமானின் பூதவுடல் சிதம்பரம் பக்கமுள்ள மருதூரில் 5.10.1823ல் பிறப்பெடுத்தது. தில்லைத் தரிசனம் மாறிப் பிறந்த நிகழ்ச்சியின் பதிவாகும்.

## சோதிடம் சொன்னது

குழந்தை இராமலிங்கத்தின் சாதகப் பலனைக் கணித்துச் சொன்னவர், ''இந்தச் சாதகமுடையோன் சிரஞ்சீவி; இவன் உயிர் போவதில்லை; ... ஐம்பதாம் வயதில் பொன்னுடலாகிப் பொலிவான்; இவன் ஞான உடலெடுத்த பெரியோன்; மந்திரம், யோகம், வைத்தியம், வாதம், நூல் நுணுக்கம் - சிந்தையில் எண்ணியவுடனே எய்துவான்'' என்று விளக்கியிருப்பதாகப் பதிவாகியுள்ளது.

இந்தச் சாதக விளக்கம் வள்ளலார் வாழ்வு நிலையறிந்தபின் எழுதப்பெற்றிருக்கலாம் என்று வாதிட இடம் உண்டு. ஆனால், வள்ளலார் போன்ற அருளாளர்கள்பற்றி இவ்வாறு வழங்கும் செய்திகளை அப்பெருமான்களுக்கே உரிய மதிப்பளித்து ஏற்கும் துணிவு வேண்டும். ஐந்தும் மூன்றும் எட்டு என்ற சாமானியக் கணக்கு நெறியில் அருளாளர் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கணித்திடல் கூடாது. ஞானசம்பந்தக் குழந்தை ஞானப் பாலுண்டு பதிகம் பாடினதாயினும் - நம்மாழ்வார் சிறுவன் கோலத்திலேயே, 'செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்' என்ற வினாவுக்கு விடை தந்ததாயினும் - ஊமைப் பிள்ளை செந்திலாண்டவன் சன்னதியிலே கந்தர் கலிவெண்பாப் பாடியதாயினும் லௌகிகக் கணிப்பிற்கு அப்பாற்பட்டவை என்பதை இறை நம்பிக்கையுள்ளவர்கள் ஏற்கத்தான் வேண்டும். இத்தகைய அருளாளர் பட்டியலில் வள்ளலார் ஒருவர் என்பதைத்தான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்தில் யான் ஒருவனன்றோ' என்ற திருவாக்கில் வள்ளலார் புலப்படுத்தினார்.

வள்ளலார் வாழ்வில் - நாமறிந்த இறுதிநாள் வரையில் இத்தகைய நிகழ்வுகளை எண்ணும்போது அவர் சில்வாழ்நாட் பல் பிணிச் சிற்றறிவினராகிய மக்கட்பொதுவினர் அல்லர் என்பதை நினைவிலே நன்கு பதித்துக்கொள்ள வேண்டும்.

## தெய்விக வளர்ப்பு

இராமைய பிள்ளையின் ஆறாவது மனைவி சின்னம்மாள்[1]; அவர்களின் ஐந்தாவது மகவாக 5.10.1823ல் பிறந்தவர் இராமலிங்க அடிகளார். பிறந்த ஐந்தாம் மாதத்தில் தில்லைத் திருக்கோயிலில் ஓர் அற்புதக் காட்சி வாய்த்தது. 'சிதம்பர ரகசியம்' என்றதொரு பகுதி பொன்னம்பலத்திலே உண்டு. அங்கே திரை நீக்கப்பட்ட போது கைக்குழந்தை இராமலிங்கருக்குச் சிதம்பர ரகசியம் புலப்பட்டது என்பது பதிவாகியுள்ள செய்தி. நூல்கள் பலப்பல கற்று, ஆத்திக நெறி நிற்கும் மூதியோருக்கும் புலப்படாத மறைபொருள் ஐந்து திங்கள் அளவான குழந்தைக்குப் புலப்பட்டது. அடிகளே பின்னர் இதனைத் தம் அருள்விளக்க மாலையிலே குறிப்பிட்டிருக்கிறார்.

' தாய்முதலோ ரோடுசிறிய பருவமதில் தில்லைத்
தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம்
வெளியாகக் காட்டியஎன் மெய்யுறவாம் பொருளே' *-4133*



*மருதூரில் இராமலிங்கர் பிறந்த வீடு (பழைய தோற்றம்)*

பிள்ளைப் பருவத்திலே தெருவிலே, ஓடி விளையாடிப் பொழுதைக் கழிப்பது சாதாரண வாழ்க்கை. அப்படித்தான் சுந்தரமூர்த்தி நாயனார் தெருவிலே விளையாடிக்கொண் டிருந்தார். 'ஐம்படைச் சதங்கை சாத்தி, அணி மணிச் சுட்டி சாத்தி, செம்பொன் நாண் அரையில் மின்னத் தெருவில் தேர் உருட்டி' விளையாடிக்கொண் டிருந்த சிறுவன் நம்பியாரூரனை நரசிங்க

1. முதல் ஐந்து மனைவியர் மகவு ஏதும் பெறாமலே ஒருவர்பின் ஒருவராக மறைந்தனர்.

முனையரையர் காணுகிறார். குழந்தையின்பால் ஏதோ கவர்ச்சி கொண்ட அரசர், நம்பியாரூரரை மகனாக ஏற்று, அரண்மனைக்கு அழைத்துச் சென்று வளர்க்கிறார். ஆதிசைவ அந்தணக் குலத்தில் தோன்றிய குழந்தைக்கு அரண்மனை வாழ்வு அமைகிறது. அந்தணர் வீட்டிலேயே வளர்ந்ததாகக் கதை போக வேண்டியதுதானே! ஏன் அரண்மனை வாழ்வு? திருக்கயிலையில் ஆலாலசுந்தரராக இருந்தவர், உமையம்மையின் பணிமகளிர்பால் மனஞ்செலுத்தியதால், 'அம்மெல்லியலாருடன் காதலின்பம் கலந்து', பின் நம்மை 'அணைவாய்' எனச் சிவபிரானால் 'க'(த)ண்டிக்கப் பெற்றார். கயிலை வாழ்வினராகிய சுந்தரர் முப்போதும் திருமேனி தீண்டும் பெருமைக்குரிய ஆதிசைவராகப் பிறந்தார்; ஆனால், தேவருலகினும் சிறந்த கயிலை வாழ்வினராகிய ஆலாலசுந்தரர்க்கு மண்ணுலகிலும் வள வாழ்வு அமைய வேண்டும் என்று கருதிப்போலும் நரசிங்கமுனையரின் காதற் பிள்ளையாய் வளருமாறு ஈசனார் அருளினார். 'அன்று நீ கொண்ட கோலம் என்றும் புனைந்து நின்வேட்கை தீர, வாழி மண்மேல் விளையாடுவாய்' என்பது நம்பியாரூரர்க்குச் சிவபிரான் அளித்த 'வரம்'. இன்புற்றுத் திளைப்பதற்கு ஆதிசைவக் குடும்பச் சூழலைவிட அரண்மனைச் சூழலில் வளர்வதே பொருத்தமாக இருக்கும். எனவே, பொதுவாகத் தேவைப்படாத ஒரு நிகழ்ச்சியைப் புனைந்துரைக்கிறார், சேக்கிழார். மறையவாராயினும் 'அரசிளங் குமரற்கு ஏற்ப' வள வாழ்வு சுந்தரர்க்கு வாய்க்கிறது. பெருமான், தன் அடியார்களின் வாழ்க்கையமைப்புக்குப் பொறுப்புடையவர்.

சுந்தரரைப் போலவே வள்ளற்பெருமானும் தெரு விளையாட்டுச் சிறுவராயிருந்தபோதே தடுத்தாட்கொள்ளப்படுகிறார்.

வீட்டுக்குள் தளர்நடையிட்டு வளரும் பிள்ளை ஏழு, எட்டு வயதில் தெருவில் விளையாடும் பிள்ளையாக விளங்குவதே பொது விதி. வீதி விளையாட்டுப்பிள்ளைப் பருவத்திலேயே வள்ளற் பெருமானின் வழி வேறாகக் காட்சியளிக்கிறது; ஒன்பதாம் வயதிலேயே அம்பலவாணரால் ஆட்கொள்ளப்படுகிறார்.

'ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டுகொண்ட
அருட்கடலே' - *2697*

'என்னைஅறியாப் பருவத்து ஆண்டுகொண்ட
என்குருவே' - *2698*

என்பவை வள்ளலார் வாக்கு.

பன்னிரண்டாம் ஆண்டிலிருந்தே தம் வழி, உலகியல் வழியிலிருந்து வேறுபட்டுவிட்டதாக அமைந்ததை வேறு ஓர் இடத்தில் குறிப்பிட்டுள்ளார்.

‘ பன்னிரண் டாண்டு தொடங்கிநான்
இற்றைப் பகல்வரை
அடைந்தவை யெல்லாம்
உன்னிநின் றுரைத்தால் உலப்புறாது’ - 3535



*வள்ளலார் பிறந்த இல்லம் (இப்போதுள்ள தோற்றம்)*

பாலப் பருவத்திலேயே மடைமாற்றம் பெற்றுவிட்டவர், நம் வள்ளலார். அந்தப் பருவத்திலேயே திருவருட் பெருக்கில் ஈடுபட்டுப் பாடவைத்ததாக ஆண்டவனைக் குறிப்பிட்டுள்ளார். இச்செய்திக்கு அவருடைய கூற்றாக - அகச் சான்றாகப் பல பாடல்கள் உண்டு. ஒன்றைமட்டும் இங்கே காணலாம்.

‘ உருவத்தி லேசிறி யேனாகி
பூகத்தில் ஒன்று மின்றித்
தெருவத்தி லேசிறு கால்வீசி
யாடிடச் சென்ற அந்தப்
பருவத்தி லேநல் அறிவளித்
தேஉனைப் பாடச் செய்தாய்
அருவத்தி லேஉரு வானோய்நின்
தண்ணளி யார்க்குளதே’ - 2218

பிள்ளைமைப் பருவத்திலேயே ஆன்மிக நெறிக்கு உரியவராக வள்ளலாரை அம்பலவாணர் திசைமாற்றி வளர்த்திருக்கிறார்.

' வீதியிலே விளையாடித் திரிந்த பிள்ளைப் பருவம்
மிகப்பெரிய பருவமென வியந்தருளி, அருளாம்
சோதியிலே விழைவுறச் செய்து இனிய மொழிமாலை
தொடுத்திடச் செய்து அணிந்துகொண்ட துரை' - *4183*

ஆண்டவன் கணிப்பின்படி வள்ளலாரைப் பொறுத்தவரையில் பிள்ளைப் பருவமே மிகப் பெரியது என்று இப்பாடல் தெரிவிப்பதைக் குறிக்கொள்ள வேண்டும். அந்தப் பருவத்திலேயே அருட்சோதியிலே விருப்பம் ஏற்படுமாறு நடராசப் பெருமான் செய்தருளியதாக இப்பாடலில் தெரிவிக்கிறார். ஆறாம் திருமுறை (அருள்விளக்க மாலை)யில் இப்பாடல் உள்ளது என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். அருட்சோதி வாழ்வின் முடிவெல்லையிலே அருளிய இப்பாடலில், அருட்சோதி நாட்டம் தமக்குப் பிள்ளைப் பருவத்திலேயே ஏற்பட்டது என்பதை வள்ளற்பெருமான் பதிவு செய்திருக்கிறார்.

## 'முறை'யான படிப்புக்கு அப்பால்...

ஐந்தாம் வயதிலே பள்ளியில் சேர்த்துக் கல்வியைத் தொடங்குவது பழைய முறை; மூன்றாம் அகவையிலேயே பள்ளிச் சிறைக்கு மனமுவந்து அனுப்புவது இன்றைய அவலம். இயல்பான வளர்ச்சிக்கு இடம் தாராத கல்வியே நாம் காண்பது. உடல் வளம், மன வளம், ஆன்ம வளம் ஆகியவை முறைப்படி வாய்ந்திடுமாறு கல்வியூட்டுவதே முறையான செயல். பெற்றோரும் 'பெரியோ'ரும் கட்டிக்கொள்கிற மனக்கோட்டையில் உருவாக்கப்பட்ட செயற்கைத் திட்டத்திலே பாலகர்களைச் சிக்க வைத்து மம்மி - டாடி (அ)நாகரிகத்தை வளர்ப்பதே நாம் இப்போது காணும் அவலக் கல்வி. வள்ளலார் காலத்தில் நாம் இப்போது காணும் கல்வி நிலையங்களின் பெருக்கம் இருந்ததில்லை. அகரம் பயில்வது முதல் பெருகிய புலமை பெறுவதுவரையில் தனியாசிரியர்களை அணுகியே படிக்க வேண்டிய நிலை, அவர் காலத்தது. ஆட்சியைப் பற்றியிருந்த அயலவர்களுக்கோ பண்பாடு உணர்ந்த கல்வி வாய்க்காமல் தடுத்துவிடுவதொன்றே குறிக்கோள்; இந்தக் குறிக்கோளில் ஒரு சிறு நாகரிக உணர்வு இடம் பெற்றபோது ஆங்கில அரசுக்குச் சிப்பந்திகளைத் தரும் வகையில் கல்விச் சாலைகள் ஆங்காங்கே ஏற்படுத்தப்பட்டன. பாரதியார் காலம்

வரையில்கூட நம் கல்வி நிலையங்கள் கொத்தடிமைக் கூட்டங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளாகவே இருந்தன. வள்ளலார் காலத்தில் இந்த 'அடிமை'க் கல்வியும் இல்லை; நம்மை நாம் உணர்ந்துகொள்ளும் வகையில் நடத்தப்பட்ட கல்வி நிலையங்களும் இல்லை. திண்ணைப் பள்ளிக்கூடங்களில் தனியார் முயற்சியில் தொடக்கப் படிப்பு; அதற்குமேல் இலக்கிய, இலக்கணங்களைத் திறம்படக் கற்பிக்கும் பெரும் புலவர்களின் போதனை; அந்தக் 'குருகுல' முறையில் சமய சாத்திரங்களும் கற்பிக்கப்பட்டதுண்டு. ஆனால், இந்தக் கல்வி முயற்சியில் ஈடுபட்டவர்கள் விரல்விட்டு எண்ணக்கூடிய நிலைதான் நிலவியது. இந்தச் சூழ்நிலையில் இராமலிங்க அடிகள் பெற்ற கல்வியறிவு எத்தகையது என்பதை அறிய வேண்டும்.

தம் தமையனாரிடம் 'ஆரம்பக்' கல்வி பெற்றார். கல்விச் சாலைகளில் அவர் சிக்கவில்லை. தமையனார் சபாபதிப் பிள்ளை தம் தம்பிக்கு நிகண்டு முதலியன கற்பிக்க முயன்று தோற்றார். பின்னர்த் தம் ஆசிரியராகிய காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் கற்குமாறு ஏற்பாடு செய்தார். இராமலிங்கரின் மதிநுட்பத்தை அறிந்துகொண்ட மகாவித்துவான் சபாபதி முதலியார், 'இந்த இளைஞர்க்குக் கற்பிக்க முயல்வது பயனற்றது' என்று கற்பிக்கும் முயற்சியைக் கைவிட்டார். திருவருள் உணர்த்த, இயல்பாகவே கலை ஞானங்களைப் பெறும் நிலைபெற்ற ஞானிகளுக்கு நம் சமுதாயக் கட்டில் கற்பிக்கப்படும் கல்விமுறை ஒத்து வாராது.

இரண்டு சபாபதிகளிடமும் இராமலிங்கர் கற்றது ஏதுமில்லை என்பது மிகையாகாது. ஆனால், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய சபாபதி, உள்ளூரக் கற்பித்த கல்வி, இராமலிங்கரை உருவாக்கியது. வகுப்பு, பாடத் திட்டம், ஆசிரியர், மாணவர் என்ற கட்டமைப்புகள் ஏதுமின்றியே வள்ளற்பெருமான் பாலப் பருவத்திலேயே வாலறிவனை அறியும் ஞானக் கல்வியில் தம்மை அறியாமலே தேர்ச்சி பெற்றார். உலகவர் கண்களுக்கு இராமலிங்கர் ஊர் சுற்றித் திரிவதாகத்தான் தோன்றியது. புறத்தே கல்வி இயக்கம் அவர் வாழ்வில் புலப்படவில்லை. உள்ளுக்குள் உள்ளே முகிழ்த்து மலரும் ஞானச் செல்வத்தை அவர் பெற்றார். யாரிடம் கற்றார், என்ன கற்றார்?

' சுற்றதுமற் றவ்வழிமா சூததுஎன் றெண்ணாத்
தொண்டரெலாம் கற்கின்றார் பண்டும் இன்னும் காணார்
எல்ததும்பு மணிமன்றில் இன்ப நடம் புரியும்
என்னுடைய துரையே நான் நின்னுடைய அருளால்
கற்றது நின்னிடத்தே பின் கேட்டது நின்னிடத்தே
கண்டது நின்னிடத்தே உட்கொண்டது நின்னிடத்தே
பெற்றது நின்னிடத்தே இன்புற்றது நின்னிடத்தே
பெரியதவம் புரிந்தேன் என்பெற்றி அதிசயமே' - *3044*

இந்தப் பாடலின் முதல் வரியை மீண்டும் படித்துப் பாருங்கள். சுற்றிச் சுற்றி உலகியலிலே உழலும் தாதர்கள் (தொண்டர்) பெரிய சூது நிறைந்தது இவ் உலகியல் வழி என்பதை முன்னும் கண்டிலர், இன்றும் கண்டிலர் என்று வள்ளற்பெருமான் தெளிவு படுத்தியுள்ளதை எண்ணிப் பாருங்கள். தெளிவு பெறாத - சூது நிறைந்த - உலகியற் கல்வி வள்ளலார் போன்றோர்க்குப் பொருந்தாது. மண்படு கல்வி (*397*), அற்பர் கல்வி (*398*), ஊணர் கலைத்திறன் (*397*) என்று பாரதியார் தம் காலக் கல்விபற்றிக் குறித்துள்ளமை இங்கே கருதத்தக்கது. மேலும், அயலவர் ஆட்சியில் நிலவிய கல்விபற்றி,

' நரிஉயிர்ச் சிறு சேவகர், தாதர்கள்,
நாயெனத் திரி ஒற்றர், உணவினைப்
பெரிதெனக்கொடு தம்உயிர் விற்றிடும்
பேடியர், பிறர்க்கு இச்சகம் பேசுவோர்
கருதும் இவ்வகை மாக்கள் பயின்றிடும் கலை' - (*398*)

என்று பாரதியார் விளக்கியுள்ள அடிமைக் கல்வி தரும் கல்விச்சாலைகள்கூட வள்ளலார் காலத்தில் மிகுதியாக இல்லை. அருகிக் காணப்பட்ட கல்விச்சாலைகளில் இந்தியர் பெற்ற கல்வி, பார்ப்பனப் பிள்ளை மாமிச வணிகம் செய்வது போன்றது (*397*) என்றும் அவர் விளக்கியுள்ளார். இந்த மண்படு கல்வி வள்ளலார்க்குப் பொருந்தாது என்பதால் அத்தகைய கல்வியில் ஈடுபட்டுவிடாமல் வள்ளலாரை இறைவன் தடுத்துவிட்டான்.

பெரும்புலவர்களிடம் சார்ந்து, அவர் காலத்தில் கற்ற தமிழ்க் கல்வியும் சமய, மத வெறிகளுக்கு இடம் வகுப்பதாகவே இருந்தது. தத்துவப் பட்டி மன்றங்களாகவும் பக்தியின் பெயரால் சடங்குக் கூடங்களாகவும் கற்றவர்கள் 'கல்வி' போதித்தனர். இந்தப் பயிற்சியும் வள்ளலார்க்குப் பொருந்தாது.

ஆகையால், வள்ளலாருக்கே உரிய வழியில் கலை ஞானம் பெறுவிக்கும் பொறுப்பை ஆண்டவனே ஏற்றுக்கொண்டான். மேலே காட்டிய அருட்பாப் பாடல்மட்டு மல்லாமல் (3044) மேலும் பல பாடல்கள் வாயிலாகத் தாம் பெற்ற கல்விபற்றி வள்ளலாரே குறிப்பிட்டுள்ளார்.

வள்ளலார் பெற்ற கல்வி எத்தகையது? அவர் பெற்றது, ஓதாமல் உணர்ந்த கல்வி. துறைமுற்றக் கற்றவர்களும் அவரிடம் கேட்டு அறியுமளவுக்குக் கலை ஞானங்களிலே தேர்ச்சி பெற இறைவன் அருளினான்.

' ஓதி உணர்ந்தவ ரெலாம்
எனைக் கேட்க, எனைத்தான்
ஓதாமல் உணர்ந்து உணர்வாம்
உருவுறச் செய்த'

- தாக இறைவன் பணியை வள்ளலார் எடுத்துரைத்திருக்கிறார் (4112). மேலும் அவர் கற்ற கல்விபற்றி,

' எட்டிரண்டும் என்என்றால் மயங்கிய என்றனக்கே
எட்டாத நிலையெல்லாம் எட்டுவித்த' - (4111)

தாக இறைவனாகிய குருவை வள்ளலார் குறித்திருக்கிறார்.

'மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம் யாஉள முன்நிற்பவை' (6367) என்பது வள்ளுவர் கூற்று. இயற்கையாகவே வாய்த்திடும் அறிவுடன் நூலறிவும் ஒருவர்க்குக் கிடைக்குமானால், அத்தகையோர்க்கு அதிக நுட்பமானது என எதுவும் இல்லை என்கிறார். வள்ளலாரின் மதிநுட்பத்தைக் கண்டே காஞ்சிபுரம் சபாபதி முதலியார் அவருக்குக் கற்பிப்பதற்குத் தம்மிடம் எதுவுமில்லையென உணர்ந்து ஒதுங்(க்)கினார். பின், நூலறிவு எவ்வாறு வள்ளலார்க்கு வாய்த்தது என்பதுதான் வியப்பதற்கு உரியது. 'என் பெற்றி அதிசயமே' (3044) என வள்ளலாரே குறித்ததை முன் பார்த்தோம். பொதுவாக உலகியலில் நிலவுகின்ற கல்வி இயக்கங்கள் எவற்றையும் நாடாமலே அருளாளர்கள் சிலர் கலைகள் யாவும் பெற்றுவிடுகின்றனர். இறைவன் திருவருள் ஒன்றே இத்தகைய ஞானச் செல்வத்தை வழங்கியருள முடியும்.

அடிகள் எழுதிய சமரச சுத்த சன்மார்க்கப் பெருவிண்ணப் பத்தில் 'குமாரப் பருவத்தில் என்னைக் கல்வியிற் பயிற்றும்

ஆசிரியரையின்றியே, என் தரத்திற் பயின்றறிதற்கு அருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளத்தேயிருந்து பயிற்றுவித்தருளினீர்...' என அவரே குறித்திருப்பது இங்கு நினைப்பதற்கு உரியது.

' யாம்ஓதிய கல்வியும் எம் அறிவும்
தாமே பெற வேலவர் தந்த'

தாக அருணகிரிப் பெருமான் பாடுகிறார். இத்தகையோரிடம் திகழும் அறிவு முன்னைப் பிறவியில் பெற்ற அறிவின் தொடர்ச்சி - விட்ட குறை தொட்ட குறை - என்று உலகம் அமைதி காண்கின்றது.

## சாமு சித்தர்[2]

ஓதாது உணர்ந்து பொலிகின்றவர்களைச் சாமு சித்தர் என்று விளக்குகின்றது நம் நாட்டு ஞான மரபு. இந்த நிலையினை,

> ''திருஞானசம்பந்தர், இராமலிங்க அடிகள் போன்றோர் சாமுசித்தர்கள்; அஃதாவது பிறவி ஞானிகள். இவர்களது இலக்கணத்தைச் சிவாக்கிர யோகிகள் 'அந்தத் தேகம் விட்டும் அந்த ஞானம் கெடாமல் மீளவும் ஜனிக்கும்பொழுது அந்த ஞானத்துடனே ஜனித்து' எனக் கூறுவதை உற்று நோக்குக. இவர்கள் முற்பிறப்பில் எவ்வளவு அறிவோடு இருந்தார்களோ அவ்வளவு அறிவோடு பிறந்திருக்கிறார்கள். விட்ட இடத்தில் தொட்டிருக்கிறார்கள். இதுதான் விட்ட குறை தொட்ட குறை என்பது''

எனத் தவத்திரு. ஊரனடிகள் விளக்குகிறார். (இராமலிங்க அடிகள் வரலாறு : பக். 33-34)

## பிறவி ஞானி; பிறவிக் கவிஞர்

வள்ளலார் ஒரு சாமுசித்தராகையால் பாலப்பருவத்திலேயே பழுதறு தமிழில் பாக்கள் புனைய முடிந்தது. வள்ளற்பெருமான் 'தெருவோடி'யெனக் கருதப்பட்ட பருவத்திலேயே (ஒன்பதாம் வயதிலேயே) சென்னைக் கந்தகோட்டத்து முருகப் பெருமானைப்

2. சாமுசித்தன் - பூர்வ சென்ம சுகிருதத்தால் ஞானத்துடன் பிறந்து சிவனிடத்தில் பத்தி செய்வோன். (சிவஞான சித்தியார் பாயிரம்) - லெக்சிகன்

பற்றித் தெய்வமணி மாலைப் பாடல்களைப் பாடினார் என்பது வரலாறு. கட்டுப்பாடும் திட்டமும் கொண்ட கல்வி முயற்சியில் தலைப்படாத இராமலிங்கம், தம் 'தெருவோடும்' பருவத்தே முதன்முதலாகப் பாடியது கந்தகோட்டத் தெய்வமணி மாலையாகும். முப்பத்தொரு பாடல்களைக் கொண்டது அத்தெய்வமணி மாலை. அடிக்குப் பன்னிரண்டு சீர்கள் கொண்ட பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாலாகியது அது. அதன் முதற் பாடலை இங்கே காணலாம் :

' திருஓங்கு புண்ணியச் செயல்ஓங்கி அன்பருள்
திறல்ஓங்கு செல்வம் ஓங்கச்
செறிவோங்க அறிவோங்கி நிறைவான இன்பம்
திகழ்ந்தோங்க அருள்கொடுத்து
மருஓங்கு செங்கமல மலர்ஓங்கு வனம்ஓங்க
வளர்கருணை மயம் ஓங்கி ஓர்
வரம்ஓங்கு தெள்ளமுத வயமோங்கி ஆனந்த
வடிவாகி ஓங்கி ஞான
உருஓங்கும் உணர்வின்நிறை ஒளிஓங்கி ஓங்கும்மயில்
ஊர்ந்தோங்கி எவ்வுயிர்க்கும்
உறவோங்கும் நின்பதம்என் உளம்ஓங்கி வளம்ஓங்க
உய்கின்ற நாள்எந்த நாள்
தருஓங்கு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே' - 1

செய்யுள் நலம், அணி நலம், சொல்நய நலம், அடுக்குத் தொடர் நலம் ... எனப் பல நலங்களும் ஓங்கும் வண்ணம் ஓங்கி ஒலிக்கும் இப்பாடலின் இலக்கிய நலம் ஒருபால் இருக்க - தெருவில் விளையாடும் பருவத்துச் சிறுவன் திறத்துள்ளும் தரத்துள்ளும் விளைகின்ற பாடலா இது! 'திரு ஓங்கு' என மங்கலத் தொடருடன் தொடங்கிய வள்ளலார் திருப்பணிப் பயணம் மேன்மேலும் ஓங்கியதோடு, அந்தப் பயணத்தில் தம்மை இணைத்துக் கொள்வோரையும் ஓங்க வைத்தது. பெருமானின் புகழ் ஓங்க - ஓங்காரத்து ஒலி ஓங்க இந்தத் திருப்பாடல் இறையருளா லன்றித்

தெருவோடிப் பையனின் முயற்சியால் உருவாகியிருக்க முடியாது என்பதைப் பலகாலும் படித்துப் படித்துப் பாடிப் பாடி உணர வேண்டும். மொழி நலமும் பொருள் கொழி நலமும் ஓங்கி ஒலித்திடும் தெய்வமணி மாலை தொகுக்கப்பட்ட நாள்முதலாக இன்றுவரை முருகப் பெருமானின் அருளை வாரி வழங்கி வருகின்றது என்பது உண்மையன்றோ! விளையும் பயிர் முளையிலே.

## கற்றது எவ்வாறு?

கல்விக் கூடங்களிலும் கற்றோர் கற்பிப்போர் முன்னிலையிலும் அமர்ந்து பயிலாத இராமலிங்க வள்ளலார்க்கு எப்படித்தான் கல்வி வளம் அமைந்தது? வியப்பில் விளையும் இந்த வினாவுக்கு இறைவன் திருவருள் ஒன்றே காரணம் என்ற விடையே கிடைக்கும். முறையாகப் படித்தவர்க்கும் எளிதிலே வாய்த்திட முடியாத பல வளமும் செறிந்த புலமை அவருக்கு வாய்த்தது முருகன் அருளே என்ற முடிவுதான் கிடைத்தது.

அண்ணியார் கண்ணீரின் சாதனை இராமலிங்கரை மாடி அறையில் மனம் ஒன்றித் தங்க வைத்தது. அங்கே தமக்கென அமைத்துக்கொண்ட நிலைக்கண்ணாடியில் திருமுருகனே தோன்றி, தெருவோடும் பிள்ளைக்குத் திருவோங்கும் ஞானக் கல்வியை வழங்கியதாக ஒரு நிகழ்ச்சி பதிவாகியுள்ளது.

கொல், எறி, குத்து என்ற அரவமே ஓங்கி ஒலித்த சூழலில் பிறந்து வளர்ந்த திண்ணனார், குடுமித்தேவரின் அருளாலே நாயனாராக வளர்ந்ததை இப்போது நினைவது பொருத்தமே. இறைவனின் திருவருள் உள்நின்று உணர்த்த, எல்லாம் கற்றோரும் அறியா அறிவினை - ஞானத்தினைக் கைக்கனியாகப் பெற்றார் வள்ளலார். முருகனே ஆசானாக - ஞானசம்பந்தப் பெருந்தகையே குருவாகப் பெற்றவர் வள்ளலார் என்று அவரைப்பற்றி எழுதியவர்களெல்லாம் தெரிவித்திருக்கிறார்கள். அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தாலொழியத் தெருவோடும் பிள்ளை சாமுசித்தராக உருவாகியிருக்க முடியாது.

## அண்ணியின் கண்ணீர்

வள்ளலாரின் பாலப் பருவத்திலே மற்றொரு நிகழ்ச்சியையும் மனங்கொள்ள வேண்டும். வீட்டிலும் தங்காமல் கல்வி

நிலையங்களிலும் ஒதுங்காமல் வெற்று விடலையாய்த் தம்பி வாழ்கிறானே என்ற வேதனையில் வாடினார், அண்ணன் சபாபதிப் பிள்ளை; அவருடைய வாட்டம் சினமாகப் பொங்கி, 'இனி அவனுக்கு உணவு படைக்காதே' என்ற ஆணையாக வெடித்தது. ஆனாலும், அந்தத் தாய்மனம் கணவனார் கட்டளையை மனம் ஒப்பி நிறைவேற்ற இசையவில்லை. தமையனார் சபாபதிப் பிள்ளைக்குத் தெரியாவண்ணம் இளவல் இராமலிங்கருக்கு அண்ணியார் உணவூட்டித்தான் வந்தார்.

ஒருநாள் வீட்டில் ஒரு நினைவு நிகழ்ச்சி. சபாபதியாரின் தந்தையார் நினைவு நாள்[3]. நினைவுச் சடங்கையொட்டிப் பலருக்கும் பெருவிருந்து படைக்கப்பட்டது. அண்ணியம்மையார் பட்டினி; 'பலருடனும் கலந்து உண்ண, இப்படிப்பட்ட நாளிலும் கொழுந்தனார் இல்லையே' என்ற துயரம் அவரை வாட்டியது. ஆரவாரமெல்லாம் ஒய்ந்தபின் பின்வாசல் வழி வந்த இராமலிங்கருக்கு உணவு படைத்தார் அண்ணியார். துயர் தாங்க முடியாமல் கண்ணீர் விட்டார். ஆர்வலர் புன்கண்ணீர் பூசல் தரும் என்பது வேத வாக்கு. அண்ணியாரைக் காரணம் கேட்டார். 'இந்த நாளிலேகூட நீ மறைவாக வந்து உண்ண வேண்டியிருக்கிறதே! உன் நன்மைக்குத் தானே அண்ணன் சொல்கிறார்; கேட்கக் கூடாதா' என்று அண்ணியார் தொண்டையடைக்கப் பேசினார். தெருவோடும் பிள்ளையின் மனப்போக்கு மடைமாற்றம் பெற்றது. ''மாடியில் எனக்குத் தனி அறை ஏற்பாடு செய்யுங்கள். இனி நான் ஒழுங்காகப் படிக்கிறேன்'' என்று உறுதி கூறினார் இராமலிங்கர்.

அறை ஏற்பாடு முடிந்தது. கதவைச் சார்த்திக்கொண்ட இராமலிங்கர் என்ன படித்தார் என்பது அவருக்கும் அவரை ஆண்டவருக்கும் தான் தெரியும். அங்கிருந்த நிலைக் கண்ணாடியில் தணிகை முருகன் காட்சி கிடைத்தது என்றும் முருகப் பெருமானே கலை ஞானங்களைக் கற்பித்தான் என்றும் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

## புற(ல)ப்பட்டது ஞானப் பெருவெள்ளம்

தமையனார் சபாபதியார் புராண விரிவுரைகள் ஆற்றுவதையே தொழிலாகக் கொண்டவர். அக்காலத்தில் அவரைப் போன்றவர்கள்

3. தாயாரின் நினைவுநாள் என்றும் செய்தி உண்டு.

ஆற்றிய பணியினால்தான் இந்த நாட்டின் ஆன்மிகச் செல்வம் ஒருவாறு தப்பிப் பிழைத்தது என்று சொல்ல வேண்டும்.

சபாபதிப் பிள்ளைக்கு உடல்நலக் கோளாறு காரணமாக ஒருநாள் வழக்கம்போல் சொற்பொழிவுக்குப் போக முடியவில்லை. சொற்பொழிவை எதிர்பார்த்து வருவோரை ஏமாற்றவும் அவர் விரும்பவில்லை. தம்பியார் இராமலிங்கரை அனுப்பினார்; 'சொற்பொழிவு நிகழ்த்தி வா' என்று சொல்லியனுப்பவில்லை; 'சில பாடல்களைப் பாடி, பணி முடித்து வா' என்றுதான் சொல்லி அனுப்பினார்.

இராமலிங்கரின் குரல் வளமானது, இனிமையானது என்று தெரிகிறது. கூடியிருந்தவர்கள் 'நீங்களே சொற்பொழிவு ஆற்றலாமே' என்று தூண்டிவிட்டனர். சோமு செட்டியார் என்ற பெருந்தகையின் வீட்டிலேதான் சபாபதிப் பிள்ளை புராணம் சொல்லிவந்தார்.[4] தமையனார் சொற்படி வழிபாட்டுப் பாடல்கள் சிலவற்றைப் பாடுவதற்குமட்டுமே சென்ற இளைஞர் இராமலிங்கர், 'ஏதோ' ஒருவகையில் பேசலாமே என்று கூடியிருந்தோர் கேட்டுக்கொண்டனர். இராமலிங்கருக்கு உள்ளிருந்து உணர்த்திய இறையவன் தன் பிள்ளையின் தெளிவை உலகறியச் செய்வதற்குத்தான் இந்த நிகழ்ச்சி பயன்பட்டது. அடங்கிக் கிடந்த ஞான வெள்ளம் புறப்பட்டுப் பேராறாய்ப் பொங்கியது. கேட்டார்ப் பிணிக்கும் தகையதாய் அமைந்த அருட்பெருக்கை அனுபவித்தவர்கள், 'இனித் தாங்களே புராணம் சொல்ல வேண்டும்' என்று வற்புறுத்தினர்.

பல நாளளவு இராமலிங்கரின் சொற்பொழிவு தொடர்ந்தது. தம்பியின் சிறப்பான சொற்பொழிவுபற்றிக் கேள்விப்பட்ட தமையனார் சபாபதிப் பிள்ளை ஒருநாள் பிறர் அறியாதவாறு வந்திருந்து, இராமலிங்கரின் அருட்பொழிவைக் கேட்டு மகிழ்ந்தார். அதன்பின் வீட்டிலே இராமலிங்கருக்குக் கிடைத்த மரியாதையும் போற்றுதலும் பெருகின.

## வழி வேறு

ஆனால், இந்தச் சொற்பொழிவு வாழ்க்கையில், ஏனோ, வள்ளலார் மனம் பற்றவில்லை. தமையனார் சபாபதிக்குப் பதிலாக

4. அந்த வீட்டில்தான் இப்போது மறைமலையடிகள் நூலகம் இருக்கிறது.

சோமு செட்டியார் வீட்டில் நிகழ்த்தியது போல இராமலிங்கர் தொடர்ந்து அந்தப் பணியில் ஈடுபட்டதாகச் செய்தி இல்லை.

திருவொற்றியூர் ஆலயத்துக்குப் போவதில் அவர் காட்டிய அக்கறை, வேறு எந்தத் துறையிலும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. கந்த கோட்டத்திலும் திருவொற்றியூரின் பல சன்னிதிகளிலும் பெரும்பொழுது கழிப்பதே இராமலிங்கரின் வழக்கமாயிற்று. இந்தக் கோயில்களில் எழுந்தருளியுள்ள முருகன், ஒற்றியப்பர், ஆதிபுரீசர், புற்றிடங் கொண்ட தியாகேசர்... ஆகிய தெய்வங்களை வழிபடுவதும் தேவார முதலிகளைப் போலே திருப்பாடல்கள் பாடுவதும் வள்ளலாரின் இளம்பருவத் திருப்பணிகள். திருவொற்றியூர் வடிவுடை மாணிக்க மாலை, வள்ளற்பெருமானின் படைப்புகளில் சிறப்புடையவற்றுள் ஒன்று.

திருவொற்றியூரில் பட்டினத்துப் பிள்ளையார் சமாதி இருக்கிறது. வள்ளற்பெருமான் அங்கே நெடுநேரம் இருப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார் என்று தெரிகிறது.

இலக்கிய, இலக்கண - சாத்திர, தோத்திர நூல்களைக் கற்பதும் கற்பிப்பதும் அக்காலத்துப் புலவர்களின் வழக்கமாக இருந்திருக்கிறது. அந்தச் சிலருள்ளும் தேர்ந்தெடுத்த சிலர் விரிவுரை மேடைகளில் தம் புகழை நிலைநாட்டியிருக்கிறார்கள்.

நாடும் மக்களும் அயலார் ஆட்சியில் உழன்று - தம் நாகரிகம் பண்பாடுகளை மறந்து வாழ்ந்த காலத்தில் மேற்குறித்த மிகச் சிலரே நமக்கே உரிய கல்விச் செல்வத்தைப் பாதுகாத்துப் பண்பாட்டை ஓம்பினார்கள். ஆனாலும், புதுமை காணவோ புரட்சியுணர்வு தழைக்கவோ அவர்கள் பணியால் எவ்வகைஃ சாதனையும் இல்லை. தொடர்ந்துவந்த சடங்குகளை வற்புறுத்தியதோடு பெரும் புலவர்களின் பணி ஓய்ந்துவிட்டது.

வள்ளலார் போக்கு அந்த வழியிலே அமையவில்லை. அவர் காலத்துப் புலவர்கள் சுடர் அவியாமல் காத்தனர்; ஆனால், அந்தச் சுடரைக் குன்றின்மேல் விளக்காக்கிச் சமுதாயத்தில் ஒளி விளக்கம் செய்வதற்கு அவர்கள் பணி போதவில்லை. பழ மரபு கெடாமல், புதுநெறி காட்டி மலர்ச்சி பெறும் ஆக்க வழி வள்ளலார் போன்றவர்களால் வகுக்கப்பட்டது. வள்ளலார், சுப்பிரமணிய பாரதியார் போன்ற புலமைத் தலைவர்களின் வழி வேறு.

வள்ளலாரின் சிந்தனைப் போக்கின் வழி வேறாக இருந்தமையால் - அவருடைய ஆளுமை வளர்ச்சியை அடையாளம் காண முடியாமையால் அவர் வளர்ந்துவந்த பருவத்து நிகழ்ச்சிகளை யாரும் பதிவு செய்யவில்லை. வடலூர் - மேட்டுக்குப்பம் ஆகிய இடங்களில் அவர் தங்கியதற்கு முன்பருவத்து நிகழ்ச்சிகள் நமக்குத் தெரியவில்லை. கிடைத்துள்ள ஒரு சில குறிப்புகளை வைத்து, இவர் வழி வேறு என முடிவு கட்ட வேண்டியுள்ளது.

## பட்ட பாடு பெரும்பாடு

' பன்னிரண் டாண்டு தொடங்கிநான் இற்றைப்
பகல்வரை அடைந்தவை யெல்லாம்
உன்னிநின் றுரைத்தால் உலப்புறாது' - *3535*

எனவும்,

' பனிரண் டாண்டு தொடங்கி இற்றைப்
பகலின் வரையுமே
படியிற் பட்ட பாட்டை நினைக்கின்
மலையும் கரையுமே' - 5041

எனவும்,

'ஈரா றாண்டு தொடங்கி இற்றைப்
பகலின் வரையுமே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கின்
இரும்பும் கரையுமே' - 5042

எனவும் வள்ளலார் பாடியுள்ள வரிகள், அடிகளின் வாழ்க்கையின் முக்கியமான பகுதிகளைக் குறிப்பனவாகக் கொள்ள வேண்டும். 'பன்னிரண்டாம் வயதுமுதல்' என இந்த வாழ்வுப் பகுதியின் தொடக்கத்தைக் குறிப்பிடுகிறார்; குறிப்பிடப்படும் பகுதியின் முடிவுப்பகுதி எந்த வயதில் அமைந்தது என்பது திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லை. ஆனால், குறிப்பிடப்பட்ட பாடல்களைத் திருவொற்றியூர்ப் போக்குவரத்துக் காலத்திலே பாடியுள்ளார் என்பதை ஊரனடிகள் பதிப்பிலிருந்து தெளிய முடிகிறது. பன்னிரண்டாம் அகவை முதல் முப்பத்தைந்தாம் அகவை வரை *(1835 - 1858)* திருவொற்றியூர்ப் பகுதி என ஊரனடிகள் வகுத்துக் காட்டியுள்ளார்.

இந்தப் பருவத்தில் வள்ளற்பெருமானின் ஆன்மிக வளர்ச்சி ஏறுமுகமாகப் பெருகி ஓங்கியிருக்க வேண்டும். அந்த உயர்நிலையை அடிகள் எளிதில் அடைந்துவிடவில்லை என்பதை இந்த வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

உணவு, உடை, உறையுள் எனப் பொருள் தேடி, ஒரு நிலை அடைவதற்கே மனிதன் படும் பாடு பெரிது, மிகக் கடிது. என்றால் 'சென்றடையாத திரு' என்றும், 'அந்தமில் இன்பத்து அரசு' என்றும் பெரியோர் குறித்துள்ள ஆன்மிக வளர்ச்சியைப் பெறுவது எளிய முயற்சியில் கைகூடிவிடுமா! பருப்பொருள் சேர்ப்பதற்கே பெரும்பாடு பட வேண்டியிருப்பதை எண்ணிப் பார்த்தால், நுண்ணிதாய் நெடிது நிலைக்கும் பரம்பொருளை அடைவிக்கும் ஞானச் செல்வத்தைச் சேர்ப்பதற்கு எத்துணைப் பாடு பட்டிருக்க வேண்டும்!

அந்தப் பாடு என்ன, எப்படி அமைந்தது, ஆன்மிகப் போராட்டம் எவ்வாறு படுத்திற்று... என்பவற்றை யெல்லாம் வெளிப்படையாக வள்ளற்பெருமான் சொல்லவில்லை.

வேறு சில இடங்களில் அடிகள் வரைந்துள்ளவற்றைக் கொண்டு, வளர்ச்சிக்கு அவர் எப்படிப் பாடுபட்டார் என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

> ''எல்லாம் ஆனவராயும் ஒன்றும் அல்லாதவராயும் எல்லா அண்டசராசரங்களின் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்குகின்ற தனித்தலைமைக் கடவுளே! குமாரப் பருவத்தில் என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரை இன்றியே என் தரத்தில் பயின்றறிதற்கு அருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளகத்தேயிருந்து பயிற்றுவித்தருளினீர்.
>
> ''இடம்பத்தையும் ஆரவாரத்தையும் பிரயாசத்தையும் பெரும் உறைப்பையும் போதுபோக்கையும் உண்டு பண்ணுகின்ற ஆரியம் முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்லவொட்டாது, பயிலுதற்கும் அறிதற்கும் மிகவும் இலேசுடையதாய்ப் பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமை யுடையதாய், சாகாக் கல்வியை இலேசில்

அறிவிப்பதாய்த் திருவருள் வலத்தாற் கிடைத்த தென்மொழி ஒன்றனிடத்தே மனம் பற்றச் செய்து, அத் தென்மொழிகளால் பல்வகைத் தோத்திரப் பாட்டுகளைப் பாடுவித்தருளினீர்.

''அச்சிறு பருவத்திற்றானே ஜாதியாசாரம் ஆசிரம ஆசாரம் என்னும் பொய்யுலக ஆசாரத்தைப் பொய்யென்று அறிவித்து, அவைகளை அனுட்டியாமல் தடை செய்வித்து, அப்பருவம் ஏறுந்தோறும் ஏறுந்தோறும் எனது அறிவை விளக்கம் செய்து செய்து, என்னை மேனிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்க வைத்தருளினீர்.

''வாலிபப் பருவம் அடுக்கும் தருணத்திற்றானே, அப்பருவத்திற்கு மிகவும் உரிய விடய இச்சைகளைச் சிறிதும் தலையெடுக்கவொட்டாது அடக்குவித் தருளினீர்.

''அவ் வாலிபப் பருவம் தோன்றுதற்கு முன்னரே எல்லா உயிர்கட்கும் இன்பம் தருவதற்கு அகத்தும் புறத்தும் விளங்குகின்ற அருட்பெருஞ் ஜோதி யுண்மைக் கடவுள் ஒருவரே உள்ளார் என்று அறிகின்ற மெய்யறிவை விளக்குவித்தருளினீர். வாலிபப் பருவம் தோன்றிய போதே சைவம், வைணவம், சமணம், பவுத்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த அளவிறந்த சமயங்களும் அச்சமயங்களில் குறித்த சாதனங்களும் தெய்வங்களும் கதிகளும் தத்துவ சித்தி விகற்பங்கள் என்றும் - அவ்வச் சமயங்களில் பலபட விரித்த வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், சாத்திரங்கள் முதலிய கலைகளெல்லாம் தத்துவ சித்திக் கலைகளென்றும் உள்ளபடியே எனக்கு அறிவித்து, அச்சமய ஆசாரங்களைச் சிறிதும் அனுட்டியாமல் தடை செய்வித்தருளினீர். அன்றியும், வேதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த மதங்களும் மார்க்கங்களும் சுத்த சன்மார்க்க அனுபவ லேச சித்தி பேதங்கள் என்று அறிவித்து, அவைகளையும் அனுட்டியாதபடி தடை செய்வித்தருளினீர்...''

- சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெருவிண்ணப்பம்

இவ்விடத்தில், வாசகர்கட்கு ஒரு குறிப்பு. அன்புகூர்ந்து மேலே காட்டிய உரைநடைப் பகுதியை ஒரு தடவைக்கு இரண்டு மூன்று தடவை நிதானமாகப் படித்துப் பாருங்கள். படித்தபின், வள்ளலாரின் அனுபவங்களை நெஞ்சிலே நிலைபெறுவித்துச் சிந்தித்துப் பாருங்கள்.

பல கற்றும் உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலே அறிவுடைமை என்று திருவள்ளுவர் முதலான அருளாளர்கள் அறிவுறுத்தியுள்ளனர். உலகத்தார் எதனை 'உள்ளது' என்கிறார்களோ அதனை 'இல்லை' என்று சொல்லுகின்றவனைப் பேயன் என்றே கணக்கில் பதிவு செய்வார்கள் என்று வாழ்க்கை விளக்கம் அருளுகிறது, திருக்குறள். 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே' என்பது அறிவாளிகளின் தீர்ப்பு.

ஆனால், வள்ளலார் காலத்துச் சமூதாயம் எப்படி இருந்தது?! சாதி ஆசாரம், சடங்கு ஆசாரம் போன்றவையே இறைநெறி என இயங்கிய சமுதாயத்தில் வாழ்ந்தவர், இராமலிங்கர். வேத, புராண, சாத்திர நூல்கள் கூறியவற்றைக் கண்ணையும் கருத்தையும் மூடிக் கொண்டு 'சரி' என உளமாரப் போற்றியது அவர் காலத்துச் சமூகம். வள்ளலார்க்கு வாய்த்த குரு யாரோ, தெரியவில்லை. இறைவனே அவர் உள்ளத்து எழுந்தருளி அறிவூட்டித் தெளிவித்ததாக வள்ளலார் தெரிவிக்கிறார். தெளிவான - மிக எளிய உரைநடையிலே எழுதிய இந்த விண்ணப்பத்தில் சுட்டப்பட்டுள்ள கருத்துகளை வெளிப்படையாகப் பேசி, உலவ முடியுமா? சமுதாய / சமய / தத்துவத் துறைகளில் மேலாக்கம் செலுத்திவந்த 'பெரியவர்கள்' முன் வள்ளலாரின் கருத்து அரங்கேற முடிந்திருக்குமா?

அரசியல் அரங்கிலே வெள்ளை ஏகாதிபத்தியத்தால் ஒடுக்கப்பட்டது இந்திய சமுதாயம். கல்வியாளர்கள் என்று சொல்லிக்கொள்ளக்கூடியவர்களாய் உலவிய 'பெரியவர்கள்' அறிவு வாதத்துக்கும் - ஐயக் குரல்களுக்கும் இடம் கொடாதவர்களாக இருந்த காலம். ஆக, புறத்தும் அகத்தும் முடம்பட்டுப்போன சமுதாயத்தில் வள்ளலார் நெஞ்சம் எவ்வளவு வேதனைப்பட்டிருக்கும் என்பதை, மேலே கொடுத்துள்ள விண்ணப்ப வாசகங்களோடு இணைத்து எண்ணிப் பாருங்கள்.

'நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்' என்று குமுறினார், மகாகவி சுப்பிரமணிய பாரதியார். ஆரிய சமாஜம், பிரம்ம சமாஜம் போன்ற சீர்திருத்த அமைப்புகள் தோன்றியபின்னும் கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போகாத ஒரு சமுதாயத்திலே பாரதியார் புழுங்கிப் புழுங்கி வேதனைப்பட்டார். அப்படியென்றால், பழமையொன்றே மேலாண்மை செலுத்திய சமுதாயத்தில் சமரச சத்திய நெறியைச் சிந்தையிலே பதித்துக்கொண்ட வள்ளலார் எவ்வளவு வேதனைப் பட்டிருப்பார் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

பன்னிரண்டாம் வயதிலேயே இந்த வேதனை வள்ளலாரை அரிக்கத் தொடங்கிவிட்டது. முப்பத்தைந்தாம் வயதிலே 'இத்தனை காலம் பட்ட பாடுகளை நினைத்தால் மலையும் கரையும் இரும்பும் கரையும்' என்று பாடுகிறார், வள்ளலார்.

எனவே, அவர் பட்ட வேதனை பொன் பொருள் பற்றிய வேதனை அன்று; பசி, பட்டினி தரும் வேதனை அன்று; செல்வமும் செல்வாக்கும் இல்லாமையால் விளைந்த வேதனை அன்று. ஊமைச் சமுதாயம் - காரண காரிய விளைவுகளை உணரமாட்டாத நெஞ்சங்கள் - அடிமைச் சிறுமதியில் அகப்பட்டு 'இப்படி ஒரு கேவலத்தில் வாழ்கிறோமே' என்று உணரும் திறம்கூட இல்லாத மூடத்தனம் ... இவற்றால் புழுங்கிய வேதனையையே வள்ளலார் அனுபவித்திருக்கிறார் என்பதை உணரவேண்டும்.

சபாபதி நாவலர், தமையனார் சபாபதிப் பிள்ளை போன்ற அறிஞர் பெருமக்களின் வழியைப் பின்பற்றி வாழ முடியாமையால் உலகியல் நிகழ்ச்சிகளிலே வள்ளலார் ஈடுபடவில்லை. பாலப் பருவத்திலே (12 வயதிலே) தொடங்கி உடலாயுள் வகையிலே முற்றிய பருவம் வரையில் (32 வயது) - இருபது ஆண்டுகள் - ஒரு தலைமுறைக் காலம் நெஞ்சத்துக்குள்ளேயே புழுங்கியிருக்கிறார், வள்ளலார்.

பொருளால் மூடம்பட்டால் ஒரு காலம் இல்லாவிடினும் மற்றொரு காலத்தில் அந்த மூடம் நீங்கிடும் வாய்ப்பு நேரக்கூடும். ஆனால், அறிவு மூடம்பட்டுச் சூனியத்திலேயே ஆழ்ந்துவிட்டால் அந்த மூடம் நீங்குமென்ற நம்பிக்கை இல்லை. இறைவனின் அருளால் தெளிவு பெற்றுவிட்ட வள்ளலாருக்குத் தம் காலத்துச்

சமுதாயத்தின் அவலத்தைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை; அருளாளராகையால் வேதனைப்பட்டிருக்கிறார்.

வேதனைகள் காணாமல் வெற்றியை அடைந்தவர்கள் யாரும் இல்லை. 'தண்ணீர்விட்டோ வளர்த்தோம்? சர்வேசா! கண்ணீரால் காத்தோம் - இப்பயிரை - கருகத் திருவுள்ளமோ' என்று பாடிய கவிஞரின் வாக்கை எண்ணிப் பாருங்கள். நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால் நெஞ்சு பொறுக்குதில்லையே என்று அந்தக் கவிஞர் குமுறினார், இல்லையா? அப்படியெல்லாம் ஞானசீலரும் நூலோரும் நெஞ்சில் சுமந்த வேதனையின் விளைவுதானே சுதந்திர உணர்வு? மனிதர்கள் மட்டுமல்லாமல் உயிர்க்குலம் அனைத்துமே ஆன்ம நேய ஒருமைப்பாட்டில் திளைக்க வேண்டும் என்ற இமாலய இலக்கினைக் குறித்து நின்றவர் வள்ளலார். அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருக்கும் உலகர் அனைவரையும் திருத்துவதற்குத் திட்டமிட்டவர் அவர்; அதற்காகவே அவரை உலகத்துக்கு வரவைத்தது பரம்பொருள் என்கிறார்.

எளிய பயன் என்றால் அடைவதும் எளிமையாக இருக்கும். உலகர் அனைவரையும் திருத்திச் சன்மார்க்க சங்கத்தே இருந்திட வேண்டும் என்ற கடினமான இலக்கினை அமைத்துக்கொண்ட வள்ளலார் பட்ட பாடும் கடினமாகத்தானே இருந்திருக்கும்.

ஒரு தலைமுறைக் காலப் பரப்பில் அவர் உள்ளம் பட்ட பெருவேதனையைத்தான் பிள்ளைப் பெருவிண்ணப்பப் பாட்டிலும் சத்தியப் பெருவிண்ணப்பத்தில் உரைநடையிலும் வள்ளலார் பதிவு செய்திருக்கிறார்.

### புறவுலக நிகழ்ச்சிகள் குறைவு

முப்பத்திரண்டு வயதுவரையில் அவர் என்ன செய்தார்? அகத் தவம் - உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை ஆகிய இரட்டைப் பாங்கு கொண்ட அகத் தவமே வள்ளலாரின் வாழ்க்கை வரலாறு. உள்ளத்துக்குள் தொடர்ந்து நடைபெற்ற உணர்ச்சிக் கொந்தளிப்புகள் பாட்டாகவும் உரைநடையாகவும் புறப்பட்டன; அவர் வரலாற்றிலே நிகழ்ச்சி வடிவிலான சம்பவங்கள் நிரம்பக் காணப்படவில்லை.

சென்னை வாழ்க்கையைத் துறந்து வடலூருக்கும் மேட்டுக்குப்பத்துக்கும் வந்த பிறகுதான் சத்திய ஞானசபை, சத்திய

தருமச் சாலை முதலான நிறுவனங்கள் அவரால் தோற்றுவிக்கப்பட்டன. அதுவரை அகத் தவமே அடிகளின் வாழ்க்கையாக அமைந்தது. புறவுலகம் கண்ணுக்கும் கருத்துக்கும் படுகின்ற நிகழ்ச்சிகள் வள்ளலார் வாழ்விலே நிறைய அமையாமைக்கான காரணத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்.

## வேறு நிகழ்ச்சிகளே இல்லையா?

அப்படியானால் மனித வடிவோடு உலாவிய இராமலிங்கரின் வாழ்க்கையிலே குறிப்பிடப்பட வேண்டிய நிகழ்ச்சிகளே இல்லையா? இப்படி ஒரு கேள்வி இயற்கையாகவே எழத்தான் செய்யும். வள்ளலாரின் வாழ்க்கையையும் வழியையும் கணிக்கப் புகுவோர் இந்தக் கேள்விக்கு விடை காணத்தான் வேண்டும். உலகியல் சார்ந்த லௌகிக நிகழ்ச்சிகளும், ஆன்மிக வளர்ச்சி சுட்டும் சில புறநிகழ்ச்சிகளும் வள்ளலார் வாழ்க்கையில் உண்டு. ஆனால், அவை அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை நாடி, மரணமிலாப் பெருவாழ்வை அடைந்த அடிகளார் வாழ்வில் முக்கியமானவை என்று கொள்ள முடியாது. சிலவே யாகிய அத்தகைய நிகழ்ச்சிகளில் சிலவற்றை இப்போது அறிய முயல்வோம்.

## கற்பித்தார்

தமையனார் சபாபதியைப் போலவோ, அக்காலத்துப் புலவர்கள் பலர் போலவோ இராமலிங்கனார் சொற்பொழிவை - பக்திப் பிரவசனத்தை - த் தொழிலாகவோ தொண்டாகவோ ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், அவரிடம் பலர் தமிழ் பயின்றனர். அவர்களுள் மிகவும் குறிப்பிடற்கு உரியவர் தொழுவூர் வேலாயுத முதலியாராவர்.[5] வள்ளலார் 'சித்தி'க்குப் பின் இவர் மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராக விளங்கினார்.

பெரியவர்களுக்கு உயர்நிலைப் புலமைக்கு உரியவற்றைக் கற்பித்த வள்ளற்பெருமான் சிறுவர்களுக்கு நீதி நூல்கள் கற்பித்ததாகத் தெரிகிறது. சிறுவர்களுக்குக் கற்பித்த போது தாம் செய்த ஒரு தவறு குறித்து வருந்தியதைப் பாடல் ஒன்றில் பதிவு செய்திருக்கிறார். தம்மிடம் பயில வந்த மாணவர்களை அடித்திருக்கிறார்; அது பெருந்தவறு என வருந்தியுள்ளார்

---

5. தொழுவூர் வேலாயுத முதலியார், வள்ளலாரிடம் மாணாக்கராகச் சேர்ந்தது 1849ஆம் ஆண்டில்.

' தொகுப்புறு சிறுவர் பயிலுங்கால், பயிற்றும்
தொழிலிலே வந்தகோ பத்தில்
சகிப்பிலா மையினால் அடித்தனன்; அடித்த
தருணம்நான் கலங்கிய கலக்கம்
வகுப்புற நினது திருவுளம் அறியும்' - *3445*

இவ்வாறு பெரியோர்க்கும் சிறுவர்க்கும் கற்பிக்கும் தொண்டினை எந்த முறையில், எவ்வளவு காலம், எந்த இடத்தில் செய்தார் என்ற விவரம் எதுவும் தெரியவில்லை.

## திருமணம்

*1850*ல் இராமலிங்கரின் இருபத்தேழாவது வயதில் திருமணம் நடந்திருக்கிறது. அன்றைய சமுதாயப் பழக்கத்தின்படி எண்ணிப் பார்த்தால் மிகத் தாமதமாக - மாப்பிள்ளைக்கு உரிய மண வயது கடந்த பிறகு - இந்தத் திருமணம் நடந்திருக்கிறது[6]. இராமலிங்கர் திருமண நாட்டம் கொள்ளாமையாலும் மறுத்துரைத்ததாலும் இந்தத் தாமதம் ஏற்பட்டிருக்கலாம். மனம் ஒப்பித் திருமணம் செய்து கொண்டார் என்று சொல்ல இயலவில்லை. தமக்கை மகள் தனம்மாளை வள்ளலாருக்கு மணம் செய்துவைத்தனர் - ஆம், வள்ளலார் மணம் செய்து கொண்டார் என்று சொல்லாமல், மணம் செய்து வைத்தனர் என்றுதான் சொல்லவேண்டி யுள்ளது. அவர்கள் இருவரும் மணமேடைக்கு அப்பால் கணவன் மனைவியாக வாழவில்லை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சடங்கவி சிவாச்சாரியார் மகளைத் திருமணம் செய்யவிருந்தபோது சிவபிரான் ஒரு கிழ வேதியராக வந்து, அந்தத் திருமணம் நடைபெறாமல் தடுத்தாட்கொண்டார். அதுபோலவே தம் திருமணத்தின்போதும் சிவபிரான் வந்து தடுத்தாட்கொண்டிருக்கலாமே, அப்படி நடக்கவில்லையே என்ற குறிப்பு அமைத்து வள்ளற்பெருமான் ஒரு பாடல் பாடியுள்ளார்.

' முன்மணத்தில் சுந்தரரை முன்வலுவில் கொண்டதுபோல்
என்மனத்தில் நீவந் திடாவிடினும் - நின்கணத்தில்
ஒன்றும் ஒருகணம்வந் துற்றழைக்கில் செய்ததன்றி
இன்னும் ஒருமணஞ்செய் வேன்' - *2019*

---

6. மாப்பிள்ளைக்குப் பதினாறு வயதிலும் மணப்பெண்ணுக்குப் பன்னிரண்டு வயதிலும் திருமணம் செய்விப்பது பழைய மரபு. சிலப்பதிகாரம், சாகுந்தலம் முதலான நூல்களின் செய்திப்படி மணவயது இது. ஷேக்ஸ்பியர் நாடகத்தில் இதே வயது வரையறை இருப்பதாகச் சொல்வர்.

இந்தப் பாடலின் பின் வரிகள் (எனக்குக்) குழப்பம் தந்தாலும், முன் வரிகள் தெளிவாக உள்ளன. சுந்தரர் திருமணத்தைத் தடுத்து நிறுத்தி ஆட்கொண்டது போல் தம் மணத்தைத் தடுத்து நிறுத்திச் சிவபிரான் வரவில்லை என்ற செய்தியைத் தெளிவாகவே சொல்லியிருக்கிறார்.

வள்ளற்பெருமானுக்குப் பெண் இன்ப நாட்டம் இருந்ததில்லை; அவருடைய வாக்கே இதற்கு ஆதாரமாய் உள்ளது:

' இன்னுமிங் கெனைநீ மடந்தையர் முயக்கில்
எய்துவித் திடுதியேல் அதுஉன்
தன்னுளப் புணர்ப்புஇங்கு எனக்கொரு சிறிதும்
சம்மதம் அன்று; நான் இதனைப்
பன்னுவ தென்னே? இதில் அருவருப்புப்
பால்உணும் காலையே உளதால்
மன்னும்அம் பலத்தே நடம்புரிவோய் என்
மதிப்பெலாம் திருவடி மலர்க்கே' - 3392

பால் உண்ணும் பருவத்திலிருந்தே பெண்ணின்ப நாட்டம் தமக்கு இல்லை என்பதைத் தெளிவாகவே தெரிவித்துள்ளார்.

நிலை இப்படி இருக்க, வள்ளலார் ஏன் திருமணம் செய்விப்பதை ஏற்றார்? இந்த வினா எழுவதைத் தவிர்க்க முடியாது. அன்னையாரும் அண்ணனாரும் வற்புறுத்தி, ஏற்கச் செய்தனர் என்று சொல்வதெல்லாம் ஏதோ அமைதி (சமாதானம்) காணும் முயற்சி எனலாமே தவிர, வள்ளலார் இசைந்ததைச் சரியென்று கொள்ள இயலவில்லை.

இப்படி ஏன் நடந்தது? மனமும் அறிவும் ஏற்கின்ற வகையில் விளக்கம் சொல்லமுடியாது என்பதே உண்மை நிலை. ஊழ்வினை என்று அமைதி காணலாம்; அவ்வளவே. ''அடிகட்கு இது இறுதிப் பிறவி. இவ்விறுதிப் பிறப்பிலும் திருமணம் செய்துகொள்ள வேண்டிய ஊழ் அடிகட்கு இருந்தது'' என்று ஊரனடிகள் எழுதியிருப்பதை இங்கு நினைவுகூரலாம்.

வள்ளலார்க்கு 'வாழ்க்கைப்பட்ட' அம்மையாரைப் பற்றிச் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. எழுதியுள்ள வாசகம், கருத்து அருமைப்பாடு உடையது.

''பொருந்தாத் திருமணம், மனித சமுதாயத்திற்கே ஓர் எச்சரிக்கை! தமக்கு நடந்த குழந்தைத் திருமணத்தைப்

பிற்காலத்தில் வெறுத்துப் பாடிய பாரதியார் ... சமுதாயத்தையே சபிப்பார் போன்று கண்ணீரால் கவிதை தீட்டுகின்றார்.

"தனக்கோட்டியாரும் தமக்கு நடத்தப்பெற்ற பொருந்தா மணத்தைப் பற்றி இப்படித்தான் நினைத்திருப்பார். நமது அனுதாபமெல்லாம் மணமகளிடந்தான். ஒரு பிழையும் செய்யாமலே, பெருந்தீமைக்கு இரையானவரன்றோ!

"பாரத சமுதாயத்தில் பெண்களுக்குள்ள தடைகளும் தளைகளும் கொஞ்சமல்ல; ஒரு கோடி என்றாலும் பொருந்தும். இத்தனை தடைகளையும் தாண்டி, மனைவி தழுவிக்கொள்ளும் கொம்பாக நிற்கின்றான் கணவன். அந்தக் கொம்பும், தழுவிய நாளிலேயே கொடியை விட்டு நழுவிச் செல்லுமானால், அவளது பரிதாப நிலைமையை என்னென்று சொல்வது!"

## திருமணத்தை வெறுத்தவரோ?

திருமணமே கூடாது என்ற கொடுங்கருத்தைக் கொண்டவரோ வள்ளலார்? இல்லை இல்லை. தம் மாணாக்கர் இறுக்கம் இரத்தின முதலியாருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் அவரைத் திருமணம் செய்து கொள்ளுமாறு அறிவுறுத்தியுள்ளார். 'திருமணம் வேண்டாம்' என்று இரத்தின முதலியார் முதலில் கருதியிருப்பார் போலும். அக்கருத்தை வள்ளலார் ஏற்கவில்லை. அவர் 27.5.1860ல் இரத்தின முதலியாருக்கு எழுதிய கடிதத்தில் உள்ள ஒரு பகுதி வருமாறு :

".... பரமசிவனிடத்தே மாறாது மனத்தை வைத்துக் கொண்டு புறத்தே ஆயிரம் பெண்களை விவாகஞ் செய்து கொள்ளலாம். அன்றியும், விவாகஞ் செய்து கொண்டாலும் அதனால் வருத்தப்பட நம்மைச் சிவபெருமான் செய்விக்க மாட்டார். ஆதலால் சந்தோஷமாக விவாகத்துக்குச் சம்மதிக்கலாம். தாம் தடை செய்ய வேண்டாம். எந்தக் காலத்தில் - எந்த இடத்தில் - எந்த விதமாக - எந்த மட்டில் - எதை அனுபவிக்க வேண்டுமோ அதை அந்தக் காலம் - அந்த இடம் - அந்த விதம் - அந்த மட்டு - பொருந்தப் பொசுப்பிக்கின்றது திருவருட் சத்தியாயிருந்தால், நமக்கென்ன சுதந்திர

மிருக்கின்றது? எல்லாம் திருவருட் சத்தி காரியமென்று அதைத் தியானித்திருக்க வேண்டும் ....''

## 'மனிதன்'

'பாம்பறியும் பாம்பின கால்'; ஞானி ஒருவரை மற்றொரு ஞானிதான் உணர முடியும், உணர்த்த முடியும்.

திருவொற்றியூர்த் தேரடித் தெருவில் இருந்த ஒரு திண்ணையில் துறவி ஒருவர் தங்கியிருந்தார்; பேர், ஊர் எவருக்கும் தெரியவில்லை. ஆடையின்றி - நிர்வாணமாகவே - அமர்ந்திருப்பார் அவர். தம் புறக்கண்ணால் காணப்படும் மக்கள் யாவரும் மாக்கள் என்று அவர் கருதியிருக்கக் கூடும். விலங்குகள் நடுவில் இருப்பவனுக்கு மறைப்பு எதற்கு என நினைத்தமையினால் போலும் நிர்வாணராகவே இருந்தார், அந்தத் துறவி. போவோர் வருவோரை யெல்லாம் 'மாடு போகிறது', 'நாய் வருகிறது' என்று அடையாளம் சொல்லிக்கொண் டிருப்பது அவர் வழக்கம். ஒருநாள் அவ்வழியில் இராமலிங்கர் வந்தார். 'அடடே, இதோ ஒரு மனிதன் வருகிறான்' என்று சொல்லி, 'மனிதன்முன் நிர்வாணமாக இருக்கிறோமே' என்ற எண்ணத்தால் கைகளால் மறைத்துக் கொண்டாராம்.

## வடிவுடை நாயகி ஊட்டிய அமுது

ஒற்றியூரில் வழிபாடு முடித்து, ஒரு நாள், இராமலிங்கர் தாமதமாக இரவு நெடுநேரம் கழித்து வீடு வந்து சேர்ந்தார். 'அண்ணியார்க்கு அந்த நேரத்தில் தொல்லை கொடுக்க வேண்டாமென்று கருதியவர், கதவைத் தட்டாமல், திண்ணையிலே படுத்துவிட்டார். ஒற்றியூர் அம்மை வடிவுடை நாயகிக்குத் தன் பிள்ளை பட்டினியாய்ப் படுத்தது பொறுக்க முடியவில்லை; அண்ணியார் வடிவில் வடிவுடை நாயகியே வந்து, பிள்ளையை எழுப்பி உணவூட்டிச் சென்றாள். காலையில் வெளியே வந்த அண்ணியார் திண்ணையிலேயே இரவைக் கழித்துவிட்ட இராமலிங்கரைப் பார்த்து, 'இரவு உணவு கொள்ளாமலே இப்படித் திண்ணையிலே இருந்துவிட்டாயே' என வருந்தினார். ''அண்ணி, நீங்கள் இரவில் என்னை எழுப்பி உணவு தந்தீர்களே, மறந்துவிட்டீர்களா'' என எதிர்வினாவில் விடை சொன்னார். வடிவுடையம்மனின் அருள்விளையாட்டு என்பது வள்ளலார்க்குப் புரிந்துவிட்டது.

இங்கே விவரித்த நிகழ்ச்சிக்கு வள்ளலாரின் திருவருட்பாவிலேயே சான்றுகள் உள்ளன. அந்த அகச் சான்றுகள்:

'அன்றொருநாள் நம்பசி கண்டு
அந்தோ தரியாது
நன்றிரவில் சோறளித்த
நற்றாய்காண்' - *965:176*

'தெற்றியிலே நான்பசித்துப் படுத்திருந்த தருணம
திருவமுதுஓர் திருக்கரத்தே திகழ்வள்ளத்து எடுத்தே
ஒற்றியில்போய்ப் பசித்தனையோ என்றுஎனை அங்கெழுப்பி
உவந்துகொடுத் தருளியஎன் உயிர்க்கு இனிதாம் தாயே'
- *4132*

'இருளிரவில் ஒருமூலைத் திண்ணையில்நான் பசித்தே
இளைப்புடனே பசித்திருக்க எனைத்தேடி வந்தே
பொருளுணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியைப்
போக்கிஅருள் புரிந்தஎன்றன் புண்ணியநல் துணையே'
- *4137*

இங்கு எடுத்துக்காட்டியவற்றுள் முதலில் உள்ளது இரண்டாம் திருமுறையில் காணப்படுகிறது; திருவொற்றியூரை மையமாகக் கொண்ட சமயத்தில் (*1835 - 1858*) பாடப்பட்டது. அடுத்துக் காட்டப்பெற்றவை ஆறாம் திருமுறையில் - அருள் விளக்க மாலையில் - இடம் பெற்றவை - அதாவது இவ்வுலகில் அடிகள் உலவிய பிற்பகுதியில் பாடப்பெற்றவை. கடைசிவரை உணவூட்டப்பட்ட அருள் நிகழ்ச்சியை அவர் மறவாமல் போற்றியுள்ளார் என்பது தெளிவு. பின் காட்டிய இரண்டு மேற்கோள்களும் அருள் விளக்க மாலை என்ற தலைப்பிலே பாடப்பட்டவை என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டும்.

சீர்காழிக் குளக்கரையில் ஞானசம்பந்தர்க்கு ஞானப்பால் ஊட்டிய திருவருளுக்கு முடிவு கிடையாது; தொடர்ந்து பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் தன் இருப்பைத் திருவருள் புலப்படுத்தியது என்பதற்கு இந்த நிகழ்ச்சியைச் சான்றாகக் கொள்ளலாம்.

## தண்ணீர் விளக்கெரித்த நிகழ்ச்சி

சென்னை, திருவொற்றியூர் விடுத்து, சிதம்பரம், கருங்குழி, வடலூர், மேட்டுக்குப்பம் என்னும் இடங்களை இராமலிங்கர் நாடியிருக்கிறார். சிதம்பரத்தில் அடிகளைக் கண்ட வேங்கட ரெட்டியார் என்பவர் தம் இல்லத்திலேயே தங்கியிருக்குமாறு வேண்டியுள்ளார். அவ்வேண்டுகோளை ஏற்று, வள்ளலார் கருங்குழி ரெட்டியார் இல்லத்தில் ஏறத்தாழ ஒன்பது ஆண்டுகள் *(1858 - 1867)* தங்கியிருந்திருக்கிறார்.

ரெட்டியார் இல்லத்தில் வள்ளலார் தங்கியிருந்த அறையில் தியான நேரம் போக எஞ்சிய பொழுதில் எழுதுவது அடிகளின் வழக்கம். இரவு நெடுநேரம் விழித்திருப்பதும் நினைந்தால் எழுதுவதும் அவர் வழக்கம். அவ் வறையில் இரவு நேரத்தில் ஒரு விளக்கு எரியும். இரவில் பிறர் உறங்கும் நேரத்திலும் அடிகள் அறையில் விளக்கு எரியும். ஒருவேளை எண்ணெய் தீர்ந்துவிட்டால் விளக்கில் ஊற்றுவதற்கு மண் கலயம் ஒன்றில் எண்ணெய் வைத்திருப்பர். ஒருமுறை அந்தக் கலய விளிம்பு உடைந்துவிட்டது. அதற்குப் பதிலாகப் புதிய கலயம் வாங்கி, அதனைப் பக்குவப் படுத்துவதற்காகத் தண்ணீர் நிரப்பி வைத்திருந்தார்கள்.



கருங்குழியில் இராமலிங்கர் தங்கியிருந்த வீடு

இரவில் எழுதிக்கொண் டிருந்த அடிகள் விளக்கில் எண்ணெய் குறைந்ததைக் கண்டு, கலயத்திலிருந்து ‘எண்ணெய்’ ஊற்றினார். விடிய விடிய விளக்கு எரிந்தது. விடிந்தபின்தான் ரெட்டியார் வீட்டம்மையார் எண்ணெய் வைக்க மறந்ததை நினைந்து அடிகளாரிடம் வருத்தம் தெரிவித்தார். ‘இல்லையே, எண்ணெய் ஊற்றினேனே, விளக்கு எரிந்தகொண்டுதானே இருந்தது’ என்றார்

அடிகள். இல்லாத எண்ணெய் எப்படி வந்தது என்று கவனித்த போதுதான், புதிய கலயத்தில் நிரப்பி வைத்திருந்த தண்ணீர் குறைந்திருப்பது தெரிந்தது. எண்ணெய் என்று நினைத்து வள்ளலார் தண்ணீரை ஊற்ற, எண்ணெயாகவே விளக்கில் நிறைந்திருக்கிறது!

அருளாளர்கள் வாழ்விலே இப்படிப் பல நிகழ்ச்சிகள் நடக்கும். வள்ளலார் வாழ்விலும் சில அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன.

அவருக்கு - அவர் நிலைக்கு அவை பெரியன அல்ல; நமக்கு அவை அரியவை, பெருமைக்கு உரியவை.

'மெய்விளக்கே விளக்கல்லாமல் வேறுவிளக்கு
இல்லையென்றார் மேலோர்; நானும்
பொய்விளக்கே விளக்கெனஉட் பொங்கிவழி
கின்றேன் ஓர்புதுமை யன்றே!
செய்விளக்குப் புகழுடைய சென்னைநகர்
நண்பர்களே செப்பக்கேளீர்
நெய்விளக்கே போன்றொரு தண்ணீர்
விளக்கும் எரிந்தது சந்நிதியின் முன்னே' - 3028

அடிகள், சென்னை நண்பர்களுக்கு எழுதி, இந்த நிகழ்ச்சியை உறுதி செய்திருக்கிறார்.

## சென்னையை விடுத்தது ஏன்?

வளர விரும்பும் இளைஞர்கள் சென்னை போன்ற பெரு நகரங்களிலே தங்குவதையே விரும்புவர். உலகியல் செல்வமும் செல்வாக்கும் பெருக்கி, ஆரவாரமாக வாழ்வதற்குப் பெருநகர வாழ்வு உதவுவது என்பது வளர்வோர் அனுபவத்தில் காண்பதுதான்.

சென்னை - திருவொற்றியூர்ப் பகுதிகளில் அடிகள் தம் 35ஆம் வயதுவரை தங்கியிருந்தார். வள்ளலார் ஏன் சென்னையைத் துறந்து படு நாட்டுப் புறமான கருங்குழி, வடலூர், மேட்டுக்குப்பம்


கருங்குழி வீட்டிலுள்ள படம்

ஆகிய இடங்களை நாடினார்? திருவருட்பாவில் ஒரு விளக்கம் கிடைக்கிறது.

லௌகிகக் களமாக அமைவது புற வாழ்க்கை; மன வளம், ஆன்ம வளம் ஆகியவற்றை நாடிடும் பாங்கு அக வாழ்க்கை யாகும். இக்கருத்தின் விரிவு முன்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. அக வாழ்விலே நாட்டம் கொண்ட இராமலிங்கருக்குச் சென்னை வாழ்வில் பிடிப்பு ஏற்படவில்லை. இவ்வுலக வாழ்வின் பெரும்பகுதியைச் சென்னைச் சூழலிலே கழித்தவருக்கு அங்கே பிடிப்பு ஏற்படவில்லை.

' சகப்புற வாழ்வைப் பார்த்திடில் கேட்டிடில்
சஞ்சலம் உறுமெனப் பயந்தே
நகர்ப்புறத் திருக்கும் தோட்டங்கள் தோறும்
நண்ணியும் பிறஇடத்து அலைந்தும்
பகற்பொழு தெல்லாம் நாள்தொறும் கழித்தேன்
பகலன்றி இரவும் அப்படியே
மிகப்பல இடத்தும் திரிந்தனன் அடியேன்
விளம்பல்என் நீ அறிந்ததுவே' - 3457

மேலும் ஒரு பாடலில்,

' தேட்டிலே மிகுந்த சென்னையி லிருந்தால்
சிலுகுறும் என்றுளம் பயந்தே
நாட்டிலே சிறிய ஊர்ப் புறங்களிலே
நண்ணினேன்; ஊர்ப்புறம் அடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க்
களத்திலே திரிந்துஉற்ற இளைப்பை
ஏட்டிலே எழுதமுடியுமோ? இவைகள்
எந்தைநீ அறிந்தது தானே' - 3467

செல்வமும் செல்வாக்கும் சம்பாதிக்க வேணுமென்றால் (தேட்டு : சம்பாதிப்பது) சென்னை போன்ற நகர வாழ்க்கை நல்லதுதான்; ஆனால், மன வளமும் ஆன்ம வளமும் நிலைகுலைந்து போகும் (சிலுகு உறும்). இப்படி ஓர் அச்சம் அவருக்கு இருந்தது. 'பயந்தேன்' என்றே எழுதுகிறார். சென்னைப் பகுதியில் வாழ நேர்ந்த காலத்தில் தோட்டங்களிலும் காடுமேடுகளிலும் பகல் - இரவு பாராமல் பொழுது கழித்திருக்கிறார்.

சென்னைப் பகுதியில் வாழ்வதைத் துறந்து நாட்டுப்புறம் எனத்தக்க கருங்குழி, வடலூர், மேட்டுக்குப்பம் ஆகிய பகுதிகளில் அடிகள் உலகு காண வாழ்ந்தது பதினாறே ஆண்டுகள்தான். முன்னை வாழ்வுப் பகுதியிலும் அவர் ஆன்ம நாட்டம் கொண்டு அகவாழ்வில் உயர்ந்தார்; என்றாலும், அந்த வளம் விரைவும் நிறைவும் பெற்றது பின்னைப் பதினாறு ஆண்டுகளில்தான்.

அருட்பெருஞ்ஜோதி அகவல் அடிகளின் படைப்பிலே இமயச் சிகரம்; பிள்ளைச் சிறுவிண்ணப்பம், பிள்ளைப் பெருவிண்ணப்பம் ஆகிய திருவருட்பாப் பகுதிகள் அடிகளின் அக வளத்தைத் தெறிப்பாக எடுத்துக் காட்டுவன. ஆனந்தானுபவம், பேரானந்தப் பெருநிலை, இறை திருக்காட்சி, அருள்விளக்க மாலை.... போன்ற ஆன்ம அனுபவ வளங்களெல்லாம் சென்னை வாழ்வுக்குப் பின் விளைந்தவையே. ஆறாம் திருமுறை திருவருட்பாவின் கனிவு சான்ற பகுதி; அப்பகுதி சென்னையை விடுத்தபின்தான் உருவானது.

எனவே, அடிகள் சென்னை வாழ்வைத் துறந்தது, அவர் விரும்பி வேண்டி மேற்கொண்ட முடிவு - பொருத்தமான முடிவு என்பதில் ஐயமில்லை.

## கருத்துக்கு வேண்டும் களம்

புலவர்கள், ஞானிகள் யாவரும் பக்குவப்பட்ட மன வளம் உடையவர்கள். அவர்களின் மன வளத்தில் பலப்பல அரிய கருத்துகள் விளையும். ‘சொல்லு சொல் என்றே இடிக்குது குறளி என் வாயில்’ என்பார் திரிகூட ராசப்பக் கவிராயர். கருத்துகளை வெளிப்படுத்தும்வரை அவர்களின் மனம் அவர்களைப் பெரும்பாடு படுத்திவிடும். அக விளைச்சலைப் புறவடிவில் வெளிப்படுத்திவிட்டால், மனத்துக்கு நிம்மதி. ஆனால், கருத்துகளின் தொகுப்பே உலகத்துக்குப் போதுமென்றால் நூலகங்களைப் பெருக்கிவிட்டால் போதும். அங்குள்ள அலமாரிகளில் அடைபட்டுக் கிடக்கின்ற நூல்கள் மனித சமுதாயத்தின் அனுபவத்தில் கிடைத்த அனுபவக் கனிவின் கருத்துகளைச் சுமந்திருப்பவைதானே!

‘மனத்தினால் எண்ணித்தானே வந்தது இவ் வுலகமாகும்’ என்பது கைவல்லிய நவநீதம். அந்த மனம் - மனத்தில் விளைந்த

கருத்து எப்படி உலகமாக உருக் கொண்டது? எண்ணிப் பாருங்கள். வெறும் எண்ணத் தொகுப்பு ஏற்றத்தைத் தந்துவிடாது.

மலையளவு கருத்தைவிடக் கடுகளவு செயல்தான் சமுதாயத்தை வளப்படுத்தும். நினைப்புகள் நிறுவனங்களாக உருப் பெறும்போதுதான் சமுதாயம் உருப்படும். ஆம், களத்தில் செயல்படாத கருத்தும் அச்சிட்ட புத்தகங்களில் அடைத்து வைத்திருக்கும் கருத்தும் ஒரே தரத்தவைதான். செயல் - செயல் - செயல் மலரும் களமே வேண்டத் தக்கது. நினைப்புகள் நிறுவனங்களில் செயல்பட வேண்டும்.

கைக்குழந்தைப் பருவத்திலே சிதம்பர ரகசியம் இராமலிங்கருக்குத் தெரிந்தது. 'ஆடல் செயும் பருவத்தே பாடல் செயத்' தொடங்கினார்; பள்ளிகளிற் பயிலாமலே கல்வி பயின்று முழுதுணர் ஞானியானார். 'ஓதாதுணர்தல், கந்தகோட்ட வழிபாடு, கண்ணாடியிற் கடவுட் காட்சி, கையேடு படித்தல், கன்னிச் சொற்பொழிவு, கந்தகோட்டத்தையும் திருத்தணிகையையும் பாடுதல்' ஆகிய இவை அடிகளின் ஒன்பதாம் ஆண்டுமுதல் பன்னிரண்டாம் ஆண்டுவரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளாம். பன்னிரண்டாம் அகவையில் முறையான 'ஞான வாழ்க்கையை'த் தொடங்கிவிட்டார். முப்பத்தைந்தாம் வயதுவரை உலகியல் சார்ந்தும் சாராமல் - தாமரையிலைத் தண்ணீராய் - பக்குவ ஆன்மாவாக, அருளாளராக மலர்ந்தார். பிள்ளைச் சிறுவிண்ணப்பம், பிள்ளைப் பெருவிண்ணப்பம், சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெருவிண்ணப்பம் ஆகியவற்றில் வள்ளற்பெருமான் பெற்ற ஆளுமை வளர்ச்சி பதிவு செய்யப்பட்டுள்ளது. ஒரு பகுதி மட்டும் - உரைநடையிலிருந்து - இங்கே காண்போம் :

> "அறிவார் அறியும் வண்ணங்க ளெல்லாமுடைய பேரருட் பெருஞ்சோதிப் பெருந்தகைக் கடவுளே! குமாரப் பருவத்திற்றானே உலகிற் சிறுவர்களுடன் கூடிச் சிறு விளையாட்டியற்றல், சிற்றுண்டி விழைதல், சித்திரம் பயிறல், அதிசயம் பார்த்தல், அசங்கியம் பேசல், அவலத்தழுதல், சிறு சண்டை செய்தல், சிறு குறும்பியற்றல், தன்வசத்துழலல், தாய்வயிற் சலித்தல் முதலிய குற்றங்களில் என்னைச் சிறிதும் செலுத்தாமல் - ஓர் சிறிது அறிவு விளக்கம் புரிந்து - இடம் தனித்திருத்தல்,

இச்சையின்றி நுகர்தல், ஜெபதபம் செய்தல், தெய்வம் பராவல், பிற உயிர்க்கு இரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப் பணிதல், பத்தி செய்திருத்தல் முதலிய நற்செய்கைகளில் என்னைச் செலுத்திய தேவரீரது பேரருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்!''

சராசரி இளைஞரின் நெறியிலிருந்து விலகி வாழ்வதற்கே வள்ளலார் தோன்றினார். அந்த அகவளர்ச்சியும் ஆளுமையும் மேலே காட்டிய சத்தியப் பெருவிண்ணப்பத்தில் மேலும் விளக்கமுறுகின்றன.

''அச்சிறு பருவத்திற்றானே ஜாதியாசாரம் ஆசிரம ஆசாரம் என்னும் பொய்யுலகாசாரத்தைப் பொய்யென்று அறிவித்து, அவைகளை அனுட்டியாமல் தடை செய்வித்து, அப்பருவம் ஏறுந்தோறும் ஏறுந்தோறும் எனது அறிவை விளக்கஞ் செய்து செய்து என்னை மேனிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்க வைத்தருளினீர்.

''வாலிபப் பருவம் அடுக்குந் தருணத்திற்றானே, அப்பருவத்திற்கு மிகவும் உரிய விடய இச்சைகளைச் சிறிதுந் தலையெடுக்க வொட்டாது அடக்குவித் தருளினீர்.

''அவ் வாலிபப் பருவந் தோன்றுதற்கு முன்னரே, எல்லா உயிர்கட்கும் இன்பந் தருவதற்கு அகத்தும் புறத்தும் விளங்குகின்ற அருட்பெருஞ் ஜோதி யுண்மைக் கடவுள் ஒருவரேயுள்ளார் என்றறிகின்ற மெய்யறிவை விளக்குவித் தருளினீர். வாலிபப் பருவந் தோன்றிய போதே சைவம், வைணவம், சமணம், பவுத்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த அளவிறந்த சமயங்களும் அச்சமயங்களிற் குறித்த சாதனங்களும் தெய்வங்களும் கதிகளும் தத்துவ சித்தி விகற்பங்க ளென்றும் அவ்வச் சமயங்களிற் பலபட விரிந்த வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், சாத்திரங்கள் முதலிய கலைகளெல்லாம் தத்துவ சித்திக் கற்பனைக் கலைகளென்றும் உள்ளபடியே எனக்கு அறிவித்து, அச் சமயாசாரங்களைச் சிறிதும் அனுட்டியாமல் தடை செய்வித்தருளினீர். அன்றியும் வேதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம் முதலாகப் பல பெயர் கொண்டு

பலபட விரிந்த மதங்களும் மார்க்கங்களும் சுத்த சன்மார்க்க அனுபவ லேச சித்தி பேதங்கள் என்று அறிவித்து, அனுட்டியாதபடி தடை செய்வித்தருளினீர்''

- ச.சு - ச.ச. பெருவிண்ணப்பம்

பிள்ளைச் சிறு விண்ணப்பம் (3386 - 3409), பெருவிண்ணப்பம் (3410 - 3542) ஆகிய செய்யுள் வடிவான விண்ணப்பங்களைக் கொண்டும் வள்ளற்பெருமானின் ஆளுமை / ஆன்மிக வளர்ச்சியை உணர முடியும்.

உரைநடை விண்ணப்பங்களையும் செய்யுள் விண்ணப்பங் களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து தெளிவு காட்டியவர்கள் எவரேனும் உண்டோ என்பது எனக்குத் தெரியவில்லை. பரம்பரையாகச் சைவநெறியிலே தோய்ந்திருந்த ஓர் அருளாளர் சமரச சுத்த சன்மார்க்க ஞானியாக மலர்ந்த வரலாற்றைத் தெரிவதற்கு இந்த ஒப்பீட்டு ஆராய்ச்சி இன்றியமையாதது என்பதை வற்புறுத்து மளவில் சுட்டியமைகிறேன்.

இந்த விண்ணப்பங்கள் 32 - 35 வயதளவில் எழுதப் பெற்றன என்பதையும் மனங்கொள்ள வேண்டும்.

ஆன்மிக ஆளுமையிலே அடிகளிடம் ஏற்பட்ட மேல்முக வளர்ச்சியிலே அவர் திருவுள்ளத்தில் பல கருத்துகள் உருவாயின. கருத்துகள் கருத்துகளாகமட்டுமே இருந்திருந்தால் 'முன்னமே இந்நாட்டில் தோன்றிய சித்தர்களுள் ஒருவர்' என்ற முடிவுரையோடு வள்ளற்பெருமான் வாழ்க்கை வரலாற்றை முடித்துவிடலாம்.

சமயாதீத சமரச நெறியைச் சித்தர்கள் தெரிவித்திருக்கிறார்கள்; மேலே சிந்தித்துச் சயமவாதிகள் செய்யும் சடங்குகளைச் சாடியிருக்கிறார்கள் - தாயுமானவர் வரையிலும் இந்தப் போக்கைக் கருத்துருவில் காண முடிகிறது.

அவர்களெல்லாம் தெளிந்து தெரிவித்த கருத்துகளைப் பரப்புவதற்கு அவர்களுள் எவரும் எந்தவகையான நிறுவனத்தையும் ஏற்படுத்தியதாக வரலாறு இல்லை. வைணவர்கள் சொல்வதுபோல் ஓரான்வழியாக, குரு-சீடர் உபதேச அளவில் நின்றுவிட்டதே பழைய வரலாறு. உபதேச மாலையுள் ஒரு மலர்க் கொத்தாகத் தம் கொள்கைகள் நின்றுவிடுவதை அவர் விரும்பவில்லை. எந்த ஒரு தத்துவமோ - கொள்கையோ -

நிலையான பயனைத் தந்து மெய்ப்பிக்கப்பட வேண்டுமாயின், சமுதாயத்திலே பொதுவாகப் பரவியாக வேண்டும். அண்மை நூற்றாண்டுகளிலே மனித சமுதாயம் பெற்றுள்ள பரிணாம வளர்ச்சி இது.

கருத்தைச் செயல்வடிவில் நிலைபெறுத்துவதற்கு வள்ளலார் சில அமைப்புகளை உருவாக்கினார். வள்ளலார் நூல்களைப் பதிப்பிப்பதில் மற்றொரு சாமிநாத ஐயராக வாழ்ந்த திரு. ஆ. பாலகிருஷ்ண பிள்ளையவர்கள் இவ்வகையில் தெரிவித்துள்ள வற்றை இங்கே எடுத்துரைப்பது பொருத்தமாக இருக்கும் :

''சுவாமிகளை அடுத்து முயன்றவர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகப்படவே, சன்மார்க்கத்தில் தலைப்பட்டிருக்கும் தம்மையும் அவர்களையும் தொகுப்பாகக் குறிப்பதற்கும் இங்ஙனம் வழிவழியாகச் சன்மார்க்கத்தை அனுஷ்டானத்தில் விளக்கிக் காலக்கிரமத்தில் எல்லா உயிர்களுக்கும் அடைவிப்பதற்கும் சன்மார்க்க சத்திய சங்கம் என்று ஓர் சங்கத்தை அவர்கள் சுமார் 1865-ம் வருஷத்தில் ஸ்தாபித்தார்கள்.

''பின்னர், சன்மார்க்கம் நடைமுறையில் வருவதற்குச் சங்கத்தாரின் பொதுநிலையங்களாக ஒன்றற்கொன்று இன்றியமையாத மூன்று சன்மார்க்கத் தெய்வ நிலையங்களைச் சுவாமிகள் ஏற்படுத்தினார்கள். சன்மார்க்கத்தின் உயிர்நிலை ஜீவகாருண்ய ஒழுக்கம் என்றும், ஜீவகாருண்ய ஒழுக்கத்திற்கு ஆதாரம் சத்விசாரமென்றும், ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் முடிவு தயா வடிவுற்றுக் கடவுளருளைப் பெறுதலென்றும் கண்டோம். ஜீவகாருண்ய ஒழுக்கமாகிய கடவுள் வழிபாட்டினைச் சங்கத்தார் பொதுவில் நடத்துவதற்காகச் சத்திய தருமச்சாலை என்னும் தெய்வ நிலையத்தைச் சுவாமிகள் 1867-ம் வருஷத்தில் வடலூரில் ஸ்தாபித்தார்கள். ஜீவகாருண்ய ஒழுக்கத்திற்கு ஆதாரமான சத்விசாரம் என்னும் தெய்வப் பிரார்த்தனையைச் சங்கத்தார் பொதுவில் செய்யும் பொருட்டு, எல்லா ஜீவன்களிடத்தும் உயிர்க்குயிராகக் கடவுள் இருக்கிறார் என்னும் இயற்கை உண்மையை விளக்கஞ் செய்யும் ஓர் அதி அற்புதமான கட்டடத்தை நிர்மாணித்து,

அதற்குச் சத்திய ஞான சபை யென்று பெயரிட்டு, 1871-ம் வருஷத்தில் வடலூரில் மேலே சொன்ன சத்திய தருமச்சாலையை அடுத்து அதை அவர்கள் ஸ்தாபித்தார்கள். பிறகு, ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் முடிவான சித்தி நிலையைத் தாம் அடைவதைச் சங்கத்தாருக்கு விளக்கி அதை அவர்கள் பின்பற்றுவதற்காகச் சித்திவளாகம் என்னும் தெய்வ நிலையத்தை 1870 முதல் தாம் இருந்த - வடலூரை யடுத்த - மேட்டுக்குப்பமென்னும் கிராமத்தில் 1873-ல் அவர்கள் ஸ்தாபித்தார்கள்.''

- திருவருட்பா : பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பு
வசனப் பகுதி : பாயிரம் பக். 18-19

## அமைப்புகளின் செயல்பாடு

1865ல் சங்கம் தொடங்கியபோது அதன் பெயர் சமரச வேத சன்மார்க்க சங்கம் என்பதாகும். 'வேதம்' என்றால் பொதுவாக இருக்கு, யசுர், சாம, அதர்வண வேதங்களே நினைவில் எழும் அளவுக்கு வடகலை நெறி இங்கே வேரூன்றிவிட்டது. அடிகள் சங்கம் ஏற்படுத்திச் சமரச வேத சன்மார்க்க சங்கம் எனப் பெயரிட்டபோது, ஆரிய வேதங்களை நினைக்கவில்லை. சீவகாருண்ய ஒழுக்கம் என்னும் அவர் நூலிலே, 'இன்னும் இந்தச் சீவகாருணிய ஒழுக்கத்தின் விரிவைச் சமரச வேதத்தில் கண்டுகொள்ளலாம்' என்று குறித்திருக்கிறார். அப்படி ஒரு வேத நூல் நமக்குக் கிடைக்கவில்லை. இதுபற்றி ஊரனடிகள் தந்துள்ள விளக்கம் நம் கவனத்துக்கு உரியது :

''... ஒவ்வொரு சமயத்தார்க்கும் அவ்வச் சமயத்தின் தலையான நூல் வேதமாயிற்று. இவையெல்லாம் சமய வேதங்கள்; ஒரோவொரு சமயத்திற்குமட்டுமே உரியன.

''அடிகள் கண்டதோ சமரச வேதம். சமரச வேதம் சமயங் கடந்தது, சமயாதீதமானது, எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவானது. .... அடிகள் சமரச வேதம் என்றொரு நூல் செய்தார்கள். அது நமக்குக் கிடைக்கவில்லை[7].''

---

7. ஊரன் அடிகள் - இராமலிங்க அடிகள் வரலாறு - பக். 269

இந்தச் சமரச வேதம்பற்றி மற்றொரு செய்தியை ஊரனடிகள் பதிவு செய்திருக்கிறார் :

''திருவருட்பா முதல் நான்கு திருமுறைகளை முதன்முதலாகத் தொழுவூர் வேலாயுத முதலியாரவர்கள் 1867-ஆம் ஆண்டில் வெளியிட்டபோது அதன் இறுதியில் இனி அச்சிற் பதிப்பிக்கப்படுபவை என நாற்பத்து நான்கு நூல்களைக் குறிப்பிட்டுள்ளார். அதில் பொதுவேதம் என்பதும் ஒன்று. அக்குறிப்பு அடிகள் கட்டளைப்படியே தொ.வே. அவர்களால் நூலிறுதியிற் சேர்க்கப்பட்டது. அன்பர் இறுக்கம் இரத்தின முதலியார்க்கு அடிகள் 1866 ஏப்ரலில் வரைந்த கடிதமொன்றில் பொதுவேதம் என்ற நூல் ஒன்றை எழுத விருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.[8]''

'வேதம்' என்ற சொல் குழப்பத்திற்கு இடம் தருவதாக அமைந்தமையால் போலும் 1872ல் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் எனப் பெயர் மாற்றப்பட்டது. பெயர் மாற்றத்துக்கு முன்பே நிறுவப்பட்ட சாலையும் (1867), சபையும் (1872) பெயர் மாற்றம் பெற்றன : ''இன்று தொடங்கிச் சபைக்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான சபையென்றும், சாலைக்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்தியத் தருமச்சாலை யென்றும், சங்கத்திற்குச் சமரச சுத்த சன்மார்க்கச் சமரச சுத்த சன்மார்க்கச் சத்தியச் சங்கமென்றும் திருப்பெயர் வழங்குதல் வேண்டும்'' என்பது வள்ளலார் எழுத்துவாயிலாகப் பிறப்பித்த கட்டளையாகும்.

சங்கம் பொது அமைப்பு; முதன்மை அமைப்பு. அதன் சார்பு நிலையங்களே மற்றவை. தருமச் சாலை பசியாற்றும் அறச்சாலை; ஞானசபை ஒரே வழிபாட்டுக்குரியார் கூடும் சபை. சங்கத்தின் தலைவர் இறைவனே.

' செத்தவர்கள் எல்லாம் திரும்ப எழுந்துவரச்
சித்தம்வைத்துச் செய்கின்ற சித்தியனே - சுத்தசிவ
சன்மார்க்க சங்கத் தலைவனே நிற்போற்றும்
என்மார்க்கம் நின்மார்க்க மே.' - 5621

என்பது வள்ளற்பெருமான் வாக்கு.

8. மேற்படி நூல், பக். 269

இந்த மூன்று அமைப்புகளோடு சித்தி வளாகம் என்ற இடத்தையும் சேர்த்துக்கொள்ளலாம். முன் குறித்த மூன்றும் வடலூரில் அடிகளால் நிறுவப்பெற்றவை. அடிகள் வடலூரையும் விடுத்து, மேட்டுக்குப்பம் என்ற கிராமத்தில் தங்கினார்; அங்கேயே அடிகள் சித்திநிலை உற்றார். அந்தத் திருத்தலத்தின் பெயரே சித்திவளாகம் ஆயிற்று.

அடிகள் நிறுவிய சத்திய தருமச் சாலை தொடங்கிய நாளிலிருந்து இடையறாமல் செயல்பட்டு வருகிறது. அன்று மூட்டிய அடுப்பு இன்றும் எரிகிறது; ஏழைகளுக்கு உணவூட்டி வருகிறது. சபை, அடிகள் காலத்திலேயே மூடப்பட்டுவிட்டது. அடிகள் வகுத்த கட்டுப்பாடுகளைத் தொண்டர்கள் சரிவரப் போற்றாமையால், சபையைப் பூட்டிச் சாவியை அடிகளே வைத்துக்கொண்டார். அடிகள் சித்திக்குப்பின் மீண்டும் சபை திறக்கப்பட்டது. பல்லாண்டுகளுக்குப் பின் குகத்திரு. கிருபானந்த வாரியாரின் திருப்பணியால் சபை பொலிவுற்றது. அதன்பின்னரும் சபைக்குத் திருப்பணி தேவைப்பட்டது. அருட்செல்வர் டாக்டர் மகாலிங்கம் தொண்டினால் புதுப்பொலிவுடன் சபை இன்று விளக்கம் பெற்றுள்ளது.

சத்திய ஞான சபைமட்டுமன்றிச் சத்திய தருமச் சாலையும் சித்தி வளாகத் திருமாளிகையும் அருட்செல்வரின் திருப்பணியால் பொலிவுடன் விளங்குகின்றன.

வள்ளலார் சித்திக்குப்பின் சங்கம் ஓய்ந்தது; தத்துவத்தை உணர்ந்து தெளிந்தவர்கள் ஒடுங்கிவிட்டதால் ஏற்பட்ட விளைவு அது. ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார், ஊரனடிகள், அருட்செல்வர் மகாலிங்கம் ஆகிய சன்மார்க்கிகளால் அண்மைக் காலமாகப் புத்துயிர் பெற்றுச் சமரச சுத்த சன்மார்க்க இயக்கம் மறுமலர்ச்சி பெற்றுள்ளது.

## வள்ளலார் பணிகள்

அருட்பிரகாச வள்ளலார் தத்துவ / சமய ஞானி மட்டுமல்லர். அப்படி அவர் வாழ்வும் பணியும் அமைந்திருக்குமாயின் பாரமார்த்திகம் மட்டுமே அவர் எழுத்தில் காண முடியும். அத்தகைய முடக்குவாதம் வள்ளற்பெருமானின் வாழ்வில் இல்லை.

ஆன்மிகம், பக்தி என்று பேசுவோர் இகவாழ்வை இகழ்வதும் பழிப்பதுமே பணியாகக் கொள்வர். 'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்... பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' எனவும் 'இம்மையே தரும் சோறும் கூறையும், ஏத்தலாம் இடர் கெடலுமாம்' எனவும் திருமுறைகள் முழங்குகின்றன. இகவாழ்வு ஆன்மிகத்துக்கு எதிரானது என்றால், இத்தகைய வாக்குகள் பிறந்திருக்க முடியாது. வள்ளலார் காலம் இந்த நாட்டில் அயலவர் ஆட்சி கொடிகட்டிப் பறந்த காலம். இதன் கொடிய விளைவுகள் பற்றிய நிலவரம் இக்கட்டுரையின் தொடக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது. வெள்ளையர் ஆட்சியிலே 'இராவ்பகதூர்'ப் பட்டம் பெற்ற மனோன்மணீயம் சுந்தரனார், சீவக மன்னன் வாக்கிலே நாட்டுப்பற்றைப் புலப்படுத்துகிறார். 'நாட்டபிமானம் உள்முட்டிய சினத்தீயன்றோ சான்றோர்க்கு என்றுமே உவப்பு' என்பது அவர் கருத்து. வெளிப்படையாக உரிமைக் கிளர்ச்சியில் ஈடுபட்டு, சுதந்திர வேட்கையைப் புலப்படுத்தும் சூழல் அவருக்கு இல்லை; எனினும், உண்மை நாட்டமுடைய கலைஞன் சமுதாயத்தை மறக்க முடியாது; அவரையும் மீறி நாட்டுப் பற்று வீறு கொள்வதை 'மனோன்மணீய'த்தில் காணமுடிகிறது.

பல்லாயிரம் பாடல்கள் பாடிய பக்தி நெறியினராகிய தண்டபாணி சுவாமிகள்[9] அத்துணைப் பக்தி வெள்ளத்திடையே 'ஆங்கிலிய அந்தாதி' பாடிச் சுதந்திர வேட்கையை நேரடியாக இல்லாவிட்டாலும் சுருக்கமாகவேனும் அடிமைப்படுத்திய வெள்ளையரைப் பழிக்கத் தவறவில்லை. சுற்றுச்சூழல் பற்றிய உணர்வு இல்லாதவன் அறிவாளி எனப்பட மாட்டான். உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலைக் கல்லாதவன் எத்தனை நூல்களைக் கரைத்துக் குடித்திருந்தாலும் அறிவிலி என்றே கொள்ளப்படுவான் என்பது தமிழ்மறை.

வள்ளலாரின் சம காலத்தவரான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆயிரக்கணக்கில் சமயப் பாடல்கள் பாடியவர்[9]. 'ஆங்கிலியர் அந்தாதி' என்றொரு நூல் அவரால் அருளப்பட்டுள்ளது. இந்த நாட்டை அடிமைப்படுத்தி ஆண்ட வெள்ளையரின் பழக்க வழக்கங்களைப் பழிப்பது அந்த நூல். தண்டபாணி சுவாமிகள் தமக்கென அமைத்துக்கொண்ட வாழ்வு, பக்தியுணர்வையே போற்றுவது. ஆனாலும், என் தெய்வமே பெரிதெனத் த்ருக்குவதும் பிற தெய்வங்கள் சிறியவையென வெறுப்பதும் அவருக்கு உடன்பாடன்று.

9. இந்த நூல் வரிசையில் தண்டபாணி சுவாமிகள் பற்றித் தனியே நூல் வெளிவந்துள்ளது.

‘ காளிகறுப் பண்ணன்முதல் சிலவற்றாயும்
கடவுளே விளங்குகின்றான்’ - தியானானுபூதி

எனவும்,

‘ முக்கண்ணும் மான்மழுவும் பொருந்தும் ஈசன்,
முடியில்மயிற் பீலியணி முகுந்தன், ஐந்து
கைக்கணநாயகன், வேலும் தண்டும் தாங்கும்
கரமுருகன், முலைமுதிராக் கவுரி, கீழத்
திக்கதனில் எழுகதிராம், ஆறு மூர்த்தம்
சிறந்தனஎன் றறிவறிந்தோர் செப்பக் கேட்டேன்
எக்கடவுட்(கு) எவர்உரிமை பூண்டுற்றாலும்
எனக்கதுசம் மதம்; முடிவில் ஏகம் தானே’
- தியானானுபூதி

இந்து சமயத்தாரின் அறுசமயக் கடவுளரையும், சமுதாயக் கீழ்த்தட்டில் உள்ளோர் பெரும்பாலும் போற்றும் காளி, கறுப்பண்ணன் போன்ற கடவுளரையும் சமமாகவே தண்டபாணி சுவாமிகள் போற்றினார் என்பது இதனால் தெளிவாகிறது.

நம்மாழ்வார், தாயுமானவர் போன்ற முன்னைச் சான்றோர்களும் தெய்வ சமரசத்தைக் குறித்திருக்கிறார்கள். என்றாலும், புரோகித நெறியா(க்)கிவிட்ட இந்து சமயத்தவரிடையே தெய்வ சமத்துவம் ஏறத்தாழ மறைந்தேவிட்டது. வள்ளலார் காலத்தே சமரச நெறி, சமுதாய ஆக்கத்திற்கு இன்றியமையாதது என்ற உணர்வு ஓங்கியது. இது காலத்தின் கட்டாயம்.

‘ பெருகியபேர் அருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகைஎன் கணவர்திருப் பேர்புகல்என் கின்றாய்
அருகர்புத்தர் ஆதிஎன்பேன் அயன்என்பேன் நாரா
யணன்என்பேன் அரன்என்பேன் ஆதிசிவன் என்பேன்
பருகுசதா சிவம்என்பேன் சத்திசிவம் என்பேன்
பரமன்என்பேன் பிரமம்என்பேன் பரப்பிரமம் என்பேன்
துருவுசுத்தப் பிரமம்என்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவம் என்பேன்இவை சித்துவிளை யாட்டே’ - *5801*

எனவும்,

'சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்
சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துமோ என்றாய்
பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய்
பித்தர் என்றே பெயர்படைத்தார்க்கு எப்பெயர் ஒவ்வாதோ
அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயர் என்பெயரும்
அவர்பெயரே எவ்வுயிரின் பெயரும்அவர் பெயரே
சிற்சபையில் என்கணவர் செய்யும்ஒரு ஞானத்
திருக்கூத்துக் கண்டளவே தெரியும் இதுதோழி' - 5802

துவைதம், அத்துவைதம், விசிட்டாத்துவைதம், சைவ சித்தாந்தம் ஆகிய தத்துவச் சான்றோர்கள் தெய்வப் பெயர்கள் பலவற்றைக் குறித்தாலும் அவையனைத்தும் ஒரே பரம்பொருளைக் குறிப்பனவே. அகச் சமயங்கள் போற்றும் தெய்வப் பெயர்கள் மட்டுமன்றிப் புறச்சமயக் கடவுளர் பெயரும் ஒரே பரம்பொருளைக் குறிப்பனவே. இப்படியெல்லாம் சொன்னதோடு வள்ளலார் நிறுத்தாமல், 'என் பெயர் உன் பெயரும் அவர் பெயரே' என்று தெளிவுபடுத்துகிறார். சிவபிரானைச் சுந்தரர் 'பித்தன்' என்று பழித்தார்; அந்தப் பெயரைக் கொண்டே தேவாரம் பாடச் சொன்னார், சிவபெருமான். 'பித்தர் என்றே பெயர் படைத்தாக்கு எப்பெயர்தான் பொருந்தாது!?'

அரசியல் அரங்கிலே சமரச ஒருமைப்பாடு தேவை என்பதால் சர்வதேச சங்கம் என முதல் உலகப்போர் முடிவிலும் ஐக்கிய நாடுகள் மன்றம் என இரண்டாம் உலகப் போர் முடிவிலும் தோன்றின. ஆனால், நோக்கத்தை ஒழுங்காகச் சொல்லிக்கொண்ட அரசியல்வாதிகள் வல்லரசு - மெல்லரசு எனப் பிரித்து, ஒருமைப்பாடு முகிழ்த்துவிடாமல் பார்த்துக் கொள்கிறார்கள். இதே நிலைதான் சமய சமரச சங்கத்தின் நிலையும். பொதுமக்கள் சமய / தத்துவக் கோட்பாடுகளைப்பற்றி அறிந்துகொள்ள விடாமல் - சடங்குகளிலேயே அவர்களை முடக்கி வைத்துவிட்டுச் சமயத் தலைவர்கள் பலவாறு முரண்பாடுகளையும் வேற்றுமைகளையும் பெருக்கிவிடுகிறார்கள். சமயத்தின் பெயரால் 'அரசியல் பண்ண'வும் அவர்கள் தயங்குவதில்லை.

காலத்தின் கட்டாயத்தை உணர்ந்த வள்ளலார், சமரச சுத்த சத்திய சன்மார்க்க சங்கத்தை உருவாக்கினார்; ஆனால், நோக்கம் நிறைவேறியதாகச் சொல்ல முடியவில்லை.

பல்வேறு சமயங்கள் / தத்துவங்களின் சூழலிலேயே வாழ்ந்தாலும், பாரதத்தின் அரசியல் அடிமை வாழ்வை வள்ளலாரால் ம(றை)றக்கமுடியவில்லை. இந்த நாட்டில் எத்தகைய ஆட்சி விளங்க வேண்டும் என்பதை,

‘ அச்சந் தவிர்த்தே அருளிற் செலுத்துகின்ற
விச்சை அரசே விளங்கிடுக – நச்சரவம்
ஆதிக் கொடியஉயிர் அத்தனையும் போய் ஒழிக
நீதிக் கொடிவிளங்க நீண்டு’ - *5617*

என்று விளக்கியுள்ளார். மேலும்,

‘ கருணைஇலா ஆட்சிகடுகி ஒழிக
அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க – தெருள்நயந்த
நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்து
எல்லோரும் வாழ்க இசைந்து’ [10] - *5618*

என அவர் பாடியதையும் நோக்க வேண்டும். ‘அஞ்சி அஞ்சிச் சாவார் - இவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே’ எனவும் ‘அச்சம் தவிர்’, ‘ஆண்மை தவறேல்’ எனவும் ‘தனி ஒருவனுக்கு உணவிலையெனில் சகத்தினை அழித்திடுவோம்’ எனவும் தேசியமே பாடிய விடுதலைக் கவிஞர் பாடியவற்றுக்கு வித்து வள்ளலாரில் உள்ளது என்று கூறுவது மிகையாகாது.

தாம் உருவாக்கிய கொள்கைகள் உருவம் பெற்று உலவுவதற்கு எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்று வகையிலும் வள்ளலார் செயல்பட்டுள்ளார். இங்கே காட்டியது சொல்வதில் செயல்பாடு.

காலத்தின் கட்டாயத்தை உணர்ந்து சங்கமும் சபையும் அமைத்தது செயல்வடிவான பணி.

### சமயமும் சாதியும்

சமயக் கருத்துகளையும் உணர்வுகளையும் மக்களிடையே பரப்புவதற்கு என்றே தோன்றியவை திருமடங்கள். ஆனால், நம் மடாலயங்கள் சமயப் பணி மட்டுமே செய்கின்றன என்று சொல்ல முடியுமா? இன்னின்ன மடங்களின் தலைமையும் நிர்வாகமும்

10. இந்தப் பாடல்கள் 6ஆம் திருமுறையில் உள்ளவை என்பதைச் சிந்தித்து உணர வேண்டும்.

இன்னின்ன சாதியார்க்கே உரியன என்பதில் வன்கண்மை காட்டாத திருமடங்கள் உண்டா? இது சம்பிரதாயம் என்றும் தொன்றுதொட்டுவரும் வழக்கம் என்றும் சத்தில்லாத வாதங்களைச் சொல்லிச் சமய மடங்களைச் சாதி மடங்களாக ஆக்கி வைத்திருக்கிறோம் என்பதை மறைப்பதில் பயனில்லை.

இப்படி ஒரு கொடுமைக்கு மார்க்கண்டேய ஆயுளை வழங்கிவிட்டு 'இளைஞர்கள் சமய நாட்டம் அற்றவர்களாக இருக்கிறார்கள்' என்று அலுத்துக்கொள்வதில் பயன் விளைய முடியுமா!

' சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும்கொண்டு என்செய்வீர்'
- திருநாவுக்கரசர் - 1674

என ஏழாம் நூற்றாண்டிலே குரல் கொடுத்தவர் அப்பர் சுவாமிகள். மணிவாசகரும்,

' சாதிகுலம் பிறப்பென்னும்
சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை
அல்லல்அறுத் தாட்கொண்டு....' - திருவாசகம் 479

என்ற தொடர்களிலே சாதி குலம் பிறப்பு என்று பேசுவோன் சுழியில் சிக்கித் தடுமாறுகிறான் என விளக்கினார்.

சைவம் மட்டுமா? வைணவ நெறியும் சாதிக் கொடுமையைச் சாடுவதில் இளைத்தது அன்று. பிராமணரல்லாத குருவை அவமதித்ததைப் பொறுக்கமாட்டாமல் உடையவர் தம் மனைவியையே துறந்தார், இல்லையா? திருப்பாணாழ்வாரைத் திருவரங்கம் பெரிய கோயில் நம்பிகள் தோளிலே சுமந்து சன்னதியில் சேர்க்கவில்லையா?

சாதியைப் போற்றி ஏற்றத் தாழ்வு கற்பிப்பவன் இறையடியவனாக இருக்க முடியாது.

சாதிக் கொடுமையால் தனி வாழ்க்கைகள் பல சரிந்தன; வள்ளலாரின் தொண்டுக்கும் சாதிக் கொடுமை எதிரணி வகுத்தே நின்றது. அருட்பா - மருட்பாப் போராட்டத்தின் பின்னணியில் சாதிப் பேய் ஆட்டம் போட்டதைத் திரையிட்டு மறைத்துவிட முடியுமா?

பல திறங்களிலே சாதி, சமய, கோத்திர, சாத்திரக் கோளாறுகள் வள்ளலாரின் சமரசப் பணிக்குத் தடையாக இருந்தன. அவர் காலத்திலேயே சமுதாயத்தில் முதலிடம் பெற்று, மறுமலர்ச்சியை ஊட்டியிருக்க வேண்டிய சமரச சத்திய சன்மார்க்கம் தளர்ச்சி அடைந்தது.

காலத்துக்குக் கட்டாயம் வேண்டிய கருத்துகளைத்தான் வள்ளலார் வகுத்து விரித்தார். ஆனாலும், அவர் தோற்றுவித்த சமரச சன்மார்க்க சங்கம் நெடிது நிலைத்துச் செயல்படவில்லை. காரணம், அவரைச் சுற்றிக் கிடந்த கூட்டம் 'அற்புத'ங்களில் மயங்கியும் அற்புதங்களை விரும்பியும் சேர்ந்தது. அவருடைய கொள்கைகளைப் பற்றி அறிந்த சமுதாயத் 'தலைவர்'கள் அவற்றைச் சீரணிக்க முடியாமல் நேராகவும் மறைமுகமாகவும் எதிர்த்தனர். தீய சக்திகள் எப்போதுமே வேகமாகவும் தீவிரமாகவும் செயல்படும் என்பது உலக வரலாற்றுப் பாடம்.

வள்ளற்பெருமானின் தலைமைச் சீடர் என்ற தகுதிக்கு உரிய தொழுவூர் வேலாயுத முதலியார், பிரமஞான சபையினருக்கு அளித்த வாக்குமூலத்தின் சில பகுதிகள் வருமாறு :

> "அவர் சாதி வேற்றுமைகளைக் கண்டித்துப் பேசியதால் அனைவரது பெரும் பாராட்டுக்குரியவராக இல்லை. ஆயினும், எல்லாச் சாதியாரும் பெருந்திரளாக அவரைச் சூழ்ந்திருந்தனர். உபதேசங்களைக் கேட்டுப் பயன்பெற அவர்கள் வரவில்லை. சித்தாடல்களைக் கண்டு களிக்கவும் அவற்றின் பயனைப் பெறவுமே வந்தனர். சித்தாடல்களில் அவர் வல்லவர். இயற்கைக்கு மேம்பட்ட எதையும் அவர் ஒப்புவதில்லை. தமது மார்க்கம் தூய அறிவியலையே அடிப்படையாகக் கொண்டதென்று இடையறாது வற்புறுத்துவார்...[11]"

பகுத்தறிவும் அறிவியல் செல்வாக்கும் ஓங்கியுள்ள இக்காலத்தில்கூட 'ஆன்மிக'ர்களில் எவருக்கு விளம்பரப்

11. தொழுவூரார் பிரமஞான சபையினருக்கு ஏன் வாக்குமூலம் கொடுத்தார் என்பது பற்றித் தெளிவான விவரம் தெரியவில்லை. அதில் அவர் தெரிவித்துள்ள கருத்துகள் யாவற்றையும் அப்படியே ஏற்றுக்கொள்வதும் சங்கடம் தான். ஆனால், வள்ளலாரின் வரலாற்றுக்கு முற்றிலும் பொருத்தமான செய்திகளும் தொழுவூராரின் வாக்குமூலத்தில் இருப்பதை மறப்பதற்கில்லை.

பெருக்கமும் ஆரவாரக் கூட்டமும் பெருகியுள்ளன என்பதை எடுத்துக்காட்டுகள் தந்து விளக்க வேண்டியதில்லையே!

மூட நம்பிக்கைகளைப் புறக்கணித்துக் கண்டித்த வள்ளலாரைச் சுற்றிச் சேர்ந்த கூட்டம் கட்டுப்பெட்டிகளாக இருந்ததோடு அற்புதச் சித்தாடல்களிலேயே நாட்டம் கொண்டது. சீர்திருத்தக் கருத்துகளைக் கேட்ட 'தலைவர்'களோ இந்த இயக்கத்தை ஒடுக்குவது எப்படி என்ற நோக்கிலேயே செயல்பட்டார்கள். 'கணக்கன் கடவுளைக் காட்டுவானாம்' என்பது போன்ற தொடர்கள் சன்மார்க்க சங்கத்தைத் தாக்குவதற்கென்றே தோன்றின. கருணீக மரபில் வந்தவர் வள்ளலார்; அவர் சாதிப்பெயரைச் சொல்லியே மறுப்பியக்கம் நடத்தியது அன்றைய சமுதாயம்.

இராமானுசமும் தாயுமான தத்துவமும் ஓங்கி ஒலிக்க முடியாமல் போன வரலாற்றின் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பதிப்பே வள்ளலார் வரலாறு.

அவருக்குக் கருத்து வளம் இருந்தது; அதைச் செயல்படுத்தச் சங்கமும் இருந்தது. ஆனால், சமய அரங்கின் இருளும் சாதிப் பிரிவின் கொடுமையும்தான் அக்காலத்தில் வெற்றிக் கொடி தாங்கின.

## கருங்குழி > சித்தி வளாகம்

ஆரவாரத்துக்கும் ஆடம்பரத்துக்கும் இடமான (சென்னை) நகரச் சூழல் இராமலிங்கரின் மன ஒழுங்குக்கு ஏற்றதாக இல்லை. சென்னையை விடுத்துத் தல யாத்திரையாகத் தில்லைப் பதியை அடைந்தார். அங்கே - இறையருள் வலத்தால் - அவரைக் கண்ட கருங்குழி வேங்கடரெட்டியார் தம் ஊருக்கு வந்து தங்குமாறு கேட்டார். 1858 முதல் 1867 வரை, ஒன்பது ஆண்டுகள் ரெட்டியார் வீட்டில் ஓர் அறையே வள்ளலாரின் உறைவிடமாயிற்று.

அங்கே தங்கியிருந்த காலத்தில்தான் சமரச சுத்த சன்மார்க்கத் தத்துவச் சிந்தனை ஒரு வடிவம் பெற்றது; அதனைப் பரப்புவதற்கு உரியதாகச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தை உருவாக்கியதும் கருங்குழி வாசத்தின்போதுதான்.

1865ஆம் ஆண்டில் சங்கத்தை நிறுவிய அடிகளார் 1867ல் சத்திய தருமச் சாலையை வடலூரில் ஏற்படுத்தினார். அதன்பின் தருமச்சாலையே அடிகளுக்கு உரிய உறைவிடமாயிற்று. 1870ல்



சத்திய தருமச்சாலை

மேட்டுக்குப்பம் (சித்திவளாகம்) சேர்ந்தார். மேட்டுக்குப்பத்தில் இருந்த காலத்தில்தான் 1872ல் வடலூரில் சத்திய ஞான சபையை நிறுவினார்.

சென்னைப் பகுதியில் இருந்தவரையில் திருவொற்றியூர், திருத்தணிகை போன்ற தலங்களுக்குச் சென்று வழிபடுவதும், புலவர் பெருமக்களின் நூல்களுக்குச் சாற்றுக்கவிகள் வழங்குவதும், நூல் பதிப்பிப்பதுமான பணிகளையே இராமலிங்கர் செய்து கொண்டிருந்தார். அவருடைய ஆன்மிக ஆளுமை இறைவனருளால் வளர்ந்துவந்ததேனும், அதுவே வாழ்வாய் அமைந்தது என்று சொல்ல முடியாது. அவர் ஆற்றிவந்த தமிழ்ப் பணிகளிலே குறை காண்பதற்கு எதுவுமில்லை. ஆனால், 'பத்தோடு பதினொன்று, அத்தோடு இது ஒன்று' என்று கணிக்கப்படுவதற்கு



தருமச் சாலையின் இன்றைய தோற்றம்

அவர் பிறக்கவில்லை. இராமலிங்கரின் ஆன்மார்த்த ஆளுமை வளர்வதற்குச் சென்னை நகரச் சூழல் உரியதன்று. அருட்பேராற்றல் கருங்குழி வேங்கடரெட்டியார் வடிவில் செயல்பட்டது. இராமலிங்கர் கருங்குழிவாசியானார். பரம்பரை பரம்பரையாகச் செழித்துவந்த சைவ நெறியின் மேனிலை வளர்ச்சியைப் பெறுவதற்கு இந்த உறைவிட மாற்றமே உதவியது என்று சொல்ல வேண்டும்.

வள்ளற்பெருமானின் சிந்தனைகள் நிறுவனப் பணிகளாக - செயலுருவம் பெற்றது கருங்குழியில் தொடங்கியது. சங்கம் வந்தது; சாலை தோன்றியது; சபை உருப்பெற்றது. சமரச சுத்த சன்மார்க்க நெறி ஒரு முழுவடிவு பெற்றது.

'அகத்தே கறுத்துப் புறத்துவெளுத்
திருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத்து அடைவித்திட, அவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்
திடுதற் கென்றே எனைஇந்த
உகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன் அருளைப் பெற்றேனே' - 5485

'ஆடாதீர் சற்றும்
அசையாதீர் வேறொன்றை
நாடாதீர் பொய்யுலகை
நம்பாதீர் - வாடாதீர்
சன்மார்க்க சங்கத்தைச்
சார்வீர் விரைந்தினிஇங்(கு)
என்மார்க்க மும்ஒன்
றாமே' - 5527

'மார்க்கமெலாம் ஒன்றாகும்
மாநிலத்தீர் வாய்மைஇது
தூக்கமெலாம் நீங்கித்
துணிந்துளத்தே - ஏக்கம்விட்டுச்
சன்மார்க்க சங்கத்தைச்
சார்ந்திடுமின் சத்தியம்நீர்
நன்மார்க்கம் சேர்வீர்இந்
நாள்' - 5528

'வையகத்தீர் வானகத்தீர் மற்றகத்தீர் நுமது
வாழ்க்கையெலாம் வாழ்க்கையென மதித்துமயங்காதீர்
மையகத்தே உறுமரண வாதனையைத் தவிர்த்த
வாழ்க்கையதே வாழ்க்கையென மதித்ததனைப் பெறவே
மெய்யகத்தே விரும்பி இங்கே வந்திடுமின் எனது
மெய்ப்பொருளாம் தனித்தந்தை இத்தருணந் தனிலே
செய்யகத்தே வளர்ஞான சித்திபுரந் தனிலே
சித்தாடல் புரிகின்றார் திண்ணம்இது தானே' - 5574

மேலே குறித்த வாக்குகள் கருங்குழி - வடலூர் - மேட்டுக்குப்ப வாழ்விலே உருவானவற்றுள் சில; இந்தப் பாடல்களில் ஆன்மிகத் தூண்டல் மட்டுமே யன்றிப் பிரசார வேகமும் இணைந்திருப்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

### சபை > சித்திவளாகம்

கருங்குழியில் வாழ்ந்த சமயத்தில்தான் (1858 - 1867) சங்கம் வடலூரில் (1865ல்) உருவாக்கினார்; 1867ல் சத்திய தருமச்சாலையை நிறுவினார்; சாலை உருவானபின் வடலூரே வள்ளலாரின் உறைவிடமானது. நான்காண்டுகள் - 1870 வரை - சாலையிலே தங்கி, அன்பர்களிடையே சமரச சன்மார்க்க நெறிகளை உபதேசித்து வந்தார். பின்னர் அவர் தவநெறிக்கு மேலும் தனிமை தேவைப்பட்டதை உணர்ந்து, வடலூரிலிருந்து தென்திசையில் மூன்று கிலோமீட்டர் தொலைவிலுள்ள மேட்டுக்குப்பத்துக்கு இடம் பெயர்ந்தார். அங்கு அவர் தங்கிய இல்லம் வைணவ அடியவர்கள் தங்குவதற்கென அமைந்த திருமாளிகை என்பது குறிப்பிடத்தக்கது. அவர் தங்கி, சன்மார்க்கத்திற்கே உரிய சித்தியைப் பெற்றாராதலின், அந்தப் பகுதிக்கே சித்திவளாகம் எனப் பெயர் வாய்த்துவிட்டது.

1874 ஜனவரி மாதம் 30ஆம் நாள் - தைப்பூசம்; அன்றிலிருந்து வள்ளற்பெருமானின் பூதவுடலைப் புறக்கண்களால் காணும் பேற்றினை இந்த உலகம் இழந்தது.





*சித்தி வளாகம் (பழைய தோற்றம்)*



*சித்தி வளாகம் (இன்றைய தோற்றம்)*



சத்தியஞான சபை (பழைய தோற்றம்)



சத்தியஞான சபை (வாரியார் சுவாமிகள் திருப்பணிக்குப் பின்)



சத்தியஞான சபை – அருட்செல்வர் திருப்பணிக்குப் பின்

# 3. வள்ளலார் அருளிச்செயல்கள்

‘ காவலர் ஈகை கருதுங்கால் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசுஒவ்வா - பூவின்நிலை
ஆகாப் பொருளை அபயனளித் தான்புகழாம்
ஏகாப் பொருளளித்தேன் யான்’

என்பது ஒரு பழம்பாடல். உலகியற் பொருள்கள் எந்த அளவுக்கு ஓங்கியிருந்தாலும் நிலையானவை அல்ல; ஆனால், புகழுக்கு ஒரு வடிவம் கொடுக்க எழும் பாடல்கள் நிலையானவை. சான்றோர்களின் இலக்கியங்கள் என்றும் பசுமை மாறுவதில்லை. பரம்பரை பரம்பரையாகப் படிப்போர் காணும் நயங்களால் இலக்கியங்கள் என்றென்றும் குன்றா வளமுடையனவாக வாழ்கின்றன, வாழும். சிந்திக்கின்ற நெஞ்சங்களுக்கு அவை என்றென்றும் எவ்விடத்தும் வழிகாட்டுவன. வள்ளற்பெருமானின் படைப்புகளும் - அவரைப் போலவே - மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவை.

வள்ளலாரைப் பற்றி அறியவும், ஆராய்ந்து கணிக்கவும் இன்று நமக்குக் கிடைப்பவை அவர் வழங்கியருளிய எழுத் தோவியங்களே. அவற்றைத் தொகுப்பு நோக்கிலும் பகுப்பு நோக்கிலும் கண்டால், அவர் -

உரைநடை நூலாசிரியர்
உரைநடை அறிக்கைகளின் ஆசிரியர்
உரையாசிரியர்
பதிப்பாசிரியர்

என உணர முடிகிறது.

இவற்றின் மேலாக அவர்

கவிஞர்

என்பது மிகத் தெறிப்பாகக் காணமுடிகிறது[1].

உரைநடையாயினும் செய்யுளாயினும் வள்ளலார் படைப்பிலே மூன்று நிலைகளைக் காணமுடிகிறது.

1. மருட்டும் புலமை
2. இரங்கும் கருணை
3. கடந்த அனுபவம்

மருட்டும் புலமையைப் புலப்படுத்தும் வள்ளலார் வாசகங்கள் முற்றாகக் கற்றுத் துறைபோகிய பெரும்புலவர்களையும் மருட்டிவிடும்; இரங்கும் கருணையால் அவர் எழுதியவை எளிமைக் களஞ்சியமாய் எவரும் பயன்பெற்றிட வேண்டுமென்ற கருணையின் விளைவுகள்; இவை இரண்டுக்கும் வேறாக / மேலாக வள்ளலார் பெற்ற ஆன்மிக அனுபவங்களை வரிவடிவில் வடித்தெழுதிய திருமொழிகள் - இவற்றை வெற்றுப் புலமை கொண்டும் கலைக் களஞ்சியங்களின் உதவியைக் கொண்டும் புரிந்துகொள்ள முயல்வது வீண்; இறையருளும் குருவருளும் கிடைக்கும் ஆசூழ் இருந்தால் இவற்றை அணுக முயலலாம்.

இனி, இம்மூவகை எழுத்துகளுக்கும் எடுத்துக்காட்டுகள் காண்போம் :

**உரைநடை : மூன்று வகை**

*1.* அடிகள் தொண்ட மண்டல சதகம் என்னும் நூலைப் பதிப்பித்தார். அந்த நூலின் பெயருள் அடங்கியுள்ள இலக்கணக் குறிப்பினைத் தொடக்கத்தில் பின்வருமாறு எழுதியுள்ளார் :

> ''தொண்ட மண்டல சதகம் - ஒருவாறிதனிலக்கணம் விரிக்கின்றார். இஃது மூவகை யொழி, இருவகைச் சந்தி, முத்திறத் தொகை, ஒருதலை நோக்க முந்நிலை யிலக்கணச் செந்நிலைத் தொடர்.''

---

1. சுருங்கச் சொன்னால், இராமலிங்க வள்ளலார், தென்மொழி - வடமொழி ஆகிய இருமொழிப் புலவர்; கவியரசர்; தமிழ்நூல் பதிப்பாசிரியர்; உரையாசிரியர்; வசனகர்த்தா; போதகாசிரியர் - ஆகிய இத்தனை தகுதிகளையும் ஒருங்கே பெற்றிருந்தார். - ம.பொ.சி. : பக். 341

இந்தக் கடுந்தொடர் வெற்றாரவாரச் சொற்கூட்டம் என்று சொல்வதற்கு நான் இன்னும் பல பிறவிகளில் தமிழ்ப் புலவனாகப் பிறக்க வேண்டும். 'தெளிவின்றி ஏதோ சொல்கிறார்' என்று நான் சொல்ல முடியாது. 'தெளிவின்றி' என்பது என் அறிவுத் தெளிவின்மையாகுமே யன்றி, எழுதியவரை அச்சொல் சுட்டாது, சுட்டமுடியாது.

பின்வருவது ஒரு கடிதத்தில் வருகிறது :

> ''உணர்ந்தோரா னியல்வகைய வின்ன வென்றவற்றிற் பின்மொழி மதிக்கு முன்மொழி மறைக்கு முதலீறு விளங்க முடிப்பதாய பின்மொழி யடைசார் முன்மொழி ஞாங்கர் விளங்கிய ஞானிகட்கு''

இவ்வாறு தொடங்கும் கடிதம் - இப்படியே விரிந்து சென்று,

> ''இதனோ டீரிரு வகைப்பட்ட வோர்சார் புதுநிலஞ் செலவுய்த்தனம். வேண்டுழி வேண்டியாங் குய்க்க மற்றைய பின்னர் வரைதும்.
>
> இற்றே விசும்பிற் கணைச்சலம்
>
> இங்ஙனம்
>
> நங்கோச் சோழன் வீரமணி
>
> சூடியார் திருவாணைப்படிக்கு''

என்று முடிகிறது. இடையிடையே காணப்படும் அன்மைச் சுட்டு, ஏழாவதன் பொருண்மை, குறிஞ்சி, இறைச்சிப் பொருள், சேய்மைச்சுட்டுப் போன்ற சொற்கள் ஏதோ ஒரு பிறவியில் படித்த தமிழ்நூல்களில் வருவனபோல் ஒரு தோற்றம். அவ்வளவே யன்றி யார் - யாருக்கு - எது குறித்து - யார் எழுதியது என்றெல்லாம் வினா எழுப்பி விடை காண எம்போலியர்க்கு இயலாது.

இது மருட்கையூட்டும் புலமையின் விளைச்சல்.

> 2. 'இன்று தொடங்கிச் சபைக்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபை யென்றும், சாலைக்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை யென்றும், சங்கத்திற்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்தியச் சங்க மென்றும் திருப்பெயர் வழங்குதல் வேண்டும்'

என்று தொடங்கும் இப்பத்திரிகை,

"தொடர்ச்சி காலம் நேர்ந்த தருணம் எழுதுகிறேன்.
இங்ஙனம்
சிதம்பரம் இராமலிங்கம்"

என்று முடிகிறது. பிறருக்கு விளங்க வேண்டும், விளங்கிக் கொண்ட வண்ணம் நடக்க வேண்டும் என்று இரங்கும் கருணையால் விளைந்தது இந்த உரைநடை.

அடிகளின் பெரும்பாலான உரைநடை இந்த இரண்டாம் வகையினைச் சேர்ந்ததே யாகும்.

மனு முறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற இரண்டு உரைநடை நூல்கள் - சற்றே இலக்கியத் தரத்தைக் குறிக் கொண்டிருந்தாலும், பொதுவாக எவரும் விளங்கிக் கொள்ள வேண்டும் என்ற கருணையின் விளைவே யாகும்.

> 3. "சூரியன் அக்கினியோடு கூடியபோது சந்திரனாம். சந்திரன் அக்கினியோடு கூடியபோது சூரியனாகும். சூரியன் ஆணாகவும் சந்திரன் பெண்ணாகவும் வலம்பாகம் சிவமாகவும் இடது பாகம் சத்தியாகவும் வழங்கிவருவது மருட்டேக நியாயம். வலது பாகம் சத்தியாகவும் இடது பாகம் சிவமாகவு மிருப்பது அனுபவம்....[2]"

மற்றொன்று :

> "காயத்ரி : கா-ய-த்ரி. க ஜல தத்துவமாகிய ஸ்தூல தேகம், பிரம ஸ்வரூபம். ய வாயு தத்துவமாகிய சூக்ஷ்ம தேகம், விஷ்ணு ஸ்வரூபம். ஆ அக்னி தத்துவமாகிய காரண தேகம், ருத்ர ஸ்வரூபம். த்ரி மூன்று. அதாவது மேற்குறித்த மூன்று தேகங்களின் ஸ்வரூப ரூப சுபாவ குணங்களை ஐயம் திரிபு மயக்கமின்றிக் கடந்தால், ஜனன மரண சாகரம் நீங்கி நித்தியர் ஆவோம்...[3]"

சாகாக் கலை தொடர்பான ஒரு கருத்தை விளக்குகிறார் என்ற அளவுக்கு மேல் நமக்கு ஒன்றும் இதிலே தெளிவுகிட்டாது.

2. உபதேசக் குறிப்புகள் : அனுபவத்தில் சத்தி சிவம்
3. உபதேசக் குறிப்புகள் : காயத்ரி

ஆன்மிக அனுபவத்தாலோ குருவருளால் கிட்டும் உபதேசத்தாலோதான் இந்த உரைநடைப் பகுதி விளங்கும்.

முதல் வகையிலே எடுத்துக்காட்டியதும் இங்கே மூன்றாவது வகையாக எடுத்துக்காட்டியதும் ஒரே தன்மை கொண்டவை அல்ல. முதலில் காட்டியது புலமை வளம் கொண்டு மருட்டுவது; இங்கே காட்டியது அனுபவிகள் மட்டுமே உணரக்கூடியது. ஞானிகளை மருட்ட முடியாது. மூன்றாவதாகக் காட்டிய உரைநடை, உலகியல் கடந்த அனுபவ விளக்கம்.

## மூவரில் முதல்வர்

ஏடுகளிலும் புலமையரங்கிலும்மட்டுமே உறைந்து கிடந்த தமிழுக்கு, உரைநடை புது வரவாகும். உரையாசிரியர்கள் தந்த விளக்கங்கள் உரைநடையின் தொடக்கமாகக் கொள்ளப்பட்டாலும். கவிதைபோல் தனியொரு வடிவில் உரைநடை உருப்பெற்றது பிற்கால வளர்ச்சியே யாகும். அந்த உரைநடையின் தொடக்க வரலாறு பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு உரியது. தொடக்க வரலாற்றிலும் வள்ளலார் முதல் இடம் பெற்றவ ராவர். இது குறித்துச் சிலம்புச் செல்வர் தரும் விளக்கம் மனங்கொளத் தக்கது :

> ''19ஆம் நூற்றாண்டில் உரைநடைத் தமிழுக்குப் புதுவாழ்வு தந்த பெரியார் மூவராவர். அவர்கள் - இராமலிங்கர், யாழ்ப்பாணநல்லூர் ஆறுமுக நாவலர், மாயூரம் முனிசீப் வேதநாயகம் பிள்ளை ஆகியோராவர். இந்த மூவரும் சம காலத்தவர் என்பதோடு, சற்றேறக் குறையச் சம வயதினராகவும் இருந்தனர். நாவலரைவிட வயதில் பத்து மாதங்கள் இளையவர் வள்ளலார். வள்ளலாருக்கு மூன்று ஆண்டுகள் இளையவர் வேதநாயகம் பிள்ளை.
>
> ''வள்ளலார், தாம் உரைநடைத் தமிழில் இயற்றிய 'மனு முறை கண்ட வாசகம்' என்ற நூலை வெளியிட்டது 1854ஆம் ஆண்டிலாகும். அதற்கும் முன்னதாக, 'ஒழிவிலொடுக்கம்' என்ற நூலை - அதன் பாயிரப் பாடலுக்குத் தாம் இயற்றிய உரையோடு 1851ஆம் ஆண்டில் வெளியிட்டார் வள்ளலார்.

''ஆறுமுக நாவலர், உரைநடை நூல் வெளியிடத் தொடங்கியது, 1856ஆம் ஆண்டுக்குப் பிறகாகும்.

மாயூரம் வேதநாயகம் பிள்ளை, தமது மொழிபெயர்ப்பான உரைநடைத் தமிழ்நூலை 1862ல் தான் வெளியிட்டார். அவருடைய 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்ற உரைநடை நாவல் 1876ல் வெளியானது. ஆகவே, உரைநடைத் தமிழை வளர்த்த பெருமைக்குரிய மூவருள் நம் இராமலிங்கப் பெருமானே முதல்வராக, மற்ற இருவருக்கும் வழிகாட்டியாக நிற்கிறார்[4].''

உரைநடை யாக்கத்தில் முதல்வர் வள்ளலார் என்பதோடு, இறைவனிடம் முறையிட்டுப் பிரார்த்தனை செய்யவும் தமிழ் உரைநடையை முதலில் பயன்படுத்தியவர் வள்ளலாரே என்பதையும் நினைக்க வேண்டும்[5].

### செய்யுள் : மூன்று வகை

(1) மருளூட்டும் வல்லாண்மை உரைநடையில் மட்டுமல்லாமல், வள்ளலார் அருளிய செய்யுட்களிலும் காணமுடிகின்றது.

பரசிவம் சின்மயம் பூரணம்
' சிவபோக பாக்கியம் பரமநிதியம்
பரமஞா னம்பரம சத்துவம கத்துவம்
பரமகை வல்ய நிமலம்
பரமதத் துவநிரதி சயநிட் களம்பூத
பௌதிகா தாரநிபுணம்'

இப்படித் தொடங்குகிறது, ஓர் ஆசிரிய விருத்தப் பாடல். ஒவ்வோரடியிலும் 192 சீர்கள் இருக்கும்; இப்படி நான்கு அடிகள். மொத்தம் 768 சீர்கள் - ஒரே செய்யுள்தான்.

திருவடிப் புகழ்ச்சியை இத்துணை விரிவாகப் பாடியவர்கள் பிறர் எவரும் இலர். அடிக்கு 192 சீர்களாக நான்கு அடிகள் கொண்ட கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்பதுமட்டுமன்று - இச்செய்யுளின் தனித்தன்மை. 192 சீர்கள் கொண்ட முதல் அடியில்

4. வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு - மூன்றாம் பதிப்பு : பக். 336
5. சன்மார்க்கப் பிரார்த்தனை (12.5.1872) மற்றும் நான்கு விண்ணப்பங்கள்

தமிழ்ச் சொற்கள் எட்டே எட்டுத்தான்; பிற அத்தனையும் கலப்பற்ற வடமொழிச் சொற்களே. இரண்டாவது அடியில் 27 தமிழ்ச் சொற்கள்; மூன்றாம் அடியில் மேலும் மிகுதியான தமிழ்ச் சொற்கள்; நான்காம் அடியில் வடமொழிச் சொற்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்; 56 வடமொழிச் சொற்களே; இந்த 56ல் 'பதம்' என்ற சொல் 45 தடவை திரும்பத் திரும்ப வருகின்றது; ஆக, நான்காம் அடியில் பதினொரு வடமொழிச் சொற்களே. 'பரசிவம் சின்மயம் பூரணம் சிவபோக பாக்கியம்' எனத் தொடங்கிவிட்டாலே ஏதோ வடமொழி வேதம் ஓதப்படுகின்றதோ என்ற எண்ணம் ஏற்படுவதைத் தடுக்க முடியாது. திட்டமிட்டே வடமொழிச் சொற்களைக் குறைத்து, இறுதி நான்காம் அடியிலே தமிழ்மயமாகப் பாடல் முடிகிறது. தமிழ்மயமான பிறகும்கூடத் தொடக்கத்தில் எற்பட்ட 'வேத கோஷம்' என்ற உணர்வு குறையவில்லை - அதே சந்தம்.

கேட்ட அளவிலேயே மருட்கை; பொருள் காண முற்பட்டாலோ மருட்கை மேல் மருட்கை. ஆரவாரச் சொல் உருட்டலால் கேட்டவர் எவரையும் மருட்டிவிடும் வித்தகம் இந்த ஒரு பாடலில் செறிந்துள்ளது. உரைநடையின் முதல் எடுத்துக்காட்டுப் போலவேதான் இதுவும் - பொருள் உண்டு; ஆனால், பொருள் இன்னதென நாடித் தேடவிடாமல் வெருட்டும் மருட்கை நிரம்பியது. (இது மூன்றாம் திருமுறையில் உள்ள முதற்பாடல்.)

இந்தப் பாடல் இயற்றிய மனப்பாங்கு வள்ளலாரிடம் தொடர்ந்திருக்குமாயின் தமிழுலகம் அவரை மறந்து நெடுங்காலம் ஆகியிருக்கும்.

புலமைவழி 'உபதேசம்'

' எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்பு மொழி என்ப'

- தொல். பொருள். செய். 179

என்பது தொல்காப்பிய நூற்பா. சொல்லுக்கு உரிய பொருளொடு பொருந்தியிருப்பதோடு அதற்கப்பாலும் பிறிதொரு பொருளைத் தரும் நிலையை விளக்குவது இந்த விதி. 'கூற்றிடை வைத்த குறிப்பு' என்று இந்தச் சொற்பொருள் உத்தியினை இலக்கண நூலார் குறிப்

பிடுவர். கூற்று: சொல்; அதனிடையே வேறொரு குறிப்பைப் புலப் படுத்துவது கூற்றிடை வைத்த குறிப்பாகும்.

தில்லையில் எழுந்தருளியுள்ள சபாபதிக்கு அறுகம்புல் அர்ச் சனை செய்தால் ஆன்ம அனுபவத்தில் சிறந்த நிலைகளை அடைய முடியும். இது உபதேசக் கருத்து. ஆனால், இப்படி நேராகச் சொல்லாமல் குறிப்பாகச் சுட்டிக்காட்டுவது குருமார் கையாளும் ஓர் உத்தி.

சொல்லை உச்சரித்து உள்ளே ஒரு பொருள் அமைத்துக் கூறா மல், சிலவற்றைக் காட்டி அக்காட்சி வழியாக உட்பொருளை உப தேசித்தலும் உண்டு.

'பக்கத்து வீடிடிந்து சுவர்கள் வீழ்ந்த
பாழ்மனை ஒன்றிருந்ததங்கே பரமயோகி
ஒக்கத்தன் அருள்விழியால் என்னை நோக்கி
ஒருகுட்டிச் சுவர்காட்டிப் பரிதி காட்டி
அக்கணமே கிணற்றுள் அதன் விம்பம் காட்டி,
'அறிதிகொலோ' எனக் கேட்டான்; 'அறிந்தேன்' என்றேன்
மிக்கமகிழ் கொண்டுஅவனும் சென்றான்; யானும்
வேதாந்த மரத்திலொரு வேரைக் கண்டேன்'

- பாரதி பாடல்கள் 2408

குட்டிச் சுவர், சூரியன் - பாழுங்கிணறு அதிலே தெரிந்த குட்டிச்சு வர் சூரியன் ஆகியவற்றின் பிம்பம், அவற்றைக் காட்டிய குள்ளச் சாமி, பாரதியாரை நோக்கிப் 'புரிந்ததா?' என்று கேட்டார்; 'புரிந்து கொண்டேன்' என்பது பாரதியார் பதில். 'இந்தக் காட்சியிலே வேதாந் தப் பொருள் ஒன்றைத் தெரிந்துகொண்டேன்' என்கிறார் பாரதியார். குள்ளச்சாமி காட்டிய காட்சியில் வேதாந்தம் விளங்கிற்று என்கிறார். பரிபக்குவம் பெற்றவராகையால், குரு காட்டிய காட்சியின் உள்-தத்துவத்தைப் பாரதியாரால் புரிந்துகொள்ள முடிந்தது. இது காட் சியிடை வைத்த குறிப்பு

இதுபோலத்தான் கூற்றிடை (சொல்லிடையே) வைத்த குறிப்பு. ஒருவகையில் இதனைப் புலமை விளையாட்டு என்று சொல்லலாம், பெருந்தவறில்லை.

வள்ளலாரின் ஒரு பாட்டு :

'பகுதி தகுதி விகுதியெனும் பாட்டில்
இகல்இல் இடையே இரட்டித் - தகவின்
அருச்சித்தால் முன்னாம்அது கடையாம் கண்டீர்
திருச்சிற் சபையானைத் தேர்ந்து' - 2724

சிற்றம்பலத்தானை 'நமக்குரிய கடவுள் சிவமே' எனத் தேர்ந்து அருச்சனை செய்தால் முன் ஆம்; அது கடையாம்; இது வெறும் சொற்பொருள். ஆனால், சில சொற்களை வாய்பாடாகக் (formula) கொண்டு பார்த்தால் இதே பாடல் உபதேசம் ஆகிவிடுகிறது.

பகுதி, தகுதி, விகுதி என்ற சொற்களின் முன் உள்ள எழுத்துக்களைச் சேர்த்தால் 'பதவி' என ஆகும்; ஆன்மிக அனுபவத்தில் கிட்டும் நிலையை இது சுட்டும்.

இந்தச் சொல் வாய்பாட்டில் நடுவில் உள்ள எழுத்துகளை வரிசைப்படுத்தினால் கு, கு, கு என 3 குக்களாகும்; அதனை இரட்டித்தால் 'ஆறு கு' ஆகும்; 'அறுகு' ஆகும். அறுகு கொண்டு அர்ச்சித்தால் முதல் எழுத்துகள் குறிக்கும் பதவி முதலில் வாய்க்கும்; இறுதி எழுத்துகளை வரிசைப்படுத்தினால் தி, தி, தி என மூன்று 'தி' ஆகும்; அதாவது முத்தி ஆகும். இறுதிப் பயன் முத்தி கிட்டும். அறுகம்புல்லைக் கொண்டு அம்பலவனை அர்ச்சித்தால் முதலில் பதவி வரும்; இறுதியில் முக்தி கைகூடும்.

இதனைப் புலமை விளையாட்டு என்றும் சொல்லலாம்; உபதேச வாக்கு என்றும் குறிப்பிடலாம்.

வள்ளலாரின் புலமை விளைச்சல் இது.

2. திருவருட்பாவின் பெரும்பாலான செய்யுட்கள் எவர்க்கும் எளிதில் விளங்கும் வகையில் - உள்ளத்தைக் கவரும் வகையில், உள்ளத்தை உருக்கும் வகையில் அமைந்தனவே :

'மன்னே என்றன் உயிர்க்குயிரே
மணியே தணிகை மலைமருந்தே
அன்னே என்னை ஆட்கொண்ட
அரசே தணிகை ஐயாவே
பொன்னே ஞானப் பொங்கொளியே
புனித அருளே பூரணமே
என்னே எளியேன் துயர்உழத்தல்
எண்ணி இரங்கா திருப்பதுவே' - 201

'பொன்னாசை யோடும் புலைச்சியர்தம் பேராசை
மன்னாசை மன்னுகின்ற மண்ணாசைப் பற்றறுத்தே
உன்ஆசை கொண்டேன் ஒற்றியப்பா நான்மகிழ்ந்துன்
மின்னாரும் பொன்மேனி வெண்ணீற்றைப் பாரேனோ' - 971

' சொற்பெறுமெய்ஞ் ஞானச்
சுயஞ்சோதி யாம்தில்லைச்
சிற்சபையில் வாழ்தலைமைத்
தெய்வமே - நற்சிவையாம்
தாயின் உலகனைத்தும்
தாங்கும் திருப்புலியூர்க்
கோயில் அமர்ந்தகுணக்
குன்றமே...' - *1962*

' ஒழியாக் கவலை உறுகின்றேன்
உடையாய் முறையோ முறையேயோ
அழியாக் கருணைக் கடலேஎன்
அரசே முறையோ முறையேயோ
பொழியாப் புயலே யனையார்பால்
புகுவித் தனையே முறையேயோ
இழியாத் திரிதந்து உழல்கின்றேன்
இறைவா முறையோ முறையேயோ' - *2756*

' எம்மதத்தில் எவரெவர்க்கும் இயைந்தஅனு பவமாய்
எல்லாமாய் அல்லவுமாய் இருந்தபடி இருந்தே
அம்மதப்பொன் னம்பலத்தில் ஆனந்த நடம்செய்
அரும்பெருஞ்சே வடியிணைகள் அசைந்துமிக வருந்த
இம்மதத்தில் என்பொருட்டாய் இரவில்நடந் தருளி
எழிற்கதவைத் திறப்பித்தங் கெனை அழைத்தென் கரத்தே
சம்மதத்தால் ஒன்றளித்த தயவினைஎன் புகல்வேன்
தம்மைஅறிந் தவர்அறிவின் மன்னும்ஒளி மணியே' - *3147*

' கற்றவர் கல்லார் பிறர்பிறர் குரல்என்
காதிலே கிடைத்தபோ தெல்லாம்
மற்றவர் தமக்கென் உற்றதோ அவர்தம்
மரபினர் உறவினர் தமக்குள்
உற்றதிங் கெதுவோ என்றுளம் நடுங்கி
ஓடிப்பார்த் தோடிப்பார்த் திரவும்
எற்றரு பகலும் ஏங்கிநான் அடைந்த
ஏக்கமும் திருவுளம் அறியும்' - *3531*

திருமுறைக்கு ஒரு பாடலாக, ஆறு திருமுறைகளிலிருந்து கண்ணிற்பட்ட ஆறு திருப்பாடல்கள் மேலே தரப்பட்டன. ஆற்றொழுக்குப்போல் நம் உளத்துள்ளே சலசலப்பின்றிப் பாடி, அறிவுத் தெளிவூட்டும் உணர்வைப் பாய்ச்சி உருக்குவன இப்பாடல்கள். மிக மிகச் சில பாடல்கள் தவிரப் பெரும்பாலான திருவருட்பாப் பாடல்கள் நம்மோடு பேசுவது போலவே அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

3. உலகியற் சூழலிலே - இலௌகிக வெள்ளச் சுழிப்பிலே சிக்கிவிடாமல், குருவருளும் திருவருளும் கூடிவிட்டால், பொதுவெல்லை கடந்த ஆன்மிக அனுபவம் கைக்கனியாகிவிடும். ஞானப் பெருஞ்செல்வர்கள் சமாதி நிலையிலே தம்மை மறந்த லயந்தனிலே தோய்ந்திருக்கும் காலத்துப் பொதுவாகச் சொல் பிறக்காது; பிறந்தால் எப்படி இருக்கும், அந்த அமுத மொழிகள்!?

‘ ஜோதி மலைஒன்று தோன்றிற் றதில் ஒரு
வீதிஉண் டாச்சுதடி - அம்மா
வீதிஉண் டாச்சுதடி

வீதியில் சென்றேன்அவ் வீதிநடுஒரு
மேடை இருந்ததடி - அம்மா
மேடை இருந்ததடி

மேடைமேல் ஏறினேன் மேடைமேல் அங்கொரு
கூடம் இருந்ததடி - அம்மா
கூடம் இருந்ததடி

கூடத்தை நாடஅக் கூடமேல் ஏழ்நிலை
மாடம் இருந்ததடி - அம்மா
மாடம் இருந்ததடி

ஏழ்நிலைக் குள்ளும் இருந்த அதிசயம்
என்னென்று சொல்வனடி - அம்மா
என்னென்று சொல்வனடி...’ *- 4915 - 4919*

ஆணிப் பொன்னம்பலக் காட்சி என்ற தலைப்பிலே இடம் பெற்ற சில கண்ணிகள் மேலே காட்டப்பட்டன. ஒரு சொல்கூட விளங்காத அருஞ்சொல் இல்லை. முன் இரண்டாம் வகையில் எடுத்துக்காட்டிய செய்யுட்களிலேகூடச் சில அருஞ்சொற்கள்

உள்ளன; இங்கே ஒரு சொல்கூட அருஞ்சொல் அன்று; எல்லாமே மிகவும் எளிய சொற்கள். 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்றார் தொல்காப்பியர். இந்தக் கண்ணிகளிலே வரும் சொற்கள் தெளிவுறுத்தும் பொருள் என்ன?

தில்லையம்பலத்திலே எழுந்தருளியுள்ள கூத்தப்பெருமானை வணங்கச் சென்றார், அப்பர் சுவாமிகள். நடராசப் பெருமானைக் கண்டு அனுபவித்துப் பாடியபோது, அப்பெருமான் திருக்கரத்தால் ஒரு குறிப்புக் காட்டியதாக அப்பருக்குத் தோன்றியது. பாடுகிறார்:

' ஒன்றி யிருந்து நினைமின்கள் -
உந்தமக்கு ஊனமில்லை;
கன்றிய காலனைக் காலாற்
கடிந்தான் அடியவற்கா;
சென்று தொழுமின்கள் தில்லையுள்
சிற்றம் பலத்து நட்டம்
என்று வந்தாய் என்னும்
எம்பெருமான்தன் திருக்குறிப்பே' - 781

அஞ்சலென்று கூறாமற்கூறும் (அபய ஹஸ்தம்) திருக்கரத்தைப் பார்த்தால், ''நாவுக்கரசே எப்போது வந்தாய்'' என்று கேட்பதுபோல் அப்பருக்குத் தோன்றியிருக்கிறது. இது அனுபவக் காட்சி.



ஆடலரசர் சிவகாமசுந்தரி

நாம் பார்க்கும் நடராசர், அணிச்சுமையிலே மறைந்து கிடக்கிறார்! அபய கரமும் தெரியவில்லை; என்று வந்தாய் என்று நம்மைக் கேட்பதுமில்லை!

அதே திருவம்பல மேடை தமக்கு அருளிய காட்சியின் அனுபவத்தை வள்ளலார் பாடுகிறார்; அனுபவம் கைவந்தா லன்றி, அப்பாடல் நமக்கு விளங்காது. சொல் தெரிகிறது; ஆனால், பொருள் எட்டவில்லை. ஏன்? குருவருளும் திருவருளும் நமக்கு இன்னும் கூடவில்லை!

நாயக – நாயகி பாவம்

அகப்பொருள் தமிழ் மொழிக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் தனியுரிமை உடையது என்பர் சான்றோர். பொது இலக்கிய அரங்கிலே அகப்பாடல்கள் என்ற காதற் பாடல்கள் இடம் பெறுவது சரி; ஆனால், பக்தி அரங்கிலே நாயக - நாயகி பாவம் என்ற பெயரிலே காதற் பாடல்கள் இடம் பெறுவது சரியாகுமா? வள்ளலாரின் அருளிச்செயல்களைப்பற்றி எண்ணும் நாம் இந்த வினாவுக்கு விளக்கம் காணுதல் வேண்டும். ஏனெனில், திருவருட்பாவில் காதற் பாடல்கள் - நாயக : நாயகி பாவனைப் பாடல்கள் உள்ளன.

பழந்தமிழ்ப் பாடல்களிலே நட்பினைக் காதலாகவும் காதலை நட்பாகவும் குறிக்கின்ற இடங்கள் உண்டு. நண்பனுக்காகவோ காதலுக்கு உரியவர்க்காகவோ தன்னையே இழக்கும் துணிவு நட்புக்கும் காதலுக்கும் பொதுத்தன்மை யாகும். இந்த அடிப்படையினை ஏற்றுக்கொண்டால், அடியவன் தன்னை ஆண்டவன்பால் இழக்கத் துணியும் நிலையினையும் காதல் என்று கொள்வதிலே தடை இராது. ...... பக்திப் பாசுரங்கள் பாடுவார் தம்மை மறந்து, தம் நாமம் கெட்டுக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிக் கரைந்த நிலையிலே - உளங் கனிந்த, உயிர் கரைத்த நிலையிலே பாடுகின்றார். 'ஆழ்வாருக்கு எம்பெருமானார் தவிர ஒரு பொருளும் தெரியாது. உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்றிருக்கிறவர் இவர். ஆதலின், மோக தசையிலும் எம்பெருமானை யன்றி வேறு பொருள்கள் இவருக்குத் தோன்ற முடியாது' எனத் திருவாய்மொழி வாசகமாலை (பக். 32) கூறுவது இங்கு நினையத் தக்கது.

மதுர பாவம் என்றும் காந்த பாவம் என்றும் வடநூலார் அடியவர் ஆண்டவர் காதலைக் குறிப்பர். கிறித்தவ சமயத்தவரும் இஸ்லாமியரும் இந்த ஆன்மக் காதல் அனுபவக் கூறுகளைப் பக்தி நூல்களில் ஏற்றுப் போற்றியுள்ளனர்[6].

6. டாக்டர் துரையரங்கனாரின் Religion and Philosophy of Tevaram என்ற ஆய்வு நூல் காண்க.

இராமலிங்க வள்ளலாரின் அருளிச்செயல்களிலே மதுர பாவச் செய்யுள்கள் உண்டு. திருவருட்பாவில் 933 அகப்பொருட் பாடல்கள் உள்ளன என ஆராய்ந்து பட்டியலிட்டுள்ளார், தவத்திரு ஊரனடிகள். (காண்க : திருவருட்பாப் பதிப்பு : திருஅருட்பா வரலாறும் ஆராய்ச்சிக் குறிப்புகளும் : பக். 74-75)

எடுத்துக்காட்டாக ஒரு பாடல் :

' தனிப்பெரும் பதியே என்பதி யாகத்
தவம்எது புரிந்ததோ என்றாள்
அனித்தம்நீத்து எனைத்தான் அன்பினால் அணைத்தாள்
அதிசயம் அதிசயம் என்றாள்
இனித்துயர் சிறிதும் அடைந்திடேன் என்றாள்
எனக்குஇணை யார்கொலோ என்றாள்
சனிப்பிறப் பறுத்தேன் என்றுளே களிப்புத்
ததும்பினாள் நான்பெற்ற தனியே' - 5681

தலைவி தன் காதலன் நினைப்பில் திளைத்ததைத் தாய் எடுத்துரைப்பதாக அமைந்தது இந்தப் பாடல்.

## பல்வகை யாப்பில்

வள்ளலார் திருவருட்பாவில் பல்வகைப் பாக்களும் பாவினங்களும் காணலாம். அவற்றின் விவரம் :

குறள் வெண்பா, குறள் வெண் செந்துறை, குறள்-தாழிசை, நேரிசை வெண்பா, வெண்டுறை, நிலைமண்டில ஆசிரியப்பா, ஆசிரியத் துறை, ஆசிரிய விருத்தம், வண்ண விருத்தம், சந்த விருத்தம், கலி வெண்பா, கலிப்பா வகைகள், கலித் தாழிசை, கலித் துறை, கலி நிலைத் துறை, கலிநிலை வண்ணத் துறை, கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், வண்ணக் கலி விருத்தம். வஞ்சித் துறை.

இவை தவிர,

இசைப் பாடல்கள்[7]

ஆகிய பல்வகைப் பாக்களையும் வள்ளலார் பாடியுள்ளார்.

7. யாப்பு வகை விரிவும் விளக்கமும் ஊரனடிகள் பதிப்பில் விவரமாகக் காணலாம்.

மறுபார்வையில் மாற்றம்

வள்ளலார் தாம் முதலில் பாடிய பாட்டைப் பின்பு பார்த்து மாற்றம் செய்ததும் உண்டு. எடுத்துக்காட்டாக -

'சேறு வேண்டினும் துகில்அணி முதலாம்
சுகங்கள் வேண்டினும் சுகமலாச் சுகமாம்
வேறு வேண்டினும் நினைஅடைந் தன்றி
மேவொ ணாதெனும் மேலவர் உரைக்குஓர்
மாறு வேண்டிலேன் வந்துநிற் கின்றேன்
வள்ளலே உன்றன் மனக்குறிப்பறியேன்
சேறு வேண்டிய கயப்பணைக் கடற்சார்
திகழும் ஒற்றியூர்ச் சிவபரஞ் சுடரே' - 1492

இரண்டாம் திருமுறையில் உள்ள இப்பாடலையே இரண்டு சிறு மாற்றங்களுடன் ஆறாம் திருமுறையில் தருகிறார். முதல் அடி இறுதியில் 'சுகமலாச் சுகம்' என்றிருப்பதை 3770ஆம் பாடலில் 'சுகமலால் சுகம்' என மாற்றியுள்ளார். இம்மாற்றம் தேவையில்லையோ என எண்ணத் தோன்றுகிறது. 'சேறு வேண்டிய' எனத் தொடங்கும் நான்காம் அடி ஆறாம் திருமுறைப் பாடலில்,

' சாறு வேண்டிய பொழில்வடல் அரசே
சத்தியச் சபைத் தனிப்பெரும் பதியே' - 3770

ஒற்றியூரில் உலவிய வள்ளலாரின் ஆளுமை வளர்ச்சியில் முன்னேற்றம் ஏற்பட்டுச் சத்திய ஞான சபை உருவானபின் அந்த மாற்றத்தைப் பதிவு செய்வார்போல் வடலூர்ச் சத்திய ஞான சபையில் எழுந்தருளுவித்த பரமனைப் போற்றுவதைப் பின்னைய பாடல் தெளிவுறுத்துகின்றது. 'சிற்சபை விளக்கம்' என்ற பதிகத்தின் முதற்பாடல் இது. அப்பதிகத்துள் எல்லாப் பாடல்களும் 'வடல் அரசே சத்தியச் சபைத் தனிப்பெரும் பதியே' என்றே முடிகின்றன.

ஒன்பது திருப்பாடல்களைப் புதியனவாகப் பாடியவர்க்கு முதற் பாடலையும் வேறாகப் பாடியிருக்க முடியும். ஆனால், தம் வாழ்வுப் போக்கில் ஏற்பட்ட மாற்றத்தைப் பதிவு செய்வதற்காகவே சற்று மாற்றிப் பதிவு செய்திருக்கிறார் என்று எண்ணுவது சரியெனவே தோன்றுகிறது.

அதுபோலவே -

' திருவிளங்கச் சிவயோக சித்தியெலாம் விளங்கச்
சிவஞான நிலைவிளங்கச் சிவானு பவம்விளங்கத்
தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற்றம் பலத்தே
திருக்கூத்து விளங்கஒளி சிறந்ததிரு விளக்கே
உருவிளங்க உயிர்விளங்க உணர்ச்சி யதுவிளங்க
உலகமெலாம் விளங்கஅருள் உதவுபெருந் தாயாம்
மருவிளங்கு குழல்வல்லி மகிழ்ந்தொருபால் விளங்க
வயங்குஅருண கிரிவிளங்க வளர்ந்தசிவக் கொழுந்தே'

- *2500*

நான்காம் அடியின் பிற்பாதியை மட்டும் *(3268)*

' வயங்குமணிப் பொதுவிளங்க வளர்ந்தசிவக் கொழுந்தே'

எனச் சற்றே மாற்றியுள்ளார். திருவண்ணாமலைப் பெருமானே சத்திய ஞான சபைப் பொதுவிலும் எழுந்தருளியிருக்கிறார் எனத் தெளிவுறுத்துவது அடிகளின் நோக்கமாக இருந்திருக்கலாம்.

## அனுபவ மாலை ஓர் அனுபவக் களஞ்சியம்

பல பூக்களைத் தொடுத்து மாலை சமைப்பதுபோல் பல பாக்களைத் தொடுத்துப் பாமாலை சமைப்பது புலவர்கள் வழக்கம். வள்ளலாரின் ஆறு திருமுறைகளிலும் முப்பத்தொரு மாலைகள் உள்ளன. இவற்றுள் தெய்வமணிமாலை (முதல் திருமுறை), வடிவுடை மாணிக்க மாலை (இரண்டாம் திருமுறை), அருட்பிரகாச மாலை, ஆளுடைய பிள்ளையார் அருள்மாலை, ஆளுடைய அரசுகள் அருள்மாலை, ஆளுடைய நம்பிகள் அருள்மாலை, ஆளுடைய அடிகள் அருள்மாலை (ஐந்தாம் திருமுறை) ஆகியவை குறிப்பிடத்தக்கன. ஆறாம் திருமுறையில் ஐந்து மாலைகள் உள்ளன; இவை யாவுமே சிறப்புடையவை. சிறப்பிற் சிறப்பெனத் தக்கது அனுபவமாலையாகும். ஆன்ம அனுபவக் களஞ்சியமாய் அமைந்துள்ள அனுபவ மாலைப் பாடல்களைக் குருவருளும் திருவருளும் கூடிவரும் காலத்தே ஆன்மிக நோக்கில் ஆராயலாம்; அதுவே முறை. எனினும், ஆழ முகக்கினும் நாழி முகவாது நானாழி; எனவே, மொழித்திறம் / இலக்கிய நயம் என்ற நிலையில் இங்கே சில பாடல்களைக் காணலாம்.

' வஞ்சமிலாத் தலைவருக்கே மாலைமகிழ்ந் தளித்தேன்
மறைகளுடன் ஆகமங்கள் வகுத்துவகுத் துரைக்கும்
எஞ்சலுறா வாழ்வனைத்தும் என்னுடைய வாழ்வே
எற்றோநான் புரிந்ததவம் சற்றேநீ உரையாய்

அஞ்சுமுகம் காட்டியஎன் தாயரெலாம் எனக்கே
ஆறுமுகம் காட்டிமிக வீறுபடைக் கின்றார்
பஞ்சடிப்பா வையரெல்லாம் வஞ்சடிப்பால் இருந்தே
பரவுகின்றார் தோழிஎன்றன் உறவுமிக விழைந்தே' - 5718

மூன்றாம் அடியில் அஞ்சுமுகம், ஆறுமுகம் என்ற தொடர்களை நோக்குங்கள். மேற்போக்காக நோக்கும்போது ஐந்து, ஆறு என்ற எண்களின் நினைப்பு வரும். ஆனால், அஞ்சுகின்ற நிலை தோன்றினால் துயர் ஆறுகின்ற நிலையைத் தலைவன் காட்டுவான் என்பதே உரிய பொருள். செவிலித் தாயாரும் நற்றாயும் தலைவனின் உறவுபற்றி அச்சத்தை எழுப்பிக் குழப்பினால், அக்குழப்பத்தை நீக்கித் தலைவன் ஆறுதல் தருவான் என்பது தலைவியின் நம்பிக்கை. 'அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்' என்ற பழம் பாடல் வாக்கினை ஒப்பிட்டுணரலாம்.

பஞ்சு அடிப் பாவையரெல்லாம் விஞ்சு (என்) அடிப்பால் இருந்து (என்னைப்) பரவுகின்றார் என்ற கருத்தைச் சொல்லுமிடத்தில் சந்த நயம் பொலிவதைக் காணலாம். சந்த நயத்திற்கு இதனினும் சிறந்த இடம் 'சம்போ சங்கர' என்ற தலைப்பிலுள்ள சிந்துப் பாடலின் முதல் இரு கண்ணிகளை எடுத்துக்காட்டலாம் :

' தங்குறும்பு மங்கநிரம்பு சங்கமியம்பும் நங்கொழுகொம்பு
சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு

சந்தமியன்று அந்தணர்நன்று சந்ததம்நின்று வந்தனமென்று
சந்திசெய்மன்று மந்திரமொன்று சங்கரசம்பு சங்கரசம்பு'
- 5156 - 5157

மேலும் இரண்டு கண்ணிகள் :

' போகம் சுகபோகம் சிவபோகம் அதுநித்தியம்
ஏகம் சிவம்ஏகம் சிவம்ஏகம் இதுசத்தியம்
நலமங்கலம் உறும்அம்பலம் நடனம்அது நடனம்
பலநன்கருள் சிவசங்கர படனம்அது படனம்'

இப்படிச் சந்த நயத்தால் மனத்தைக் கொள்ளை கொள்ளவும் வள்ளலார்க்குத் தெரியும்.

## வேத / மந்திர பாராயண எதிரொலி

வேதங்களையும் மந்திரங்களையும் அவற்றுக்கே உரியவையெனச் சொல்லி, அவ்வாறு ஓதுதற்குக் குறிப்பிட்ட இனத்தவரே தகுதியுடையவர் என மிகப் பெரிய ஆசாரியர்களும் சொன்னதுண்டு; அவர்கள் சொல்லிவிட்டார்கள் என்பதற்காகவே அதுவே நித்திய சத்தியம் எனச் சாதிப்பாரும் உண்டு. எவரும் வேதம் ஓதலாம், மந்திர ஜபம் செய்யலாம் என அருட்பா வாயிலாக அடிகள் நிறுவியுள்ளார். 'அம்பலத்தரசே' என்ற தலைப்பிலே அவர் அருளியுள்ள சில வரிகள் இங்கே தரப்படுகின்றன. வேத / மந்திர படனத்தை நினைத்துக்கொண்டு வாய்விட்டுப் பாடிப் பாருங்கள்:

' ஜால கோலகன காம்பர சாயக
கால காலவன காம்பர நாயக

நாத பாலக லோசன வர்த்தன
ஜாத ஜாலவி மோசன நிர்த்தன

சதபரி சதவுப சதமத விதபவ
சிதபரி கதபத சிவசிவ சிவசிவ

அரகர வரசுப கரகர பவபவ
சிரபுர கரபர சிவசிவ சிவசிவ

உபல சிரதல சுபகண வங்கண
கபல கரதல கணபண கங்கண

அபயவ ரதகர தலபுரி காரண
உபயப ரதபத பரபரி பூரண

அகரஉ கரசுப கரவர சினகர
தகரவ கரநவ புரசிர தினகர

வகரசி கரதின கரசசி கரபுர
மகரஅ கரவர புரஹர ஹரஹர ...

....

நாத பரம்பர னேபர - நாத சிதம்பரனே
நாத திகம்பர னேதச - நாத சுதந்தரனே

ஞான நடத்தவனேபர - ஞானி இடத்தவனே
ஞான வரத்தவ னேசிவ - ஞானபுரத்தவனே

....
நடுநாடி நடுநாடி நடமாடு பதியே
நடராஜ நடராஜ நடராஜ நிதியே
நடுநாடி யொடுகூடி நடமாடும் உருவே
நடராஜ நடராஜ நடராஜ குருவே
நடுநாடி இடைநாடி நடமாடும் நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே'

- 5130 - 5155

கனம் சடையென்று உருவேற்றிக் கண்மூடிக் கதறும் வேத / மந்திர சாலங்க ளெல்லாம் இங்கே காணலாம். படனம் பண்ணி முடித்தபின் சாவகாசமாகப் படித்துப் பார்த்தால் மந்திர எழுத்துக்களும் யோக சாதன நெறிகளும் புலப்படக் காணலாம்.

ஆறாம் திருமுறைப் பகுதி இது ஆதலின், வள்ளலார் வெற்றாரவாரத்திற்காக இதனை அருளியிருக்க மாட்டார் என்ற சிரத்தையோடு இந்தப் பகுதி முழுவதையும் நாள்தோறும் பாராயணம் செய்து நல்ல பயன்பெற முடியுமென்பது திண்ணம்.

## கற்பக மரத்தடியில் ஒரு கர்த்தபம்

நினைத்தவை யெல்லாம் நினைத்தபடியே அருள வல்லது கற்பக மரம் என்ற விண்ணுலகத்து மரம் என்பார்கள். அதன் நிழலிலே படுத்துக் கொண்ட ஒரு கழுதை 'மெல்லுவதற்குப் பழங்காகிதக் குப்பை வேண்டுமே' என நினைத்திடுவது போன்ற முயற்சியிலே இனியும் அருட்பாவின் அருள் நிழலிலே தங்குவது தகாது.

வெறும் இலக்கிய விளையாட்டுகளுக்கு என்று கருதிப் பாடப்பட்டவை யல்ல, அருட்பாப் பாடல்கள். மொழித்திறம் வல்ல புலமைச் செருக்காளரும் ஒடுங்கி ஒடுங்கிவிடச் செய்யும் வித்தகமும் இவ்வருள் நூலிலே காணலாம் என்பதற்கே இதுகாறும் பொழுதைக் கழித்துவிட்டோம்.

தாண்டக வேந்தரின் திருநெடுந்தாண்டகத் திருப்பாடல்களைப் பக்தி நாட்டத்தோடு பாடிப் பயன் பெறுவது போன்ற முயற்சியே நாம் ஈடேறுவதற்கு ஒரே வழி. பின்வரும் பாடலைப் பாடிப் பாருங்கள் :

' மருந்தானை மணியானை வழுத்தாநின்ற
மந்திரங்க ளானானை வானநாட்டு
விருந்தானை உறவானை நண்பினானை
மேலானைக் கீழானை மேல்கீழ் என்னப்
பொருந்தானை என்னுயிரில் பொருந்தி னானைப்
பொன்னானைப் பொருளானைப் பொதுவாய் எங்கும்
இருந்தானை இருப்பானை இருக்கின்றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின்றேனே' - 3940

'ஆனை ஆனையாய்க் களிற்றுக் கூட்டம் வருகிறது' என்றோ, மேல் - கீழ் - பொருந்தான் - பொருந்தினான் என்ற முரண் நயம் காண்மின் என்றோ, 'இருந்தானை இருப்பானை இருக்கின்றானை' என முக்காலச் சுட்டு நயக் குறிப்புணர்க என்றோ வறட்டுப் புலமையில் இதனை நாடுவது கற்பக மரநிழலில் ஒதுங்கிய வெள்ளை மூக்காரின் மனஓட்டம் போன்றதே.

எப்படி இதைப் படிக்க வேண்டும், தெரியுமா!?

' நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழும்
கண்ணீ ரதனால் உடம்பு

நனைந்து நனைந்து அருளமுதே
நன்னிதியே ஞான
நடத்தரசே என்உரிமை
நாயகனே என்று

வனைந்துவனைந் தேத்துதும்நாம்
வம்மின் உல கியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர்'

என்று வள்ளற்பெருமான் காட்டிய வழியே அவருடைய அருளிச் செயல்களைப் பாடும் வழியாகும். பாடிப் பாடி, அதன் கனிவிலே கரைந்து கரைந்து ஆன்ம நலம் பெறுவதே அடிகளின் அருளிப்பாடுகளைப் பயன் காணும் முறை.

இங்கே இறுதியில் எடுத்துக்காட்டிய திருப்பாடலையே அன்பர்களுக்கு இறுதிக் குறிப்பில் வள்ளலார் குறிப்பித்தார் என்ற செய்தி இங்கு நினைவூட்டத் தக்கது. தாம் ஏற்றிய திருவிளக்கை வெளியே வைத்து,

> ''இதைத் தடைப்படாது ஆராதியுங்கள். இந்தக் கதவைச் சாத்திவிடப் போகிறேன் இனிக் கொஞ்சகாலம் எல்லோரும் - ஆண்டவர் இப்போது தீபமுன்னிலையில் விளங்குகிறபடியால் - உங்களுடைய காலத்தை வீணிற் கழிக்காமல், 'நினைந்து நினைந்து' என்னும் தொடக்கமுடைய 28 பாசுரமடங்கிய பாடலிற் கண்டபடி தெய்வ பாவனையை இந்தத் தீபத்திற் செய்யுங்கள்....''



*வள்ளலார் ஏற்றி வைத்த திரு விளக்கு*

திருவருட்பாவை எப்படி ஓத வேண்டும் / கற்றுப் பயனுற வேண்டும் என்பதைப் பெருமான் இந்த இறுதிக் குறிப்பில் அருளியிருக்கிறார்.

இனியேனும் திருவருட்பாவைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதிப் பக்குவம் பெறுவோமாக!



# 4. வெற்றியா, தோல்வியா?

சத்திய ஞான சபையை உருவாக்கிய வள்ளலாரே மிக விரைவில் அதனைப் பூட்டிச் சாவியைத் தம்மிடம் வைத்துக் கொண்டார். ஏன்? அவர் இட்ட திட்டப்படி உலகர் அனைவருக்குமான வழிபாட்டுத் தலமாக அது திகழவில்லை; உருவாக்கியவருக்கே தொண்டர்களின் செயல் வெறுப்பை ஏற்படுத்திவிட்டது. மேலும், சமரச ஞானப் பணியை மேலும் 'அவர்' தொடரவில்லை.

சமரச வழிபாட்டுத் திருக்கோவிலாகச் சத்திய ஞான சபையை ஏற்படுத்தியபோதே, பிற ஆலயங்களிற்போல் அல்லாமல், தனியொரு ஒழுகு முறையினை வள்ளலார் வகுத்தார். அந்த நடைமுறையினைச் சரிவர நடத்துதற்கு ஏற்றவர் என அடிகளாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டவர் சபாபதி சிவாசாரியார். அவரே அடிகளின் கட்டளையை மதியாமல் பிற ஆலயங்களிலுள்ள சடங்குகளைப் புகுத்தினார்; அடிகள் கருத்துக்கு மாறாகச் சபையில் இலிங்கமொன்றை நிறுவினார். வழிபாட்டை நடத்தவென வந்தவர் - யார் தூண்டுதல் என்று தெரியவில்லை - உரிய நெறிமுறைகளைத் தவிர்த்து, ஆரவாரச் சடங்குகளுக்கு இடம் கொடுத்துவிட்டார். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்பால் சார்ந்து, அடிகள் சபையைப் பூட்டிவிட்டார்.

சமரச ஞானக் கோவிலின் கதி இது! சமரச ஞான தத்துவத்தின் கதி என்ன? பல்லாண்டு நோன்பு காத்து அம்பலவன் அருள் ஒன்றினாலேயே சமரச ஞான தத்துவத்தை அடிகள் உருவாக்கினார். தொன்றுதொட்டுச் சித்தர்கள், ஞானிகள் மட்டுமே அனுபவித்து உணர்ந்த சாகாக் கலை, வாழும் தத்துவம் எனக் கண்ட வள்ளலாரின்

'பிரதம சீடர்' என்ற தகுதியைப் பெற்றவர் - 'உபயகலாநிதிப் பெரும்புலவர்' என்று வள்ளலாரிடமே பட்டம் பெற்றவர் - தொழுவூர் வேலாயுத முதலியார். அடிகளின் அருட்பா வெளிவரப் பதிப்பித்த பெருமைக்கு உரியவர். வள்ளலார், புறக்கண்ணுக்குப் புலப்படாச் சித்தி பெற்றபின் தொழுவூராரும் சித்திவளாக நெறியை விடுத்துப் பிரமஞான சபை நெறியில் மனம் செலுத்தியிருக்கிறார். தியாசஃபிஸ்ட் என்ற இதழின் 1882 ஜுலை இதழில் தொழுவூராரின் வாக்குமூலம் வெளியாகியுள்ளது. பிரமஞான சபையாருக்குக் கொடுத்த அந்த வாக்குமூலத்தின் இறுதியில் முதலியாரவர்கள் கையொப்பமிட்டு, F.T.S. என்ற எழுத்துகளைப் பெயருடன் சேர்த்திருக்கிறார். பிரமஞான சங்கத்தின் அனுக்கர் (Fellow of the Theosophical Society) என்பது இந்த எழுத்துகளின் விரிவாகும். ஆக, வள்ளலார் வழியை விட்டால், பிரமஞான சபை வழியில் போகலாம் என்று அவர் நினைத்திருக்கிறார் என்று முடிவு செய்ய இடம் இருக்கிறது. 1874ல் இராமலிங்கரின் சித்தி கைகூடுகிறது. 1882ல் அவருடைய தலைமாணாக்கர் பிரமஞானத்தை நாடுகிறார். எப்படி இது நடந்தது என்ற ஆராய்ச்சி இப்போது நமக்குத் தேவை இல்லை. வள்ளலார் நெறியைப் புரிந்துகொண்டிருக்கக் கூடிய 'பிரதம சீடர்' நெறி மாறினாரோ இல்லையோ - வேறு நெறியினருடன் தொடர்பு கொண்டிருக்கிறார். சன்மார்க்க ஊற்றம் உறுதியாக இருந்திருக்குமாயின் இவ்வாறு நடந்திருக்குமா என்பதுபற்றி எண்ண வேண்டியுள்ளது.

ANIMA என்றொரு நூல் பிரமஞான சபையினரால் வெளியிடப்பட்டுள்ளது. பௌதிகப் பேராசிரியர் - வெள்ளையர் - ஒருவரின் ஆய்வு நூல் அது. அன்னிபெசன்ட் அம்மையார் கலனல் ஆல்காட் ஆகியோர் மேற்கொண்டிருந்த ஆய்வுகளைப் பற்றியது அந்தப் பௌதிக நூல். விஞ்ஞானிகள் பௌதிக உண்மைகள் சிலவற்றை விஞ்ஞானபூர்வமாகக் கணடு சொல்வதற்கு ஏறத்தாழப் பத்தாண்டுகளுக்கு முன்பே பெசன்ட் ஆய்வினர் தெரிந்து சொல்லியிருக்கிறார்கள். இது அந்த நூலின் கருத்துப்போக்கு. விஞ்ஞான ஆய்வுக்கூடத்தில் அல்லாமல், அட்டமாசித்தி பேசும் சித்த தத்துவ உண்மைகளைக் கொண்டு அவ்வுண்மைகள் காணப்பட்டனவாம். வள்ளலார் நெறியாளர்கள் மனத்திலே ஆழப் பதிய வைக்க வேண்டிய கருத்து இது.

இவ்வகையில் வள்ளற்பெருமானின் சிந்தனைகள் அமைந்தன என்பதை அறிந்தே பிரமஞான சபையினர் தொழுவூராரின் உதவியை நாடியிருக்க வேண்டும்.

அரவிந்த ஆசிரம ஆராய்ச்சிகளிலும் இராமலிங்கரின் பெயர் சுட்டப்படுகிறது. திரு. துளசிராம் அவர்களின் விரிவான நூலிலே இதுபற்றி ஏராளமான குறிப்புகள் உண்டு.

தொழுவூரார் பிரமஞான சபையினர்க்குக் குறிப்பிடத் தகுந்த அளவு உதவ முடிந்ததா என்பதை அறிவதற்கான வரலாற்றுக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை. மிக நெடிய - ஆழமான - ஆய்வுக் களம் சன்மார்க்கிகள்முன் பரந்து கிடக்கிறது என்பதைச் சுட்டவே இவ்வளவு எழுதினேன்.

'சித்தி வளாக தத்துவம்' என்று வள்ளலார் வாழ்வுத் தத்துவத்துக்கு ஒரு புதுப் பெயர் தருவதாக முடிவு செய்தாலும், பெருந்தவறு இல்லை. அந்தத் தத்துவத்தை உணர்ந்திருக்க வேண்டிய - உணர்த்தியிருக்கக் கூடிய தொழுவூரார்பற்றித் தவத்திரு. ஊரனடிகள் தந்துள்ள குறிப்பு இங்கே எடுத்துக்காட்டத் தக்கது:

> ''பெருமான் சித்தி பெற்றபின் தொ.வே. சன்மார்க்க உலகிலிருந்தே பெரும்பாலும் விலகிவிட்டார்[1].''

உபயகலாநிதி வேலாயுதனா ராகிய தலைமைச் சீடரின் நிலை வியப்பைவிட வேதனையையே தருகிறது.

சமயத்துறையிலும் தத்துவத் துறையிலும் கொடிபிடித்த மற்றப் பேரறிஞர்களைப்பற்றி என்ன சொல்வது! வள்ளலார் வாழ்ந்த காலத்திலேயே கருத்துப் போர் தொடங்கி, முற்றியிருக்கிறது. அடிகளின் சித்திக்குப் பிறகு திருவருட்பாவின் ஆறாம் திருமுறை வெளிவந்தது. சமரச சன்மார்க்க இயக்கம் அடிகளுக்குப் பின் மறைந்துவிடவில்லை என்பதற்கு ஆறாம் திருமுறை வெளியீட்டு நிகழ்ச்சியே போதுமான சான்றாகும்.

நடராசப் பெருமானைப் போற்றிடும் கருத்து ஆறாம் திருமுறையிலும் உறுதிபெற அமைந்துள்ளது. எனினும், 'வைதிக' சைவர்களின் அடிவயிற்றைக் கலக்கும் கருத்துகள் ஏராளமாக ஆறாம் திருமுறையிலே உள்ளன.

---

1. இராமலிங்க அடிகள் வரலாறு (1971) - பக். 423

'என்னைக் காட்டி என்னுள்
இலங்கும் நின்னைக் காட்டியே
இறங்கா நிலையில் ஏற்றி
ஞான அமுதம் ஊட்டியே
பொன்னைக் காட்டிப் பொன்னே
நினது புகழைப் பாடியே
புந்தி களிக்க வைத்தாய்
அழியாது என்னை நாடியே' - 5055

ஆறாம் திருமுறையில் உள்ள பாடல் இது; கருத்துவகையிலே இதுபோலவே எல்லாப் பாடல்களும் அமைந்திருக்குமாயின் வைதிகர்கள் பொங்கியிருக்க மாட்டார்கள்.

'விரைசேர் சடையாய் விடையாய் உடையாய்
விகிர்தா விபவா விமலா அமலா
வெஞ்சோ பஞ்[2]சார் நஞ்சார் கண்டா
விம்ப சிதம்பரனே' - 5251

'அருவே திருவே அறிவே செறிவே
அதுவே இதுவே அடியே முடியே
அந்தோ வந்(து)ஆள் எந்தாய் எந்தாய்
அம்பல நம்பதியே' - 5254

இவை போன்ற (ஆறாம் திருமுறைப்) பாடல்கள் 'வைதிக' சைவரால் உடன்பாடாகவே கொள்ளப்பட்டிருக்கும். ஆனால்,

'சாதியும் மதமும் சமயமும் தவிர்ந்தேன்
சாத்திரக் குப்பையும் தணந்தேன்' - 4075

எனவும்,

'கொள்ளைவினைக் கூட்டுறவால்
கூட்டிய பல் சமயக்
கூட்டமும் அக் கூட்டத்தே
கூவுகின்ற கலையும்
கள்ளமுறும் அக்கலைகள்
காட்டிய பல் கதியும்
காட்சிகளும் காட்சிதரு
கடவுளரும் எல்லாம்
பிள்ளை விளையாட்டு' - 4173

எனவும்,

2. சோபம் : இரக்கம் (இரக்கம் காரணமாகச் சிவன் நஞ்சை உண்டார்)

' நால்வருணம் ஆசிரமம்
ஆசாரம் முதலா
நவின்றகலைச் சரிதமெலாம்
பிள்ளை விளையாட்டே
மேல்வருணம் தோல்வருணம்
கண்டறிவார் இலைநீ
விழித்திதுபார் என்றெனக்கு
விளம்பியசற் குருவே' - *4174*

எனவும்,

' இயல்வேதா கமங்கள்புரா
ணங்கள்இதி காசம்
இவைமுதலா இந்திரசா
லங்கடையா உரைப்பார்
மயல்ஒருநூல் மாத்திரந்தான்
சாலமென அறிந்தார்
மகனேநீ அனைத்தும்
சாலம்என அறிக' - *4176*

எனவும்,

' தோன்றியவே தாகமத்தைச்
சாலமென உரைத்தேம்
சொற்பொருளும் இலக்கியமும்
பொய்யெனக்கண் டறியேல்
ஊன்றியவே தாகமத்தின்
உண்மை நினக்காகும்
உலகறிவே தாகமத்தைப்
பொய்யெனக்கண் டுணர்வாய்' - *4177*

எனவும் அடிகள் பாடியதை மதவாதிகள் / சமயவாதிகள் / சாதிவாதிகள் எப்படிஏற்றுக் கொள்ள முடியும்? மேலும்,

> ''சைவம், வைணவம் முதலிய சமயங்களிலும் - வேதாந்தம், சித்தாந்தம் முதலிய மதங்களிலும் லக்ஷியம் வைக்க வேண்டாம். அவற்றில் தெய்வத்தைப் பற்றிக் குழூஉக் குறியாகக் குறித்திருக்கிறதே யன்றிப் புறங்கவியச் சொல்லவில்லை.

''நான் முதலில் சைவ சமயத்தில் லக்ஷியம் வைத்துக் கொண்டிருந்தது இவ்வளவு என்று அளவு சொல்ல முடியாது ... அந்த லட்சியம் இப்போது எப்படிப் போய்விட்டது, பார்த்தீர்களா! .... ஏன் அவ்வளவு மிகுந்த அழுத்தம் அப்போது இருந்ததென்றால், அப்போது எனக்கு அவ்வளவு கொஞ்சம் அற்ப அறிவாக இருந்தது.''

- பேருபதேசம்[3]

மிக வெளிப்படையாகத் தரும் சீர்திருத்தங்களைச் சமயவாதிகள் – மதவாதிகள் – சாதிவாதிகள் எப்படி ஏற்றுக் கொள்ளமுடியும்? மேலும்

''சமயம்தவிர மதங்களில் உள்ள[4] வேதாந்தி சித்தாந்தி யென்று பெயரிட்டுக் கொண்ட பெரியவர்களும் உண்மையறியாது சமயவாதிகளைப் போலவே ஒன்று கிடக்க ஒன்றை உளறுகிறார்கள்.''

- பேருபதேசம்

சமயவாதிகளைவிடத் தத்துவவாதிகள் பொதுவாக அறிவிலே தெளிவுடையவர்களாக இருப்பர். பொருந்துவது பொருந்தாதது என அறிவு கொண்டு விவாதித்துத் தெளிவு பெறுவோர் தத்துவிகள் என்பதால் சமயவாதிகளைவிடத் தத்துவவாதிகள் சற்றே மிகுதியாக வள்ளலாரால் மதிக்கப்பட்டனர். அவர்களும் சமயவாதிகளைப் போலவே வெற்று ஆரவாரம் செய்வோராய் இருந்தமை கண்டு அடிகள் வேதனையோடு அவர்களையும் சாடுகிறார்.

' சாத்திரங்க ளெல்லாம்
தடுமாற்றம் சொல்வதன்றி
நேத்திரங்கள் போல்காட்ட
நேராவே -' - 5515

3. அடிகள் சித்தியுற்றது 30.1.1874; இந்தப் பேருபதேசம் செய்தது 22.10.1873. சித்திக்கு மூன்று மாதங்களுக்கு முன்...
4. சமயம் - Religion : மதம் : Philosophy

'வேதாக மங்களென்று
வீண்வாதம் ஆடுகின்றீர்
வேதாக மத்தின்
விளைவறியீர் - சூதாகச்
சொன்னவலால் உண்மைவெளி
தோன்ற உரைக்கவிலை
என்ன பயனோ
இவை' - 5516

இவை போன்ற பாடல்கள் வேத, ஆகமங்களின் பெயரால் 'வாழ்க்கை'யை ஒட்டி வந்தவர்களுக்குப் பேரிடியாக அமைந்தன. உடையவர் ஸ்ரீஇராமானுசர்க்கு எதிரணி வகுத்தவர்தாமே சமய / மதவாதிகள்! வேத ஆகமங்களைக் கற்றுத் தெளிந்தவர்கள் மிக மிக மிகச் சிலரே; ஆனால், அவற்றின் பெயரைச் சொல்லி மருட்டி வந்தோருக்கு வள்ளலாரின் வாய்மைச் சொற்கள் வேதனை ஊட்டியதில் வியப்பொன்றுமில்லை. சமுதாயத்தில் ஆதிக்கம் அவர்கள் வசம் இருந்தது; ஆகையால், வள்ளலாரை எதிர்த்துக் குரல் எழுப்பி ஆரவாரித்தனர்.

எதிர்ப்புக் குரல் எழுந்ததைக் கொண்டும், எதிராளிகளின் கை ஓங்கியதைக் கொண்டும் வள்ளலார் வாழ்க்கை தோல்வி கண்டது என முடிவு செய்திட முடியாது, கூடாது.

## அணுகுமுறை / கணிப்பின் அடிப்படை வேறு

சீமை என்ற சொல்லைச் சேர்த்துவிட்டாலே பெருமைக்கு உரியது என்ற மூடநம்பிக்கை இன்றுகூட ஆங்காங்கே காணமுடிகிறது. 'சீமைச் சரக்கு' எப்போதும் சிறந்தது என்று எண்ணுவது சரியாகாது. இங்கிலாந்துக்குச் சென்று வழக்குரைஞர் தேர்ச்சி பெற்றவர்கள் 'பாரிஸ்டர்' எனப்பட்டனர். இந்தச் 'சீமை வக்கீல்'கள் சமுதாயத்தில் செல்வச் செழிப்பும் செல்வாக்கும் பெற்றவர்களாக இருந்த காலம், காந்தியடிகளின் இளமைக் காலம். அவர் ஒரு பாரிஸ்டர்! ஆனால், உலகியல் கணிப்பிலே பார்த்தால், அவர் வாழ்க்கை தோல்வியுற்றதாகவே தோன்றும். காரணம், அவர் செல்வராக / பொருட்செழிப்பு உள்ளவராக உலவவில்லை! 'அரை நிர்வாணப் பக்கிரி' என்று அவரைக் குறித்து எக்காளமிட்ட வின்ஸ்டன் சர்ச்சில், ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் சிதைந்து குலையும் போக்குக்குத் தலைமை தாங்க நான் வரவில்லை'' என்று கூறினார்.

காந்தியடிகள் இயக்கத்தின் கை ஓங்கிய நிலையில் பிரிட்டிஷ் பிரதமராக இருந்தவர் சொன்னது இது. ஆனால், சாம்ராச்சியக் கனவு பொய்யாகி, பாரதம் விடுதலை பெற்றது. சர்ச்சில் கண்முன்னரே பிரிட்டிஷ் சாம்ராச்சியம் நொறுங்கிச் சரிந்தது. 'நள்ளிரவில் விடிந்த சுதந்திரம்' '(Freedom at Midnight') என்ற அரிய நூலைப் படித்தால், காந்தியடிகளின் வாழ்வு வெற்றியின் இமயமாக ஓங்கியதை உணரமுடியும்.

வன்முறை வெக்கையால் தவிக்கும் இந்த உலகம் உய்தி பெற அந்தக் கிழவனார் காட்டிய அஹிம்சை வழி ஒன்றே வழி என்ற ஞான ஒளி பரவிவருவதை நாம் காண்கிறோம். உலகியல் அணுகுமுறையை விடுத்து, சத்திய - அஹிம்சை அடிப்படையிலே கணித்தால், காந்தியடிகளின் வாழ்க்கை வெற்றியே பெற்றது என்பதை உணரமுடியும்.

உடையவர் இராமானுசர், வள்ளற்பெருமான் போன்றவர்களின் வாழ்க்கைகள் வெற்றி பெற்றனவா என்பதை ஆராய்கிறவர்களின் அணுகுமுறையும் கணிப்பு முறையும் மாற வேண்டும். என்புதோல் போர்த்த வெற்றுடம்பு வாழ்வாகச் சான்றோர்களின் வாழ்வைக் கருதுதல் / கணித்தல் கூடாது. தம் வாழ்வையும் பிறர் வாழ்வையும் இயக்கும் எண்ணங்களின் வாழ்வாக அவர்களின் வாழ்வைக் காண / கணிக்க வேண்டும். மானிடர்களை மட்டுமன்றி உயிர்க்குலம் அனைத்தையும் ஒன்றாகக் கருதிப் பேணி அருள்காட்டிய வாழ்வு அது; என் வாழ்வு, எம் வாழ்வு என்று வரையறைப்படுத்தி வாழும் கடுகுள்ளம் அன்று அவர்கள் உள்ளம். ஒருமைப்பாட்டு உரிமை என்பதன் எல்லை மனிதத் திரள் என்று நின்றிடும் தன்மை அவர்களுக்கு இல்லை. ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமையே வள்ளற்பெருமான் எண்ணிய வாழ்வு ... எல்லையுட் கிடக்கும் ஆசை அன்று அது! அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்தது; தன் அருள் வெளிக்குள்ளே அகில அண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு இச்சை வைத்தது; .... இந்த அருளாளப் பெருமனம் மனம் வாக்கினில் தட்டாமல் நின்றது. உயிர்க்குலம் அனைத்தையும் நேசித்த அருளுள்ளம் படைத்த தெய்வ வாழ்வு அது. சில் வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவு கொண்டு தன் பிள்ளை தன் பெண்டு தன் சுற்றம் என்று சிறைப்பட்டுவிடுகின்ற சிறு நேயத்தது அன்று அது.

' எவ்வுயிரும் பொதுவெனக் கண்டு
இரங்கிஉப கரிக்கின்றார் யாவர் அந்தச்
செவ்வியர்தம் செயலனைத்தும் திருவருளின்
செயலெனவே தெளிந்தேன் - 5296

எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்உயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உகக்கின்றார்
யாவர் - அவர் உளம்தான்சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம் புரியும்
இடம் எனநான் தெரிந்தேன்' - 5297

என்ற வள்ளலார் வாக்குகளை நினைந்து பார்க்க வேண்டும். 'தன் அருள் வெளிக்குள்ளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு இச்சை வைத்தது எது' என்ற தாயுமானவரின் வாக்குக்கு விளக்கவுரைபோல் அமைந்த பாடலை எண்ணிப் பார்க்க வேண்டும்:

' உடலெலாம் உயிரெலாம் உளமெலாம்
உணர்வெலாம் உள்ளன எலாம்கலந்தே
ஒளிமயம தாக்கிஇருள் நீக்கிஎக் காலத்தும்
உதயாத்த மானமின்றி (உதயம், அத்தமனம்)

இடலெலாம் வல்லசிவ சக்திகிர
ணாங்கியாய் ஏகமாய் ஏகபோக
இன்பநிலை என்னுமொரு சிற்சபையின் நடுவே
இலங்கி நிறைகின்ற சுடரே

கடலெலாம் புவியெலாம் கனலெலாம் வளியெலாம்
ககனெலாம் கண்ட பரமே
காணாத பொருளெனக் கலையெலாம் புகலஎன்
கண்காண வந்த பொருளே

தொடலெலாம் பெறஎனக்கு உள்ளும்புறத்தும் மெய்த்
துணையாய் விளங்கும் அறிவே
சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ்
சோதிநட ராச பதியே' - 3653

இங்கு இருந்துகொண்டே எங்குமாய் - இன்று இருந்துகொண்டே என்றுமாய் ... இடம், பொழுதுகளின் எல்லை கடந்து வாழ்கின்ற வாழ்வு வள்ளலார் வாழ்வு. நேற்றுப் பிறந்து இன்று நடைபயின்று நாளையே செத்தொழியும் சிறு(மை) வாழ்வினரோடு அவர் வாழ்வை ஒப்பிட்டுக் கணிப்பது தவறு.

கம்பர் வாழ்கிறார்; காந்தி வாழ்கிறார். எப்படி? எண்ணங்களால் - எண்ணங்கள் இயக்கும் செயல்களால் அவர்கள் வாழ்கிறார்கள். அவர்களுக்குத் தோல்வி என்பதே கிடையாது. 'எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை' 'யாரொடும் பகை கொள்ளலன் என்றபின் போர் ஒடுங்கும், புகழ் ஒடுங்காது' என்ற கருத்து வளர்ச்சியிலே இன்றும் கம்பர் வாழ்வு வெற்றியே பெற்றுள்ளது; அணுக்குண்டு கண்டபின் வன்முறையொழிப்பு வழியை நாடும் அரசியலிலே காந்தி வாழ்வு வெற்றி பெறுகிறது. சமரச நாட்டத்தில் வேர்விட்டு, சாதி சமய நாடு இவற்றின் எல்லைகளைத் தகர்த்து நல்லிணக்க நாட்டம் மலர்ந்துவருவதால் வள்ளலார் வாழ்வு வெற்றி பெறுகிறது.

வள்ளலாரின் வெற்றி இந்தக் கருத்து வெற்றியொடு ஒடுங்குவதில்லை. வள்ளலாரின் சிந்தனை வாழ்விலே இதனைவிட நுட்பமும் சிறப்பும் கொண்ட நிலை ஒன்று உண்டு. மரணமிலாப் பெருவாழ்வு எனும் கனியைக் காண்பதிலே அந்தச் சிந்தனையின் வெற்றி காணப்படும். அதன் விளக்கம் பின்னர்க் காணப்படும்.



# 5. வாழ்ந்த முறையும் வாழக் காட்டிய நெறியும்

சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவு கொணடது மனித வாழ்வு. அதனை எச்சரிக்கையோடு பேணிப் போற்ற வேண்டும்; ஒரு கண நேரம்கூட வீணடிக்கக் கூடாது. எந்தக் கணத்திலும் வாழ்வு முடிந் துவிடக் கூடும். எனவே, வாழும் முறைக்குத் திட்டம் கட்டாயம் வேண்டும்.

ஜவாஹர்லால் நேரு தம் தங்கை திருமதி கிருஷ்ணாவுக்கு எழு திய ஒரு கடிதத்தில், 'வாழ்நாளை அற்பமானதாகவோ மலிவாகவோ ஆக்கிவிடக் கூடாது; ஏனென்றால், வாழ்வு மிகவும் சுருக்கமானது' என்று எழுதினார்[1].

''இராமலிங்க சுவாமிகளின் - அருள்கனிந்த நெஞ்சங் கொண்ட - அழகிய வடிவைக் காண 'அருட்பா' என்னும் பளிங்கறையை நோக்குவோம். அருட்பாவை ஆராய்ந்தால், பற்பல செம்பொருள் பெறலாம். அவற்றை ஈண்டு நான்கு கூறாகத் தொகுத்துக்கொள்கி றேன்.

1) சுவாமிகள் உலகிற்கு அறிவுறுத்தியது என்னை என்பது.

2) அவ்வறிவுறுத்தலை நடையில் கொணர்தற்கு அவர் கோலிய முறை.

3) அம் முறை பற்றி நடந்தமையால் அவர் பெற்ற பேறு.

---

1. Life is short enough affair; it is too short for us to make it petty or cheap (கடிதம் : 13.6.1933)

4) அப்பேறு பெறுதற்கு அவர் இளமையில் எம்முயற்சியில் தலைப்பட்டார் என்பது[2].

மேற்கண்ட பாகுபாட்டை நாம் இரண்டு கூறுகளாகக் கொள்வோம். 1. புறவாழ்வு, 2. அகவாழ்வு. புற வாழ்க்கையை அவர் எப்படி அமைத்துக்கொண்டார், அதே புறவாழ்வைக் கடைப்பிடிக்க மற்றோர்க்கு அவர் காட்டிய நெறி யாது எனக் கண்டறிவது முதற் பகுதி. அகவாழ்க்கையை அவர் எவ்வாறு அமைத்துக் கொண்டார், அதே அகவாழ்வைக் கடைப்பிடிக்க மற்றோர்க்கு அவர் காட்டிய நெறி யாது எனக் காண்பது இரண்டாவது பகுதி.

## 1. புற வாழ்க்கை

இராமலிங்க வள்ளலார் ஒரு வெள்ளாடைத் துறவி. பொதுவாகத் துறவிகள் உடுத்தும் துவராடையை அவர் தமக்குரியதாக ஏற்கவில்லை. வெள்ளை நிற ஆடை அணிவதற்கு அவர் தந்துள்ள விளக்கம் காணலாம்: ''வெற்றியான பிறகு அடைவது தயவு; ஆதலால், வெற்றிக்கொடி வெள்ளை. தயவு, வெள்ளை யென்பதற்கு நியாயம்: தயவென்பது சத்துவம், சத்துவமென்பது சுத்தம், சுத்தமென்பது நிர்மலம், நிர்மலமென்பது வெள்ளை வருணம். வெள்ளை என்பது ஞானம், ஞானமென்பது அருள்; அருளென்பது தயவு, தயவென்பது காருண்யம்"[3]. அகத்தேயும் புறத்தேயும் கருணையும் தூய்மையும் பேணிய அடிகள், வெள்ளாடையையே அணிந்தது பொருத்தமே. காந்தியடிகள், திரு.வி.க. போன்ற 'துறவி' கள் தேர்ந்துகொண்டது வெள்ளாடையே.

'மீதூண் விரும்பேல்' என்ப்து தொல்லோர் காட்டிய நெறி. இல்லறத்தில் இருப்போரே யன்றித் 'துறவு' பூண்டோரும் உணவிலே மிகு நாட்டம் உடையவராக இருத்தலைக் காணுகின்றோம். வள்ளலார் சிறுபருவந் தொட்டே உணவில் ஆசையற்றவரா யிருந்திருக்கின்றார்.

' அறிவிலாச் சிறிய பருவத்தில் தானே
அருந்தலில் எனக்குள வெறுப்பைப்
பிறிவிலா என்னுட் கலந்தநீ அறிதி ' - *3393*

என்பது அடிகள் வாக்கு. பல பாடல்களில் (*3438, 3439, 3440*) வாழ்வில் உணவுபற்றி அவர் கொண்ட கருத்தையும் உண்ட முறை

2. திரு.வி.க. - இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம் (1962 : 4ஆம் பதி.) பக். 6
3. பா.பி. பதிப்பு : உரைநடைப் பகுதி - பக். 22

யையும் அறியலாம். அவை தவிரக் கீழ்வரும் பாடல் நம் நாட்டத் திற்கு உரியது :

' கிளைத்தஇவ் வுடம்பில் ஆசைஎள் ளளவும்
கிளைத்திலேன்; பசியற உணவு
திளைத்திடுந் தோறும் வெறுப்பொடும் உண்டேன்;
இன்றுமே வெறுப்பில்உண் கின்றேன்;
தளைத்திடும் முடைஊன் உடம்பொடு சிறிதும்
தடித்திட நினைத்திலேன்; இன்றும்
இளைத்திட விழைகின் றேன்; இது நான்தான்
இயம்பல்என்? நீஅறிந் ததுவே' - 3397

பொதுவாக உலக வாழ்வினரின் நிலையினைக் கருதிப்பார்த்து, அடிகள் தம் நிலையினைச் சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெருவிண் ணப்பத்தில் புலப்படுத்தியுள்ளார் :

"…. குமாரப் பருவத்திற்றானே உலகிற் சிறுவர்களுடன் கூடிச் சிறுவிளையாட்டியற்றல், சிற்றுண்டி விழைதல், சித் திரம் பயிறல், அதிசயம் பார்த்தல், அசங்கியம் பேசல், அவ லித்து அழுதல், சிறு சண்டை செய்தல், சிறு குறும்பு இயற் றல், தன்வசத்து உழலல், தாய்வயிற் சலித்தல் முதலிய குற்றங்களில் என்னைச் சிறிதும் செலுத்தாமல், ஓர் சிறிது அறிவு விளங்கப் புரிந்து இடம் தனித்திருத்தல், இச்சை யின்றி நுகர்தல், ஜெப தபம் செய்தல், தெய்வம் பராவல், பிற உயிர்க்கு இரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப் பணி தல், பத்தி செய்திருத்தல் முதலிய நற்செய்கைகளில் என் னைச் செலுத்திய தேவரீரது பேரருட் பெருங்கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று துதிப்பேன்!"
- பெருவிண்ணப்பம்
உடைநடைப் பகுதி - வர்த்தமானன் பதிப்பு - பக். 662

உரைநடைப் பகுதியில் காணப்படும் நான்கு விண்ணப்பங்களி லும் (வர்த்தமானன்… பக். 669 -672), திருவருட்பாவின் பிள்ளைச் சிறுவிண்ணப்பம் (3386-3409), பிள்ளைப் பெருவிண்ணப்பம் (3410-3542) ஆகிய தலைப்புகளில் உள்ள பாடல்களிலும் அடி களின் புறவாழ்வு பற்றிய குறிப்புகளைக் காணலாம். உரை நடையிலும் செய்யுளிலும் உள்ள விண்ணப்பங்களை ஒப்பிட்டுக்

காண்பது மிகப் பயனுடைய முயற்சியாக அமையும். விரிவஞ்சி அந்த முயற்சியை இங்கே மேற்கொள்ளவில்லை.

இவ்விண்ணப்பங்களில் அடிகளின் அகவாழ்வு பற்றிய குறிப் புகளும் உள்ளன.

## 2, அகவாழ்க்கை

மனவளம் குறித்தும் ஆன்ம வளம் குறித்தும் அமைகின்ற குறிப்புகள் அகவாழ்க்கையின் கூறுகளாகும். 'மன நலம் மன்னு யிர்க்கு ஆக்கம்' (457) என்ற திருக்குறள் தொடர் இங்கு மனங் கொள்ளத்தக்கது.

'கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை' - 400

'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து' - 398

என்பன கல்வியறிவு / புலமை பற்றி வள்ளுவர் அருளியவை. பெரு மிதத்துக் காரணமாகையால், புலவர்கள் தலைநிமிர்ந்து நடத்தல் உண்டு. புலமை வளம் காரணமாகத் தம்மோடு வாதம் புரிவார் வெட்கித் தலைகுனியும்படி வென்று தலைநிமிர்ந்து நடப்பது புலவர் பால் உண்டு. மன்னர்களுக்கு மட்டுமே அப்படி ஒரு பெருமை உ்ண்டு என்று எண்ணிவிட வேண்டா; மன்னர்களைப் போலவே புலவர்களும் தலைநிமிர்த்துப் பெருமிதமாக நடப்பர். இளந்தத்தனார் என்ற புலவரைப் பகைமன்னனின் ஒற்றர் என்று தவறாகக் கருதிச் சோழன் நலங்கிள்ளி அப்புலவரைக் கொன்றிட முயன்றான். அப்போது கோவூர்கிழார் புலவர்கள் மன்னர்களைப் போலவே தலை நிமிர்ந்து நடந்திடும் பான்மையுடையவர்கள் என்று அறிவுறுத்திப் பாடுகிறார்.

'வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே திறப்பட
நண்ணார் நாண அண்ணாந்து ஏகி
ஆங்கினிது ஒழுகி னல்லது ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோ ரன்ன செம்மலும் உடைத்தே' - புறம் 47

பெருமிதத்துக்கு உரிய களங்களாக

' கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே'

- தொல். பொருள் ....

என்று விளக்குவார், தொல்காப்பியர். பெருமிதத்துக்குரிய காரணங்களுள் கல்வி முதல் இடம் பெறுகிறது.

அக்கல்வி வல்லார்க்கு அகங்காரம் கூடாது என்று வள்ளலார் உணர்ந்திருக்கிறார்.

' பதியனே பொதுவில் பரமநா டகஞ்செய்
பண்பனே நண்பனே உலகில்
ஓதியனேன் பிறர்பால் உரத்தவார்த் தைகளால்
ஒருசில வாதங்கள் புரிந்தே
மதியிலா மையினால் அகங்கரித்து அதன்பின்
வள்ளல்உன் அருளினால் அறிந்தே
விதியைநான் நொந்து நடுங்கிய தெல்லாம்
மெய்யனே நீஅறிந் ததுவே' - *3453*

அளவிறந்த அடக்கமுடைமை அடிகளின் இயல்பாய் அமைந்திருக்கிறது. உள்ளக் களிப்பேறிச் சிரிப்பதற்கும் உளம் நடுங்கியிருக்கிறார். வேகமாகச் செல்லும் வாகனங்களிலே செல்ல நேர்ந்த போதெல்லாம் அடக்கம் காரணமாக நடுங்கியிருக்கிறார். பகையுணர்வு கிளர்ந்தெழ நேர்ந்த போதெல்லாம் பதுங்கித் தம் அடக்கத்தைப் பேணியிருக்கிறார்,

' தகைத்தபே ருலகில் ஐயனே அடியேன்
தடித்தஉள் ளத்தொடு களித்தே
நகைத்தபோ தெல்லாம் நடுங்கினேன் இங்கே
நல்லவா கனங்களில் ஏறி
உகைத்தபோ தெல்லாம் நடுங்கினேன் விரைந்தே
ஓட்டிய போதெலாம் பயந்தேன்
பகைத்தபோது அயலார் பகைகளுக்கு அஞ்சிப்
பதுங்கினேன் ஒதுங்கினேன் எந்தாய்' - *3456*

பிள்ளைப் பெருவிண்ணப்பத்தில் *(3410 - 3542)* பல பாடல்கள் அடிகளின் அகவாழ்வுக் குறிப்புகளைத் தருகின்றன.

மனப் பக்குவத்தைக் குறிக்கும் பாடல்கள்மட்டு மன்றி ஆன்ம பக்குவத்தைக் குறிக்கும் பாடல்களும் இரண்டு விண்ணப்பங்களிலும் காணப்படுகின்றன. சில பாடல்கள் :

' தன்னிகர் அறியாத் தலைவனே தாயே
தந்தையே தாங்கும்நற் றுணையே
என்இரு கண்ணே என்உயிர்க் குயிரே
என்னுடை எய்ப்பினில் வைப்பே
உன்னுதற்கு இனிய ஒருவனே எனநான்
உன்னையே நினைத்திருக் கின்றேன்
மன்னும்என் உள்ள மெலிவும்நான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்' - *3526*

' என்உயிர் காத்தல் கடன்உனக்கு அடியேன்
இசைத்தவிண் ணப்பம்ஏற் றருளி
உன்னும்என் உள்ளத் துறும்பயம் இடர்கள்
உறுகண்மற் றிவையெலாம் ஒழித்தே
நின்னருள் அமுதம் அளித்துஎனது எண்ணம்
நிரப்பிஆட் கொள்ளுதல் வேண்டும்
மன்னுபொற் சபையில் வயங்கிய மணியே
வள்ளலே சிற்சபை வாழ்வே' - *3541*

மேற்குறித்த இரண்டு பாடல்களும் ஆண்டவன் அருளை நாடும் அடியவனின் பக்தி வெளிப்பாடு.

தாம் பெற்ற / பெற விரும்பிய ஆன்ம அனுபவங்களைக் குறிப்பு மொழிகளால் உரைக்கும் பாடல்களும் காணப்படுகின்றன.

' திருவளர் திருஅம் பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந் திரத்திரு முறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பிநான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்' - *3527*

திருவம்பலத்தில் இறைவன் செப்பிய மெய்ம்மொழிப் பொருள் யாது? திருமந்திர மாகிய பத்தாம் திருமுறை கொண்டு இறைவன் உணர்த்திய மெய்ம்மொழிப் பொருள் யாது? இறைவன் அடிக ளின் உள்ளத்திலே நின்று விளக்கிய மெய்ம்மொழிப் பொருள் யாது? மூன்று வகையான மெய்ம்மொழிப் பொருள்கள் இப்பாட லில் சுட்டப்படுகின்றன 'அவை யாவை, அவற்றின் ஆன்மிக விளக் கம் என்ன? வள்ளலார்க்கும் அவரை ஆட்கொண்ட இறைவனுக் கும் மட்டுமே தெரிந்த மறை(ப்) பொருள் என்று அமைதி காண வேண்டும். கண்டவர் விண்டிலர்.

இப்பாடலில் வருவதைவிட ரகசியமான குறிப்புச் சொற்கள் உள்ள பாடல்களும் காணப்படுகின்றன. ஒரு பாடல் :

' ஏய்ந்தபொன் மலைமேல் தம்பத்தில் ஏறி
ஏகவும் ஏகவும் நுணுகித்
தேய்ந்தபோது அடியேன் பயந்தவெம் பயத்தைத்
தீர்த்துமேல் ஏற்றிய திறத்தை
வாய்த்துளே கருதி மலையெனப் பணைத்தே
மனம்களிப் புற்றுமெய் யின்பம்
தோய்ந்துநின்று ஆடிச் சுழன்றதும் இந்நாள்
சுழல்வதும் திருவுளம் அறியும்' - 3529

இந்தப் பாடலின் சொற்களையும் செய்திகளையும் பின்காட் டப்படும் பாடல்களோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் :

' ஜோதி மலைஒன்று தோன்றிற் றதில்ஒரு
வீதிஉண் டாச்சுதடி - அம்மா
வீதிஉண் டாச்சுதடி

வீதியில் சென்றேன்அவ் வீதிநடு ஒரு
மேடை இருந்ததடி - அம்மா
மேடை இருந்ததடி

மேடைமேல் ஏறினேன் மேடைமேல் அங்கொரு
கூடம் இருந்ததடி - அம்மா
'கூடம் இருந்ததடி

கூடத்தை நாடஅக் கூடமேல் ஏழ்நிலை
மாடம் இருந்ததடி - அம்மா
மாடம் இருந்ததடி

ஏழ்நிலைக் குள்ளும் இருந்த அதிசயம்
என்னென்று சொல்வனடி - அம்மா
என்னென்று சொல்வனடி' - 4915 - 4519
' ஏழ்மலை மேலே இருந்ததோர் தம்பம்
இசைந்தபொற் றம்பமடி - அம்மா
இசைந்தபொற் றம்பமடி
ஏறும்போ தங்கே எதிர்ந்த வகைசொல
என்அள வல்லவடி - அம்மா
என்அள வல்லவடி' - 4927 - 4928

ஒரு சொல்கூட அருஞ்சொல் அன்று; எளிய சொற்கள், எவருக்கும் தெரியும் சொற்களே. ஆனால் சொற்களின் மெய்ப்பொருள் என்ன? குருவருள் வழியாகத் திருவருள் வாய்த்தால்தான் தெரியும்.

உயிர் இரக்கமாகிய ஜீவகாருணியமே வள்ளலார் வழியின் உயிரோட்டம். பிறரிடத்தும் பிறவிடத்தும் காட்டும் அருள் உணர்வு வெறும் உள்ளக்கசிவுமட்டுமே என்று வள்ளலார் கருதவில்லை. ஆன்ம அனுபவ முதிர்ச்சிக்கும் முழு வெற்றிக்கும் உயிர்களிடத்துக் காட்டும் இரக்கமே காரணமாகும்.

' இதுவரை அடியேன் அடைந்தவெம் பயமும்
இடர்களும் துன்பமும் எல்லாம்
பொதுவளர் பொருளே பிறர்பொருட் டல்லால்
புலையனேன் பொருட்டல' - 3536
' வரும்உயிர் இரக்கம் பற்றியே உலக
வழக்கில்என் மனம்சென்ற தோறும்
வெருவிநின் அடிக்கே விண்ணப்பித் திருந்தேன்
விண்ணப்பம் செய்கின்றேன் இன்றும்' - 3506
' என்னையும் இரக்கந் தன்னையும் ஒன்றாய்
இருக்கவே இசைவித்து உலகில்
மன்னிவாழ் வுறவே வருவித்த கருணை
வள்ளல்நீ' - 3509
' கருணையே வடிவாய்ப் பிறர்களுக்கு அடுத்த
கடுந்துயர் அச்சமா திகளைத்
தருணநின் அருளால் தவிர்த்துஅவர்க் கின்பம்
தரவும்,வன் புலைகொலை இரண்டும்

ஒருவிய நெறியில் உலகலொம் நடக்க
உஞற்றவும் அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்' - 3407

ஜீவகாருணிய ஒழுக்கம் என்ற நூலிலும் திருவருட்பாப் பாடல்களிலும் ஜீவகாரணியம் பற்றிய குறிப்புகளும் விளக்கங்களும் ஏராளமாய் உள்ளன. சன்மார்க்க தத்துவத்தின் மையக் கருத்தே ஜீவகாருணியம்தான் என்பது உண்மை.

''நம்முடைய தலைவராகிய கடவுளை நாம அடைவதற்கு அவர் எழுந்தருளியிருக்கும் கோட்டையின் சாவியாகிய அருள் வேண்டும். அவ்வருள் அன்பினாலல்லது வேறு வகையில் அடைவது அரிது. இவ்வன்பு ஜீவகாருணியத்தா லல்லது வேறு வகையில் வாராது.''

என்ற வள்ளற்பெருமான் வாக்கினைக் கொண்டு அவருடைய சமரச ஞானம், ஆன்மிக வாழ்வு யாவும் கருணையை நாடுவதே என்பது தெளிவாகும்.

வள்ளற்பெருமான் 'சைவ' உணவுபற்றி மிக வற்புறுத்திக் கூறியது யாவரும் அறிந்ததே. எல்லா உயிர்களிடத்தும் பரம கருணை காட்டிய அடிகள், புலால் உண்பவர்களைப்பற்றி மிகவும் கடுமையாகவே பேசுகிறார். புலால் உண்பவர்களைப் புற இனத்தார் என்று புறக்கணிக்கவும் தயங்கவில்லை. அவர்களோடு சமமாக / சமரசமாகப் பழகுவதுகூடத் தகாது என்று குறிப்பிடுகிறார். ஆன்ம அனுபவம் பெறுதற்கு வழிகாட்டவே அவர் சன்மார்க்க சங்கத்தை உருவாக்கினார். அதில் உறுப்பினராகச் சேரத் தகுதியுடையவர்கள் யார்? 'ஜீவகாருண்ய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்துப் புலால் உணவை வெறுத்துத் தயவுடைய மனத்தினர் எல்லோரும் சன்மார்க்க சங்கத்தில் சேரலாம்' என்பது அடிகள் வகுத்த விதி. ஜீவகாருணியத்தை மறந்து புலால் உண்பவர்களைப் புறஇனத்தார் என்று பழித்ததோடு விட்டுவிடவில்லை. புலால் உண்ணுவோன் ஞானியாக இருக்கவே முடியாது என உறுதிபடக் கூறுகின்றார்.

' கருவாணை யுறஇரங்காது உயிர்உடம்பைக்
கடித்துண்ணும் கருத்தனேல் என்
குருஆணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொணாதே' - 3027

ஆக, புலால் உண்ணாமை யென்பது உணவு கொள்ளுதல் பற்றிய புறவாழ்க்கைக் கூறு என்று அடிகள் கருதவில்லை. புலால் உண்பவன் ஞானியாக இருக்க முடியாது என ஆணையிட்டு உறுதி செய்கிறார். ஜீவகாருணியம் என்பது புறவாழ்வுக்குமட்டு மன்றி ஆன்மிகம் குறித்த அகவாழ்வுக்கும் உரியது என்பது அவர் கருத்தாகும்.

## நால்வகை ஒழுக்கம்

அகவாழ்வு சீரடைந்து முழுமை பெற்ற ஆன்மிக வாழ்வெனப் பட வேண்டில், அதற்கு உரிய வழி இன்னது என வள்ளலார் தெளிவுறுத்தியுள்ளார் :

> '[3]நாம் பெறும் புருஷார்த்தம் நான்கு. அவையாவன : ஏம சித்தி, சாகாக் கல்வி, கடவுள்நிலை அறிந்து அம்மயமாதல், தத்துவ நிக்கிரகம் - ஆக நான்கு.
>
> இவை பெறுதற்கு ஒழுக்கம் யாதெனில், நான்கு வகைப் படும். 1. இந்திரிய ஒழுக்கம், 2. கரண ஒழுக்கம், 3. ஜீவ ஒழுக்கம், 4. ஆன்ம ஒழுக்கம்.

இந்த நான்கு ஒழுக்கம் பற்றிய விளக்கம் வருமாறு :

> இவற்றுள் இந்திரிய ஒழுக்கம் ஆவது : கொடிய வார்த்தை முதலியவை யாடாமலும் செவியுறாமலும் நிற்றல்; நாதம் முதலிய ஸ்தோத்திரங்களை அதிசயிக்காமல் உற்றுக் கேட்டல்; மற்றவைகளைக் கேளாதிருத்தல். அசுத்தங்களைத் தீண்டாதிருத்தல்; கொடூரமானவற்றைக் கேளாதிருத்தல், பாராதிருத்தல்; ருசியின்மேல் விருப்பமில்லாதிருத்தல்; சுகந்தம்; விருப்பமில்லாமல் அனுபவித்தல்; இனிய வார்த்தை யாடுதல்; பொய் சொல்லாதிருத்தல்; ஜீவர்களுக்கு இம்சை நேரிடுங் காலத்தில் அதை எவ்விதத் தந்திரத்தினாலாவது தடை செய்தல்; பெரியோர்கள் எழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் செல்லுதல்; உயிர்களுக்கு உபகார நிமித்தம் சஞ்சரித்தல்; உயிர்களுக்கு மனத்தாலும் வாக்காலும் சரீரத்தாலும் தனத்தாலும் தன் சக்தியின் அளவு மீறாமல் உபகரித்தல்; மல ஜலாதிகளை அளவு மீறாமலும் குறை

---

3. தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் - அறம், பொருள், இன்பம், வீடு - எனப் பிறர் கூறும் புருஷார்த்தம் - உறுதிப்பொருள் - வேறு. வள்ளலார் வகுத்துள்ள புருஷார்த்த நெறி வேறு. - காண்க.

யாமலும் கிரமமாய்க் கழியும்படி சரபேத அஸ்த பரிச தந்திரத்தாலும், ஓஷதிகளாலும், ஆகாரத்தாலும் பௌதிகப் பக்குவத்தாலும் செய்வித்தல் முதலியன இந்திரிய ஒழுக்கமாம்.

கரண ஒழுக்கமாவது : உண்மையான கடவுள் ஒருவரே என்று சத்திய சங்கல்பம் கொள்ளல்; சிற்சபையின்கண் மனம் செல்லுவதுதவிர வேறு எந்த வகை ஆபாசத்திலும் செல்லாமல் அதை இழுத்து மேற்குறித்த இடத்தில், அதாவது கடவுளிடத்தில் நிறுத்துவது; பிறர் குற்றம் விசாரியாது இருத்தல்; தன்னை மதியாதிருத்தல்; செயற்கைக் குணங்களால் கெடுதிகளை நீக்கி இயற்கையாகிய சத்துவமயமாக நிற்றல்; பிறர்மேல் கோபியாதிருத்தல்; தனது சத்துருக்களாகிய தத்துவங்கள் - அரிஷ்ட வர்க்கங்கள் - மேல் கோபித்தல்; அக்கிரம அதிக்கிரமப் புணர்ச்சி செய்யாதிருத்தல் முதலிய இவற்றையே கரண ஒழுக்கம் என்பர்.

ஜீவ ஒழுக்கம்: எல்லா மனிதரிடத்தும் ஜாதி, சமயம், மதம், ஆசிரமம், கோத்திரம், சூத்திரம், குலம், சாத்திரம், தேச மார்க்கம், உயர்வு தாழ்வு முதலியனவாகிய பேதம் அற்றுத் தானாக நிற்றலாம்.

ஆன்ம ஒழுக்கம் எண்பத்து நான்கு லட்சம் யோனிபேதமுள்ள ஜீவர்களிடத்திலும் இரக்கம் வைத்து ஆன்மாவே சபையாகவும் அதனுள்ளொளியே பதியாகவும் கண்டு பூரணமாக நிற்றல்[4].

அகவாழ்வின் கொடுமுடியாகிய ஆன்மிக ஒழுக்கம்பற்றி வள்ளற்பெருமான் வரைந்த பெருவிண்ணப்பத்தில் ஏராளமான குறிப்புகள் காணலாம். அதிலிருந்து ஒரு பகுதியைமட்டும் தந்து இந்தப் பகுதியை முடிப்போம்.

''வாலிபப் பருவம் அடுக்கும் தருணத்திற்றானே அப்பருவத்திற்கு மிகவும் உரிய விடய இச்சைகளைச் சிறிதும் தலையெடுக்கவொட்டாது அடக்குவித் தருளினீர்.

---

4. வேறு ஒரு குறிப்பால் ஆன்ம ஒழுக்கமாவது யானை முதல் எறும்பீறாகத் தோன்றிய ஜீவர்களினது சூக்குமம் தனித்தலைவன் ஆதலால் - அவ்வச் சீவர்களில் ஜீவான்மே திருச்சபையாய் அதனுள் பரமான்மாவே பதியாய் நிற்பதால் - யாதும் நீக்கமற எவ்விடத்தும் பேதமற்று எல்லாம் தாமாக நிற்றல்.
வர்த்தமானன் பதிப்பு : உரைநடைப் பகுதி பக். 482-484

''அவ்வாலிபப் பருவந் தோன்றுதற்கு முன்னரே எல்லா உயிர்கட்கும் இன்பந் தருவதற்கு அகத்தும் புறத்தும் விளங்குகின்ற அருட்பெருஞ் ஜோதியுண்மைக் கடவுள் ஒருவரேயுள்ளார் என்றறிகின்ற மெய்யறிவை விளக்குவித்தருளினீர். வாலிபப் பருவந் தோன்றியபோதே சைவம் வைணவம் சமணம் பவுத்தம் முதலாகப் பல பெயர்கொண்டு பலபட விரிந்த அளவிறந்த சமயங்களும் அச்சமயங்களிற் குறித்த சாதனங்களும் தெய்வங்களும் கதிகளும் தத்துவ சித்தி விகற்பங்க ளென்றும், அவ்வச் சமயங்களிற் பலபட விரித்த வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் சாத்திரங்கள் முதலிய கலைகளெல்லாம் தத்துவ சித்திக் கற்பனைக் கலைகளென்றும் உள்ளபடியே எனக்கு அறிவித்து அச்சமயாசாரங்களைச் சிறிதும் அனுட்டியாமல் தடைசெய்தருளினீர். அன்றியும் வேதாந்தம் சித்தாந்தம் போதாந்தம் நாதாந்தம் யோகாந்தம் கலாந்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த மதங்களும் மார்க்கங்களும் சுத்த சன்மார்க்கானுபவ லேச சித்தி பேதங்கள் என்று அறிவித்து அவைகளையும் அனுட்டியாதபடி தடை செய்வித்தருளினீர்.''

ஓர் எச்சரிக்கை : மேலே தரப்பட்ட விண்ணப்ப வாசகங்களை யும், 'மதமென்றும் சமயமென்றும்' என்று தொடங்கும் பாடல் (4154) முதலியவற்றையும் மேற்போக்காகப் படித்தால் வள்ளலார் நாத்திகரே என்று எண்ண நேரிடக்கூடும். மேலே குறித்த விண்ணப் பம் யாரை நோக்கி எழுந்தது என்பதை எண்ணிப் பார்த்தால், அவர் பரம்பொருளிடத்து நம்பி வழிபட்டவர் என்பது தெளிவாகும்.

' மதமென்றும் சமயமென்றும் சாத்திரங்க ளென்றும்
மன்னுகின்ற தேவனென்றும் மற்றவர்கள் வாழும்
பதமென்றும் பதமடைந்த பத்தர்அனு பவிக்கப்
பட்டஅனு பவங்களென்றும் பற்பலவா விரிந்த
விதம்ஒன்றும் தெரியாதே மயங்கியஎன் தனக்கே
வெட்டவெளி யாஅறிவித் திட்டஅருள் இறையே
சதம் ஒன்றும் சுத்தசிவ சன்மார்க்கப் பொதுவில்
தனிநடஞ்செய் அரசேஎன் சாற்றும் அணிந்தருளே' - 4154



# 6. இருக்கின்றார், இருப்பார்

"இராமலிங்க சுவாமிகள் திருஞானசம்பந்தப் பெருமானைக் குருவாகக் கொண்டு[1] திருவாசகத்தைப் பொருள்நூலாகக் கொண்டு முருகப்பெருமானை வழிபடு கடவுளாகக் கொண்டு கடவுள் அருளுருவம் கண்டு, காம வெகுளி மயக்கங்களைப் போக்கி, யாண்டும் கடவுள் நீக்கமற நிறைந்திருத்தலை உணர்ந்து, எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமை என்னும் அருளறத்தை வளர்த்து அவ் அருள் நெறியே சமரச சன்மார்க்கமென்று தெளிந்து அம்மார்க்கத்தை உலகிற்கு அறிவுறுத்தி, இறுதியில் சாகாநிலை யெனும் பெருவாழ்வு பெற்றார்[2]."

வள்ளற்பெருமான் படிப்படியே ஆன்ம வளர்ச்சியுற்று இறுதிப் பயனாகச் சாகாநிலை பெற்றமையைத் தமிழ்முனிவர் திரு.வி.க. கணித்துரைத்த முடிவுரை மேலே காண்பது.

வள்ளலாரின் சாகாப் பெருநிலைபற்றிக் கருதிப்பார்க்காமல், அவர்பற்றிய கருத்துக் கணிப்பு முடிவு பெறாது. எனவே, அவர் சாவாநிலை பெற்றாரா என்பதை எண்ணிப் பார்ப்பது நம் இன்றியமையாக் கடமையாகும்.

---

1. இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம் - பக். 141
2. உயிர்கள் பெறுதற்குரிய அனுபவம் உயிர் அனுபவம், அருளனுபவம், சிவ அனுபவம் என மூன்று வகைப்படும் என்றும் இம்மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன என்றும் ஞானசம்பந்தப் பிள்ளையார் வள்ளலார் உள்ளத்திலிருந்து அறிவுறுத்தி யருளினார் என்னும் இச்செய்தி 'உயிரனுபவம் உற்றிடில் ... சம்பந்தன் என்றோங்கு சற்குருவே' (3227) என வரும் பாடலால் புலனாகும் - வெள்ளைவாரணர் நூல் - பக். 306-7

### மரணமிலாப் பெருவாழ்வு என்றால் ...

'நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை யென்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு'

என்று கூறிய திருவள்ளுவரே

'கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு' *(269)*

எனவும்,

'கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணும் கூற்று' *(326)*

எனவும் சாவாநிலையைக் குறித்திருக்கிறார். நோன்பின் ஆற்றல் கைவரப்பெற்றவர்கள் கூற்றுவனை வெல்ல முடியும், உயிர்களை உண்பதையே இயல்பாகக் கொண்ட கூற்றுவன் கொல்லாமை நோன்பைக் கடைப்பிடிப்போரிடம் செல்லமாட்டான். இது தமிழ் மறை வகுத்த செந்நாப் போதார் மரணமிலாப் பெருவாழ்வு பற்றித் தரும் குறிப்பாகும்.

''நாம் பெற்றுள்ள பூதவுடம்பு என்றாவது ஒருநாள் அழியக் கூடியதே. நில்லாத அப்புலால் உடம்பினை மாற்றி அன்பும் அருளும் உருவாகிய தூய நல்ல உடம்பினை இறைவன் அருளால் இப் பிறப்பிலேயே பெற்று இவ்வுலகம் உள்ளளவும் இறைவனை அன்பினால் போற்றி ஆருயிர்கட்கெல்லாம் அன்புடையரால் வாழ்தல் என்பது இறைவனருளால் பெறுதற்கு உரிய திருவருள் வாழ்வாகும். இத்தகைய சித்தித் திறத்தால் பெறுதற்குரிய திருவருள் வாழ்வினையே 'மரணமிலாப் பெருவாழ்வு' என வள்ளலார் தாம் பாடிய பனுவல்களில் பல இடங்களிலும் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார்''[3]. மரணமிலாப் பெருவாழ்வு என்றால் என்ன என்பதை அறிமுகப்படுத்துமுகத்தான் பேராசிரியர் க. வெள்ளைவாரணர் தரும் குறிப்பு இது.

### தொன்மையான கருத்து

மரணமிலாப் பெருவாழ்வு என்னும் கருத்து வள்ளற்பெருமானால் 19ஆம் நூற்றாண்டில் உருவானது என்று கருதவேண்டா.

3. பேரா. க. வெள்ளைவாரணர் - திருவருட்பாச் சிந்தனை - பக். 265

குறைந்தது கி.மு. 3ஆம் நூற்றாண்டில் எழுந்த தொல்காப்பியம், திருக்குறள், கி.பி. 2ஆம் நூற்றாண்டைக் கீழெல்லையாகக் கொண்ட சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை ... மற்றும் தொன்னூல்களிலேயே இந்தக் கருத்தைக் காணமுடிகிறது. பேரா. க. வெள்ளைவாரணர், ஊரனடிகள் இருவரும் தொன்மையான நூல்களிலிருந்து பல மேற்கோள்களை எடுத்துக்காட்டி, மரணமிலாப் பெருவாழ்வு எனும் கருத்தின் தொன்மையினைத் தெளிவாக விளக்கியுள்ளனர். பேரா. வெள்ளைவாரணரின் 'திருவருட்பாச் சிந்தனை,' தவத்திரு. ஊரனடிகளின் 'வள்ளலார் மறைந்தது எப்படி' ஆகிய நூல்களில் மரணமிலாப் பெருவாழ்வுபற்றித் தொன்னூல்கள் தரும் குறிப்புகளைக் காணலாம்.

## பின்னூல்களிலும்

திருமுறைகள், மற்றும் சுத்த சாதகம் போன்ற சாத்திர நூல்கள் ஆகியவற்றிலும் மரணமிலாப் பெருவாழ்வை விளக்கும் குறிப்புகளைக் காணலாம். மேற்குறித்த சான்றோர்களின் நூல்களைப் பயின்று பயன் பெறுக என்ற குறிப்பினை மட்டும் தந்து மேற்செல்வோம்.

## வள்ளலாரின் முன்னோடிகள்

கருத்தளவில் சொல்லால் தந்து விடுக்காமல், வாழ்விலேயே மரணமிலா நிலையை அடைந்த ஞான பரம்பரை உண்டென்பதைத் தமிழ்ப் பண்பாட்டு வரலாறு புலப்படுத்துகின்றது.

சைவ சமய குரவர் நால்வர் 'மறைவு' பற்றி எண்ணிப் பாருங்கள். அருட்சோதியில் கலந்தவர் சம்பந்தர்; திருநாவுக்கரசர் பூம்புகலூர்த் தலத்தில் சிவலிங்கத்தினுள் கலந்தார்; சுந்தரமூர்த்திகள் உடம்போடே கயிலாயம் சென்றார்; மாணிக்கவாசகர் தில்லை வெளியிற் கலந்தார். இவருள் எவருக்கும் எங்கும் சமாதி இல்லை. ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாருக்கு மட்டும் சமாதி உண்டென்பர் - திட்டமாகத் தெரியவில்லை. கோதைநாச்சியார் திருவரங்கப் பெருமானுள் கலந்தார். ஆழ்வார்களுக்கும் சமாதி எங்கும் இல்லை.

பட்டினத்தார் சிவலிங்கமானார்.

இவர்களுள் எவரும் மரணம் என்பதை அறியாதவர்கள்.

ஞானிகளில் பலர் உடலைப் போட்டுவிட்டுப் போனவர்கள் உண்டு. உடையவர் ஸ்ரீஇராமானுசரின் திருமேனி இன்றும் உளது என்பதைக் கருதிப் பாருங்கள்.

வள்ளலார் கருத்து

மரணமிலாப் பெருவாழ்வு குறித்து வள்ளற்பெருமான் சொல்லியனவற்றுள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

'சாகாதவனே சன்மார்க்கி' - உபதேசப் பகுதி பக். *68*

'என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம்' - *4960*

'மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம்' - *5576*

'எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்ய்ளிக்க வேண்டு மென்றேன்
விரைந்தளித்தான் எனக்கே' - *5450*

'பாராலும் படையாலும் பிறவாலும் தடுக்கப்
படுதலிலாத் தனிவடிவம் எனக்களித்த பதியே' - *4636*

'கூகாஎன அடுத்தோர் கூடிஅழாத வண்ணம்
சாகா வரம்எனக்கே தந்திட்டான்' . *5510*

'கற்றதென்றும் சாகாத கல்வியென்று
கண்டுகொண்டுஉன்
அற்புதச்சிற்றம் பலத்தில்
அன்பு வைத்தேன்' - *2950*

'தந்தையைக் கண்டேன்நான்
சாகா வரம்பெற்றேன்' - *4903*

'கற்றேன்சிற் றம்பலக் கல்வியைக்
கற்றுக் கருணைநெறி
உற்றேன்எக் காலமும் சாகாமல்
ஓங்கும் ஒளிவடிவம்
பெற்றேன் ...' - *4745*

'இறவா வரமளித் தென்னைமேல் ஏற்றிய
அறவாழி யாம்தனி அருட்பெருஞ் ஜோதி'
- அகவல் *157-58*

'சாவா நிலைஇது தந்தனம் உனக்கே
ஆவா எனஅருள் அருட்பெருஞ் ஜோதி'
- அகவல் *209-10*

திருவருட்பாவின் பக்கங்களைப் புரட்டியபோது ஆங்காங்கே கருத்தில் பதிந்த வரிகள் மேலே கண்டவை; மரணமிலாப் பெருவாழ்வு பற்றி அடிகள் அருளிய அடிகளும் பாடல்களும் இன்னும் இன்னும் மிகப் பல உள்ளன.

உரைநடைப் பகுதியிலிருந்தும் சில வாக்கியங்களைக் காண்போம் :

> ''தூக்கத்தை ஒழித்தால் ஆயுசு விர்த்தியாகும். ஒருவன் ஒருநாளைக்கு இரண்டரை நாழிகைக்குத் தூங்கப் பழகினால் அவன் ஆயிரமாண்டுகள் ஜீவித்திருப்பான். எப்போதும் ஆசானுடைய திருவடியை ஞாபகஞ் செய்து கொண்டிருப்பதே சாகாத கல்விக்கு ஏதுவாகும்.''
>
> - வர்த்தமானன் பதிப்பு - பக். 479

> ''மார்க்கண்டர்க்காக ருத்திரமூர்த்தி இடது காலால் எமனை உதைத்ததற்கு நியாயம் :- மார்க்கண்ட ரென்பது மயக்க மாகிய மறைப்பென்னும் மரணத்தைத் தவிர்த்தது. ருத்திரன் என்பது தனித்த ஆன்ம அறிவு. எமன் என்பது மயக்கத்தைத் தரத்தக்க வெகுளி சினம் முதலிய. இடது என்பது சந்திரகலை. காலென்பது பிராண வாயு. ஜனன மரணத்தை உண்டுபண்ணுவது சந்திர சூரிய சக்தி. ஆதலால், அஞ்ஞான பாசத்தால் சினமாகிற கூற்றுவன் கூட்ட விவேகி என்னும் மார்க்கண்டன் ருத்திரன் என்னும் ஆன்ம அறிவோடு கூடவே, மேற்படி ருத்திரன் பிண்ட நஷ்டம் செய்கின்ற இடகலையை மேலேற்றி, குணங்களாகிய சூலத்தால் கூற்றை ஒழித்து அருளாகிய சத்துவமயமாய் நீடிக்கச் செய்வது எம சம்மாரம்''
>
> - காலசங்காரம், வர்த்தமானன் பதிப்பு - பக். 438-439

> ''சுவர்ண தேகிகள் ஆயுள்
> ஒரு மாற்றுள்ள சுவர்ண தேகிகள் வயசு -
> நாலு லட்சத்து முப்பத்தீராயிரம் ...
> ஐந்து மாற்றுள்ள சுவர்ண தேகிகள் வயசு -
> நாற்பத்துமூன்று லட்சத்து இருபதாயிரம் ...''
>
> - வர்த்தமானன் பதிப்பு பக். 516

### வள்ளலார் 'அந்த' நிலைபெற்றாரா?

சன்மார்க்க அமைப்பை உருவாக்கியவர் வள்ளற்பெருமான். அந்த மார்க்கத்திற்கு ஓர் இலட்சியம் உண்டு; அந்த இலட்சியத்தை அடைதற்கு வகுக்கப்பட்ட வழிகள் உண்டு; வழியை அறிந்து நடப்பவர்கள் அடையும் சித்தி உண்டு. அந்தச் சித்தி நிலைதான் மரண மிலாப் பெருவாழ்வு.

திருஞானசம்பந்தராகிய தம் குரு தமக்கு உயிர் அனுபவம், அருள் அனுபவம், சிவ அனுபவம் மூன்றையும் உபதேசித்து நெறிப் படுத்தியதாக வள்ளலார் குறிப்பிட்டுள்ளார். (3227) இவ்வனுபவங்கள் ஒன்றன் விளைவு மற்றொன்றாகச் சிவானுப வத்தில் நிறைவுறும்.

உயிரனுபவம், அருளனுபவம், சிவானுபவம் ஆகிய முறையே அன்புருவமான சுத்த தேகத்தையும், அருளுருவமான பிரணவ தேகத்தையும், இன்புருவான ஞானதேகத்தையும் காணும். சுத்த தேகம் பெற்றவனுக்குக் கர்ம சித்தியும், பிரணவ தேகம் பெற்றவ னுக்கு யோக சித்தியும் ஞான தேகம் பெற்றவனுக்கு ஞான சித்தி யும் கைகூடும்.

மூன்றாம் பெருநிலையாகிய ஞானதேகப் பேறு பற்றி வள்ளற் பெருமான் தரும் விளக்கம் :

> 'ஞானதேகம் காரண ரூபம் - எங்கும் பூரண வியாபகம் - பராபர அறிவு - பராபர தத்துவம் - அளவுகடந்த மாற்று - சப்தமய தரிசனம் - சர்வ மகா சக்தி - சர்வ சுதந்தரம், உருவம் தோன்றியும் தோற்றாமலும் இருக்கும் - காலாதீதன்[4]'
>
> - உபதேசப் பகுதி

' கண்டேன் களித்தேன் கருணைத் திருவமுதம்
உண்டேன் உயர்நிலைமேல் ஓங்குகின்றேன் - *கொண்டேன்*
*அழியாத் திருவுருவம் அச்சோஎஞ் ஞான்றும்*
அழியாச்சிற் றம்பலத்தே யான்' - *3896*

---

4. சுத்த தேசம், பிரணவ தேகம் ஆகிய பேறுகள் பற்றியும் வள்ளலார் இவ்வாறே விளக்கியுள்ளார். முடிவான நிலை மட்டுமே இங்கு எடுத்துக்காட்டப்பட்டது. ஞானதேகம் பெற்றவன் கால அதீதன் (காலாதீதன்) என்று அடிகள் தரும் குறிப்பை எண்ணுக.

' கண்டேன் களித்தேன் கருணைத் திருவமுதம்
உண்டேன் *அழியா உரம்பெற்றேன்'* - 3900

' ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன்
மாளாத ஆக்கை பெற்றேன்' - 5448

' பிறந்தேற்கு என்றும் *இறவாது*
*பிறவாது ஓங்கும் பெருமைதந்து'* - 4068

' ஐயமுறேல் என்மகனே *இப்பிறப்பில் தானே*
*அடைவதெலாம் அடைந்தனை நீ'* - 4180

' எந்நாளும் *இவ்வுடம்பே இறவாத*
*இயற்கை பெற்றேன்'* - 5412

' ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா
அருட்பெருஞ் சோதிஎன் உளத்தே
நீதியில் கலந்து நிறைந்தது *நானும்*
*நித்தியன் ஆயினேன்'* - 5453

' தூக்கமும் துயரும் அச்சமும் இடரும்
தொலைந்தன தொலைந்தன எனைவிட்டு
ஏக்கமும் வினையும் மாயையும் இருளும்
இரிந்தன ஒழிந்தன முழுதும்
ஆக்கமும் அருளும் அறிவும் மெய்யன்பும்
*அழிவுறா உடம்பும் மெய்யின்ப*
*ஊக்கமும்* எனையே உற்றன உலகீர்
உண்மைஇவ் வாசகம் உணர்மின்' - 5456

மேலே காட்டியன கொண்டும் மேலும் மிகப் பல எடுத்துக்காட்டு கள் கொண்டும் வள்ளலார் இப்பிறப்பிலேயே மரணமிலாப் பெரு வாழ்வு பெற்றார் என்பதைத் தெளிவாக உணரலாம்.

## எங்கே அவர் ...?

மரணமிலாப் பெருநிலையை அடிகள் பெற்றார் என்பது உண் மையாயின், அவர் எங்கே இருக்கிறார், எங்கே காணலாம் என்று கேட்க வேண்டும் எனச் சிலர்க்குத் தோன்றும். இந்த ஐயர்களுக்கு உறைக்கும் வகையில் விடை சொல்வது கடினம்.

ஐந்து பூதங்களா லாகியது எவ்வுடம்பும். அணிமா முதலான சித்தி பெற்றுவிடும் சித்தர்கள் ஐம்பூதங்களாலான பருவுடம்போடு

உலவுதல் வேண்டுமென எதிர்பார்க்கக் கூடாது. சூக்கும எல்லை யையும் கடந்த அதிசூட்சுமக் காரண மேனியும் ஞான தேகமும் பெற்ற அவர்கள் சில்வாழ்நாட் பல்பணிச் சிற்றறிவோடு வாழ்வோர் புன்கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டார்.

மேற்காணும் வழியில் கேட்போருக்கு நாமும் ஒரு வினாக் கேட் கலாம். காற்று உண்டா என்றால் 'ஆம்' என்கிறார்களே - அந்தக் காற்றைக் காணமுடிகிறதா? இல்லையே! அதன்மேலும் அவர்கள் ஒரு தடை எழுப்பக்கூடும். காற்றைக் கண்ணால் காண முடியாது தான், ஆனால், உணரமுடிகிறதே! இந்தத் தடைக்கு விடை : காற்று இருப்பதை உயிரில் பிணம் அறிவதில்லை; அதனால் காற்று இல்லை என்று சொல்ல முடியுமா?

தகுநிலை பெற்ற சில யோகியரும் தியான நிலையினரும் சித் தர்கள் இருக்கின்றனர் என்பதை உணர்வால் தெளிந்து கொள்வர். நம்பிக்கையிலிகள் எழுப்பும் தடைகளுக்கு விடையும் விளக்கமும் தருவது வீண் வேலை.

அவர்தவிர வேறு ஒரு சாராரும் வள்ளலார் இருப்பினைப் பற் றித் தடை எழுப்புவர். சமய நம்பிக்கை உடைய இவர்கள், 'நம்மைப் போல் நடமாடும் மனிதர்கள் மரணமிலாப் பெருவாழ்வு அடைய முடியுமா' என்று ஐயுறுவார்கள். இவர்களுக்கு விளக்கம் சொல்லும் கடமை சன்மார்க்கர்களின் கடமையாகும்.

தமிழ் முனிவர் திரு.வி.க. வரைந்துள்ள செய்திகள் இங்கே எடுத் துக்காட்டத் தக்கன :

> "... பனிக்கட்டியை எடுத்துக்கொள்வோம். அஃது எப்ப டிக் கிடக்கிறது? அஃது ஓர் எல்லைக்கு உட்பட்டுத் திண்ணெனக் கிடக்கிறது. அக்கட்டி மீது வெம்மை படரப் படர அது நீராக மாறுகிறது. அந்நீரின் மீது மேலும் மேலும் வெம்மை படியப் படிய அது காற்றாக மாறுகிறது. அக் காற்றின்மீது கதிரொளி பாயப் பாய அஃதொரு அதிதீவிர சக்தியாக மாறுகிறது. முதலில் கட்டியாய், பின்னே நீராய், காற்றாய், அதிதீவிர சக்தியாய் மாறிமாறிச் சென்ற பொருள் ஒன்றா, பலவா? பொருள் ஒன்றே. ஆனால் வெம்மையின் தாக்குதற்கு ஏற்ப அது பன்னிலை எய்துகிறது. ...

பனிக்கட்டியாய்க் கிடந்த ஒன்று, பின்னை எங்ஙனம் நீராகி, காற்றாகி, எல்லை, கட்டு முதலியவற்றிற்கு அடங்காத ஒன்றாக மாறுகிறதோ, அங்ஙனே பருவுடலில் கட்டுப் பட்டுக் கிடக்கும் திண்மையறிவு ஆண்டவன் அருள் ஒளி யால் நுண்ணுடல், முதலுடல் (காரண சரீரம்) முதலிய உடல்களின் சார்பு பெறும்போது படிப்படியாக அகண் டாகாரத்தை பெறும் ஆற்றல் பெறுகிறது ...

.... மாணிக்க வாசகனார் நிலைமீது கருத்துச் செலுத்து வோம். அவர் நிலை என்ன? அவர் அறிவு பருவுட லளவிலா கட்டுப்பட்டுக் கிடந்தது? அவர் மாறுதற்குரிய கலைப்புலமை கொண்டா பாக்கள் பாடினார்? அவர் பனிக்கட்டியனைய பருவுடலுணர்வு கடந்து காற்றனைய முதலுடலுணர்வில் நின்று கன்மமும் அவித்தையும் கழியப் பெற்று, நினைப்பற நினைக்கும் தன்மை யெய்தி, ஆண் டவனல்லால் பிறிது மற்றின்மை கண்டு, மாறா இன்பத்தில் திளைத்து இருந்தவர். .... மாணிக்கவாசகனார் தமது மாயாவுடல், அருளமிழ்தப் பொன்னுடலாக மாறியதை வியந்து வியந்து வியந்து கூறுகிறார் .... இந்நிலை எய்திய மாணிக்கவாசகனாரைப் பருவுடலுடன் கட்டுப்பட்டுக் கிடக்கும் ஒருவன் தன்னுடன் ஒப்பநோக்கி ஆராய்வது அறிவுடைமை யாகாது. மாணிக்கவாசகனார் ஆனந்த வடிவான மாதவர் என்பதை ஓர்தல் வேண்டும். மாணிக்க வாசகனார் மெய்ந்நிலையை அவர்பின் வந்த பலர் வியந்து வியந்து போற்றியிருக்கிறார். ... இராமலிங்க சுவாமிகள் மாணிக்கவாசகனைப் பற்றிப் பாடிய பாக்களை அன்பர்களே! - படித்துப் பாருங்கள் - 'மாணிக்கவாசகனே ஆனந்த வடிவான மாதவனே' என்றும், 'அன்புருவம் பெற்றதன்பின் அருளுருவம் அடைந்து பின்னர் இன்புருவம் ஆயினை நீ எழில்வாதவூர் இறையே' என்றும் 'ஆடுகின்ற சேவடிக்கீழ் ஆடுகின்ற ஆரமுதே' என்றும் இராமலிங்க சுவாமிகள் வாதவூரடிகளை வழுத்தி யிருத்தல் காண்க ...''

- சைவத்தின் சமரசம் : பக். 104-108

இவ்வளவும் அறிவிக்க அறிந்த பின்னும் வள்ளலாரின் ஆன்ம முதிர்ச்சியில் ஐயமோ மருட்கையோ அடைபவர் இருந்தால், அவர் களுக்குச் செய்துகொள்ளக்கூடிய விண்ணப்பம் ஒன்று உண்டு.

ஞானசம்பந்தப் பிள்ளையார் அம்பலவாணரில் கலந்தார்; அப்பர் 'நண்ணரிய சிவானந்த வடிவேயாக அண்ணலார் சேவடிக்கீழ்' அமர்ந்திருந்தார். சுந்தரர் மேனியோடு பெருமான் கயிலையைச் சேர்ந் தார். ஆழ்வார்களுக்குச் சமாதி எங்கும் காணப்படவில்லை. பொது நிலை வாழ்வினராகிய நம்போல்வார்போல் 'மரண வாதனை' இன்னதென அறியாமலே ஞான வடிவாய் எங்குமாய் ஞானிகள் நிறைகின்றனர்.

ஞான பரம்பரை என்பது சைவ சமய குரவர் நால்வர், ஆழ்வார் கள் போன்றவரோடு நின்றுவிடவில்லை. அவர்கள் ஞான உடல் அடைந்து எங்கணும் நிறைந்து இன்னமும் இருக்கிறார்கள் என்று நம்புவோர் வள்ளலாரும் இருக்கின்றார் என்பதையும் நம்ப வேண்டும்.

முரட்டுத்தனமாகச் சொல்வதென்றால், நால்வர் பெருமக்களுக் குப்பின் சைவம் 'கயிலாய பதவி' அடைந்துவிட்டதா என்றுதான் கேட்க வேண்டும்.

### உணர வழி ...?

வள்ளலார் மானிடர்க்கு நித்திய கர்ம ஒழுக்கங்களை உபதேசித் திருக்கிறார்; சமரச சங்கத்தார் வாழ வேண்டிய நெறிகளை வகுத்துக் கூறியிருக்கிறார்.

அவர் வகுத்த வழியிலே சற்றும் பிறழாது வாழ்ந்து பார்த்தால், வள்ளலார் மரணமிலாப் பெருவாழ்வு அடைந்து, இன்னமும் இருக் கிறார், இனிமேலும் இருப்பார் என்பதை மனத்தால் உணரமுடியும்.

மூளை கொண்டு மட்டும் எல்லா நூல்களையும் படிக்கக் கூடாது நெஞ்சு கொண்டு உணர்ந்து பயில வேண்டிய நூல்கள், ஆன்மிக நூல்கள். ஞான பரம்பரைச் சான்றோர்களை வறண்ட அறிவாராய்ச்சி கொண்டு சோதிக்கக் கூடாது. 'மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர் விட்டு உளன் எங்கள் சோதி'.

## மறைவும் நிறைவும்

வள்ளற்பெருமானின் சித்திநிலைபற்றிப் பேசும்போது அவர் உடலை மறைத்துக்கொண்டார் என்றுமட்டும் குறிப்பது குன்றக்கூறலாகும். திரு.வி.க. விளக்கிய 'பனிக்கட்டி'யை நினைவிலே கொள்ளுங்கள். ஒரு குறிப்பிட்ட இடத்தில் சுருங்கிய வடிவில் இருந்த பனிக்கட்டி, காற்றாகி எங்கும் நிறைகிறது. அதுபோல் அன்புருவம் - அருளுருவம் ... என்று உருமாற்றம் பெற்று வள்ளலார் எங்குமாய் நிறைந்தார் என்று உணரவேண்டும்.

"நான் இப்போது இந்த உடம்பில் இருக்கின்றேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்" என்ற வள்ளலார் வாக்கினை நினைந்து, அதற்குரிய மதிப்பினை வழங்கி, உய்தி பெறுவோம். ஆம், அவர் இருக்கின்றார், இருப்பார்.



# 7. முடிவாக ...

## சித்திகள் - விஞ்ஞான ஆய்வுகள்

அட்டமா சித்திகள்பற்றி விளக்கங்கள் பல உண்டு. படித்தோர் பலர், வியப்போர் பலர். அச்சித்திகளுள் முதலில் வருவது அணிமா. உருவத்தைச் சிறிதுசிறிதாக ஆக்கும் சித்தியே அணிமா.

மனித உடலை அணிமா என்னும் சித்தியால் நுட்பமானதாக மாற்றிக் கொள்ளும் சித்தர்களைப் பற்றி நிரம்பக் கேள்விப்பட்டிருக் கிறோம்; ஆனால், கண்டவர்கள்பற்றிப் பேச முடியாது.

நுண்ணுடல் கொண்டு அற்புதங்கள் நிகழ்த்துவது உண்டு. இலங்கையில் வாழ்ந்த யோக சுவாமிகள் பற்றி அறிஞர் அ.ச. ஞானசம்பந்தர் எழுதியுள்ளன காண்க.[1] திரு.வி.க.வின் 'உள்ளொளி' இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபடுவோர்க்கு நிரந்தர மான பார்வை நூலாகும்.

இவையும் இவைபோல்வனவும் இலக்கிய இலக்கண சாத்திர நூல்களைக் கொண்டு எழும் விளக்கங்களே. விஞ்ஞான வழியே அறிவுக்குப் பொருந்திய வழி என்று உறுதிகாட்டுவோர் உண்டு. அவர்களின் கருத்து ஒவ்வாதது எனப் புறக்கணிக்க முடியாது.

விஞ்ஞானிகளும் உருவ மறைவுபற்றி ஆராய்ந்துள்ளனர்.

அந்த ஆய்வுகள் பற்றி ஒருவாறு கோடி காட்ட முடியுமே யன்றி விரிவாக விளக்கிடும் தகுதி இக்கட்டுரையாசிரியனுக்கு இல்லை.

---

1. அ.ச. ஞானசம்பந்தம் - நான் கண்ட பெரியவர்கள்

## பிரமஞான சபையினர் ஆய்வு

தியசாஃபிகல் சொசைட்டி என்னும் பிரமஞான சபையினர் ஆவிகள்பற்றி ஆராய்ந்துள்ளனர். பெசன்ட் அம்மையாரும் ஆல்காட் துரையும் பலகாலம் ஆராய்ந்து சில உண்மைகளை வெளியிட்டுள்ளனர். அவர்கள் விஞ்ஞான ஆய்வுக்கூடம் எதுவும் இல்லாமல் இயற்பியல் உண்மைகள் சிலவற்றை வெளியிட்டுள்ளனர். இயற்பியல் அறிஞர்கள் விஞ்ஞான ஆய்வுகளை வெளியிடுவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே பிரமஞான ஆய்வுகள் வெளியாகியுள்ளன. இயற்பியல் (பௌதிக) ஆய்வு முடிவுகள் பின்னர்க் கண்ட முடிவுகள் பிரமஞான சபைய்யினரின் முடிவுகளோடு ஒத்துப் போகின்றன.

ஸ்டீபன் பிலிப்ஸ் என்ற இயற்பியல் பேராசிரியர் எழுதியுள்ள ANIMA என்ற நூலிலே இதனை விளக்கியிருக்கிறார்.

காலத்தை நுண்ணுடலாக்கும் அணிமா சித்தி பற்றிப் பிரமஞான சபையினர் தொடக்க காலத்தில் ஆராய்ந்துள்ளனர். அதன் விளைவுகளை இயற்பியல் ஏற்பதையே ஸ்டீபன் பிலிப்ஸ் தெளிவுறுத்தியிருக்கிறார்.

இந்த வகையில் வள்ளலார் கண்ட உண்மைகள் உதவ முடியும் என்று கருதியே வள்ளற்பெருமானின் முதன்மைச் சீடராகிய தொழுவூர் வேலாயுத முதலியாரின் உதவியை நாடியிருக்கிறார்கள் என்று கருதுவதற்கு இடம் இருக்கிறது. ஆனால், முதலியாரால் இந்த வகையில் உதவ முடிந்ததா என்பது தெரியவில்லை.

இந்த நூலின் பின்னிணைப்பாக ஒரு சிறிய ஆங்கிலக் கட்டுரை சேர்க்கப்பட்டுள்ளது. இன்றைய விஞ்ஞான ஆய்வுகளைக் கொண்டு வள்ளலார் மறைவை விளக்க முடியலாம் என்று அக்கட்டுரை சுட்டிக்காட்டுகிறது. அந்தக் கட்டுரையும் ஸ்டீபன் பிலிப்சின் நூலும் விஞ்ஞான அடிப்படையில் மட்டுமே உருவானவை.

குவாண்ட்டம் மெக்கானிக்ஸ், ஸ்டிரிங் கோட்பாடு (Quantum Mechanics & String Theory) என்ற அடிப்படைகள் கொண்டு வள்ளலாரின் கருத்துகளை ஆராய்ந்தால் சித்த மார்க்கம் பற்றிப் பல தெளிவுகள் கிடைக்கும் என்று நம்ப இடமிருக்கிறது.

சுஜாதா எழுதுகிறார்

நானோ டெக்னாலஜி என்ற விஞ்ஞானப் பிரிவை மிக எளிமையாகவும் இனிமையாகவும் அறிஞர் சுஜாதா 'கல்கி' இதழில் எழுதியுள்ளார். அந்தக் கட்டுரையிலிருந்து சில வாக்கியங்கள் இங்கே தரப்படுகின்றன :

''நானோ டெக்னாலஜியின் மிகப்பெரிய சாதனையாக விஞ்ஞானிகள் எதிர்பார்ப்பது மனித சரீரத்தினுள்ளே 'மாலிக்யூலர் ரிப்பேர்' செய்யும் திறமைகளைத்தான். 'நானோயிட்'கள் நம் உடலுக்குள் சென்று செல்களை ரிப்பேர் செய்ய முடியும் ... காயகல்பம் சாப்பிட்டதுபோலச் சதா இளமையாக இருக்கும் உடல்.

''மனிதன் எதற்குச் சாக வேண்டும்? நூறு வருஷம் என்று வாழ்நாளைத் தீர்மானித்தது யார்? யோசித்துப் பார்த்தால் உடல் உறுப்புகள் மெல்ல மெல்லச் செயலழிவதால்தான் நாம் சாகிறோம். ... சேதங்கள் அனைத்தையும் அவ்வப்போது ரிப்பேர் செய்து விட்டால் நூறு வயதென்ன எதையும் தாண்டி வாழ்வதற்கு இயற்கை தடைவிதிக்காது. இதை எதிர்பார்த்து இப்போதுகூட மெடிக்கலாக இறந்துபோனாலும் கிரையோஜெனிக் முறைகளைப் பயன்படுத்தி உடலைக் குளிர்வித்து அடுத்த நூற்றாண்டுவரை வைத்திருந்து விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட்டதும் அப்போதைய முறைகளைப் பயன்படுத்திப் புத்துயிர் பெற விரும்பி அதற்கான செலவைத் தங்கள் சொத்தில் ஒதுக்கிவைத்துச் செத்திருக்கிறார்கள் சிலர். ... நானோ டெக்னாலஜி மூலம் இது சாத்தியமாகும் போலத் தெரிகிறது. நானோ டெக்குடன் (விட்ரிஃபிக்ஷன்) திரவங்கள் கட்டி தட்டாமல் தடுக்கும் தொழில் திறமையும் சேர்ந்தால், உடல் உறைய வைக்கப்பட்டுக் காத்திருப்பவர்களை உயிர்ப்பிக்க முடியும் என்று சொல்கிறார்கள். அதற்கான வேளை வர இன்னும் ஒரு முப்பதாண்டுகள் ஆகலாம். அதன்பின் இறந்தவர்கள் மீண்டும் பிறக்கலாம்[2].''

அணிமா என்ற யோக சித்தியை இயற்பியல் விளக்க முடிகிறது. செத்தாரை எழுப்பிவிட நானோ டெக்னாலஜி நம்பிக்கை தருகிறது.

விஞ்ஞானமும் வள்ளலாரின் சாகாக் கலையும் கைகோத்து நடைபோட வழி ஏற்படும் என்ற நம்பிக்கை இருக்கிறது. வள்ளலார் இருக்கின்றார், இருப்பார்.

---

2. சுஜாதா - கல்கி (28.5.2006) இதழ்



## Vallalar and string theory - A speculative link

- Dr. Siva Gurusami Narendra, M.S., Ph.D.

Ramalinga Vallalar, who was born in 1823 in Southern India, was a spiritual visionary who challenged the doctrines of organized religious practices. He emphasized that while scriptures usually preach universal wisdom, such values are lost in blind customs and doctrines that surround the practice of most religions. Vallalar practiced and preached a life of absolute kindness and charity. His writings are meant to educate the common person the importance of compassion and tolerance for diversity.

Additionally, Ramalinga Vallalar in his written work has extensively theorized about the science of matter and energy. It is quite evident from the writings that his comprehension of Physics, the science that studies matter and energy and their interactions, is sophisticated. A detailed analysis of his work is documented by T.R. Thulasiram in his thesis titled "Vallalar's Vision and Nuclear Physics and Nervous System". Although Vallalar's knowledge seems more theoretical than practical, it is worth pointing out that almost always the concepts of Physics start with theory and mathematical proofs, followed the practical verification much later.

The *unified field theory* by Albert Einstein is one such example. Einstein found the existence of two distinct forces : gravity and electromagnetism, quite perplexing. He did not accept that nature is based on such a disorganized blueprint. This led him on a 30-year analysis of *unified field theory* where he hoped to show that these two forces are really manifestations of one grand underlying principle. The unifying theory still remains unsolved, but it has become the next frontier for sicence and mathematics. There exists a large community of scientists and mathematicians working to

unravel this mystery. It is worth noting that there are really four distinct forces of nature - strong and weak nuclear forces, gravity, and electromagnetism. The first two were not discovered during Einstein's life.

The reasons for bringing up the *unified field theory* here are two fold. First, to deduce that Vallalar may belong to a class of philosophers who were imaginative enough to theorize the functioning of practical matter, inspite the lack of experimental evidence. Second, to point out that the search for the *unified field theory* has lead to the development of *string theory*. The reason for this second point is to introduce the concept of 10 dimensions that is at the core of *string theory* and use that to speculate how Vallalar's body could have disappeared in lieu of his death.

Let us first understand the basics of *string theory*. I will quote Professor Brian Greene, a foremost physicist in the area *string theory* from Columbus University - The fundamental particles of the universe that physicists has identified electrons, neutrinos, quarks, and so on - are the "letters" of the matter. Just like their linguistic counterparts, they appear to have no further internal substructure. *String theory* proclaims otherwise. According to *string theory*, if we could examine these particles with even greater precision - precision many orders of magnitude beyond our present technological capacity - we would find that each is not pointlike but instead consists of a tiny, on dimensional loop. Like an infinitely thin rubber band, each particle contains vibrating, oscillating, dancing filament that physicists have named a *string*. *String theory* proclaims, for instance, that the observed particle properties that is, the different masses and other properties of both the fundamental particles and the force particles associated with the four forces of nature (the strong and weak nuclear forces, electromagnetism, and gravity) - are reflection of the various ways in which a string can vibrate.

This is still a theory with strong mathematical proofs. But there exists in practical experimental evidence. Scientists are trying to construct experiments to extend this theoretical knowledge to practice. Such an experiement revolves around proving that physical matter can "disappear". Let us see why?

According to Professor Brian Greene, one of the strangest features of string theory is that it requires more than the three spatial dimensions that we see directly in the world around us. That sounds

like science fiction, but it is an indisputable outcome of the mathematics of string theory. So the question is - where are these extra dimenions? One suggestion is that they're around us, but they're small relative to the dimensions that we directly see and therefore are more difficult to detect with our naked eyes. What the theory also predicts - not necessarily but possibly - is that energy can escape from our known dimensions and leak into these extra dimensions under appropriate circumstances. If the energy loss is of just the right sort, it could be very strong evidence that the energy has seeped off into these extra dimensions.

So, should the scientific experiments be successful in proving string theory, disappearance of matter from the three spatial dimensional world the other dimensions will be possible. This leads to the question, however unsubstantiated it might sound, that perhaps Vallalar with his knowledge of theoretical physics, knew the existence of these additional dimensions. And maybe, just maybe, he was successful in his experiment to traverse energy across from the three dimensional world we see to the other dimensions we don't. For someone like Professor Brian Greene this might sound unreasonable, given that there were no experimental infrastructure availabel in the 17th century to accomplish this energy traversal, let alone in the 21st century. But, perhaps traversing across these dimensions is simpler for someone who understands the fundamental nature of physics and metaphysics. Only time will tell !

**Bibliography :**

1 T.R. Thulasiram, "Vallalar's Vision of Nuclear Physics and Nervous System", http://www.vallalar.org/books/english-books-index.htm

2 B. Greene. "The Elegant Universe", Interview on the Public Broadcast Service's NOVA television show.



## சான்றோர்களைப் பற்றி எழுதிய அறிஞர்கள்

**1**

திருஞான சம்பந்தர் *(மரபின் மைந்தன் முத்தையா)*
திருநாவுக்கரசர் *(பேராசிரியர் இராம.இருசுப்பிள்ளை)*
சுந்தரர் *(புலவர்மணியன்)*

**2**

மாணிக்கவாசகர் *(முனைவர் தெ.ஞானசுந்தரம்)*
காரைக்கால் அம்மையார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
சேக்கிழார் *(முனைவர் செல்வக்கணபதி)*

**3**

ஆண்டாள் *(முனைவர் நிர்மலா மோகன்)*
குலசேகர ஆழ்வார் *(முனைவர் கா.அரங்கசாமி)*
திருமங்கையாழ்வார் *(முனைவர் அமுதன்)*

**4**

பெரியாழ்வார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
நம்மாழ்வார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*
வேதாந்ததேசிகர் *(முனைவர் பிரேமா நந்தகுமார்)*

**5**

ஸ்ரீமத்வர் *(டாக்டர் சுதா சேஷையன்)*
ஸ்ரீராமானுசர் *(முனைவர் ம.பெ. சீனிவாசன்)*
வள்ளலார் *(முனைவர் ம.ரா.போ.குருசாமி)*

**6**

திருமூலர் *(முனைவர் அ.அறிவொளி)*
மெய்கண்டார் *(முனைவர் ந.இரா.சென்னியப்பன்)*
தாயுமானவர் *(முனைவர் இ.சுந்தரமூர்த்தி)*

**7**

வீரமாமுனிவர் *(முனைவர் ம.செ.இரபிசிங்)*
குணங்குடி மஸ்தான் *(முனைவர் தக்கலை பஷீர்)*
மகாகவி பாரதியார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*

**8**

சாந்தலிங்க சுவாமிகள்
*(தவத்திரு.சாந்தலிங்க இராமசாமி அடிகளார்)*
கந்தசாமி சுவாமிகள் *(புலவர் ப.வெ.நாகராசன்)*
சுவாமி சித்பவானந்தர் *(வழக்கறிஞர் மு.மாரியப்பன்)*

**9**

சிவப்பிரகாசர் *(முனைவர் ம.மனோன்மணி)*
சிவஞான முனிவர் *(முனைவர் வே.செல்லாத்தாள்)*
வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்
*(முனைவர் நெல்லை ந.சொக்கலிங்கம்)*

**10**

ஆதிசங்கரர் *(எஸ்.வைத்தியநாத கிருஷ்ணன்)*
அருணகிரியார் *(முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்)*
குமரகுருபரர் *(முனைவர் இரா.மோகன்)*